8-7

கோ- சு- வே & தே. திருமடாலய வெளியீடு: நிர்-1.

உ

ஓம் தத் ஸத்

நாநா ஜீவவாதக்கட்டளை

# மூலமும்-உரையும்

இதில்

ஸ்ரீ சேஷாத்திரி சிவனார்

அருளிச்செய்த மூலபாடத்தையும்;

கோடகநல்லூர்

ஸ்ரீ சுந்தரஸ்வாமிகள் பரம்பரையிலவதரித்த

பிரம்ம ஸ்ரீ சிவானந்த ஸரஸ்வதிகளால்

யாக்கப்பட்ட செய்யுளையும்;

ஷை பரம்பரையும்,

ஸ்ரீவில்லிபுத்தூர்- வடக்குரதவீதி

கோடகநல்லூர், ஸ்ரீ தேஜோமயானந்த சுந்தரேச

பரமஹம்சவேதாந்த & தேவாரச் சிரவணத்திருமடாலய

ஸ்தாபகருமான

இசைக்கியாடும்பெருமாள் பிள்ளையவர்களின்

அரும்பதங்களின் வினாவிடைவடிவ உரையையும்; அடக்கி

ஷை ஸ்தாபகரவர்களால்

ஷை திருமடாலய அபிவிர்த்தியின் பொருட்டு

பாளையங்கோட்டை

சகாய அச்சியந்திரசாலையிற், பதிப்பிக்கப்பட்டது.



1924.

விலை ரூ. 1—4—0.

உ

குரு பரம்பரை வணக்கம்.

ஆதிநடுவந்தமொன்றில்லாததுரியநலகண்டபரிபூரணமகா
மத்துவிதசைதன்யவத்துவாயுலகிலுறுமன்பர்க
ளொநாளுமுய்ய
ஓதுமொருதக்ஷிணாமூர்த்தியைச்சதுர்மறையையுததியிடை
யாய்ந்தெடுத்த, வுவணகேதனனை மலர்நாபிவந்தோனை
யுயருலககுருவாகியெங்கும்
போதமுரைஸ்ரீசங்கராச்சார்யமூர்த்தியைப்புகழ்வித்தியா
ரண்யரைப், பொங்குபெரியோரைவிசுவேசரையதீந்
த்ரனும்புகழ்சுந்தரேசதேவைக்
கோதிலானந்தமெய்ச்சிவசுவாமிகளைநிர்க்குணசிவானந்தவடி
யைக், கோகனகசரணநாராயணசுவாமியைக்கொண்
டாடிமனத்துள்வைப்பாம்

## அறிக்கை

இப்புத்தகம் வேண்டுவோர் இதனடியிற்கண்ட விலாச தார்களிடம் வி. பி. மூலமாயும், மற்றும் புத்தகசாலைகளிலும் பெற்றுக்கொள்ளலாம். 10 புத்தகங்கள் ஒரேதடவையில் வாங்குவோர்களுக்கு 2 புத்தகங்கள் இனும் கொடுக்கப்படும்.

விலாசங்கள்:---

(1) இசைக்கியாடும்பெருமாள்பிள்ளையவர்கள்
ஸ்தாபகர் & மானேஜர்.
கோ- சு- வே & தே- திருமடாலயங்கள்
கோட்டூர்; பாளையங்கோட்டைபோஸ்டு.

(2) S. இலக்ஷுமணபிள்ளையவர்கள்
கோ- சு- வே & தே- திருமடாலய காரியதரிசி &
ஸ்கூல்மாஸ்ற்றர்
கிளப்புதுத்தெரு; ஸ்ரீவில்லிபுத்தூர்.
[VIA.] Sattur S. I. R.



உ

ஓம் தத் ஸத்
ஸ்ரீ சுந்தரேசாய நம:

# முகவுரை

இந்நிலவுலகின்கண்ணுள்ளஸர்ஜீவர்களும் துக்கநீக்க,சுக அடைவிலேயே பேரவாவினையுடையோராயிருக்கின்றனர். அவர்களுள் மானிடவாக்கையைப்பெற்ற ஜீவர்கள் மாத்திரம் வேண்டுஞ்சாதனங்களைச்சம்பாதித்து அதை நிறைவேற்றற்குரியவராயிருக்கின்றனர். அங்ஙனமிருந்தும் உண்மையாய துக்கநிவர்த்தி சுகப்பிராப்தியெது, இவற்றிற்குண்மையாகிய சாதனங்களெவை, யெனநன்கறியாமல் அனாதி அஞ்ஞானவயத்தராய் மயங்குகின்றனர். அவ்வித ஜீவர்களைநோக்கி மகாத்மரிஷிகள் வேதத்தின் அந்தரங்கதாற்பரியத்தைத்தெரிவிக்கவிரும்பி, புராணமீறாய நூற்றொகுதிகளை விரித்தனர். அவை விரிந்துகிடத்தலின், அவற்றை முற்றுங்கற்றுய்யப்பொருள்வலியின்றிய|மர்தமதியினருக்குங்கூட, எளிதாய்ப்புலப்படும்படி சேஷாத்திரி சிவநூர் என்னும் பெரியார் பிரஸ்தானத்திரயமாகிய உபநிஷத், கீதை, பிரஹ்மசூத்திரம் என்னுமிவைகளின் சாரத்தை யெளிதிலுணர்ந்து, அதின்படித்தாமடைந்த அனுபவப்பேற்றை யாவரும் அடையும்படி 'நாநாஜீவவாதக்கட்டளை' யென்னுஞ்சாத்திரத்தைத்தமிழில் வசனரூபமாயியற்றியருளினர்.

அதிகாரிகள் சித்தசுத்தியையும், ஏகாக்கிரசித்தத்தையும்பெற்று, சாதனசதுட்டயத்துவாரா சற்குருஸந்நிதியில் இச்சாஸ்திரத்தை விசாரிப்பார்களாயின், குருவருளாற்பெறப்படுவதாய ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தையடைந்து, அதனால் ஜீவன்முத்தியையும் அதன்விசே

ஷசுகத்தையும் அனுபவித்து; அக்கற்பனைகளுமிறந்து சுயமாகவே பிரகாசிப்பார்களென்பது திண்ணம்.

இத்தகைய மகிமைவாய்ந்த இச்சாஸ்திரத்தை, அனுசந்தான யோக்கியமாய் 'செய்யுட்களாக அமைத்துத்தரவேண்டுமென்று சிலர் விஞ்ஞாபிக்க, அதற்கிணங்கி கோடகநல்லூர் ஸ்ரீ சுந்தரேச பரமஹம்ஸஸ்வாமிகளது பரம்பரையிலவதரித்தவர்களும், வடமொழி, தென்மொழிகளில் பெரும்புலமைத்தன்மைவாய்ந்தவர்களும், அமானித்துவாதிகுணங்களாலலங்கரிக்கப்பட்டு வேதாந்தசாஸ்திர வல்லவராய், அப்பொருளின்கண்ணேயே சர்வதாபிரஹ்மநிஷ்டையுடையவர்களுமான, பிரஹ்ம ஸ்ரீ சிவானந்தஸரஸ்வதி ஸ்வாமிகளவர்கள் செய்யுள்வடிவாய்ச்செய்து அச்சியற்றி உலகெங்கும்நிலவுகின்றது.

இதன்மத்தியில், முற்கூறப்பட்டுள்ள வசனநடையை முமுக்ஷுக்கள் இலகுவாய்க்கிரஹித்தற்பொருட்டு, அவர்கள்வேண்டுகோட்படி வினாவிடைவடிவமாயோருரை எம்மாலியற்றப்பட்டுக்கையேட்டுப் பிரதிகளில் அனேகர்களால் எழுதிப்படித்துவரப்பட்டன. இப்பொழுது அனுசந்தானயோக்கியமாய செய்யுட்களுக்குப்பொழிப்புரை வடிவமுற்கூறப்பட்டுள்ள வசனநடையையமைத்தும், அத்துடன் வினாவிடைவடிவவிளக்கவுரையையும்; கோர்வைப்படுத்தி அச்சிட்டுத்தரவேண்டுமென்று, ஸ்ரீவில்லிபுத்தூர் வடக்குரதவீதியில் எம்மால் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் 'கோடகநல்லூர் ஸ்ரீ தேஜோமயானந்தசுந்தரேசபரமஹம்ஸவேதாந்த & தேவாரச்சிரவணத்திருமடாலய' அன்பர்கள் வேண்ட, அவர்கள்பொருளுதவியாலும், திருமடாலய மூலதனத்தாலும், கூறியமூலதன அபிவிருத்தியின்பொருட்டு முந்திய வினாவிடைகளைத்திருத்தியும், புதுக்கியும் இப்பொழுது நாநாஜீவவாதக்கட்டளை மூலமும்-உரையும் என்னும் இச்சாத்திரத்தை வெளியிடலானேன்.

இந்நூல் வேதாந்தவிஷயங்களைத்தெரியவேண்டுமென்ற விருப்பமுடையார்க்கு ஆரம்பநூலாயிருத்தலினாலும், அனேகர் மூலபாடத்



தின் வாசிப்புமாத்திரத்தினாலேயே, அமைதியுடனேயோ, அமைதியின்றியோ மேல் ஆராய்ச்சியை நிறுத்திக்கொள்ளுகிறபடியினாலும், எவர்க்கும் விஷயங்கள் நன்குபுலப்படுமாறு உரையிடவேண்டியஅவசியமானமூலபாடபதங்களை ஆன்றிக் (Antique) எழுத்துக்களில் அமைத்தும், அவசியமான உரைகளை ஆங்காங்குவிரித்தும், தொடர்பாட்டாலும்,முமுக்ஷுக்களுக்குக்கியாபகம் ஊட்டவேண்டியும், திடத்தன்மையின்பொருட்டு மீண்டும் எடுத்துக்காட்டியும் உரைசெய்யப்பட்டிருக்கிறது. அவைகள் சிலருக்கு, கூறியதுகூறல், மற்றொன்றைவிரித்தலாதி குற்றங்களோடுகூடியதுபோற்றோன்றினும் வக்தாவின்றாற்பரியங்கருதி, அவ்விதங்கொள்ளாரெனமதிக்கிறேன். ஆயினும் இவ்வுரையின்கண் எனது சிற்றறிவு சம்பந்தப்பட்ட குற்றங்கள் எத்தகையனவாயிருப்பினும், எடுத்துக்காட்டுமவர்க்குமிக்கவந்தனமளித்து, மறுபதிப்பிற்சேர்த்துக்கொள்ளப்படும்.

அன்றியும், இச்சாஸ்திரத்தை அச்சுவாகனமேற்றும்படிசரிபார்த்துக்கொடுத்த பாளையங்கோட்டை, செயின்ட் சேவியர்ஸ் காலேஜ் பிரதமதமிழாசிரியர், திருவாளர். D. சுப்பிரமணியபிள்ளை அவர்களுக்கு எல்லாம்வல்லஈசுவரன் திருவருளைப்பிரசாதிக்கும்படி யான் உள்ளிட்ட திருமடாலய அன்பர்களாற்பிரார்த்திக்கப்படுகின்றது. இன்னும், இச்சாஸ்திரத்தை வெளிப்படுத்துவதற்கு பொருளுதவியைச்செய்த அன்பர்களும் சிவப்புண்ணியபேற்றால் திருவருளைப்பெற்றுஅதனால் திருமடாலயங்களும், குருஸன்னிதியும், பரம்பரையும்மேன்மேல் விருத்தியாமாறு குருநாதனைப்பிரார்த்திக்கின்றேன்.

வேதாந்த & தேவார சிரவணத்திருமடாலயங்கள் } இசைக்கியாடும்பெருமாள்பிள்ளை
ஸ்தாபகர் & மானேஜர்.



உ

ஸ்ரீ சுந்தரதாவே நம:

இந்நூலில் அடங்கியுள்ள

# விஷய அட்டவணை


| நூலின் முக்கிய விஷயங்கள் | | பக்கம் |
|---|---|---|
| மங்களமும், அவையடக்கமும் | 1-7 | |
| உபோற்காதம் | 7-24 | |
| குரு, சீட, அனுபந்தங்களின் பொதுவடிவம் | | 7 |
| நாநாஜீவவாதம், ஏகஜீவவாதம், மாயர்வாதங்கள் | | 11 |
| வேதாந்தமும், அதன் உயர்வும் I | | 14 |
| மலதோஷமும், நிஷ்காமியகர்மமும் | | 16 |
| விக்ஷேபதோஷமும், தியானமும், பதினெண் வித்தைகளும் | | 17 |
| ஆவரணதோஷமும், அதன் நிவிர்த்தியும் | | 18 |
| முத்தோஷங்களும் ஞானத்திற்றடைகளாம் | | 19 |
| மூவுபாயங்களை அனுட்டிக்குங் கிரமம் | | 20 |
| மூவுபாயங்களும், சற்குரு தெரிசனமும் | | 21 |
| சாதனசதுட்டயமும், மொத்தசாதனங்களும் | | 22 |
| நூலின் விஷயம், சம்பந்தம், பிரயோஜனம் | | 24 |
| Iவியாபினி சத்தியின்காரியமாய அத்தியாரோபக்கிரமம். | | |
| 1. அதீதப்பிரஹ்ம ஐவகைவிளக்கம், இருவகைச்சத்தி | 25-74 | |
| சுத்தம், அசுத்தம், சுத்தப்பிரஹ்மம் இவையெனல் | | 26 |
| சர்வசாட்சியும், அக்கினியிற்சூடு திருஷ்டாந்தமும் | | 28 |
| அபின்னசக்தியும், அதன்பரியாயங்களும்,பதார்த்தவிசாரமும் | | 29 |
| அவாங்மானஸகோசரவஸ்துவினிலக்கணம் | | 31 |
| அபின்னசத்தியும், அதீதப்பிரஹ்ம, சுத்தப்பிரஹ்மங்களும் | | ... |
| பரையின் வியாபகமும், பரப்பிரஹ்மமும் | | 32 |
| இலக்கணமும், அதன்தோஷங்களும், இலக்கணசூன்யமும் | | 34 |
| பதார்த்தவிசாரத்தில்வேதாந்தமும், ஏனையமதங்களும் II | | 37 |
| மூவிதசத்தைகளும், அவற்றின் அனுகூலமும் | | 38 |





| | | |
|---|---|---|
| பிரஹ்மசன்னிதியும், தாதாத்மியசம்பந்தமும் | | 41 |
| சத்தியின்சேட்டையும், பிரஹ்மசிருஷ்டியின் ஆற்பரியமும் | | 43 |
| சத்தியின்முக்குணங்களும், அவற்றையனுபவிக்கும்விதமும் | | 45 |
| சத்துவகுணவடிவஆனந்தரூபசத்தி | | 46 |
| சிவசன்மயம், சிவஅதீதோதீதம், சிவதுரியாதீதம்,சிவதுரியம் | | ... |
| ரஜோகுணவடிவ சித்துரூபசத்தி | | 47 |
| தமோகுணவடிவசத்துரூபசத்தி | | 48 |
| எட்டுவிதஆனந்தங்கள் | | 49 |
| சிவசுழுத்தி, சிவசொப்பனம்,நால்வகைச்சித்து, சிவசாக்கிரம் | | 50 |
| பரிபூர்ணவடிவசத்துரூபர் | | 53 |
| சுத்தப்பிரஹ்மமேஅகண்டம், பரப்பிரஹ்மமேபரிபூரணம் | | 54 |
| முக்குணங்களும்சக்கரம்போன்றதெனல் | | 55 |
| அகண்டமாதிஐந்திலக்கணங்களும்ஏகாஸமே | | 56 |
| அபின்னசத்தியும்விவர்த்தமே | | ... |
| அகண்டஇலக்கணமும், அதன்சோதனையும் | | 57 |
| பரிபூரண, சத்து, சித்து, ஆனந்தஇலக்கணங்கள் | | 58 |
| பந்தவடிவஜனன மரணமும், அதைநீக்கும் உபாயமும் | | 60 |
| மூலப்பிரகிருதியும், அதன்கண்ணுள்ளபலஆரோபங்களும் | | 62 |
| மித்தியாதிருஷ்டாந்தங்களும், அறுவகைக்கியாதிகளும் | | 63 |
| அநிர்வசநீயக்கியாதியும், சதசத்துவிலக்ஷணமும் | | 65 |
| சாமான்ய, விசேஷசைதன்னியங்களின்விசாரம் | | 66 |
| அதிகாரிகள்தன்மயமடையுங்கிரமம் | | 69 |
| வேதாந்தமும், புறமதங்களும் III | | 70 |
| பிரஹ்மம்நிர்க்குணம், மயக்கம்ஜீவனுக்கே | | ... |
| மூலப்பிரகிருதியும், பிரகிருதியும், அவற்றின்பரியாயநாமங்க- | | 71 |
| மாயையின்ஆச்சரியவடிவம் | | 73 |
| 2. ஈசுவரவிளக்கம். | 74-80 | |
| சத்துவகுணமாயை, அதன்பரியாயநாமங்கள், உபாதி | | 75 |
| பிம்பப்பிரதிபிம்பங்களின்வடிவம் | | 76 |
| மூவகைவாதங்களும், பிரதிபிம்பவாதத்தின்உயர்வும் | | 77 |
| ஈசுவரனும், அவனதுகுணங்களும் | | 78 |
| மும்மூர்த்திகளும், அவர்களின்ஒற்றுமையும் | | 79 |

3. ஜீவவிளக்கம். 81-95
ரஜோகுணமும், அதன்பரியாயநாமங்களும் 81
புரியட்டகசரீரமும், அதன்காரியங்களும் 82
அனாதிபதார்த்தங்களும், அவற்றின்சோதனையும் 83
அனாதியும், அநந்த, ஸாந்தங்களும் 85
ஜீவனும், அவனதுபரியாயநாமமும், பிரதிபிம்பமும் 86
சத்துவ, இரஜோ,தமோகுணகாரியங்கள் 89
ஜீவேசுவரர்கள்கற்பனையென்பதில்விசாரம் 92
அஞ்ஞானத்தின்மூவடிவம் 95
4. ஆவரண, விக்ஷேபசத்திகள். 96-119
பரோக்ஷ, அபரோக்ஷஞானங்களும்; திட, அதிடஅபரோக்ஷ- 96
அங்கி, அங்கவடிவஇருவகைச்சிரவணங்கள் 98
ஆவரணமும், ஜீவேசுவரர்களும், சரீரங்களும் 99
சிதாபாச இலக்கணமும், சோதனையும் 101
சாக்ஷியினிலக்கணமும், பரியாயநாமங்களும் 102
ஜீவபரிமாணமும், ஜீவத்வம்கெடும்விதமும் 103
அபிமானம்அல்லதுஅகங்காரவடிவசம்சாரபந்தம் 104
சத்குருவின் இலக்கணமும், சோதனையும் 105
சம்சயாதிதோஷங்களும், அவற்றைநீக்குமுபாயமும் 106
சிரவண, மனன, நிதித்தியாசனங்கள் ...
ஸாக்ஷாத்கார, அஸாக்ஷாத்காரங்களின்வடிவம் 109
சிரவணாதி 5-ம் ஒரேவிருத்தியெனல் ...
சற்குருகடாக்ஷமும், பிரசாத அடையாளங்களும் 110
தீக்ஷாக்கிரமமும், ஆவரணம்நீங்கும்முறையும் 111
க்ஷணிகசமாதிஸித்தியும், விருத்தியைத்தகைதலும் 112
முக்தியும், அதைவிளக்கும்ஜீவசப்தாவத்தைகளும் 113
மோக்ஷத்தில் துவைதஅடைவில்லை 117
விக்ஷேபசத்தியுடன்பஞ்சபூதங்களைஅனுபவிக்கும் விதம் 118
5. சூக்ஷமசரீரம். 120-143
பஞ்சபூதங்களும், ஈசுவரசிருஷ்டியும் 120
அந்தக்கரணமும்; அதன்விருத்திகளும், காரியமுதலனவும் 123
ஞானேந்திரியமும், அதன் விஷய, ஞானசாதனத்துவமும் 127





வியானாதி, வாக்காதி, அவற்றின்காரியமுதலன 132
சூக்ஷமசரீரமும், சாமான்ய, விசேஷகர்மஜன்யசிருஷ்டிக- 138
6. தூலசரீரகற்பனை. 144
7. பஞ்சீகரணமும், அதன்காரியங்களும். 144-152
பஞ்சீகரணமும், திருசிய, அதிருசியகுணங்களும் 144
தூலசரீர உற்பத்தியும், இலக்கணமும், விகாரங்களும் 150
8. தூலசரீரம். 152-159
நால்வகைப்பிறப்பும், மூவகைக்கர்மபலனும்மூவகைச்சாதியும் 152
புண்ணிய, பாப, மிசிரகருமங்களும் அவற்றில்அதிகாரமும் 158
9. பஞ்சகோசங்கள். 160-171
பஞ்சகோசஇலக்கணங்களும், தர்ம, வடிவங்களும் 160
பஞ்சகோசங்களை விருத்தியில் அனுபவிக்கும்விதம் 165
ஆனந்தமயகோசசோதனையும், ஆன்மாவும் 167
ஈசுவரனும், அவனதுகோசங்களும், அவற்றின்பிரயோசன- 169
10. தூலசரீரத்திற்சூக்குமசரீரமிருக்கும்வகை. 171-172
11. ஜீவ, ஈசுவரர்களின்அவஸ்தைகளும், பெயர்-173-192
சீவசாக்கிராவத்தையினிலக்கணமும், விசுவபரியாயங்களும் 173
சீவசொப்பனவத்தையினிலக்கணமும், தைஜஸபரியாயங்க- 175
சீவசுழுத்தியவத்தையினிலக்கணமும், பிராக்ஞபரியாயநாம- 176
அவத்தாத்திரயசாக்ஷியும், அதின்நாமங்களும் 177
ஜீவதுரியாவத்தையும், அதன்சோதனையும் 178
அவஸ்தைகள் நிகழுமிடமும், திருஷ்டாந்தமும் 180
பரசாக்கிரமும், அதில்விசுவன்அனுபவமும் 181
பரசொப்பனமும், அதில்தைஜஸன்அனுபவமும் 184
பரசுழுத்தியும், அதில்பிராக்ஞஅனுபவமும் 186
அதிஷ்டானம், உபாதான நிமித்தங்கள், 4-வகைவாதங்கள் 189
அதிஷ்டானம், சாக்ஷிஇவற்றின்பேதங்கள் 191
பரதுரியமும், சரீரகோசஅவத்தைகளைக்கூறுவதிற்பிரயோ- 192
12. ஜீவ, ஈசுவர, பிரஹ்மவியாபகம். 193-194
13. வியட்டிவியவகாரதத்துவங்கள். 195-205
வியட்டிதூல, சூக்கும, காரண, ஜீவ, வியவகாரங்கள் 195
சமாதி, உட்பிரிவுகள்,பழகும்விதம்,சாதனசாத்தியமுறைகள் 198

சாக்ஷிவியவகாரமும், அதன்சோதனையும் 204
14. சமட்டிவியவகாரதத்துவங்கள். 203-209
சமட்டிதூல, சூக்கும, காரணசரீரவியவகாரங்கள் 206
ஈசுவரவியவகாரமும், இருவகைச்சர்வஞ்ஞத்துவமும் 207
பிரஹ்மவியவகாரமும் அதன் சோதனையும் 209
15. இந்திரிய, அந்தக்கரண வியவகாரதத்துவ- 210-215
இந்திரிய, அந்தக்கரணவியவகாரதத்துவங்கள் 210
8-வகைமனோராஜ்யங்களும், அவற்றைநீக்குமுபாயங்களும் 211
இருவகைமனோநாசங்களும், மூவகைச்சிருஷ்டிகளும் 214
II. விமர்சினிசத்தியின்காரியமாயஅபவாதக்கிரமம்.
16. விராட்பிரளயம். 216-218
அபவாதவடிவப்பிரளயமும், பிரளயத்தின்காலநிர்ணயமும் 216
விராட்பிரளயம் 218
17. இரண்யகர்பப்பிரளயம். 218-219
18. அவ்வியாகிருதப்பிரளயமும், சாம்யாவத்தையும். 220
19. அத்வைதம். 221-228
அத்தியந்தப்பிரளயஅனுபவமும், அத்வைதமும் 222
அத்வைதமும், பிரமாணங்களும் 223
சத்த(வாக்குவடிவ)ப்பிரமாணத்தின்பிரயோசனம் ...
கவலையும், கவலைகெட்டிருத்தலும் 224
ஜீவன்முக்தியும், விதேகமுக்தியும் 225
ஜீவன்முக்தனும், அவனதுபிராணகதியும் 226
ஜீவன்முக்தன் எப்படிப்பிரஹ்மமாவன் 227
20. தோற்றியொடுங்குந்தத்துவங்கள். 229
பிரஹ்மம்எப்படித்தோற்றியொடுங்குந்தத்துவமாம் 229
21. பொதுவாயும், சிறப்பாயும்விளங்குந்தத்துவங்-229-235
மாயையும், ஈசுவரனும், பஞ்சபூதங்களும்பொதுவெனல் 230
பலமதங்களும், புராணதாற்பரியமும் 231
பிரஹ்மம்பொதுவென்பதுவும், அதன்அறிவாகாரமும் 233
சுக, வாமதேவமார்க்கங்கள் 234
22. ஆத்மவடிவசிவமேதானய்விளங்குவது. 235-258
பிரஹ்மம்ஒன்றேதானுகக்காணப்பட்டதத்துவமாம் 236





ஈசுவரபஞ்சகிருத்தியம், அவதாரம் 237
ஆச்சிரமங்களும், அவற்றில்சந்நியாசத்தின் அதிகாரிமுதல- 240
28 தத்துவங்களின் தர்மங்கள் 242
அத்தியாசங்களும், அவற்றில் அந்நியோந்நியாத்தியாசமும் 246
அத்தியாசத்தினுயர்வும், வேதாந்தமும், புறமதங்களும் IV 252
அத்தியாஸம்யாருக்கு? பிரஹ்மமேசத்தியம், பிரபஞ்சம்மித்– 254
சாதனம்மித்தையாயிருப்பினும்ஸாத்தியம்யதார்த்தமே எனல் 256
23. 'தத்துவமஸி' மஹாவாக்கியமும்,அதன்பலனும-259-268
ஜீவேசுவரவாச்சியபாகங்கட்கு என்றும்ஐக்கியமில்லை 260
ஜீவேசுவரர் ஒன்று என்பதிற்றாற்பரியம் 261
ஆன்மப்பிரஹ்மைக்கியமும், ஆன்மதத்துவஅங்கீகாரத்தினிர- 262
வேதாந்தத்திற்குப்புறமதங்களோடுற்றஸமரஸமும், அதீத- V 263
ஞானத்தில்ஹேது, சொரூபம், முதலன 264
ஞானத்தடைகளும், நிவர்த்திக்கும்முறையும் 266
24. அவிவேகிகள்;கர்மம், அதின்பலனிவையெனல் 269-279
ஆகாமியாதிகர்மங்களும், ஆசிரய, நிவர்த்திகளும் 269
கர்மங்கள் பலனுக்குவரும்முறையும், பிரமாணயுக்திகளும் 276
கர்ம அங்கீகாரமும், புறமதங்களும் 278
25. ஞானியினனுபவமும்,அவனதுபரியாயநாமங்க-280-290
ஞானபூமிகளும்,, ஜீவன்முக்தர்களும் 280
பிரஹ்மவித்வரிட்டனும்,அவனதுவியவகாரமும்,வியவகாரஅ– 282
ஹடயோக, இராஜயோகங்கள் 284
ஜீவன்முக்திப்பிரயோஜனமும், விதேகமுக்தனும் 286
ஜீவன்முக்தன்முதல அறுவகைநாமங்களினிலக்கணம் 287
ஞானதிகாரியும், நூற்சுருக்கமும், நூற்பயனும் 288


ஸ்ரீ சுந்தரகுருவாழ்க



உ

ஸ்ரீ சுந்தரநாற்றெண்டர் சகாயம்

## சாற்றுக்கவிகள்

வல்லநாடு பிரஹ்ம ஸ்ரீ சங்கரசுப்பா சாஸ்திரிகளியற்றியது

குவலயஞ்செய்தவப்பயனுய்விண்ணூர்சோலை க்
கோடகநற்பதியதனிலினிதமர்ந் த
திவலையெனவுவரியைச்செய்கருணைமூர்த்தி த்
தேசுறுசுந்தரநாதநுவின்மரபில்வந்தோ ன்
நுவலருசற்குணன்றமிழாரியத்தின்மே லா
நூலனைத்துஞ்சாலவுணரெதியேறெந்த க்
கவலையுமில்பரப்பிரமநிஷ்டைசர் வ
காலமுநீங்காதொளிருங்கருத்துவாய்ந்தோன் (1)

பொருவில்புகழ்படைத்தசிவாநந்தநாம ப்
புண்ணியன்முன்சேடாத்திரிசிவநரேன்று ங்
கருவிலுருதோங்குசுகவீட்டைநண்ண க்
காதலிக்கும்மந்தமதியினர்க்காய்ச்செய் த
மருவிலுபநிடதார்த்தநாநாஜீ வ
வாதக்கட்டளையெனுமோர்வசனநூ லை
ஒருவிடாதெவருந்தம்மனத்திற்கொள் ள
வுன்னியுயர்கவிவடிவாயுஞற்றினுனல் (2)

செப்பிடுமீரைந்தழகுஞ்சிறக்குமந்த ச்
செய்யுளிடத்தளவில்பொருள்செறிதலா லே
தப்பிலாதுணரவுரைவிரிவாய்ச்செய் து
தருகவெனவன்பர்சொலக்கோட்டூர்வாழ ம்
இப்பிறவித்துயரொழிக்குஞ்சுவாநுபூ தி
இசைக்கியாடும்பெருமாள்பிள்ளையென்போ ன்
திப்பியமாவுரையைவிஞவிடையதாக த்
திறலறிஞர்மிகமகிழ்ச்செய்தான்மாதோ (3)



சென்னை-கோமளேசுவரன்பேட்டை
ஆசிரியர்
ஸ்ரீமாந், கோ. வடிவேலுசெட்டியாரவர்களது அபிப்பிராயம்

### ஆசிரியப்பா

கொண்டலி னிருண்ட கண்டத் தெண்டோ ள்
அண்ட னம்மனே ரருணெறி யொழுகி ச்
செயிர்தீர் நிலையைச் சேரு மா று
பயில்வகை யருளிய பரமவே தத்தி ன்
முறையெலா மறிந்த முனிவன் முத்த ன்
கறைமனம் பாற்றிக் காமனை வென்றோ ன்
சேடனும் புகழும் சேஷாத் திரிசிவ ன்
பீடமைந் தோங்கும் பிரத்தானத் திர ய
நன்பொரு ளனைத்து நற்றமிழ் மக்க ள்
மன்னுமா கற்று மனமயக் கற்று த்
தம்மைச் சிவமாத் தனிக்குரு வாலுணர் ந்
திம்மையே முத்தி யெய்திடும் வண்ண ம்
கத்திய நடையில் கவின்பெறச் செய் த
சித்தியேய் நாநா சீவ வாத க்
கட்டளை தன்னைக் கண்ணுய் விளங் கி
மட்டறப் பெருகும் மாயை யொழித்து ச்
சுத்தனுப் பிறங்கும் சுந்த ரேசனெ ன்
கத்தன் கருணை கரையிலா துற் ற
சிவாநந்த முனிவன் தெளிவா யெவரு ம்
தவாதுணர்ந் துய்யச் சாற்றினன் விருத்த மா
அவ்விருத் தத்தின் அரும்பொரு ளனைத்து ம்
செவ்விதின் திகழத் தேவரும் போற்று ம்
பாளையங் கோட்டைப் பண்பார் கோட்டு ர்
ஆளையா வாக வமரும் புனித ன்
தருக்கவே தாந்த தத்துவப் பெருக் க

வருக்க மனைத்தும் வன்மையா யுணர்ந்தோ ன்
அசைத்தற் கரிய வறிவா யிலகுவோ ன்
இசைக்கி யாடும் பெருமா ளென்போ ன்
என்னரு நண்பன் எழிலெலா மமை ய
உன்னி யுணர்வோர் உயர்சாந்த மெய் த
வினாவிடை வடிவாய் விரிவுரை யொன் று
தனாது சீர்த்தி தரணியில் விளங்க த்
தந்தன னந்நூல் சங்கரன் கருணையா ல்
இந்த வுலகத் தென்று மிலங்க வே.



திருநெல்வேலி-வண்ணாரபேட்டை
திருவாளர்—சுந்தரமூர்த்திப்பௌராணிகரவர்களது
அபிப்பிராயம்

பாட்டுரும்பலதலமும்பணியவருள்திருநெல்லைப்பதியதன்பா ற்
கோட்டுருளிசக்கியாடும்பெருமாளேனும்புலவன்குறித்தீந்தானு ல்
நாட்டுருநாநாசீவர்கள்வாதக்கட்டளையைநன்காராய்ந் து
வேட்டுருமின்றமிழின்வினாவிடையாயெவ்வழகும்விளங்கமா தோ.



ஸ்ரீவில்லிபுத்தூர்-தமிழ்க்கல்விச்சாலைப்போதகாசிரியர்
திருவாளர்-ஆ. வேலாயுதஞ்செட்டியாரவர்களது
அபிப்பிராயம்

எங்குமாயெல்லாமாயியல்பாய்கிற் கு
மேசமாம்பிர்ம்மத்திற்பரையாஞ்சத் தி
யங்கிதனிற்கூடெனக்கற்பிதமாய்த்தோற் றி
யாக்குசராசரங்களசத்தாகுஞ்சே ட
மங்கதுவேயன்றிமற்றொன்றில்லையென் றே
யருட்சேடாத்திரிசிவன்சொல்நாநாஜீவ ப்
புங்கமுறுங்கட்டளை நூற்குரைவிரித் தே
புசன்றிட்டானியாவனெனிற்புகலக்கேண்மின் (1)



எத்தத்துவத்தினருமில்லாருமொன்றென வே
சித்தத்துளுன்னுந்திருவாளன்—முத்திதனை த்
தேடும்பெருமாளெந்தேசிகனுகுமிசைக் கி
யாடும்பெருமாளவன். (2)



சென்னை-சைதாப்பேட்டை
திருவாளர் ச. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள் (B.A., L.T.,)
அபிப்பிராயம்

மதிநுட் பத்தொடு மாண்கலை யறிவு டை
யதிவிற் பனரா மாதி சங்கரா ர்
வேத முடிபை விளக்கிப முறைதழீஇ ப்
போதனை செய்யப் போந்தமிழ் நூற்றி ர
ளானு மரபி னுய்குநர் முதலி ல்
நாநா சீவ வாதக் கட்ட ளை
பயிலுவ ரென்ப அப் பண்புடைப் பனுவ ற்
கியலு மறையுணர்ந் திறைபணி நின் று
புலனழுக் கறுத்த புண்ணிய வந்தண ன்
நலமலி கோடக நல்லூர்ச் சுந்தரா ன்
அருளு நூல் பெருக்கு மருவிளக் கங்கொ டு
பொருளுரை கண்டனன் போதவும் விரிவா ய்;
அவ்வுரைக் கருத்தை யாயுதல் மதங்களி ன்
செவ்விதேர் விருப்பினர்க் குச்சீர் விருந்தா ம்.
அன்னு னியாரெனில்,
பகர்ந்த சுந்தரன் ஞான பரம்ப ரை
சகந்தனி னிலவச் சபைபல வமைத்து ம்
அவ்வழிப் பெற்ற வறிவாந் திரு வை
ஒவ்விய வுளத்தி னுறுநர்க் களித்து ம்
வசைக்கியை யாத வாழ்க்கையே நாடு ம்
இசைக்கி யாடும் பெருமாள் என்ப னே

செயின்ற் சேவியர்ஸ் காலேஜ் தலைமைத்தமிழ்ப்பண்டிதர்
திருவாளர்-சுப்பிரமணியபிள்ளை அவர்களது அபிப்பிராயம்

நிலை மண்டில ஆசிரியப்பா.

பீடுடை உலகில் பிறந்துள மாக்க ள்
நீடிசை யறிவால் நெறியறிந் துய்வா ன்
பூதரை மீதவர் போந்தவோ ராலு ம்
சாதலின் பின்னர் தாமுறு நிலையி னை
அறியத் தொடங்கிய அரியதோர் முயற்சியி ல்
பல்வகைச் சமயம் பாரிடைத் தோன்றி ன
ஒருகாற் றோன்றின வோர்கோட் பா டே
பிறிதோர் காலத்துப் பெரியா ரொருவரா ல்
போதிய விகற்பம் பெற்றுப் புதிதொ ரு
கொள்கை குவலயந் தன்னில் நிலவுறு ம்
இன்னண மாய இழுக்கொன் றின் றி
தொன்மைய வான திகழும் உண் மை
சாற்றுங் கூற்றே சாரமா யமைந் த
வேதாந் தத்தை விளக்கம தாக்குவா ன்
கோடக நல்லூர்க் குன்றுப் புகழின ன்
சுந்தர சுவாமிகள் தந்தநற் சீட ன்
சிவா னந்த சுவாமிகள் பாடி ய
நாநா சீவ வாதகட் டளைக் கு
விரிவுரை யொன்று விளக்கமா வகுத் து
உலகினர் மறவா நலமது நல்கி ய
இசக்கி யாடும் பெருமாள் பிள் ளா
எனுநற் புலவோன் இசையுடன் வாழ் க

ஸ்ரீ சுந்தரற்றெண்டர் வாழ்க.

உ
ஓம் தத் ஸத்

நாநாஜீவவாதக்கட்டளை மூலமும்-உரையும்
உரைச்சிறப்புப்பாயிரம்
(தொடர்ச்சி)

திருப்பூவணமடாலயம் பரசமயகோளரியும்,
உபயபாஷாவேதாந்தப்பிரவர்த்தருமாகிய
ஸ்ரீவீர-காசிகாநந்த
ஞாநாசாரியஸ்வாமிகளது
அபிப்பிராயம்.

கவி

மிசைக்குநா நாசீவ வாதக்கட் டளையை
மேலுறு பாவினில் வைத்தான்,
சுவைக்குதற் குறுசி வாநந்த னென்னுஞ்
சுந்தர குருமர புதித்தோன்,
நசைத்தலா மதற்கோ ருரைதனைத் தந்தான்
நச்சுனர் நன்மையை நாடி,
இசைக்கியா டும்பெரு மாள்பிள்ளை
யென்னு மியற்பெய ருடையவன் மாதோ.

பகமாகும் அறுகுணந்தன்பதத்தில்வளர்பகவத்பா
தேசனுய்ப்பின்
அகக்கிரந்தியாற்றபிக்கும்அடியேனையாட்கொண்டிங்
கமைதிசெய்து
புகழ்வில்லிப்புத்தூர்வாழ்புண்ணியசுந்தரகுருவைப்
போற்றுவாமே (2)

பரமகுருவணக்கம்
யானெனதென்றெழுமாயையெனும்பேயாலலைப்புண்டிங்
கிழிந்தேன்றன்னை

உ

ஓம் தத் ஸத்

ஸ்ரீ பகவற்பாதாச்சார்யேப்யோ நம:

ஸ்ரீ சுந்தரேசாய நம:

# உரைப்பாயிரம்

## விநாயகர், சுப்பிரமணியர், வைத்தியப்பர், சிவகாமியம்மை வணக்கம்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

முன்னுளிற்கோடொடித்துமுதுமொழியாம்பாரதத்தை மொழியிட்டானை
ன்னுனைக்கன்றுனம்வளித்தாயைமணம்புரிந்திங் கிருந்தான்றன்னை
பன்னுளும்பவப்பிணிக்குமருந்தாயபுதுவைவளர் பரமன்றன்னை
நன்னுமச்சிவகாமசவுந்தரியைநாந்தொழுது நவிற்றுவாமே (1)

திருமடாலய மூர்த்திகள் வணக்கம்

சுகவடிவைவைந்தொழிலாற்சுகமருள்சுந்தரானந்தச் சோதியேகம்
பகமாகும் அறுகுணந்தன்பதத்தில்வளர்பகவத்பா தேசனைப்பின்
அகக்கிரந்தியாற்றபிக்குமடியேனையாட்கொண்டிங் கமைதிசெய்து
புகழ்வில்லிப்புத்தூர்வாழ்புண்ணியசுந்தரகுருவைப் போற்றுவாமே (2)

பரமகுரு வணக்கம்

யானெனதென்றெழுமாயையெனும்பேயாலலைப்புண்டிங் கிழிந்தேன்றன்னை

தானெனுமோர்சொற்பொருளின்றகையுணர்த்தித்தமியே
ளைத் தடுத்தாட்கொண்டு
மானதனுன்மான்பிடிக்கும்வகையெனவந்தருள்புரிந்த
வள்ளலாகும்
சோணையருள்மழைபொழியுஞ்சுந்தரதேசிகமணியைத்
தொழுதுவாழ்வாம் (3)



## குருவணக்கம்

பரவுபுகழ்ச்சாதனங்கள்பணியாமன்மாறின்றிப்
பார்த்தபோதே
விரவிநின்றவகம்பொருளைவிக்கினங்களைக்களைந்து
விதேகியாக்கிக்
கரதலவாமலகமெனக்காண்மூன்றுசமாதியையுங்
கருணையாலே
பரவியநாராயணதேசிகமணியின்பதங்களையாம்
பணிகுவாமே. (4)



## அவையடக்கம்

புலமிகுமிக்கட்டளையைப்பாவானல்வசனத்தாற்
புனைந்தார்முன்னர்
நலமிலியான்வினுவிடையாநவிற்றியதிங்கெதுபோலா
நாவற்றீவிற்
சலமிகுமாமுகில்பொழிந்தநீரதனைத்தலைத்தாங்கித்
தருக்களெல்லாம்
நிலமதனிற்பெய்வதொக்குநாணுளுநமிந்நூலு
நெடிதுவாழி (5)



உ

ஓம் தத்ஸத்
மஹாகணபதயே நம:
ஸ்ரீபகவற்பாதாசார்யேப்யோ நம:
ஸ்ரீ சுந்தரேசாய நம:



# நாநா ஜீவவாதக்கட்டளை

# மூலமும்-உரையும்.



## மங்களம்

உலகம்யாவினுமுள்ளும்புறம்புமா
யிலகுசோதியெதுவெதியாவர்க்கு
மலகிலானந்தமாவதவ்வாத்தும
நலமிகுந்தெய்வநற்பதநாடுவாம் (க)

(அரும்பதவுரை) அலகில்—அளவில்லாத.

## கணபதி வணக்கம்

நீர்கொள்செஞ்சடைநின்மலனீன்றருள்
ஏர்கொள்வித்தகயானையையேத்துவாம்
பேர்கொள்சேடாத்திரிசிவன்பேசிய
சீர் கொள்கட்டளையைச்செய்யுள்செய்யவே (உ)

நீர்—கங்கை; ஏர்—அழகு; வித்தகயானை—ஞானவடிவாயகணபதி; பேர்—புகழ்; சீர்—சிறப்பு

### தக்ஷிணாமூர்த்தி

தருவினீழறமக்கிடமாக்கொளு
மருமைசேர்துறவாளருக்கன்றியிப்
பெருமைசால்பொருட்பேசிடவில்லையென்
றருளல்போல்வடம்வாழ்வவொம்மாள்வரே (௩)

தரு—மரம்; வடம்—கல்லால்.

### விஷ்ணு

பண்டுமின்றும்பரம்பொருளாயநீ
மண்டுவன்மயலான்மனம்வாடலென்
விண்டுநற்சுகமேவுவிபற்செனும்
விண்டுநற்பதமேவநநெஞ்சமே (௪)

பண்டு—சிருஷ்டிக்குமுன்; மண்டு—நெருங்கிய; விண்டு—ஒழிந்து; வீபற்சு—
அர்ச்சுனு; எனும்—என்று சொல்லிய; மேவ—மேவட்டும் நநெஞ்சம் என்
பதை நம்-1-நெஞ்சம் எனப்பிரிக்குக

### பிரஹ்மா

துய்யநல்லறிவாளர்சுரர்தொழு
தையஞானமருளுகவென்னவங்
கையிலாமலகம்மெனக்காட்டிய
செய்யன்வேதன்றிருப்பதஞ்சிந்திப்பாம் (௫)

துய்ய—பரிசுத்தமான; அங்கையிலாமலகம் — கையின் உள்ளிடத்திலுள்ள
நெல்லிக்கனி; அகம்—உள்ளிடம். க செட்டு அம்மென்ருயின; செய்யன்—
சிவப்பு நிறம் பொருந்தியவன். ஐயவென்பது விளி.

### வசிட்டர்

இட்டம்யாவுமிகந்துபசாந்தத்தைக்
கிட்டயாவருங்கேட்குமிராமற்குத்
துட்டமாயைதொலைந்திடச்சொன்னவ
சிட்டனுண்மலர்ச்சேவடிசென்னியே (௬)



### சத்திமுனி

முத்தியென்னுமுழுமதிநன்முக
நித்திலநகைநேரிழைநேர்படத்
தத்தில்சாலிதனயனென்மாமுனிச்
சத்திபாதந்தலைக்கணியாக்குவாம் (௭)

முழுமதி—பூர்ணசந்திரனைப்போன்ற; நன்முக —நல்லமுகத்தினையும்; நித்தில—
முத்தினைப்போன்ற; நகை—தந்தவரிசையினையுமுடைய; முத்தியென்னும்—
மோக்ஷமென்கின்ற; நேரிழை—பெண்; நேர்பட—கிடைக்க; தத்தில்—கற்பிற்ற
வறுதலில்லாத; சாலி—அருந்ததியினது; தனயன்என்—மகனுகின்ற; மாமுனி—
பெரிய முனிவராகிய; சத்திபாதம்—சத்திமுனிவரின் பாதத்தை; தலைக்கு—
நமது சிரத்திற்கு; அணியாக்குவாம்—ஓர்பூஷணமாகக்கொள்வாம்.

மெய்யாகிய ஆனந்தம் பேரறிவினுனே எய்தப்பெறுதலின் பூர
ணப்பிரஞ்ஞையை முகமாயுடையது என்பதனை முழுமதிநன்முக
எனவும்; ஒவ்வொருவிருத்திதோறும் வித்வானுல் அறியப்படினே
அறியப்படுமென நிகமாந்த சிகாமணியாகிய கேநம்கிளத்தலின்
அதனை நித்திலநகையெனவும் பொருடோன்றநின்றதுணர்க. இது
பற்றியே வாதவூரடிகள் நிராசைபெண்டிரெனத்திருவாய்மலர்ந்தரு
ளியதுமென்க. காண்பான், காண்டல், காணப்படும்பொருளென்ற
சூக்கும ஆசையும்நீங்கியநிலையையன்றி, யாதோர்வீடின்ருமாத
லின் ஒன்றென்க.

### பாரசர்

உரமடைந்துள்ளிருளொழிந்தோதுமுச்
சுரமொழிந்துசுகமெய்தத்தூய்மையார்
நரர்கள்யாவர்க்குநன்கருள்நம்பரா
சரனற்றுண்மலர்சந்ததஞ்சாருவாம் (௮)

உரம்—ஞானம்; உள் இருள் —அஞ்ஞானம்; முச்சுரம்—அத்யான் மீகாதிதாபங்
கள்; தூய்மையார் —ஸாதனஸகிதநுண்ணிய விருத்தி நிரம்பப் பெற்ற; நன்கு—
நன்மை.

### வேதவியாஸர்

நாதனம்பவமாகுநல்கூர்விறப்
போதவானந்தப்பூரிசெய்புண்ணியன்
வேதநான்கும்விரித்தவன்வேதவி
யாதன்பாதங்கள்யாமகத்துன்னுவாம் (௯)

நல்குரவு—வறுமை; இற—கெட; பூரி—நிரம்பக்கொடுத்தல்.

### சுகர்

அகமதென்னுமநுபவமங்கைசேர்
தருநல்லாமலகம்மெனத்தந்திடு
சகமலந்தவிர்சத்துவன்வித்தகன்
சுகன்மலர்ப்பதந்தோந்தபச்சிந்திப்பாம் (௰)

அகம்—நான்; அது—பிரஹ்மம்; சகமலம்—உலகவாசனை; சத்துவன்—அந்தக்கரணமுடையவன்; வித்தகன்—ஞானி; தோம்—குற்றம்; தப—கெட; (1) அநுபவம்+அங்கைசேர் (2) அநுபவ+மங்கைசேர்—அநுபவ மங்கைசேர் என இரட்டுறமொழியப்பட்டது.

### கௌடபாதர்

வேதநான்குரைமெய்மைவிளங்கிட
மாதர்மாண்டூகமாநிகமாந்தக்குக்
காதலோடுநற்காரிகைகாண்கௌட
பாதன்பாதங்கள்பந்தறப்பாடுவாம் (௰௧)

மாதர்—அழகுபொருந்திய; மாண்டூக—மாண்டூக்கியமென்கின்ற; மா—மகிமைபொருந்திய; நிகமம்+அந்தக்கு—உபநிஷத்துக்கு; பந்தற—பந்தமற.

### கோவிந்தயோகி

பந்தமாகும்பவக்கடனீந்திநாம்
அந்தமாதியுமில்லாவகண்டவா
னந்தவீடுறநல்கிடுஞானகோ
விந்தயோகிவிரைமலர்ப்பாதமே (௰௨)

நாம் பந்தமாகும் பவக்கடல் நீந்தி என ஒட்டுக.



### ஸ்ரீபகவத்பாத சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

திங்கள்சூடியசெஞ்சடைத்தேவனே
இங்கெழுந்தனனின்பெமக்கீயவே
சங்கரப்பெயர்சார்த்தியத்தேசிகப்
புங்கவன்றிருப்பொன்னடிபோற்றுவாம் (௰௩)

சார்த்தி—தரித்து

### பதுமபாதர்

அதுவிதுவெனுமல்லலொழித்துவா
விதுவைமானவிளக்கிநம்புந்தியைக்
கதுமெனக்கதிகாட்டுங்கருணைசேர்
பதுமபாதன்பதுமநற்பாதமே (௰௪)

அது இது எனும்—அது இது எனச்சுட்டப்படுவனவாகிய; உவா—பௌர்ணமி; விதுவைமான—சந்திரன் போல; கதும்—சீக்கிரம்.

### அந்தாமலகர்

நாமரூபங்களாகுமிஞ்ஞாலந்தான்
ஏமமின்றியிலங்கிழையில்லைப்போல்
நிமமார்பரநீத்திலையென்னுமத்
தாமலகன்சரண்டலைக்கொள்ளுவாம் (௰௫)

ஏமம்—தங்கம்; இழை—ஆபரணம்; நிமமார்—ஒளிநிறைந்த; பரம்+நீத்து—பிரஹ்மத்தைவிட்டு; இலை—இல்லை

### தோடகர்

ஓடதிமண்ணுதித்தொடுங்காறுபோல்
ஈடதில்பொருணின்றிந்தயாவையும்
நீடவந்திலயித்திடும்நீயதென்
றோடகன்கழறோத்திரஞ்செய்குவாம் (௰௬)

ஈடு—ஒப்பு; பொருள்—பிரஹ்மம்; நீட—விஸ்தாரமாக; நீயதென்—நீ அது என்ற.

### வார்த்திகர்.

ஆர்த்திகள்கெடுத்தானந்தம்யாவரும்
பூர்த்தியாகப்புசித்திடப்பூமிசை

தீர்த்தர்போற்றத்திருவுருக்கொண்டவவ்
வார்த்திகன்மலர்ப்பாதநம்மத்தகம் (௰௭)

ஆர்த்தி—துன்பம்: பூர்த்தி—பூரணம்; பூ—பூமி: தீர்த்தர்—பரிசுத்தமானவர்கள்; மத்தகம்—தலை

### ஸ்ரீமத்சங்கரர்வழிவந்தோர்

உலகெலாம்புகழுத்தமமாமிந்த
இலகுசங்கரன்றன்வழியேவந்த
அலகின்மேன்மையடியவர்யாவரப்
புலவர்பாதமலர்களைப்போற்றுவாம் (௰௮)

புலவர்—ஞானிகள்

### ஸ்ரீசுந்தர சுவாமிகள்

கணபதியாய்க்கந்தனுய்க்கைலாயபதியாகிக்கௌரியாகி,மண
நிறைதாமரையில்வளர்மறையவனுய் மாலாகி மற்றுமுள்ள,
கணங்களாய்க் காண்பவனுப் காட்சியாய்க் காண்பொரு
ளாய்க்கருதுமெல்லாக், குணங்களாய்க்குணங்கடந்தகுருவா
னசுந்தரனைக்குறித்து வாழ்வாம். (௰௯)

குணங்கடந்த என்பதற்கு—தான் குணங்களைக்கடந்தவனும், நங்கட்குக்குணங்களைத்தந்தவனும் என இரட்டுற மொழிதலாம்.

### சிவஸ்வாமிகள்

வருணனைப்போற்றவத்தினுன் மறைப்பொருளையுணர்கதவம
டிவிலாத,பொருணினைகவெனப்பலகாற்புகன்றென்னை வருத்
தாமற்புகுந்தபோதே, கருணையினுற்கோசமைந்துங்கடந்த
கரிநீபிரமம்கவலேலென்றுக், தெருணிரம்பவெனக்குரைத்த
தேசிகோத்தமசிவத்தைச்சிந்தை செய்வாம். (௨௰)

வருணகுமாரன் பிருகு என்பவர் பிதாவையடைந்தார். பிரஹ்மத்தைச்சொல்லென்றுகேட்டார். தவமே பிரஹ்மம், தவம் செய்யென்றூர். அவர் செய்தார். பின்னும்வந்துகேட்டார், தவமே கெடாதபொருள். தவம் செய். தவமேபிரஹ்மம் என்றூர். இவ்வாறுபன்முறைமகனையலேத்தார், என்ற தைத்திரியத்தின்சரித்திரம் ஈண்டுள்ளது.

மடிவிலாத பொருள் —அழிவில்லாத பிரஹ்மம்; தெருள்—தெளிவு;



### அவையடக்கம்

சீதமோங்குசேடாத்திரிசிவன்றருதிகழுநானுசிவ, வாதமாகு
மிநூல்வசனந்தனைவழங்குககவியாலென்,றேுதமேலவருரை
த்தனனியன்றவாவுணர்விலேனுயர்ந்தோர்கள், கோதெலா
மொரீஇக்குணமதாய்க்கொள்ளுவர்கூறலென்னிபல்பாமே.
(௨௧)

சீதம்—உபசாந்தி

வரநிரோட்டகமாலைமாற்றேகபாதம்முதல்வளமிக்க, புரை
யில்பாக்களேபுகன்றிடுபுலவர்கள் புவிமிசைபலர்வாழத், தர
மதொன்றிலேனலமில்புனுக்கொடுசாற்றுதலிப்பாவைத், த
ரையில் வாழ்குநரனைவர்க்கும்பெருநகைதந்திடற்பொருட்
(௨௨)
டேயாம்

பெருநகை—பெரும்மகிழ்வு எனவும் குறித்து நின்றது காண்க.

### உபோற்காதம்,

நூலின் ஆரம்பத்திற்கூறவேண்டியதான குரு,
அவதாரிகை:—
சீட, இலக்கணங்களும், அனுபந்தமும் சாமான்யமாய்க்குறிக்கப்ப
டுகின்றன.

நான்குமடைந்தசங்கரமுனியருளே
ஆரணம்புகன்றுசாதன
சிரணியாகத்தரித்திடுசேடாத்திரிசிவனுர்பதமிறைஞ்சிப்
பூரணகருணைவாரிதிநாயேன்புன்மையாம்பவக்கடல்புக்கு
மாரணமாகாவணமருளென்றுமலங்கிடமாதவனுரைப்பான்
(௨௩)

வேதஅத்தியயனஞ்செய்து நான்குசாதனங்களையு
இதன் பொருள்; மடைந்தசங்கரமுனியெனுஞ்சீடன் கருணைபேசிறந்த ஆபரணமாகப்
பெற்றசேடாத்திரிசிவனுர் என்னும் பெரியாருடைய திருவடியை
வணங்கி நிறைந்த கிருபைக்கடலே! நாயினும் கடையேன் இழிந்த
ஜனனமரணசமுத்திரத்தில்வீழ்ந்து மரணமாகாதபடி கிருபைசெய்ய
வேண்டுமென்றுகலங்க தவசிரேட்டர் சொல்லலுற்றூர்.

மரணம் என்பது மாரணமென நீண்டது

வினா—ஈசுவரசிருட்டியிலடங்கிய ஜீவர்களில் துக்கநிவர்த்தியைப் பெற அதிகாரிகளாவார் யாவர்?

விடை—சர்வஜீவர்களும் துக்கநிவர்த்தியையும், ஞானத்தையும்பெறக்கூடிய யோக்கியதையுடையவர்களேயாம்.

வினா—மானிடஆக்கையைப் பெற்றவர்களிற்கூட, சிலவகுப்பினர் மாத்திரம் ஞானத்தையடைய யோக்கியர் எனச்சிலகொள்கைகளிருக்க; தாங்கள் சர்வஜீவர்களும் அதிகாரிகளாவார் எனக்கூறியதில் நியாயமென்ன?

விடை—ஜீவராசிகளில் ஞானஹீனமாய் (ஞானமில்லாமல்) ஒரு ஜீவனிருக்குமேல் அத்தகைய ஜீவன் ஞானத்தையடையமுடியாதென்னலாம். அப்படியோயில்லை. ஆதலால் சர்வ ஜீவர்களும் அதிகாரிகளேயாவர்.

வினா—மரம், செடி, முதலன ஞானமில்லாமலும் ஆனால்ஜீவனையுடையதாயும்வழங்கிவருதலின் ஞானமில்லாதசீவர்களே இல்லையென்பதெப்படி?

விடை—மரம், செடி, முதலன ஓரறிவுடையசீவர்களாகும். அவைகட்கும் ஓரறிவிருத்தலின் ஞானமுடையவைகளே. எனெனில் ஈசுவரனாலமைக்கப்பட்டதமது இயற்கைபறிவாய ஓரறிவால், ஜலமாதிகளைப்பருகுதல்வாயிலாய், விருத்தி, குறைவு, அவைகளிடம்காணப்படுதலின்என்க. ஆனால் விசேஷ அறிவையடைதற்குரியசாதனங்கள் (இந்திரியகோளகாதிகள்) இல்லாததால், நம்மனோரைப்போலறிந்துகொள்ள மார்க்கமில்லாதவைகளாயிருக்கின்றன. பின், எச்சரீரத்தில் அத்தகைய சாதனங்களைப்பெறுகின்றதோ அவர்களே (அச்சீவர்களே) விசேஷ அறிவையும்பெறுகின்றார்கள் எனமதிப்பாயாக. ஆதலால் இம்முறையிற் சகலசீவர்களும்ஞானமுடையவர்களே யாவர்.

வினா—ஆயின்விசேஷ அறிவைப்பெற்றவர்கள்தானே அதிகாரிகளாதல் கூடும். அஃதல்லாத ஏனைய சீவர்களும் எப்படி அதிகாரிகளெனப்படுவர்?



விடை—சுருதி, புராண, இதிகாசாதிகளிற்சிலபசு(விலங்குப்பொது) பக்ஷியாதிகட்கு உபதேசமும், அப்படியேஞானமும் கேட்கப்படலாலும், இன்னும் எமது ஆண்டவராயஸ்ரீசுந்தரயதீந்திராள், தம்மாலனுக்கிரகிக்கப்பட்டசுவானுபவரஸமஞ்சரியில் அவிமுக்தஸ்தல (காசி) மகிமைகூறுமிடத்து;ஈசனதருளாலேதேல்விருக்ஷமுதற்சகலஜீவர்களும் மோக்ஷமடைகிறார்களெனச் சுருதியினாக்ஞைப்படி கூறியிருப்பதாலும்,சாமான்யமா (பொதுவா)ய்சர்வசீவர்களும் அதிகாரிகளேயாவர்.

வினா—ஆயின் சாமான்யவடிவ இவ்வதிகாரம் அதிகாரிகளிடம் எவ்வடிவாய்வெளிப்பட்டு சீடரெனவாகின்றார்கள்?

விடை—அதியான்மிக (சுரமுதலன) அதிதெய்வீக (இடிவீழ்தல் முதலன) அதிபௌதிக (தேள்முதலன) இவைகளினாலுண்டாம்துக்கநிவர்த்தியிற்பரமசாதகமாயசற்குருவையே சரணாகதியடையவெண்ணி கட்காற்றாதவனாய், அதனாற்சனனமரணசம்சாரத்திற்கஞ்சி, அதனி தலையிற்றீப்பற்றிக்கொண்டவன் ஜலத்தையே விரும்புவதுபோல் துஷ்டகூட்டங்களிற்சேராமல், சாதுசங்கவிருப்புடன் சற்குருவின் றேட்டமுடையவனாய் எச்சரீரிவருகின்றானோ அவனேசீடனாம்.

வினா—இதன்மேலிச்சீடன் அடையவேண்டியகிரமம்யாது?

விடை—மேல், சீடனானவன் குருதரிசனத்திற்குரியபத்திரபுஷ்பாதிகளைக்கையிற்கொண்டவனாய், சுருதியுணர்ந்தவரும், பிரஹ்மம நிஷ்டையையுடையவருமாய குருவை இத்தேகமாகிய சுமைக்கிளைத்தனமென்பார்போல் அஷ்டாங்க, பஞ்சாங்க, அஞ்சலியஸ்தராய்ச்சரணமடைந்து அவருக்கு ஆப்தம், (குருவிற்கனுகூலமாயிருத்தல்) அங்கம் (குருவின்குற்றேவல்செய்தல்) தானம் (குருவின் சம்ரக்ஷணை) சத்பாவம் (குருவேசிவமெனப்போற்றல்) ஆகியபணிவிடைகளைச்செய்து கொண்டு தனது விண்ணப்பத்தைச் செய்யுங்கால் அதிகாரியின் பக்குவத்திற்கிணங்க வேண்டுஞ்சாதனங்களைக்குருஉபதேசிப்பார்.

வினா—அத்தகையகுரு எப்படியிருப்பார்?

விடை—இடம்பமில்லாதவராயும், சாந்தராயும், நிராசையுடையவராயும் மைத்திரி (சற்புருஷசிநேகம்) கருணை (இரக்கம்) முதிதை (ஈசு

வரன்முதலியோரிடத்துப்பிரியம்) உபேக்ஷை (பாபிகளிடத்து இராகத்து வேஷமின்மை) யுடையவராயும், வேதசாஸ்திரார்த்தங்கள் தெரிந்தனுபவிக்ஞராயும், வேதாந்த சம்பிரதாயந்தெரிந்தவராயும், சீடனுடையசித்தபரிபாகங்கண்டு உபதேசிக்கத்தெரிந்தவராயும், கபடமற்றுச்சொல்லுகின்றவராயுமிருப்பர்.

வினு—பிராமணுதிநான்குவருணங்கள், பிரமச்சரியாதிநான்கு ஆச்சிரமங்கள், இவைகளில் எந்நிலையையுடையவராயிருக்கவேண்டும்?

விடை—பிராமணுதிவருணம், பிரமச்சரியாதிஆச்சிரமம் இவைகளில் அவஸ்தை (வயது) வருணம் (ஜாதி) ஆச்சிரமம் (நிலை) வித்தை (சாஸ்திராப்பியாசம்) தர்மம் (சாஸ்திரத்திற்கூறிய அனுட்டானம்) ஞானம் (ஆத்மவித்யை) என்ற அறுவிதமானநிலையையுடையவர்களில் உத்தரோத்தர (மேல்மேல்) முதிர்ச்சியுடையோர் உத்தமர்களெனக்கூறப்படும். இவர்களில்ஞானருடர்க்கேஉத்தமகுருத்துவஞ்சொல்லப்படும். மேற்சொல்லப்பட்டகிரமத்தில் உத்தமகுருகிடையாவிடில் எச்சாதி, எவ்வருணம், எவ்வாச்சிரமம், எத்தருமம், எத்தொழிலிலேனுமிருந்திடில் ஆன்மானுபூதிமானுகில் அவனேசிரேட்டனெனவேதாகமபுராணங்கள்முறையிடுகிறபடியால் பந்தந்திரஉபகாரப்படுமாகில்குருத்துவம்எவ்விடத்தும்பொருந்தும்.

வினு—முற்கூறியகுருவின்லாபமின்றிக்கதியடையமுடியாதோ?

விடை—வழிதெரிந்தவன்வழிகாட்டவேண்டுமேயன்றி, அஃதல்லாதவனுலாவது, தானேயாவதுவழிச்செல்லுதல்கூடாமைபோல, ஆன்மஞானநிட்டையுள்ள ஒருவனுலேதான், உபதேசிக்கப்பட்டுக்கதியடையவேண்டும்.

வினு—மேற்செய்யுளிற்கூறியசங்கரமுனியென்பவர் எத்தகையசீடர், அவரால்வழிபடற்குரியசேடாத்திரிசிவனுர்என்பவர் யாவர்?

விடை—சங்கரமுனியென்பார்ஞானதாகமுற்ற ஓர்ஞானதிகாரியும், சேடாத்திரிசிவனுர்என்பார் நாநாஜீவவாதக்கட்டளை என்னும் இச்சாஸ்திரவாயிலாய், கூறிய அதிகாரிக்குஞானேபதேசஞ்செய்தகுருவுமாவர். (இவ்விதம்குரு, சீடரிலக்கணம், சாமான்யமாய்க்குறிக்கப்பட்டது)



வினு—நாநாசீவவாதக்கட்டளை என்ருல் என்ன?

விடை—வேதாந்தசித்தாந்தத்தில் அங்கீகரிக்கப்பட்டிருக்கும் ஏகசீவவாதம், நாநாசீவவாதம் என்ற இரண்டுமுறைகளில் இது நாநாசீவர்களைக்கூறுகின்ற ஓர்முறையெனப்படும்.

வினு—ஏகசீவவாதம் என்பதற்கு வேறு பெயர் யாது?

விடை—இந்த ஏகசீவவாதத்திற்கு ஏகான்மவாதமென்றும் மற்ருெரு பெயருண்டு.

வினு—சீவ, ஆன்மபதங்கட்கு அர்த்தம் யாது?

விடை—வேதாந்தசித்தாந்தத்தில் சீவபதத்திற்கு மிகுதியும்பந்தமுற்ற சேதனனையும் சிலவிடத்து சிவத்தையும்; ஆன்மபதத்திற்கு மிகுதியும் சிவத்தையும், சிலவிடத்து பந்தமுற்றசேதனனையும்; அங்கீகரிக்கப்பட்டுவதால் சமயம்கண்டு பொருள்கொள்ளவேண்டும்.

வினு—ஆன்மாவெனுஞ்சொற்கு சிவம்எனப்பொருள்கொள்வதிற்பிரமாணம் என்ன?

விடை—"ஆன்மாவினின்று ஆகாயமுண்டாயிற்று" "ஈதெல்லாம் ஆன்மாவே" என்றற்ருெடக்கத்துச்சுருதிகளே பிரமாணங்களாம்.

வினு—ஜீவன் என்னுஞ்சொற்குப்பிரஹ்மம் எனப்பொருள்கொள்வதிற்பிரமாணம் என்ன?

விடை—'கைவல்யநவநீதம் சந்தேகந்தெளிதற்படலம்.'

(கவி) நித்தியம்பூரணமேகம்பரமார்த்தம்பரப்பிரமநிதானஞ்சாந்தம் சுத்தசத்தியங்கேவலந்துரியஞ்சமந்திருக்குக்கூடஸ்தன்சாக்ஷிபோதம், முத்தம் அமலக்கியஞ்சநாதனஞ்சீவன்றத்துவம்விண்சோதிஆன்மா, முத்தம் தமிலக்கியஞ்சநாதனஞ்சீவன்றத்துவம்விண்சோதிஆன்மா, முத்தமிழுமிவ்வண்ணம்விதிகுணங்கண்மொழியும்வேதம்.136

எனப்பிரஹ்மத்தின்பரியாயநாமமாகக்கூறியிருப்பது காண்க.

வினு—அப்படியானுவிங்கு ஏகசீவவாதம் அல்லது ஏகான்மவாதம் என்னுஞ்சொற்ருெடர்கட்குப்பொருள்யாது?

விடை—மேற்கூறியசொற்ருெடர்கள் எங்குவரினும் ஏகசிவவாதம் அல்லது ஏகப்பிரஹ்மவாதமெனப்பொருளேதவிரவேறர்த்தங்கிடையாது.

வினா—ஆயின் ஏகஜீவவாதத்தின் இலக்கணம்யாது?

விடை—நித்தியமுக்தசிதானந்தசொரூபப்பிரஹ்மமேயுளது; அதனிடத்து ஒரேகற்பிதவஞ்ஞானத்தின் கற்பிதசம்பந்தத்தால் ஜீவத்தன்மை ஈசுவரத்தன்மைகளின் தோற்றமுண்டாகிறது. அவ்விதந் தோற்றும்ஜீவாபாஸர்களிடத்து,பந்தமோக்ஷவியவகாரமேதவிர அஞ்ஞானசம்பந்தத்துடனிருப்பதுபோற்றோன்றும்பிரஹ்மத்தினிடத்து ஜீவத்தன்மை, ஈசுவரத்தன்மை, பந்தமோக்ஷத்தன்மைகள், மூன்றுகாலத்துமில்லை என்பது ஏகஜீவவாதத்தின் இலக்கணமாம்.

வினா—அது எப்படி?

விடை—குந்திபுத்திரனாகியகர்ணனிடத்து ராதாபுத்திரத்தன்மையும், அதனால்நீசத்தன்மைமுதலனவுமுள்ளனபோலத்தோற்றிப் பின் சூரியோபதேசத்தால் அவைகள்விலகியனபோல் எப்படித்தோற்றினதோ ஆனால் அவ்விததன்மைகள்கற்பிக்கப்பட்டனவாய் எப்படி வாஸ்தவமாயில்லையோ அதுபோலெனவுய்த்துணர்க.

வினா—இந்த ஏகான்மவாதபக்ஷத்தைச்சிலர் மாயாவாதமெனக்கூறுகின்றனரே அதுசரிதானா?

விடை—அதுசரியன்று.

வினா—ஆயின்புறமதஸ்தர்கள் என் அவ்விதஞ்சொல்லுகின்றனர்?

விடை—இம்மதசித்தாந்தத்தை ஆசிரியர்முகமாய் விசாரியாமற்றாங்களே விசாரித்துப்பேத அபிப்பிராயத்தாற்கூறுகின்றார்கள்; அது சரியான அபிப்பிராயமன்று.

வினா—அப்படியானால்மாயாவாதமென்பதற்கு அர்த்தம் யாது?

விடை—மாயையென்னும் ஓர்தத்துவத்தை உண்டெனச்சொல்லும் வாதம் மாயாவாதம் எனப்படும்

வினா—அதற்கு இலக்கணம்யாது?

விடை—மாயையைச்சத்தியம் எனத்தாபித்து, அதைச்சகத்காரணமாய்க்கூறும்வாதம் மாயாவாதமாம்.

வினா—இவ்விதஅர்த்தம்செய்வதற்குப்பிரமாணம்யாது?



விடை—"மாயையிற்றோன்றியது உலகம்என்பதால்அவர்மாயைகவாதி எனப்படுவர்" (சௌரபுராணம்௩௰-ம்அத்தியாயம்)

என்றபிரமாணமேசான்றாம்.

வினா—இங்குக்கூறும் ஏகான்மவாதம் ஆன்மாவாகியசிவத்தையேநிலைநிறுத்திமாயைமுதலானவற்றை இல்லையெனத்தாபித்தலால்இப்பக்ஷத்தையேமாயாவாதம்எனக்கூறினாலென்?

விடை—அதுயுக்திக்குப்பொருந்தவில்லை.

வினா—எப்படிப்பொருந்தவில்லை?

விடை—மாயை இல்லையென்னும் ஏதுவால் மாயாவாதமாமாயின் சிவத்தை இல்லைஎன்பதுசைவவாதம் எனவும், விஷ்ணுவை இல்லை என்பதுவைணவவாதம் எனவும் பொருள்படநேரும். அவ்விதம் கொள்வது கூடாவாதலாலும், இவ்வேதாந்த மதத்தில் பிரஹ்மத்தையுலகுக்குமுதலாகக்கூறி மற்றவற்றை இல்லைஎனக்கூறுவதாலும், மாயையையுண்டெனக்கூறும்வாதமே மாயாவாதம்என்பது, பொருத்தமுடையதாம்.

வினா—அப்படியானால் மாயையைச்சகத்காரணமாய்க்கொள்ளும் சில பக்ஷங்கள் மாயாவாதத்தை-தங்களிலும்வேறுபிரித்துக்கூறுகின்றதே! எம்மதநோக்காற் கூறுகின்றன?

விடை—மாயைக்கேபிரதானத்தன்மை கூறி அதற்குச்சகத்காரணத்துவங்கூறும் சாங்கியமதத்தைநோக்கி மாயாவாதம் எனக்கூறுகின்றன.

வினா—அதை எப்படி அறிவது?

விடை—மாயாவாதிக்குத்தத்துவம் 25 என்றுவிசேஷங்கொடுத்து,

ஆகின்றதொண்ணூறோடாறும்பொதுவென்ப
ராகின்றவாறாறருஞ்சைவர்தத்துவ
மாகின்றநாலேழ்வேதாந்திவயிணவர்க்
காகின்றநாலாறையைந்துமாயாவாதிக்கே.

(8-ம் தந்திரம்மத்தியசாக்கிராவத்தை 13வது செய்யுள்) எனக்கூறும்

திருமூலர்திருமந்திரப்பிரமாணத்தால் 25 தத்துவங்கொள்ளும்முற்கூறியசாங்கியரேமாயாவாதிஎன்னும் பதத்திற்குப்பொருளாவரென்பதை உய்த்துணர்க.

வினா—அப்படியானாலிந்நூல் எக்கொள்கையைச்சார்ந்துளது?

விடை—வேதாந்தக்கொள்கையைச்சார்ந்துளது.

வினா—வேதாந்தமென்பது ஓர் மதமா?

விடை—இப்பரிசாஞ்சமயமுமாயல்லவாகி என்ற ஆன்றோர்கூற்றுப்படிமதங்களிலொன்றாயும், மதாதீதமாயும்வியவகரிக்கப்படும்.

வினா—அது எப்படி?

விடை—ஏனையமதங்களெல்லாம் ஒன்றையொன்று கண்டிக்குங்கால் புறமதங்களைத்தங்களுக்குப்புறம்புபடுத்தியும், மற்றையர்கூற்றுப்படி புறமதங்களைத்தங்களிற்காட்டாதும், அன்னியக்கொள்கையுடையார் யாவரும் அதோகதியடைவார்களென்றும் நிந்திக்கின்றன. இம்மதமானது அவ்விதமில்லாமல் ஏனையமதங்களைத்தனக்குள்ளடக்கியும், காட்டியும், ஒவ்வொரு மதஸ்தர்களும்பலனடைவார்களெனவும், அவ்வம்மதங்களை யொழுங்காயனுட்டிக்கும்படி அன்புபாராட்டிச்சொல்லியும், சாதனசாத்தியமுறையில் தன்னிடத்திற்கோர்வைப்படுத்திக்கூறுங்கொள்கையையுடைத்தாயிருப்பதால்மதமாயும்; சகல கொள்கைகளும் இக்கொள்கையில் அவதியடைவதாலும், வேதாந்தமென்பதனால் வேதத்தின் அந்தமெனப்பொருள்பட்டு வேதத்தினுள்ளடங்கிய மதங்களைக்கொண்டுஅப்பாற்பட்டும்நிற்றலினால் இதுவேசகல மதங்கட்குந்தாய்மதம் எனப்பெயர்பெறக்கூடிய மதாதீதமாயுமாதல் காண்க.

வினா— அப்படியாயின் இவ்வேகான்மபக்ஷங்கொண்ட இதுவே வேதாந்தமதமென்பது எப்படி?

விடை—முற்கூறிய திருமந்திரப்பிரமாணத்தில் சைவர்க்குரியதத்துவம் 36 யென்றும், வைணவர்க்குரியதத்துவம் 24 யென்றும், மாயாவாதிக்குரியதத்துவம் 25 யென்றுங்கூறி, வேதாந்திக்குரியதத்துவம் 28யெனக்கூறுவதால், சைவ, வைணவ, மாயாவாதங்கள் வேதாந்தத்திற்கு வேறென்றாகிறது. அதில் ஏகப்பிரஹ்மவாதத்தைக்கூறும் ஞானக்கட்டளையில் "இந்த 28 தத்துவமே ஜகம், ஜீவன், பரமென மூன்றுபொருளாய்விளங்கும்" எனவும்; இன்னும் ஸ்ரீமத்சங்கராச்சாரியசுவாமிகளியற்றிய தத்துவபோதமென்னும் நூலிலும் தத்துவங்கள் 28யெனவும்; அப்படியே வேதாந்தசூடாமணிமுதலிய நூல்களும் கூறுகின்றபடியால் 28 தத்துவங்கொள்ளும்மதம் வேதாந்தம்என்றபடி இதுவேவேதாந்தமென்பதில் யாதும்ஆசங்கையின்றாம்.



வினா—அவ்விருபத்தெட்டுத்தத்துவங்கட்குவிபரம் யாது?

விடை-தூலசரீரதத்துவம் 6; சூக்ஷ்மசரீரதத்துவங்கள் 17; காரணசரீரதத்துவமாகியமாயை, அவித்தை 2; ஜீவன், ஈசுவரன், கூடஸ்தவடிவசிவம் 3; ஆக 28. வேதாந்தநூற்களில் இவ்விருபத்தெட்டினையே வேறுவிதமாக அடக்கியும்விரித்துங்கூறுவர்.

வினா—ஆகவே வேதாந்தமென்றால் என்ன?

விடை—வேதத்தின்முடிவுவேதாந்தமெனவும்; அம்முடிவிற்சொல்லப்படும் பிரஹ்மப்பொருளும் வேதாந்தமெனவும்; அந்தப்பிரஹ்மப்பொருளைச்சொல்லும் உபநிஷத்துக்களும், அவற்றை விசாரிக்கும் உத்தரமீமாம்ஸாசூத்திரங்களும்,அவற்றின்வழிநூலாயசாரீரகபாடியம் பஞ்சபாதிகை, விவரணம், தத்துவதீபனம், பாமதி, கற்பதரு, பரிமளம், சித்தி, பிரமானந்தீயம், பிரம்மவித்தியாபரணம், பேதகிக்காரம் பஞ்சதசி, வாசிட்டம், பகவற்கீதை, கைவல்யநவநீதம், வேதாந்தசூடாமணி, இந்தநாநாஜீவவாதக்கட்டளை என்பனவாதி நூல்களும் வேதாந்தமெனப்பெயர்பெறும்.

இனி அதிகாரி-சம்பந்த-விஷய-பிரயோஜனவடிவ
அனுபந்தம் விசாரிக்கப்படுகிறது.

வினா—அப்படியானால் இந்தநாநாஜீவவாதக்கட்டளையென்னும்வேதாந்தசாஸ்திரத்தைவிசாரிக்கும் அதிகாரியினிலக்கணம் யாது?

விடை—அந்தக்கரணத்திலுள்ளமுத்தோஷங்களில் ஆவரணமாத்திரமுடையவனாய், சாதனசதுட்டயத்தைப்பெற்று சற்குருபணிவிடையாற்றும்வல்லமையுடைய எவரும் அதிகாரியாவர்.

வினு—அம்முத்தோஷங்களெவை?
விடை—மலம், விக்ஷேபம், ஆவரணமெனமூன்றும்.
வினு—இம்முத்தோஷங்களும் எவ்வுபாயங்களால் நீங்கும்?
விடை-நிஷ்காமியகர்மத்தால் மலதோஷமும்,உபாசனையினல்விக்ஷேபதோஷமும், குருஸன்னிதியில்விசாரிக்கும் விசாரணையில் மகாவாக்கியோபதேசத்தால் ஆவரணதோஷமும் நிவிர்த்தியாம்.
வினு—மலமென்றால் என்ன?
விடை—பாபம்
வினு—மலதோஷமுள்ளவனை எப்படியறிவது?
விடை—எவன்புத்தி குருஸந்நிதியில்விசாரிக்குங்கால் ஓர்முகப்படாமல் இராகாதி விஷயமாய்ப்பரிணமிக்கிறதோ அவன்மலதோஷத்தோடுகூடியவனென அறிக.
வினு—இம்மலதோஷம் எப்படிவந்துசேர்ந்தது?
விடை—நமதுகர்மங்களையெல்லாம் பிரதிபிரயோஜனத்தைக்கருதிச்செய்துவந்ததால் மலதோஷம்வந்துசேர்ந்தது.
வினு—அக்கர்மங்கள் யாவை?
விடை—நித்திய(தினந்தோறுமேற்பட்டசந்தியாவந்தனுதி, அக்கினிஹோத்ராதி) கர்மம்,நைமித்திய (அமாவாஸ்யை, அயனங்கள், சிரார்த்தம், கிரஹணம்முதலாயநிமித்தம்பற்றியுள்ள) கர்மம், பிராயச்சித்த (அறிந்தோ, அறியாமலோசெய்யும்பாபகர்மநிவிர்த்தியின் பொருட்டுள்ள) கர்மமாகியவைதிக *கர்மங்களும் இலௌகிககர்மங்களும் ஆகிய இவைசள் கர்மங்களாம்.
வினு—பிரதிப்பிரயோஜனத்தைக்கருதி-கருமங்களைச் செய்வதாலேயேமலதோஷமுண்டாம் என்பதில்யுக்தியாது?
விடை—ஒருவனுக்கு ஒருநன்மையைச் செய்யாமுத்தேசிக்குங்கால் ஏதாவது ஒருபலனைவிரும்புகிறவிடத்து அப்பலன்கிடைப்பின் அவனிடத்து இராகமும், கிடையாவிடின் துவேஷமுதலானவைகளும்

* காமிய, நிஷித்தகர்மங்களுடன்சர்மங்கள் ஐந்தாயினும் ஈண்டு அதிகாரிசட்குபயோகமாயகர்மங்களை மாத்திரம் எடுத்துக்கொள்ளப்படும்.



வந்தடைகிறபடியால் அதுவேபோதியயுக்தியாம்.
வினு—ஆயின் இம்மலதோஷத்தையெப்படிநீக்குவது?
விடை—பலனைவிரும்பிக்கர்மங்களைச்செய்து அதனுல் விளைந்தஇராகாதிதோஷங்களை பலனையபேக்ஷியாமற் செய்யும்நிஷ்காமியகர்மத்தாலேயே நீக்கவேண்டும்.
வினு—நிஷ்காமியகர்மத்தினிலக்கணம்யாது?
விடை—அவனவனுக்கேற்பட்ட விகித (செய்யத்தக்க) கர்மங்களைப் பலனைவிரும்பாமல்நமதுகடமை என்றுவது, ஈசுவரார்ப்பணபுத்தியுடனுவது செய்தலாம்.
வினு—இதின்பலன்யாது?
விடை—மலதோஷநிவர்த்திபூர்வக, சித்தசுத்தியுண்டாம்.
வினு—விக்ஷேபமென்றால் என்ன?
விடை—சிதறுதலாம்.
வினு—விக்ஷேபமுள்ளவனை எப்படியறிவது?
விடை—எவன்புத்தி சற்குருசந்நிதியில் மகாவாக்கியவிசாரணையைச் செய்யுங்கால் ஸ்திரப்படாமல் நாநாவியவகாரங்களிற்பிரவிர்த்திக்கு (சிதறு) மோ அவனைவிக்ஷேபதோஷமுடையவனென அறிக.
வினு—இந்தவிக்ஷேபதோஷம் எப்படிவந்தது?
விடை—புருஷன் பலவாறுகச்சிந்திக்கிறபழக்கத்தினுலேயே ஒன்றிலம்நிலைபெறுமல் பலவற்றிற்சுழலுதல்வடிவ விக்ஷேபம்வரநேர்ந்தது.
வினு—ஆயின் இவ்விக்ஷேபத்தை எப்படி நீக்குவது?
விடை—(1) சரீரத்திற்குள்ளேனும், புறம்பேனும், ஒன்றையேசிந்தித்துக்கொண்டிருத்தல்வடிவ ஏதேனுமோர் சகுண, நிர்க்குணத்தியானங்களினுலாவது (2) 18 வித்தைகளிலேதாவதொன்றை அப்பியாஸித்தல்வாயிலாகவாவது விக்ஷேபதோஷத்தை நீக்கவேண்டும்.
வினு—பதினெண்வித்தைகள்யாவை?
விடை—இருக்கு, யசுர், ஸாமம், அதர்வணம் எனவேதம் 4; ஆயுள்வேதம், தனுர்வேதம், காந்தர்வேதம், அர்த்தவேதம், என உபவேதம் 4; சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருக்தம், சோதிடம், பிங்களம்

என வேதாங்கம் 6; புராணம், நியாயம், மீமாம்ஸை, தர்மசாஸ்திரம் என 4; ஆகவித்தைகள் 18.
வினு—இவற்றை அப்பியாசித்தற்குப்பலன்யாது?
விடை—விக்ஷேபதோஷநிவர்த்திபூர்வக சித்தஏகாக்கிரதை. இது முற்கூறிய இருவித அப்பியாஸிகட்குஞ்சமமாயினும், தாம்வேண்டிய வாறுமனம்செல்லும்பிராகிருதத்தன்மைவடிவவிக்ஷேபநிவிர்த்தி, தாரதம்மியமாய் உளதாகுமென அறிக.
வினு—ஆவரணமென்றால் என்ன?
விடை—தனதுசொரூப அஞ்ஞானமாம்.
வினு—இந்த ஆவரணதோஷமுள்ளவனை எப்படியறிவது?
விடை—எவனுக்குத்தனதுசொரூபத்தில் நான்என்னையறியேனென மறைப்புளதோ, அதனால்தனதுயதார்த்தவடிவத்தின் அறிவில்லாதவனயிருக்கின்றானோ அவன் ஆவரணதோஷத்தோடுகூடியவனென அறிக.
வினு—இவ்வாவரணதோஷம் எப்படிவந்தது?
விடை—சற்குருசந்நிதியில்தனதுசொரூபத்தை விசாரியாததினால்வந்தது.
வினு—அதுவெப்படிநீங்கும்?
விடை—விசாரியாததனாலுண்டாயமறைப்பை அதனிவர்த்தியிற்சாதகமாய உத்தம ஆசாரியரிடத்து சிட்டாசாரத்துடன் நான்யார், பிரஹ்மம் என்பதுயாது, பிரபஞ்சமெத்தகையது என்பவற்றின் விசாரணையைச்செய்யின் ஆவரணதோஷம் நீங்கும்.
வினு—அவ்விசாரணையின் பலன்யாது?
விடை—ஆவரணதோஷநிவர்த்திபூர்வக தத்துவஞானமாம்.
வினு—முற்கூறியமலநிவர்த்தியுபாயத்தில் தனதுகடமையெனச்செய்தல், ஈசுவரார்ப்பணபுத்தியுடன்செய்தலென இருவகையாகவும்; அப்படியே விக்ஷேபநிவர்த்தியுபாயத்திலும் 18 வித்தைகளினப்பியாசம், ஈசுவரோபாசனை என இருவகையாகவும்கூறியதால், ஒவ்வோருபாயத்திலும் ஈசுவரசம்பந்தமும் அதனின்மையுமிருக்கின்றனவே, அவற்றின் பலன் என்ன?



விடை—ஈசுவரசம்பந்தமில்லாவிடின் சித்தசுத்தி, ஏகாக்கிரதைமாத்திரமேபலனாகவும்; அஃதிருப்பின் சித்தசுத்தி ஏகாக்கிரதையுடன் ஈசுவரகிருபையினால் ஞானசாதனப்பிராப்தியுமுண்டாம், இதுவே அவற்றிற்பேதம்.
வினு—அதுபோல் மூன்றாவதான ஆவரணநிவர்த்திக்கும் விசாரணையுடன் வேறு சாதனங்கள் ஏன்கூறப்படவில்லை?
விடை—ஞானத்திற்கு விசாரணையன்றி வேறுமார்க்கமில்லாததாற் கூறப்படவில்லை. அதுவஸ்துதந்திரமாதலின் என அறிக.
வினு—கர்ம,உபாஸனைகள் ஈசுவரசம்பந்தமாயிருப்பின்ஞானசாதனங்களையுண்டுபண்ணுமென்றபடி ஞானத்தையேனுண்டாக்காது?
விடை—ஈசுவரசம்பந்தமாயிருப்பினும் ஞானசாமக்கிரியாகியவேதம் குரு, ஸாதுஸங்கம், இவைகளின் அடைவைச்செய்துவைக்குமேயன்றி ஞானத்தையுண்டாக்காது.
வினு—அப்படியாயின்ஸற்குருஸந்நிதியில் விசாரிக்குங்கால் எவ்விசேஷத்தால் ஞானமுண்டாம்?
விடை—சற்குருவானவர் தனதுபூரணகருணைதிருஷ்டியைமுமுக்ஷுவிடம்செலுத்தி தத்துவமஸியாதிமகாவாக்கியார்த்தங்களை விசாரிப்பிக்குங்கால், வாக்கிந்திரியத்திற்கும் சீடனதுசுரோத்திரேந்திரியத்திற்குமுண்டாய சம்பந்தவிசேஷத்தால் விசாரிக்கும்சிஷ்யனதுள்ளத்தில்ஞானமுண்டாம்.
வினு—இங்குக்கூறிய முத்தோஷங்களும் தத்துவஞானத்திற்றடை என்பதெப்படி?
விடை—முற்கூறியமுறையில் தத்துவஞானமுதயமாமாயினும், அதிற்சாதகமானமனது பாபவடிவ இராகாதிபிரபலத்தன்மையினாலும், விக்ஷேபவடிவ அலைச்சலினாலும், மறைப்புவடிவமழுக்கத்தினாலும் கட்டுப்படில்; பாபமின்றியதும், ஏகாக்கிரதையோடுகூடியதும், தெளிவடைந்ததுமானமனசினால் கிரஹிக்கக்கூடியஞானம்எங்ஙனுண்டாம்? உண்டாகவேமாட்டாது. ஆதலால்முத்தோஷங்களுந்தடைகளே.

வினா—கூறியதோஷநிவர்த்திகளிற்பரமசாதகமாயகர்மம், உபாஸனை விசாரணையாகிய இவைகள் எந்தக்கிரமத்தில் ஞானத்திற்குச்சாதனங்களாயிருக்கின்றன?

விடை—கர்மோபாசனைகளால் சுத்தி, ஏகாக்கிரதை இவைகளையடைந்தமனம்சுத்தமாயும், அலைச்சலின்றியதாயும் இருப்பதால் குருமுகவிசாரணையிலனுகூலமாயிருக்கிறது. விசாரணையால் ஆவரணநஷ்டமடைந்து ஞானம்பிரகாசித்தலின் மூன்றும்ஞானத்திற்குச்சாதனமாதலையுங்காண்க.

வினா—ஆகவே தோஷநிவர்த்தியின்பொருட்டு அதிற்சாதகமாயகர்மம், உபாசனை, விசாரணை என்பவற்றையனுட்டிப்பதில்வரிசைக்கிரமமுண்டா?

விடை—வரிசைக்கிரமமாக ஒவ்வொன்றுமுடிந்தபிறகேமற்றவற்றைத்தொடங்குவதுதான்மரபு. ஆயினும் சிலசுகிர்த அதிகாரிகளிடத்து கர்மோபாஸனைகளின் ஆரம்பகாலத்திலேயே விசாரணையுந்தோற்றுகிறபடியால் மூன்றையும்ஒன்றுபோலனுட்டிக்கிறதானாலும் ஒன்றற்கொன்றுவிரோதமில்லாததால் எப்படியும் அனுட்டிக்கலாம்.

வினா—முன்சொல்லியமூன்றுசாதனங்களையும் ஓர்காலத்து எப்படியனுட்டிக்க முடியும்?

விடை—(1) நேரிட்டபுண்ணியகர்மங்களையெல்லாம், தனதுகடமை என்றாவது ஈசுவரார்ப்பணமாகவாவதுசெய்யும்நிஷ்காமியகர்மத்திற்கும் (2) குறித்தகாலத்தனுட்டிப்பதானசகுணஉபாஸனை அல்லதுஸர்வமும் ஈசுவரவடிவமாய்ப்பார்த்தல் ஆகிய உபாஸனையாகிய இதற்கும் (3) ஓர்சற்குருவையடைந்துசெய்யுந்தத்துவம்பதார்த்தசோதனைவடிவவிசாரணைக்கும் ஒன்றற்கொன்றுவிரோதமில்லாததால் மூன்றையும் ஒன்றுபோலனுட்டித்தல்முடியுமென அறியக்கிடக்கின்றது.

வினா—ஓர் அதிகாரிக்கு தத்துவம்பதார்த்தசோதனைவடிவசாஸ்திரசிரவணத்தில்மட்டும் இப்போதுதீவிரதாகமிருந்தால் போதுமா? ஏனையவிரண்டும் அனுட்டிக்கவேண்டாவோ?



விடை—எப்போது மூன்றும்ஸாதனத்திற்றீவிரதாகமுண்டாய்விட்டதோ, ஏனையவிரண்டும் ஜன்மாந்தரங்களிலனுட்டிக்கப்பட்டிருக்கவேண்டும். அவன் அந்தவிசாரணையையேசெய்யக்கடவன். கர்மோபாசனைகளைச்செய்யவேண்டுவதின்று எனவறிக.

வினா—ஜன்மாந்தரங்களில் ஏனையவிரண்டும் அனுட்டித்திருப்பதை இன்னும் எவ்விசேஷத்தாலும் அறியலாம்?

விடை—தீவிரஞானதாகத்தாலும், சாதனசதுஷ்டயங்களை இலகுவாயனுட்டிப்பதிலிருந்தும், குருஸந்நிதியில் விசாரிக்குங்கால்மனம், மலவிக்ஷேபாதிகளினால் இழுக்கப்படாததினின்றும், ஞானசாதனங்கள் பிராப்தமா (அடையப்படு) வதினின்றும், ஏனையவிரண்டும்ஜன்மாந்தரங்களில் அனுட்டித்திருக்கவேண்டுமென்றறியலாம்.

வினா—சித்தசுத்தி ஏகாக்கிரத்தன்மைகளையுண்டுபண்ணுவதான கர்மோபாஸனைகளை யனுட்டிப்பதில் இங்குக்கூறியவழிதவிரவேறுபாயமுண்டா?

விடை—உண்டு.

வினா—அவ்வுபாயம்யாது?

விடை—சற்குருநாதனையேசரணடைந்து அவருக்குச்செய்யும்பணிவிடைகளை நிஷ்காமியமாய்ச்செய்வதனாற் சித்தசுத்தியும்; பூஜிக்கத்தக்கபுத்தியுடன் அவரைத்தரிசித்துவருவதாலும், அவர்சந்நிதியிற்செய்யும்சிரவணத்தினாலும்சித்தைகாக்கிரதையும் அமைகிறபடியால் அந்தச்சற்குருசேவையே மற்றோருபாயமாம்.

வினா—இதற்குப்பிரமாணமியாது?

விடை—குருவையேசரணாகதியடைந்து ஞானம்பெற்றசசிவன்னன் முதலானவர்களே பிரமாணமாம்.

வினா—முற்கூறியவாறு குருவைச்சரணடைந்து ஞானம்பெறவிரும்புமவனுக்கு எச்சாதனவிசேஷத்தால் சத்குருலாபமுண்டாம்?

விடை—சாதனசதுஷ்டயங்களை அடைந்தவனாயிருப்பின்சத்குருலாபமுண்டாம். (இவனேவிசாரவாயிலாக இந்நூற்கதிகாரியாவன்)

வினா—சாதனசதுஷ்டயமாவதுயாது?

விடை—(1) நித்தியாநித்தியவத்துவிவேகம், (2) இக, பரபோகவிரா
கம், (3) சமாதிஷட்கசம்பத்தி, (4) முமுக்ஷுத்துவம் எனநான்காம்.
வினு—நித்தியாநித்தியவத்துவிவேகமென்றால் என்ன?
விடை—ஆத்மாவாகியசிவம்நாசமின்றியது கிரியையின்றியது என
வும், அதற்கன்னியமானஜகத்துநாசமுள்ளது கிரியையுடையது என
வும், பிரித்தறிதல்விவேகமெனப்படும்.
வினு—சிவம் நாசமின்றியதெனவும் ஜகத்து நாசமுள்ளதெனவும்
அறிந்தபின் பிற்சாதனங்கள் ஏன்?
விடை—இங்குள்ளசிவத்தின்ஞானமும், ஜகதநித்தியஞானமும் நம்
பிக்கைமாத்திரமாயிருப்பதால், அதுபிரத்தியக்ஷமாதற்பொருட்டு பிற்
சாதனங்கள் அவசியமே?
வினு—இகபரபோகவிராகமென்றால் என்ன?
விடை—இவ்வுலகபோகங்களிலும்; பரலோகபோகமாகிய அமிர்த,
அப்ஸரஸ்முதலான போகங்களிலும்; தோஷதிருஷ்டியைச்செய்து
வெறுப்படைதல்.
வினு—இவ்விரண்டுசாதனங்கள்போதாதோமூன்றாம்ஸாதனமேன்?
விடை—கூறியவிரண்டுசாதனத்தையடைந்தசிலர் வைராக்கியமேபர
மபுருஷார்த்தமெனமதித்து சிரவணத்திற்பிரவிர்த்தியின்றியிருக்கின்
றார்கள். அதுபிரயோஜனமில்லையாதலால் மூன்றாஞ்சாதனமும்
வேண்டும்.
வினு—சமாதிஷட்கசம்பத்தி என்றால் என்ன?
விடை—சமை, தமை,உபரதி, திதிக்ஷை,சமாதானம், சிரத்தை என 6
வினு—சமையென்றால் என்ன?
விடை—மனதைப்பாஹியவிஷயத்தில் செல்லவொட்டாதுதிருப்பிச்
சிரவணத்தில்நிறுத்துதல்.
வினு—தமையென்றால் என்ன?
விடை—இந்திரியங்களை விஷயத்திற்செல்லவொட்டாதுதிருப்பிச்சிர
வணத்தில் நிறுத்துதல்.
வினு—உபரதியென்றால் என்ன?



விடை—சிரவணத்திற்குத்தடையாயுள்ள குடும்பகாரியாதிகளைச்சு
ருங்கச்செய்தலாம்.
வினு—திதிக்ஷையென்றாலென்ன?
விடை—மயக்கத்தையுண்டுபண்ணக்கூடிய காமக்குரோதாதிவிருத்
திகளும், அவற்றின்பலனானசுகதுக்காதிகளும் வரில், அடக்குதலாம்.
வினு—ஸமாதானமென்றால் என்ன?
விடை—விஷயங்களினின்றுந்திருப்பியமனதை சர்வதாவேதாந்தசிர
வணத்தில் நிறுத்துதலாம்.
வினு—சிரத்தையென்றால் என்ன?
விடை—பரமசற்குருவினிடத்தும், சத்சாஸ்திரங்களிடத்தும்விசுவா
சம் வைத்தலாம்.
வினு—இங்குக்கூறியசாதனங்களே ஆறாகவிருக்க சாதனங்கள்நான்கு
என்பது எப்படி?
விடை—இங்குக்கூறிய ஆறுசாதனங்களும் ஒன்றைவிட்டு ஒன்றுசித்
திக்கமாட்டா. ஆதலாலிவ்வாறும் ஒரேசாதனமாகக்குறிக்கப்பட்டன.
வினு—இம்மூன்றுசாதனங்கள்மட்டும்போதாதோ நான்காவதானமு
முக்ஷுத்வமும்வேண்டுமோ?
விடை—இம்மூன்றையுமடைந்தசிலர் தீவிரஞானதாகமின்மையால்
சிரவணத்தில் தீவிரத்தன்மையையடைய மார்க்கமில்லாதிருத்தலால்
முமுக்ஷுத்துவமும்வேண்டும்.
வினு—முமுக்ஷுத்துவமென்றால் என்ன?
விடை—ஞானத்தையறிந்துமோக்ஷத்தையடையவேண்டுமென்றஇச்
சைமுமுக்ஷுத்துவமாம்.
வினு—அப்படியானுலிவ்விச்சைஸர்வஸாதனங்கட்கும் முன்னர்சித்தி
யாவிடில்முன்மூன்றுஸாதனங்களும் எப்படிக்கைகூடும்?
விடை—ஸர்வசாதனங்கட்கு முன்னும் இஃதிருப்பினும் அங்குத்
தீவிரமல்ல. சிரத்திற்றீப்பற்றிக்கொண்டவொருவன் தண்ணீரை
யன்றி எப்படியொன்றையும் அபேக்ஷியானோ அதுபோலத்தீவிர இச்
சையே இங்குகொள்ளத்தக்கதென அறிக.

வி௲—ஆனால்சற்குருதரிசனத்திற்கு ஒருவன் பாத்திரனாகும்வரை எத்தனைசாதனங்களைக்கைப்பற்றியிருக்கவேண்டும்?

விடை—நிஷ்காமியகர்மம், உபாஸனை, விவேகம், வைராக்கியம். ஸமாதிஷட்கசம்பத்தி, முமுக்ஷுத்வமென ஆறும்.

வி௲—ஞானத்திற்கு முக்கிய அந்தரங்கஸாதனம் யாது?

விடை—'தத் துவமஸி' மகாவாக்கியோபதேசம்.

வி௲—மோக்ஷத்திற்குவேண்டியசாதனங்கள் எத்தனைவகைப்படும்?

விடை—முற்கூறிய ஆறுடன் 'தத் துவமஸி' யாதிசிரவணமும், அதன் பயனாகியஞானமும்சேர்ந்து எட்டுவகைப்படும்.

வி௲—நல்லது, இந்நூலிற்கூறப்புகும்விஷயம்யாது?

விடை—பிரபஞ்சஆரோப (சிருஷ்டி) அபவாத (ஒடுக்க) ங்களைக்கூறுதல்வாயிலாகஜீவப்பிரஹ்மைக்கியம் இந்நூலின் விஷயம்.

வி௲—இந்நூலிற்குத்தனது விஷயத்தோடுள்ள சம்பந்தம்யாது?

விடை—சொல்வது, சொல்லப்படுவது அல்லதுஉற்பத்திசெய்வது, உற்பத்தியாவது என்னுஞ்சம்பந்தங்களாம்.

வி௲—அதிகாரிக்கு, விஷயத்தோடு எவ்விதசம்பந்தமுளது?

விடை—பெறுமவன், பெறப்படுவது என்னுஞ்சம்பந்தமுளது.

வி௲—அதிகாரிக்கிந்நூலின் விசாரத்தோடுள்ளசம்பந்தம் யாது?

விடை—செய்பவன், செய்பத்தக்கது என்னுஞ்சம்பந்தமாம்.

வி௲—அப்படியானால் இச்சாஸ்திரத்தினாலுண்டாய பிரயோஜனமி யாது?

விடை—சர்வதுக்கங்களினின்றும்விடுபட்டு பரமானந்தவடிவப்பிரஹ்மமாகவிருக்கும் மோக்ஷமே பிரயோஜனமாம். வினா விடைகள் 93.

இதுவரை, அதிகாரிமுதலிற்றெரிந்துகொள்ளவேண்டியதான தன்னுடையவும், குருவினுடையவும் இலக்கணங்களும்; இச்சாஸ்திரத்தின்றன்மையும், கொள்கையும்; அதிகாரிக்குநூலிற்பிரவிருத்தியுண்டாம்வண்ணம் அனுபந்தசதுட்டயமும் உரைசெய்யப்பட்டன.

ஸ்ரீகுருநாதர் வாழ்க.



ஸ்ரீசுந்தரேசன்றிருவடிகளே சரணம்.

# நூல்.

## இதுமுதல் 35 செய்யுட்களால் வியாபினிசத்தியின்காரியமாய அத்தியாரோபக்கிரமம்.

இனி 5 செய்யுட்களால் அவாங்மானஸகோசரவஸ்து அபின்னசத்தியால் ஐவகையாகவிளங்கியதையும், பின்னசத்தி வெளிப் பட்டவகையையும், வியவகரிக்கப்படுகின்றன

சங்கரசுத்தப்பிரமமாஞ்சருவசாக்கியினிடத்திலந்தழலிற்
றங்குறுவெம்மைமானவேறிலதாஞ்சத்தியொன்றுண்டந்தச்
சத்தி, துங்கவதீதப்பிரமத்திலடங்கியிருக்குங்காற்சொல்சுத்
தப்பிரம, மிங்கிதுவிசிரிம்பித்தந்தச்சுத்தப்பிரமத்தை வியா (உச)
பிக்குமெல்லை

(இ-ள்) (சங்கரனென்னும்) சுத்தப்பிரமமாயிருக்கின்றஸர்வ ஸாக்ஷியினிடத்திலே (அழகிய) அக்கினியிற் (றங்குகின்ற) சூடுபோல அபின்னமாகவொருசத்தியுண்டு. அந்தச்சத்தி (பரிசுத்தமான) [அவ்] அதீதப்பிரஹ்மத்திலடங்கியிருக்கும்போது [அதற்கு] சுத்தப்பிரஹ்மம் என்றுபெயர். (இங்கே) இந்தச்சத்திவிசிரிம்பித்து (அந்தச்) சுத்தப்பிரஹ்மத்தைவியாபிக்கும்போது,

( ) இவ்வடையாளம் பொழிப்புரையின்மத்தியில்வருமேல் அதனுள்ளடங்கிய பதம் அல்லதுவாச்கியம் செய்யுட்பொருட்டுசேர்க்கப்பட்ட பதங்களின்பொருள் எனக்கொள்க.

[ ] இவ்வடையாளம் பொழிப்புரையின்மத்தியில்வருமேல் அதனுள்ளடங்கியபதம் அல்லதுவாக்கியம் வசனவடிவ மூலபாடவாக்கியமெனக்கொண்டு சேர்த்துப்படிக்குக.

வினு—சுத்தம் என்ருல் என்ன?
விடை—அசுத்தவடிவ 35 தத்துவங்களின்கலப்பில்லாத எனப்பெயர் பெறும்.
வினு—அந்த 35 தத்துவங்கள் எவை?
விடை—தூலசரீரதத்துவம், 6; சூக்ஷுமசரீரதத்துவம், 20; காரண சரீரதத்துவமான மாயை, அவித்தை, 2; ஈசுவரன், ஜீவன், 2; பஞ்ச பூதங்கள், ஆகத்தத்துவங்கள் 36. (இவற்றைப்பின்னல்பேசுவோம்)
வினு—தூலசரீரத்துள்ள அசுத்தம் யாது?
விடை—நவத்துவாரங்களிலும் மலமொழுகல்.
வினு—சூக்ஷுமசரீரத்துள்ள அசுத்தம்யாது?
விடை—இராகத்துவேஷாதிகுணங்கள்.
வினு—மாயையின்கண்ணுள்ள அசுத்தம்யாது?
விடை—சிருஷ்டிகாலத்து விரிந்தும், பிரளயகாலத்து ஒடுங்கியும், அஸங்கோதாவின வஸ்துவினிடத்துச்சிருஷ்டியாதிகளைத்தோற்று வித்தலும் இன்னுமிவைபோன்றவைகளுமாம்.
வினு—அவித்தையினிடத்துள்ள அசுத்தம்யாது?
விடை—சுத்தசேதனத்தை மறைப்பதும், ஞானமுண்டாயதுங்கெட் டுப்போதல்முதலியனவுமாம்.
வினு—ஈசுவரனிடத்துள்ள அசுத்தம்யாது?
விடை—சிருஷ்டியாதி, சர்வக்ஞத்வாதி, சுபாவங்களாம்.
வினு—ஜீவனிடத்துள்ள அசுத்தம் யாது?
விடை—வருணம்=ஜாதி, ஆச்சிரமம், தர்மம், அதர்மம், ஸ்வர்க்கம், நர கம், ஜனனம், மரணம், மூன்றுசரீரங்கள் என்னுமிவைமுதலானவை களில் அத்தியாசஞ்செய்து (இல்லாததையுண்டுபண்ணிக்) கொண்டு தொடக்கு (சம்பந்தமு) ற்றலைதலாம்.
வினு—பிருதிவியின் அசுத்தமியாது?
விடை—மலம், மூத்திரம், குப்பை, சேரி, மயானமாதிகளாம்.
வினு—அப்புவின் அசுத்தமியாது?
விடை—அலை, நுரை, குமிழி, சேறு, பாசிமுதலனவாம்.



வினு—தேயுவின் அசுத்தமியாது?
விடை—புகை, பொறியாதிகளாம்.
வினு—வாயுவின் அசுத்தமியாது?
விடை—நற்கந்தம், துர்க்கந்தம், சீதம், உஷ்ணமாகிய இவற்றின் சம் பந்தம் தோற்றுதலாம்.
வினு—ஆகாயத்தின் அசுத்தமியாது?
விடை—இடி, குமுறல், மின்னல், மேகபடலம் இவைகளின்சம்பந்தந் தோற்றுதலாம்.
வினு—சுத்தப்பிரஹ்மம் என்ருல் என்ன?
விடை—கூறிய 35 தத்துவங்களின் கலப்பில்லாததும், பெரிதுக் கெல்லாம் பெரிது எனப்படுவதாயுமுள்ள ஓர்நாமமுமின்றியவஸ்து வென்று சொல்லப்படும்.
வினு—ஓர்நாமமுமற்றதாயின் சுத்தப்பிரஹ்மம் என்றநாமம் எப்படி வந்தது?
விடை—சுத்தப்பிரஹ்மம் என்றுகூட சொல்லாமலே அறிந்துகொள் ளக்கூடிய அதிகாரிகளில்லையாதலின் ஓர்நாமமுமின்றிய வஸ்துவிற்கு சுத்தப்பிரஹ்மம் என்றநாமம் கொடுக்கப்பட்டது.
வினு—ஆயின், நாமங்களனேகமிருக்க சுத்தப்பிரஹ்மம் என்னும்நா மத்தாலழைக்கக்காரணமென்ன?
விடை—ஜீவர்களிடத்துள்ள ஜனனமரணசம்சாரத்திற்குக்காரணம் யாதெனில், சகலபதார்த்தங்களோடும்கலத்தலை (சங்கத்தை)ச்செய்து அதனுல்நேரிடும்சுகதுக்காதிகளை அடைவதினுலே என்பது மகான்க ளது அனுபவம். அவ்விதசர்வானர்த்தபரம்பரைக்குக்காரணமாய சங் கதோஷத்தை அதிகாரிகட்குநிவிர்த்திப்பான்கருதி பிரஹ்மம் ஒன்ற ேடுங்கலவாதது என்றபொருள்தரக்கூடிய சுத்தம் என்னும் இலக் கணத்தை அதற்குக்கொடுக்கப்பட்டது.
வினு—அப்படியானுல், கூறிய 35 தத்துவங்களும் சுத்தப்பிரஹ்மத் திற்ருனே ஏதாவதோர் சம்பந்தத்தாற்ருேன்றவேண்டும்; ஆயின், அவயவமில்லாத ஆகாயத்தின்கண் இடி, குமுறலாதிகளின்சம்பந்

தத்தோற்றம் அதற்கசுத்தமெனக்கூறியபடி முற்கூறப்பட்டுள்ளசுத்தப்பிரஹ்மத்தில் முற்கூறிய 35 தத்துவங்களுந்தோற்றுவதை, சுத்தப்பிரஹ்மத்தின் அசுத்தமாக ஏன் சொல்லக்கூடாது?

விடை—முன்சொல்லப்பட்ட 35 தத்துவங்களும்பின்னாசத்தியின்காரியங்களாம். இவைகளின் சம்பந்தமுளதுபோற்றோன்றுவது விவர்த்த(பொய்த்தோற்றத்தின்) காரணமாய அகண்டபரிபூரணசச்சிதானந்தப்பிரஹ்மத்தினிடத்தேயன்றி; அதற்கப்பாலுள்ளதும், சச்சிதானந்தப்பிரஹ்மமென்றவியவகாரமும் உதிக்குமுந்திய அவசரமா (நிலையா)கிய சுத்தப்பிரஹ்மத்தின்கண் அன்று. ஆகையால்சுத்தப்பிரஹ்மத்தின் அசுத்தமாகச்சொல்லக்கூடாது.

வினா—அப்படியானால் சுத்தம் என்றவிசேஷணமாத்திரம்போதாதோ? பிரஹ்மம் என்ற இரண்டாவதுவிசேஷணம் எற்றிற்கு?

விடை—சுத்தப்பிரஹ்மம் என்னும்பதத்தைப் பண்புச்சொல்லாய்க்கொண்டு சுத்தவடிவப்பிரஹ்மம் என்ற அர்த்தத்திற்கூறியிருப்பதால் யாதும்விரோதமின்று.

வினா—சர்வசாக்ஷி என்றால் என்ன?

விடை—சர்வபதார்த்தங்களையும் அறிவது எனப்பொருளாம்.

வினா—சர்வசாக்ஷியினிலக்கணம் யாது?

விடை—பிரஹ்மமானதுநேரேசொரூபவடிவஞானத்தினால் அநாதி (உற்பத்தியில்லாத) கற்பித (விசாரிக்குமிடத்து இல்லாமற்போகிற) பின்ன, அபின்ன சத்திகளாற்றோன்றிய சர்வதிரிபுடிகளையும் விளங்கச்செய்வதுடன் அவைகளோடுசம்பந்தமின்றி தானானதனதுமகிமையினாலேயே பிரகாசித்துக்கொண்டுஸ்வயம்பிரகாசவடிவாயிருப்பது யாது அதுசர்வசாக்ஷியாம்.

வினா—அக்கினியிற்சூடுபோல என்ற திருஷ்டாந்தம் ஏன் கூறப்பட்டது?

விடை—சுத்தப்பிரஹ்மத்தினிடத்து சத்தியானது அபின்னமாயமைந்துள்ளதென சத்தியின் அபின்னத்தன்மையைவிளக்கவேண்டிக் கூறப்பட்டது.



வினா—அபின்னமாக என்றால் என்ன?

விடை—வேறில்லாத எனப்பொருளாம்.

வினா—சத்தி என்றபதார்த்தம்யாது?

விடை—வல்லமையெனப்பொருளாம்.

வினா—சத்தியின் இலக்கணம்யாது?

விடை—எது சுதந்தரமாயில்லாமல் ஒன்றைப்பற்றியிருக்குமோ அது சத்தியாம்.

வினா—இந்தச்சத்தியானது பிரஹ்மத்தோடு அபின்னமாயிருத்தலால் பிரஹ்மமென்றேசொல்லலாமோ?

விடை—அப்படியானால் இந்தச்சத்திக்கு அபின்னாசத்தியென்றும், சுதந்தரமின்றியதென்றும் இவ்வாறான இலக்கணங்கள்வர நியாயமில்லை. ஆதலால் பிரஹ்மமென்று சொல்லக்கூடாது

வினா—ஆயின் இது பிரஹ்மசுபாவமுடையதா? அதனினும் விபரீதசுபாவமுடையதா?

விடை—பிரஹ்மத்தினும் விபரீதசுபாவமுடையதேயாம்.

வினா—ஏன் அப்படிச்சொல்லவேண்டும்?

விடை—பிரஹ்மசுபாவமுடையதாயிருப்பின் பிரஹ்மத்திற்குவேறாக வேறுபொருளைத்தரக்கூடியபெயரிட்டழைக்கவேண்டியதில்லை. அன்றியும் இந்தச்சத்திகாரணமாக, பிரஹ்மத்திற்கு அநேக நாமகற்பனை அவஸ்தா (கால)கற்பனைகள் வரவேண்டியதுமில்லை. ஆதலால் பிரஹ்மத்தின் விபரீதசுபாவமாய் அதனினும்வேறில்லாததாயுள்ள ஓர் வல்லமையென்றேகொள்ளவேண்டும்.

வினா—ஆயின் இச்சத்திக்கு பதார்த்த இலக்கணம்சித்திக்கின்றதா?

விடை—இதுசத்தியென்னும்பதத்தாற்பெயரிட்டு வழங்குந்தன்மையுடையதாயிருத்தலின் பதார்த்த இலக்கணமும் சித்திக்கின்றது.

வினா—பதார்த்தங்கள் எத்தனைவகைப்படும்?

விடை—பாவம் (உள்ளது), அபாவம் (இல்லது) என இருவகை.

வினா—பாவபதார்த்தமென்றால் என்ன?

விடை—இருக்கிறது என்னும் உணர்ச்சிக்கு யோக்கியமாயதாம்.

வினு—அபாவபதார்த்தமென்ருல் என்ன?

விடை—இல்லையென்னும் உணர்விற்குயோக்கியமாயதாம்.

வினு—இந்த அபின்னுசத்தி என்னபதார்த்தம்?

விடை—இதுபாவபதார்த்தம் எனப்படும்.

வினு—இதை அபாவபதார்த்தமாக ஏன்சொல்லக்கூடாது?

விடை—பிரஹ்மத்தில் அபின்னமாயிருந்துகொண்டிருக்குமிந்தச்சத்தியானது, பிரஹ்மத்தின் இருப்பின்மையை விஷயமாக்கவேண்டும். அப்படியோ இல்லை. ஆதலால் அபாவபதார்த்தம் என்னல்கூடாது.

வினு—இந்தச்சத்தி பாவபதார்த்தம் என்பது எப்படி?

விடை—இந்தச்சத்தியும், இனியடுத்துச் சொல்லப்புகும்பின்னுசத்தியும் அதன்காரியங்களும், இருக்கிறதென்னுமுணர்விற்கு விடயமாவதால் பாவபதார்த்தமென்றே கொள்ளவேண்டும்.

வினு—அது எப்படி?

விடை—பிரஹ்மம் சத்தாயிருக்கிறது, சித்தாயிருக்கிறது என்றன்முதலஅநுபவங்களினுலும், அப்படியேபிரபஞ்சம் இருக்கிறதென்னும் அனுபவத்தினுலும் பாவஅனுபவத்தைவிளக்கலின் பாவபதார்த்தமென்றேகொள்ளவேண்டும்.

வினு—இந்தச்சத்திக்குவேறுபெயர்கள் உண்டா?

விடை—பராசத்தி, அபின்னுசத்தி, வியாபினிசத்தி, விமர்சினிசத்தி என அனேகபெயர்களுண்டு. சுருங்கச்சொல்லில் பிரஹ்மத்திற்கு எவ்வளவுநாமங்களுண்டோ அவ்வளவு நாமங்கள் இச்சத்தியினிடத்தும் சத்தியின்வடிவாய்க்கொள்க.

வினு—பராசத்தியென்ருல் என்ன?

விடை—எல்லாவல்லமைகளுக்கும் மேலானதாயிருப்பது எனப்படும்

வினு—அபின்னுசத்தியென்ருல் என்ன?

விடை—பிரஹ்மஅபேதமாயும், பிரஹ்ம அபின்னமான அளவில்லாத மகிமைகளை வெளிப்படச்செய்யச்சாதகமாயும் இருப்பதாம்.

வினு—வியாபினிசத்தி என்ருல் என்ன?

விடை—சுத்தப்பிரஹ்மத்தின்சொரூப அபின்னமாயிருந்துகொண்டு



சிருஷ்டியவதரத்து சுத்தப்பிரஹ்மத்தையே வியாபிப்பது என்பதாம்.

வினு—விமர்சினிசத்தி என்ருல் என்ன?

விடை—அவாங்மானஸகோசர வஸ்துவாகிய தானுனதன்மயமாய்க்கரைந்துநிற்குமவதரம் (நிர்விகற்பஸமாதி)வரை பின்ன, அபின்ன, சத்திகளின்காரியங்களாகியதத்துவக்கூட்டங்களை நியதிபண்ணு (நீக்கு) வதில்லாதகமாயிருக்கும் ஆலோசனுவல்லமைவடிவமாம்.

வினு—அவாங்மானஸகோசரவஸ்து எப்படியிருக்கிறது?

விடை—அவாங்மானஸகோசர வஸ்துவென்றதனுல் வாக்குமனதிற்கெட்டாததெனப்பொருள்கிடைப்பினும் ஒருவாறு உத்தமபூமியிலே றிய மஹான்களாலனுபவிக்கிறபடி இலக்கணையாற்கூறுகின்ருேம்:—

ஜாதி, குண, கிரியைகளின்சம்பந்தமின்றியதாயும்; ஓர்நாமமும், ஒருருவமுமில்லாததாயும்; அதனுல் அவாங்மானஸகோசரமாயும்; வாக்குமனதுகளால்வியவகரியாநின்றவஸ்துக்களை தானுனதன்வடிவசத்தையால் விளக்குவித்தும், முன்விளங்கியும், அவற்றின்சாமான்யவடிவாயும்; அவத்தை(காலம்), விருத்தி(உணர்ச்சி)இவைகளின்சந்தி(இடை)யில்விளங்குவதாயும்; உள்ளதைக்கரதலாமலகமென உள்ளபடியுணர்ந்துவிளங்கும் மஹான்களது அனுபவவடிவாயும்;திரிபுடியி(காண்பான் காஷி காண்பொருளி)ற்சமமாயும்; உள்ளது இலதுஎன்றவிசேஷஉணர்ச்சிக்கப்பாற்பட்டதாயும்; இவ்விதம்வித்துவான்களால் வர்ணிக்கக்கூடியநிலைமையிலிருக்கிறது.

வினு—ஒருசத்தி உண்டு என்று ஏன்சொல்லவேண்டும்?

விடை—சுத்தப்பிரஹ்மம் எப்படிஅனுதியோ அப்படியே இந்தச்சத்தியும் அனுதி என்னும் பொருள்தோன்றும்படி சொல்லப்பட்டது.

வினு—இந்தச்சத்தி அவாங்மானஸகோசரவஸ்துவினிடத்து எப்படியிருக்கிறது?

விடை—சரீரத்திலுள்ள அற்பமச்சம்(சிறிய அடையாளம்)அற்பதேசத்திருப்பதுபோலிருக்கிறது.

வினு—சுத்தப்பிரஹ்மத்தினிடத்து எப்படியிருக்கிறது?

விடை—சமானதேசத்தில் இருக்கிறது.

வினா—அதீதப்பிரஹ்மம் என்றால் என்ன?
விடை—அதீத=கடந்த. இதைமுன் அவாங்மானஸகோசரபிரஹ்மமாகவர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஆண்டுக்காண்க.
வினா—அடங்கியிருத்தல் என்றால் என்ன?
விடை—கட (ஓர்பாண்டவிசேஷ) த்தின் நாம, ரூபகற்பனைகட்கு முதற்காரணமான கடசத்தி (கடமெனுநாமத்தையும், பண்டிபெருத்தலாதிரூபத்தையும் உற்பத்திசெய்வதில் சாமர்த்தியமுடையவல்லமை) யானது, மண் கடத்தின்காரணமாம் கடம்காரியமாம் என்ற உலகர்கற்பனைக்குமுன்னும், மண்ணிலெப்படி அடங்கியிருந்ததோ; அதுபோல்சிருஷ்டி உன்முக(ஆரம்ப)காலத்திற்குமுந்திய அவதரத்திலுள்ள சத்தியின்நிலைமையினை அடங்கியிருந்தது என்றுகூறப்பட்டது.
வினா—ஆயின்சத்தி அடங்கியிருந்தது என்றுகூறுமுன்னர் அந்தப்பிரஹ்மத்திற்குப்பெயர் யாது?
விடை—சத்திஅடங்கியிருந்தது என்றுகற்பிக்குமவதரம் சுத்தப்பிரஹ்மம் என்றும், அவ்விதகற்பனையுமற்றவிடம் வாக்குமனதிற்கெட்டாதது என்றும், மஹாமௌனமென்றும், நாமகற்பனைகளாயில்லாமலினது அறியும்விருப்பால்கற்பனைகடந்ததாயிருப்பினும்கூறியபெயர்களால் அழைக்கப்படுகின்றன.
வினா—விசிரிம்பித்து என்றால் என்ன?
விடை—வெளிப்பட்டு எனப்பொருளாம்.
வினா—வியாபிக்கும்போது என்றால் என்ன?
விடை—முன் அடங்கியும் பின்வெளிப்பட்டுமிருந்தசத்தி விரிதலை (பரவுதலை)யடைந்தது எனப்பொருளாம்.
வினா—இந்தச்சத்திக்குவிரிதற்றர்மம் வருவானேன்?
விடை—இங்குக்கூறுமவதரம் சிருஷ்டிசமயமானபடியாலும், சிருஷ்டியைமுன்னிட்டே சத்திவெளிப்பட்டபடியாலும், வெளிப்பட்ட அச்சத்திவிரிதலை (வியாபகத்தை)யடையநேர்ந்தது.
வினா—சுதந்தரமில்லாத இந்தச்சத்தி எப்படி வியாபித்தல்கூடும்?



விடை—முற்கூறிய அதீதப்பிரஹ்மசந்நிதானவிசேஷத்தாலும், சர்வஜீவர்களுடைய சாமான்யகர்மபரிபக்குவநிமித்தத்தாலும், விரிதலையடைந்ததேதவிர சத்திசுதந்தரமில்லாததுதான்.
வினா—இது எவ்விடத்தும் நியமந்தானா?
விடை—பிரஹ்மத்தைத்தவிரபிறிதுபதார்த்தங்களிலெல்லாம் இதுநியமமே.

பரைவியாபகத்துள்ளிருந்ததினாலேபரப்பிரமமாகுமப்பிரம
முறையிலக்கணஞ்சூனியமதாமிந்தச் சத்திக்கவ்வுயர்பிரமத்தி
ருமுன்,கரையிலின்பரிவைதனக்குத்தன்கணவன்சந்நிதிதனி
லுதித்தெனவி, கிருதமாகாதசத்துவமிரசசுதமமெனக்கிளைத் (௨௫)
தமுக்குணமே

(இ—ள்) அந்தப்பிரஹ்மம் பரைவியாபகத்துக்குள்ளிருந்த படியினாலே பரப்பிரஹ்மம் எனப்பெயராயிற்று. இலக்கணசூன்யமாயிருக்கின்றவிந்தச்சத்திக்கு (அந்தமேலான) பிரஹ்மத்தினுடைய (அழகிய) சந்நிதானத்திற்புருஷசமுகத்திலே ஸ்திரீக்கு (அளவில்லாத) இன்பஞ்சனித்தாற்போல அவிகிருதசத்துவ, ரஜஸ், தமோகுணங்களுண்டாயின.
வினா—பரை என்றால் என்ன?
விடை—முற்கூறிய அபின்னசத்திக்கே மற்றோர்பெயர். இதுமுன் பராசத்தி என்றுகுறிக்கப்பட்டிருக்கிறது.
வினா—பரப்பிரஹ்மம் என்றால் என்ன?
விடை—பரையென்னும் அபின்னசத்தியின்வியாபகத்துள்ளடங்கிய சுத்தப்பிரஹ்மத்திற்கே வியாபித்தபின் பரப்பிரஹ்மம் எனப்பெயர் வந்தது.
வினா—பரையென்னுஞ்சத்தியின் வியாபகத்துள்ளடங்கியது சுத்தப்பிரஹ்மமாயின் (1) பெரிதுக்கெல்லாம்பெரிது என்றபிரஹ்ம இலக்கணமும்; (2) ஒன்றிலுஞ்சம்பந்தமில்லாதிருத்தலால் சுத்தம்என்ற இலக்கணமும்; (3) எது ஒன்றன் உள்ளடங்கியவஸ்துவாமோ அது தன்னைவியாபித்தவஸ்துவை சாக்ஷியாயறியமுடியாவாதலால் பரை

யின்வியாபகத்துள்ளடங்கிய இந்தச்சுத்தப்பிரஹ்மம் பரைக்குஸாக்ஷி யாயிருத்தல்முடியாமையின் ஸர்வஸாக்ஷி என்ற இலக்கணமும் ஆகிய இவைகளெல்லாம் வியர்த்தமாகுமே. அதில்நியாயம் என்ன?

விடை—அவாங்மானஸகோசரமாயிருக்கின்ற சர்வகற்பனாதீதவஸ்து வினிடத்து ஏகதேசமாய்க்கற்பிக்கப்பட்டது அபின்னாசத்தி. அந்த அபின்னாசத்திஅடங்கியிருந்தநிலைமையில்அதேசம்பந்தப்பட்டஅவாங் மானஸகோசரவஸ்துவிற்கேவந்த சுத்தப்பிரஹ்மம் என்றநாமமும் ஏக தேசமாம். ஆகையால் ஏகதேசமானசத்தி, ஏகதேசமானசுத்தப்பி ரஹ்மத்தில் அடங்கியிருந்ததென்பதுவும்; வெளிப்பட்டுவியாபித்த தென்பதுவும்; அதனால்சுத்தப்பிரஹ்மத்திற்குஅனேக நாமகற்பனைவந் ததென்பதுவும் கூடும். ஆயினும் சுத்தம்,பிரஹ்மம்,ஸர்வஸாக்ஷி என்ற பிரஹ்மத்தினிலக்கணங்கள் பரைகாரணமாகக்கற்பிக்சப்படினும் சத் தியால்எட்டப்படாத அவாங்மானஸகோசரவஸ்துவே பலபெயர்களை யடைந்தது எனமுடிவதால் அத்தகைய அதீதவஸ்துவைகூறியஇலக்க ணங்கட்கு இலக்கணையா (சொல்லுவோனதுதாற்பரியத்தா)ற்பொ ருள்கொள்க.

வினா—இவ்விதம்பொருள்கொள்வதால் கூறியஇலக்கணங்கட்குப்பங் கமில்லை என்பது எப்படி?

விடை—அவாங்மானஸகோசரவஸ்துவானது (1) பரையின்வியாபகத் திற்கும் அப்பால் இருப்பதுபற்றி பெரிதுக்கெல்லாம்பெரிது என்ற இலக்கணத்தையும்; (2) ஒன்றிலும்சம்பந்தமில்லாதிருத்தல்பற்றி சுத் தம் என்ற இலக்கணத்தையும்; (3) சுத்தப்பிரஹ்மம், பரை, பரப்பி ரஹ்மம்இவைகளைக்கடந்து அப்பாலிருப்பதால்சர்வசாக்ஷிஎன்ற இலக் கணத்தையும் பொருந்திநிற்குமாறறிக. இது, அந்தத்தத்துவாதீதவஸ் துவினிடத்துள்ளமகிமையாகும்.

வினா—இலக்கணம் என்றால் என்ன?

விடை—ஒன்றிற்சிறப்பாயிருப்பதாகிய தர்மமாம்.

வினா—இவ்விலக்கணவிசாரணை எதில் உபயோகம்?



விடை—பதார்த்தங்களைத்தெரிந்துகொள்ளுவதி(சோதனையி)ல் உப யோகமாம்.

வினா—பதார்த்தசோதனையில் எப்படி உபயோகமாம்?

விடை—ஒன்றற்குரியசிறந்தஇலக்கணமின்னதென்றுதெரிந்தாலன்றி அந்தப்பொருளின்சொரூபத்தைத்தீர்மானிக்கமுடியாவாதலால் தோ ஷமின்றிய ஒன்றன்முழுஇலக்கணமே பதார்த்தசோதனையிலுபயோ கமாம்.

வினா—ஒருபதத்தின் அர்த்தத்திற்கும் ஒன்றன் இலக்கணத்திற்கும் பேதம்யாது?

விடை—பதத்தின்சத்தவலிமையால் அறியும்விஷயம்பதார்த்தமாம். இதனால்பதார்த்தத்தின்பொதுவுணர்ச்சிமட்டும் உண்டாம். இலக்க ணமோவெனில்:— கூறியவிடயத்தின்விசேஷவுணர்ச்சியை கேட்ப வன் இலகுவாயடையுமாறு தோஷங்களில்லாமற்கூறுவதாம்.

வினா—இதில்திருஷ்டாந்தம் என்ன?

விடை—பசுவென்றால்விலங்குப்பொது என்பதுபதார்த்தமும்;கொம் புடையதாய்; அலைதாடியுடையதாய், சிமிள்கொண்டையுடையதாயுள் ளது பதார்த்த இலக்கணமுமாகநிகழுமாறறிக.

வினா—இலக்கணதோஷங்கள் யாவை?

விடை—அதிவியாப்தி, அவ்வியாப்தி, அசம்பவம் எனமூன்றாம்.

வினா—அதிவியாப்திக்குற்றத்தை திருஷ்டாந்தத்துடன் விளக்குக?

விடை—ஒன்றற்குக்கூறிய இலக்கணம் பிறிதொன்றிலுமிருப்பது. (திருஷ்டாந்தம்) கொம்போடுகூடியவிலங்குகள் அனேகமிருக்க, 'கொம்புடையதுபசு' என்றபசுவினிலக்கணம் அதிவியாப்திக்குற்ற முடையதாம்.

வினா—அவ்வியாப்திக்குற்றத்தை திருஷ்டாந்தத்துடன்விளக்குக?

விடை—ஒன்றற்குக்கூறிய இலக்கணம் அதில்முழுவதும்பொருந் தாமல் ஏகதேசத்தில்மட்டும்பொருந்துவது. (தி-ம்)கருப்பு, சிவப்பு, வெண்மைமுதலபலநிறங்களோடு பசுக்களிருக்க 'கருமைநிறமுடை

யதுபசு' என்றபசுவினிலக்கணம்ஏகதேசபசுக்களிற்பொருந்துவதால் அவ்வியாப்திக்குற்றமுடையதாம்.

வினா—அசம்பவதோஷக்குற்றத்தை திருஷ்டாந்தத்துடன்விளக்குக?

விடை—ஒன்றற்குக்கூறியஇலக்கணம் அதிற்கொஞ்சமேனும்பொருந்தாமலிருப்பது. (தி-ம்) பசுஜாதிக்கேஒற்றைக்குளம்பில்லாதிருக்க 'ஒற்றைக்குளம்புடையதுபசு' என்றஇலக்கணம் அசம்பவ (சம்பவியாத)தோஷத்தோடுகூடியதாம்.

வினா—இலக்கணசூந்யம் என்றால் என்ன?

விடை—பதார்த்தசோதனையில், பதார்த்தங்களை மூவகையாகப்பகுக்கப்பட்டிருக்கின்றன. அதாவது சத்து, அசத்து, சதசத்து என்பவைகளாம். இவற்றில் எவ்வகையையாவது சத்திசார்ந்து தனக்கென ஒரு இலக்கணமுடையதாயிருக்கவேண்டும். அவ்விதமில்லாததால் இலக்கணசூந்யம் எனப்பட்டது.

வினா—சத்தின் இலக்கணம்யாது?

விடை—மூன்று (எக்)காலத்தும்பொய்யென நிச்சயிக்கப்படாதது சத்து இலக்கணமெனவேதாந்தங்கள்முறையிடுகின்றன.

வினா—இந்தச்சத்தியினிடத்து சத்து இலக்கணம்பொருந்தவில்லை என்பது எப்படி?

விடை—ஸமாதிகாலத்து ஸ்வாத்மாநந்தசொரூபம் சத்தி, சத்த (சத்தியையுடையது) என்ற உணர்வுகளின்றி அனுபவிக்கப்படுகிறது. அச்சமயத்தில் இந்தச்சத்தி இல்லாததுபற்றி சத்துஇலக்கணம்பொருந்தமார்க்கமில்லை. ஆதலால்சத்துவிலக்ஷண (சத்துக்குஅன்னிய) மாம்.

வினா—அசத்து இலக்கணமாவது யாது?

விடை—சொரூபமின்றியதும், காரியசாமர்த்தியமின்றியதும் அசத்திற்கு இலக்கணமாம்.

வினா—இந்தச்சத்திக்கு அசத்து இலக்கணமும்பொருந்தவில்லை என்பது எப்படி?

விடை—சொரூபமின்றிய மலடிமகன் ஒருகாரியத்தைச்செய்வதில் சாமர்த்தியமுடைவனன்று. ஆனால்இந்தச்சத்தியானது அதீதப்பிரஹ்



மத்தில்சத்து, சித்து, ஆனந்தம், அகண்டம் என்றன்முதலஸ்வரூப இலக்கணங்களை விதி(நேர்)முகமாகவும், நிஷேத (நீக்குதல்)முகமாகவும் கற்பிப்பதில்சாமர்த்தியமுடையதாயிருக்கின்றது. ஆதலால் அசத்துவிலக்ஷணமாம்.

வினா—சொரூபமில்லாமல் காரியத்தில்மட்டும் சாமர்த்தியமுடைய வஸ்துக்கள் எவ்விதம் இருக்கக்கூடும்?

விடை—தோற்றன்மாத்திரமாய சொப்பனபதார்த்தங்கள் வியாவகாரிக இந்திரியங்கட்கு எட்டாமலிருப்பதுபற்றி சொரூபமின்றியவையாயினும் வியாவகாரிகதூலசரீரத்தினிடத்துப்பயம், கம்ப (நடுக்க)மாதிகாரியங்களையுண்டாக்குவதிற்சாமர்த்தியமுடையனவாயிருத்தல்போற்கூடுமெனவறிக.

வினா—சதசத்துத்தன்மையும் எவ்வாறுபொருந்தவில்லை?

விடை—சத்து+அசத்து=சதசத்தாம். இவைஒன்றற்கொன்றுவிரோதமுடையனவாதலால் ஒருதருமியின்கண்பொருந்தாது.

வினா—ஆயின், இச்சத்தியின் இலக்கணந்தான் யாது?

விடை—சதசத்துவிலக்ஷண அநிர்வசனீயமாம்.

வினா—இதின் அர்த்தம் என்ன?

விடை—பாதயோக்கிய (மித்தையென்றுநிச்சயிக்கத்தக்க) காரியசாமர்த்தியமுடையது எனப்பொருளாம்.

வினா—இவ்விலக்கணத்திற்குப்பிரசித்தி (அடைவு) எங்கேயுளது?

விடை—முற்கூறியபடி சொப்பனஅனுபவமேபிரசித்தியாம்.

வினா—இவ்வேதாந்தமதம் ஏனையமதங்களுடன் இப்பதார்த்த விசாரணையில் எம்மட்டுப்பொருந்திநிற்கிறது?

விடை—பதார்த்த அங்கீகாரஞ்செய்து, அதுவும் பாவபதார்த்தமே என்றமட்டிலும் பொருந்திநிற்கிறது.

வினா—வேறுவித்தியாசம் யாது?

விடை—அந்தப் பாவபதார்த்தத்திற்கு இலக்கணம் கூறும்போது பிரிந்துநிற்கிறது.

வினா—எப்படிப்பிரிந்து நிற்கிறது?

விடை—மற்றயமதங்கள்பாவபதார்த்தம் என்றதினாலேயே சத்துஎன்
றும், அதனால் அதற்கு நித்தியதர்மத்தை இலக்கணமாகக்கட்டிவிடு
கின்றன. இது (வேதாந்தமதமோவெனில்) பாவபதார்த்தமாயினும்
சத்தையிற்பேதங்கூறி இந்தச்சத்திக்குத்தாழ்ந்த சத்தையைக்கூறுவதி
னால் நித்தியதர்மமாகிய சத்தையில் உயர்ந்ததாயசத்துஇலக்கணத்தை
கூறச்சம்மதிக்கிறதில்லை. ஆகையால் இவ்விதம்பிரிந்துநிற்கிறது.
வினா—சத்தை என்றால் என்ன?
விடை—சர்வவஸ்துக்களுக்கும் இருக்கிறது என்னும் சாமான்யதர்
மத்தையுண்டுபண்ணக்கூடிய தருமியா (தருமத்தையுடையதா) கிய
அவாங்மானஸகோசரவஸ்துவின் விசேஷதர்மமாம்.
வினா—இச்சத்தையில்பேதம் எவ்வாறுண்டாயது?
விடை—இதுகாறுங்கூறிவந்த அபின்னசத்தியால் முற்கூறியசத்தை
யென்னும் தருமியின்சொந்தவடிவாயபாரமார்த்திகசத்தியத்துவதரு
மமும்; இனியடுத்துச்சொல்லப்புகும் பின்னசத்தியால் அதன்காரிய
மாயமாயையும் அதன்காரியங்களும், அற்பவடிவாயும் சற்று உயர்வு
தாழ்வுகளுடனும்தோற்றி, சர்வாதாரதருமியாகிய ஏக(ஒரே) சத்தை
யைப்பற்றி ஜீவித்துக்கொண்டிருத்தலின், அவைகளிற்றோன்றும்சத்
தையானது அவ்வப்பதார்த்தங்களின்யோக்கியதைகளுக்கிணங்கதார
தம்மியமாய் அசத்தியத்துவதர்மங்களாகவும்; வெளிப்படவின் முழு
கூ-ங்கள்சர்வாதாரமாகியசத்தைரூபதருமியை,குறைந்தசத்தைவடிவ
அசத்தியத்துவபதார்த்தங்களினின்றும்இலகுவாய்ப்பிரித்தறிதற்பொ
ருட்டு, தர்மமில்லாததும், பேதவாஸனையி (கந்தமி)ன்றியதுமானசர்
வாதீதவஸ்துவினிடத்து தர்மத்தையும், பேதத்தையும், அதிகாரிகள்
நோக்கால் ஒப்புக்கொள்ளப்பட்டன.
வினா—அவ்விதசத்தை எத்தனைவகைத்து?
விடை—பாரமார்த்திகசத்தை, வியாவகாரிகசத்தை, பிராதிபாஸிக
சத்தையெனமூன்றாம்.
வினா—பாரமார்த்திகசத்தையாவதுயாது?
விடை—மூன்றுகாலத்தும்பொய்யென்று நிச்சயிக்கப்படாததாம்.



வினா—அதுயாது?
விடை—பிரஹ்மம் ஒன்றே.
வினா—பிரஹ்மம் எப்படிப்பாரமார்த்திகசத்தையுடையதாம்?
விடை—சகலபொருள்களையும்பொய்யென்றுநீக்கினும் அவைகளைப்
பொய்யெனநீக்கிய அறிவைப்பொய்யெனவாவது அவ்வனுபவத்தை
நீக்கவாவதுயாவராலும் முடியாததால் அவ்வனுபவவடிவப்பிரஹ்மம்
பாரமார்த்திகசத்தையுடையதாம்.
வினா—வியாவகாரிகசத்தையென்றாலென்ன?
விடை—ஆத்மஞானம்வந்தபின் எதுபொய்யென்றுநிச்சயிக்கப்படுகி
றதோ அத்தகையதுவியாவகாரிகசத்தையுடையதாம்.
வினா—அத்தகையது யாது?
விடை—பிரஹ்மத்திற்கன்னியமான மாயையும் அதன்காரியவடிவ
உலகுமாம்.
வினா—அதெப்படி வியாவகாரிகசத்தையுடையதாம்?
விடை—சற்குருசந்நிதியில் ஆன்மானான்மவிவேகபூர்வகமாய் திரிபுடி
ரகிதநிர்விகற்பவடிவாயமைந்தோன்;ஆண்டுமாயையையாவது அதன்
காரியவடிவஉலகையாவது அனுபவியாததால் அதுபற்றி அவைகள்
மித்தையென அனுபவிக்கப்படுவதுபற்றிமாயையும்அதன்காரியவடிவ
உலகும் வியாவகாரிகசத்தையுடையவைகளாம்.
வினா—அந்நிர்விகற்பநிலையைவிட்டு வெளிவந்தபின்னாவது, பதார்த்
தங்கள் அனுபவிக்கப்படுவதால் பதார்த்தங்களை இல்லையென்று
சொன்ன அனுபவம் பொய்வசனமேயாம்?
விடை—கானலினிடத்துஜலப்பிராந்தியையடைந்தோன்கானலென்
றுணர்ந்தபின்ஜலசுவாவமான அலையாதிகளையனுபவிப்பினும் எப்படி
ஜலமென்றாவது, அதுசத்தியமென்றாவது, நனைதலாதிகாரியங்களைச்
செய்யுமென்றாவதுஎண்ணானோ, ஆனால் கானலாகவே எப்படி அனு
பவிப்பானோ;அதுபோல்பிரஹ்மத்தினிடத்துத்தோற்றியுள்ளமாயை
அதினகாரியவடிவஉலகு ஆகிய இவற்றை, பிரஹ்மஞானத்தின்பின்
மறந்தும் பதார்த்தங்களாகநினையான். ஆதலால்யதார்த்தமே.

வினு—பிராதிபாவிக சத்தையென்ருல் என்ன?
விடை—ஆத்மஞானமின்றியே பொய்யென்று நிச்சயிக்கப்படுவது.
வினு—அத்தகையது யாது?
விடை—கானல்நீர், கயிற்றரவு முதலானவைகளாம்.
வினு—சத்தையை இவ்விதம் பாகுபாடுசெய்வதினுல் இவ்வேதாந்தத்திற்குள்ள அனுகூலமியாது?
விடை—"சத்துப்பிரஹ்மம்". "ஈதெல்லாம் சத்தே" என்றுசுருதி பிரஹ்மத்தையும் பிரபஞ்சத்தையும் பிரதிபாதிக்கின்றது. இச்சுருதிக்கு இலகுவாக அர்த்தம் சித்தித்து ஆன்மப்பிரஹ்மஐக்கியத்தை எளிதாயடையுமாறு சத்தையில் பாகுபாடு செய்யப்பட்டது.
வினு—ஏனையமதங்களிற்போல் சத்தை ஒன்ருகவேயிருப்பின் உள்ள குற்றம் யாது?
விடை—சுருதிக்கு பிரஹ்மத்தை அறிவித்தலில் தாற்பரியமுளதாக பிரஹ்மத்தைப்போல பிறிதுபதார்த்தங்களையும் சத்து இலக்கணத்துடன்கூறின் விவேகித்துப்பார்க்க மார்க்கமில்லாமல் அதிவியாப்திக்குற்றத்தால் மயக்கமுண்டாம். அதனுற்புருஷார்த்த அடைவும் சித்தியாது.
வினு—எப்படி மயக்கமுண்டாம்?
விடை—சிவமும்சத்து, ஏனையபதார்த்தங்களும் சத்து என சத்திலக்கணத்தால் அனேக பதார்த்தங்களைக்கூறின் பிரஹ்மத்தை அடைய வேண்டுமென்னும் விருப்புடையான் பிரஹ்மத்தைத்தனித்தறியமுடியாமல் மயங்குவன்.
வினு—திருஷ்டாந்த பூர்வகமாய்க்காட்டுக?
விடை—பரமசிவன், பார்வதி, பசுவன் என்னும்நாமமுடைய மூவரும் கழுத்தில் ஒற்றை அக்குமணி தரித்திருக்கின்ருர்கள் என வைத்துக்கொள்வோம், இதில் மூவர்களுக்கும் பொதுவான ஒற்றையக்குமணியணிந்திருத்தல் என்னும் இலக்கணத்தால் பரமசிவனைமட்டும் அறியும் விருப்புடையான் அவ்விதம் அறியமுடியாமல் கலங்கிநிற்குமாறுபோலெனவறிக.



வினு—பிரஹ்மத்தினுடைய சந்நிதானத்தில் என்ருல் என்ன?
விடை—பிரஹ்மத்தின்முன் எனப்பொருளாம்.
வினு—பிரஹ்மத்தின் முன்னுள்ள பதார்த்தங்கள் என்னசம்பந்தத்தா
விருக்கின்றன?
விடை—சமவாயம், சையோகம், தாதாத்மியம் என்றமூன்றில்தா
தாத்மியசம்பந்தத்தாலிருந்துகொண்டிருக்கின்றன.
வினு—சமவாயசம்பந்தத்தால் இருக்கின்றனவென்று கூறினுலென்?
விடை—நித்தியசம்பந்தம் சமவாயமெனப்படும். இதில் இருநித்தி
யப்பொருள்களேற்பட்டு அவைகட்குச்சம்பந்தம் கூறுதல்வேண்டும்.
வேதாந்தசித்தாந்தத்தில் பிரஹ்மத்தைத்தவிர வேறுபொருள்களுக்கு
நித்தியத்தன்மை அங்கீகரியாததால் நித்தியசம்பந்தமாகிய சமவாயசம்
பந்தம்கூற மார்க்கமில்லை.
வினு—சையோகசம்பந்தம் கூறினுலென்ன?
விடை—அனுத்மாக்களாய அநித்தியபதார்த்தங்களிலுள்ள அநித்
தியசம்பந்தம் சையோகசம்பந்தமாதலால்; நித்தியமாய பிரஹ்மத்
திற்கு பிறிதுபதார்த்தங்களோடுள்ளசம்பந்தம் சையோகசம்பந்தமா
காது.
வினு—ஆயின் தாதாத்மியசம்பந்தம் என்பதற்குப்பொருள்யாது?
விடை—அபேதசம்பந்தம் என்பது பொருளாம்.
வினு—அதின் இலக்கணம் யாது?
விடை—கற்பிதபேதத்தோடுகூடிய வாஸ்தவ அபேதத்தினை தாதாத்
மிய சம்பந்தத்தின் இலக்கணமென்பர்.
வினு—இவ்விலக்கணத்தின்றிரண்ட பொருளியாது?
விடை—சம்பந்திகளின்நிச்சம்பந்தம் கூறுதல்கூடாவாதலின், எங்கு
இரண்டுபொருள்களேற்பட்டு ஒன்றுபரமார்த்தமாகவும். மற்றென்று
வியாவகாரிக அல்லது பிராதிபாவிகமாகவுமிருக்குமோ அங்கு அவை
களின்சம்பந்தம் தாதாத்மியசம்பந்தமாம்.
வினு—திருஷ்டாந்தம் யாது?
விடை—சிப்பியிலிரசித திருஷ்டாந்தத்தில்சிப்பி, வெள்ளியென இரு

பொருள்களேற்பட்டு சிப்பிவியாவகாரிகமாகவும், வெள்ளிபிராதிபா
ஸிகமாகவும் இருந்துகொண்டு, சிப்பியிற்சம்பந்தமின்றி வெள்ளியா
னது சிப்பியின் சந்நிதியிலேயேயிருப்பதில் சிப்பிக்குவேறில்லாததால்
வாஸ்தவ அபேதமும், சிப்பியினும் விபரீதமாய்த்தோற்றுதலால் கற்பி
தபேதமுமாயிருக்கும் இவ்விருபொருள்கட்குமுள்ளசம்பந்தம் தாதாத்
மிய சம்பந்தமாதலைக்காண்க.

வினா—இதுபோல் தாஷ்டாந்தமெப்படி?

விடை—பிரஹ்மம் ஒன்று, சத்தி அல்லது அதின் காரியங்கள் மற்
றொன்று. இதில்பிரஹ்மம் பாரமார்த்திகமாயும் ஏனையவியாவகாரிக
மாயுமிருந்துகொண்டிருப்பதுடன் பிரஹ்மத்தின் சந்நிதியைத்தவிர
ஏனையவைகட்கு இருக்க இடமின்று. இயல்பாகப்பிரஹ்மமட்டும்
யதார்த்தமாயுளவாதலால் அந்தப்பிரஹ்மசத்தையை (இருப்பை)த்
தவிர மற்றவைகட்குத்தனக்கென வேறுசத்தையில்லாததால் இரு
பொருள்கட்கும்வாஸ்தவ அபேதமும், பிரஹ்ம இலக்கணத்தினும்
விபரீதமாய்த்தோற்றுவதையிட்டு பேதத்தை அங்கீகரித்து அதுவும்
விசாரிக்குமிடத்துத்தனக்கென வடிவமின்றிப்போவதால் கற்பிதபே
தமாயும், பிரஹ்மத்தில் யாதொருவிதவிகாரமுமின்றி பிரஹ்மத்தினி
டத்தில் இருப்பதாய இத்தகையசந்நிதிமாத்திர இருப்பையே கற்பித
பேதத்தோடுகூடியவாஸ்தவ அபேதமாய தாதாத்மியசம்பந்தமெனப்
படும் என்றுணர்க.

வினா—அப்படியானால்சத்தியும், அதின்காரியங்களும் சந்நிதிமாத்திர
மாயிருந்தும், சேட்டிக்கிறதுமாயின் சத்திசுவதந்தரமுள்ளதாகாதா?

விடை—ஆகாது?

வினா—எப்படி ஆகாது?

விடை—காந்தத்தின்சந்நிதிப்பட்ட இரும்புமாத்திரம்சேட்டிக்(அசை)
கின்றதேயொழிய வேறு இரும்புகள் தாங்களேசேட்டியாததால்,
தனித்த இரும்புக்குக்கர்த்திரு (சுவதந்திர)த்துவமெப்படியொப்புகிற
தில்லையோ; அப்படிப்போல்பிரஹ்மசந்நிதிப்பட்டசத்தியின்சேட்டை
யெல்லாம் தனித்தசத்தியின் கர்த்திருத்துவமாகக்கூறமார்க்கமில்லை.



ஆனால் அது (சலித்தல்) பிரஹ்மசந்நிதியாகிய சம்பந்தவிசேஷமே.
வினா—பிரஹ்மமேசேட்டிக்கச்செய்தது என்றுசொன்னாலென்?
விடை—காந்தமானது செய்கையும், செய்விக்கையுமற்றிருக்கிறது
போல்; பிரஹ்மமானது நிர்விகாரியானபடியால் செய்கையையாவது,
செய்விக்கையையாவது செய்கிறதில்லை.

வினா—ஆனால் இச்செய்கைக்குத்தான் கதியாது?

விடை—அதனை இன்னதென நிர்ணயிக்கமுடியாவாதலால் அநிர்வச
னீயம் (இன்னதெனச்சொல்லமுடியாதது) என்பர்.

வினா—அப்படியானால் சந்நிதிமாத்திரத்தாற்சேட்டிக்கும் இவ்வியவகா
ரம் கேவல அவாங்மானஸகோசரவஸ்துவினிடத்தோ? அல்லது இப்
பரைகாரணமாயுண்டாய பின்சேதனங்களிடத்தோ?

விடை—பரைகாரணமாயுண்டாய சச்சிதானந்தாதிசைதன்யம்வரை
ஆராயுமிடத்து அவாங்மானஸகோசரவஸ்துவினிடத்து அபேதமா
யுள்ள இலக்கணங்கள் எனவும், அவ்விதமிருப்பதை முமுக்ஷுக்களி
னிமித்தம் சிருட்டியவதாரத்தில் அபின்னசத்தியையும், அதன்காரி
யமாக சத்து சித்து என்றன்முதலநாமகற்பனைகளையும் கற்பிக்சப்
பட்டதெனவும் உண்மையிற்சொரூபமாக அவாங்மானஸகோசரவஸ்
துவிற்கும், சச்சிதானந்தப்பிரஹ்மத்திற்கும் பேதம்கிடையாதென
வும் மகான்களாலனுபவிக்கப்படுகிறபடியால் இரண்டிடத்தும் சந்நிதி
மாத்திரமான வியவகாரமேயங்கீகரிக்கத்தக்கது.

வினா—அப்படியானால் அவாங்மானஸகோசரவஸ்துவினிடத்தும், சச்
சிதானந்தவஸ்துவினிடத்தும் சிறிதும்விகாரமின்றி சந்நிதிமாத்திரத்
தாலேயே சத்திசேட்டித்துப்பிரபஞ்சசிருட்டி உண்டாயிற்றெனில்
உண்மைச்சுருதியும் அங்ஙனங்கூறாமல்,பிரஹ்மம்சிருட்டித்ததுஎன்று
என் கூறவேண்டும். அதனை (சந்நிதிமாத்திரசிருஷ்டியினை)ச்சொல்
லுவதில் அதற்கு (உண்மைச்சுருதிக்கு)யாதொருபிரயாசையுமிருப்ப
தாய்த்தோற்றவில்லையே, அதில் நியாயமென்ன?

விடை—இதுவரைகூறிவந்தவிவர்த்தபக்ஷமாய வேண்டியயுக்திகளைக்
கேட்டும் சாந்தியையடையாத கனிஷ்ட(தாழ்ந்த) அதிகாரிகளை

நோக்கி அந்த அகண்டபரிபூர்ணசச்சிதாநந்த சிவம்மாயையைச்சுவீகரித்து(அடைந்து) பரியாலோசனைபண்ணிற்று, சிருஷ்டித்தது, பிரவேசித்தது, என்றன்முதல வாக்கியப்பிரயோகங்களை மாயையைவிசேஷணமாய்க்கொண்ட சைதன்யத்தினிடத்திற் கூறிற்று. அவ்விதங்கூறினும் சந்நிதிமாத்திரசிருஷ்டிக்கு விரோதப்படாமல்கேவலசேதனத்தில் யாதொருவிகாரமுங்கூறாததால் யாதும்விரோதமின்றாம்.

வினா—இந்தச்சிருஷ்டினாலுண்டாய பிரயோஜனம் யாது?

விடை—காரணத்திற்கந்நியமாய் காரியமில்லையென்றயுக்தியால் ஈசுவரனாற்சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சம் ஈசுவரனுக்கந்நியமாயில்லையென்றுசிந்தனைசெய்து பரமசாந்தியையடைவதுவே முக்கியப்பிரயோஜனமாம்.

வினா—இவ்விதமிடத்திற்குத்தகுந்தபடியெல்லாம்கூறின் அதற்குஉண்மைச்சுருதியென்ற பெயர் எங்ஙன்பொருந்தும்?

விடை—வேதத்திற்கு சிருஷ்டியைச் சொல்லுவதிலாக்கிரகமில்லை. ஆனால்எவ்வழியாகவாவது முமுக்ஷுக்கள் அத்வைதப்பிரஹ்மத்தில்நிலைத்தபுத்தியுடைவர்களாக வேண்டுமென்பதே அதின்பரமதாற்பரியம். இதுமாத்திரமா! தேகாத்மவாதிமுதற்சகல வாதிகட்கும் ஆதாரமாய வாக்கியப்பிரயோகங்களும் அதன்கண்ணேயுள. அதிகாரிநோக்காற்பலவாறு போதித்திருப்பினும்துவாரா (மூலமாய்)துவாராமுடிவில் ஒரேஅத்விதீயப்பிரஹ்மத்தையேபோதிப்பதால் சுருதியினபிப்பிராயம்மாறவில்லை. எவ்விதங்கூறினுந்தனது பரமதாற்பரியத்தைவிடாது அங்கங்கேபோதிப்பதனால் அதற்கு உத்தமப்பிராமாணமாந்தன்மையும் பொருந்துகிறது.

வினா—புருஷசமகத்திலேஸ்திரீக்கு இன்பஞ்சனித்தாற்போல்என்று சொல்லுவானேன்?

விடை—புருஷசந்நிதியையடையுமுன்னர் காமவிகாரமில்லாதிருந்தஸ்திரீ, புருஷன்காமவிகாரமில்லாதிருப்பினும் புருஷசந்நிதானத்தையடைந்த ஸ்திரீக்குவிகாரமுண்டாகி அதனால் இன்பம் எப்படிஜனித்துவிடுகிறதோ; அதுபோலசுத்தப்பிரஹ்மத்தில் விகாரமில்லாமலே



அதின்சந்நிதியிலுள்ள சத்தியின்கண் சேஷ்டையுண்டாய் அதனால் முக்குணங்கள்ஜநித்தன எனவிளக்கவேண்டிக்கூறியவாறறிக.

வினா—அவிகிருத என்றபதத்தின் அர்த்தம்யாது?

விடை—மாறுதலில்லாத எனப்பொருளாம்.

வினா—சத்வ ரஜ தமோ குணங்கள் உண்டாயினவென்றாலென்ன?

விடை—இல்லாதது உண்டாகா. உண்டாயினவென்றதால் பூர்வம் உள்ளதே உண்டாகவேண்டுமாதலின் அந்தமுக்குணங்களும், முக்குணசமுதாயமானசத்தியும் அனாதி என்பதுசித்தித்தது.

வினா—சத்தியின்கண் முக்குணத்தை எப்படியனுபவிக்கிறது?

விடை—தமோகுணமென்பது ஜடசுபாவமானதினாலும் ஜடசுபாவத்தில் இருப்புச்சுபாவமட்டும் தலைக்கூடிநிற்குமாதலாலும், முக்குணசமுதாயமான சத்தியினிருப்பேதமோகுணமெனவும்; அவ்வித இருப்புத்தன்மையைப்பொருந்தியுள்ள சத்தியின்கண் சிருட்டி அவதாரத்தில் ஏற்படும் விகாஸம்(விரிவு)'ஒன்றாகியயான்பலவாவேன்' என்னும் ஞான ரூபவிரிவாக அமைவதாலும்; ரஜோகுணமென்பது கிரியாவடிவமாவதாலும், அவ்விதஞானரூபவிகாஸக்கிரியையே ரஜோகுணமெனவும்; சத்வகுணமென்பதுஐக்கியவிசேஷத்தன்மையுடையதால், முற்கூறிய சத்தியின் இருப்பையும் ஞானரூபவிகாஸத்தையும், ஒன்றற்கொன்றுவேறாகக்காட்டாமல் ஒருசத்தியினிடத்தே அபேதமாய்க்காட்டலால் அவ்வபேத அனுபவத்தையே சத்துவகுணமெனவும் அறிந்தனுபவிக்கவும்.

இந்தச்சுத்தசத்துவத்தினுக்கெய்திடுபெயரா
னந்தச்சத்தியாமிரசசிற்கெய்திடுநாமஞ்
சந்தச்சித்துருச்சத்தியாந்தமந்தனக்குப்பேர்
முந்தச்சத்தெனுஞ்சத்தியாமொழிந்திடிற்றானே (உகூ)

(இ-ள்) (சொல்லுமிடத்து) இவற்றில்சுத்தசத்துவத்திற்கு ஆனந்தரூபசத்தியென்று பெயர். சுத்தாஜஸிற்கு (அழகிய) சித்துரூபசத்தியென்றுபெயர். சுத்ததமஸிற்கு (முற்பட்ட)சத்துரூபசத்தியென்றுபெயர்.

வினா—முற்கூறப்பட்டுள்ள மூன்றுகுணங்களையும் சுத்தரூபமாய்ச் சொல்வானேன்?

விடை—ஒவ்வொருகுணமும்பிறிதாலமிழ்த்தப்படாமல் தான்மேலிட்டு மற்றைய இரண்டுகுணங்களையும் அமிழ்த்திநிற்குமாயின் அப்பொழுது சுத்தத்தன்மையையடைகிறது.

வினா—திருஷ்டாந்தம் என்ன?

விடை—மூன்றுமுள்ளுடைய நெருஞ்சிக்காயில் ஒருகூறுமேற்பட்டிருக்க மற்றைஇருகூறும்கீழ்ப்பட்டிருத்தல்போல் எனவறிக.

வினா—சத்துவத்தை ஆனந்தரூபசத்தியென்று என்கூறப்பட்டது.

விடை—சத்துவகுண ஆதிக்கத்தி (அதிகத்தன்மையி)ல் அபேத அனுபவமாதலாலும்,அபேதத்தில் ஆனந்தானுபவம் சித்தமாதலாலும் அவாங்மானஸகோசரப்பிரஹ்மத்தைப்பற்றிநின்றுஅதன்சொந்தவடிவ ஆனந்தரூபத்தைவியக்த (வெளி)ப்படுத்துவதில் சாதகமாயிருததலாலும் இதை ஆனந்தரூபசததியென்று சொல்லப்பட்டது.

வினா—இந்தச்சுத்தசத்துவத்தை முதலாவதாகச்சொல்லுவானேன்?

விடை—இங்குக்கூறும் அவஸ்தைசிருஷ்டிஆரம்பகாலமானபடியாலும்; அவ்விதசிருஷ்டியும், சுழுத்திசமானமானபிரளயத்தை முதலாவதாகக்கொண்டு உதிக்கிறபடியாலும்; சர்வமும் உதிக்குமுன்சூன்யமான அனுபவமாதலாலும்; சர்வமும்சூன்யமுள்ளவிடத்து ஆனந்தானுபவம்பிரத்தியக்ஷமாதலாலும்; அந்தஜகத்சத்தாசூன்ய (உலகயிருப்பு யின்மை) ஆனந்தானுபவவடிவ சுழுத்தி (ஒடுக்க) அவத்தைபிரபஞ்ச சிருட்டியின் ஆதியா (முதலாவதா)யிருப்பதுபற்றியும் முதலாவதாகக் கூறப்பட்டது.

வினா—இதுசுழுத்தியவத்தையாயின் இதற்குமுன்னுள்ள அவத்தை கள்யாவை?

விடை—முன்சொல்லப்பட்ட பரப்பிரஹ்ம அனுபவகாலம்சிவதுரிய அவத்தையெனவும்; சுத்தப்பிரஹ்ம அனுபவகாலம் சிவதுரியாதீத அவத்தையெனவும்; அவாங்மானஸகோசரப்பிரஹ்ம அனுபவகாலம் சிவஅதீதோதீத அவத்தையெனவும்; கீழ்க்கண்ட அவத்தைகளையுத்



தேசித்து இவ்வதீதோதீதமும் அவாங்மானஸகோசரம் என அனுபவிக்கப்பட்டுப்போனபடியால் யாவராலும் வர்ணிக்கமுடியாத வித்வதனுபவங்களிலுள்ளபடி விளங்குவதே சிவசன்மயஅவத்தையெனவும் குறிக்கப்படும்.

வினா—துரியாதீதத்திற்கு மேல்வியவகரிப்பது அப்பிரசித்தம் (அடைவின்மை) அல்லவோ?

விடை—இவ்வனுபவப்பிரசித்தியானது தொண்ணூற்றெட்டு அவத்தைகளைப்பிரதிபாதிக்கும் *சுவானுபூதிரஸாயனம் முதலிய நூல்களிலும், உத்தமபூமியிலேறிய வித்வான்களிடத்தும் வெளிப்படையாயிருத்தலின் அப்பிரசித்தமல்ல.

வினா—சுத்தராஜஸசித்தரூபசத்தியென்று என் சொல்லவேண்டும்?

விடை—ரஜோகுண ஆதிக்கத்தில் கிரியை உற்பத்தியாதலாலும்' அதுசுத்தமாயிருத்தலின் பிரஹ்மத்தைப்பற்றிநின்று முன்னுதித்த ஆனந்தானுபவத்தை ஞானரூபவிகாஸவடிவக்கிரியையால் விளங்கச்செய்வதாலும்;அதுபிரஹ்மஅபேதமாயிருந்துகொண்டுபிரஹ்மத்தின் சொந்தவடிவாய ஸ்வயம்பிரகாசத்தன்மையை விளங்கச்செய்தலாலும் அத்தகையவிளக்ககாரணமாய ரஜோகுணத்தைசித்துரூபசத்திஎன்று சொல்லப்பட்டது.

வினா—இந்தச்சித்துரூபசத்தியை இரண்டாவதாகக்கூறுவானேன்?

விடை—முதலில் ஒன்றையுமுன்னிலைக்கொள்ளாத ஆனந்த அனுபவ முதிக்குமேல் பின் அதின் அனுபவவிளக்கம் ஞானாகார விருத்தியால் உண்டாவதுபற்றி ஞானாகாரசித்துரூப சத்தியை இரண்டாவதாகக் கூறப்பட்டது.

வினா—சுத்ததாமஸசத்துரூபசத்தியென்று என் கூறவேண்டும்?

விடை—தமோகுணமென்பது இச்சா, ஞான, கிரியாசூன்ய மாதலா

* இத்தென்னாட்டில் திருவவதாரஞ்செய்து சித்தி, முத்திகளையடைந்து அரிமழம் என்னும் க்ஷேத்திரத்தில் திருக்கோயில் கொணடெழுந்தருளியிராநின்ற கோடகநல்லூர் ஸ்ரீசுந்தரஸ்வாமிகள் என்னும் பெரியாரால் இயற்றியருளிய பிரகரணத்திரயமென்னும் சுவானுபூதிரஸாயனம், சுவானுபவரஸமஞ்சரி,நிஜானந்தவிலாசம் என்னும் சாஸ்திரங்களாம்.

லும் அவ்வித சூன்யத்துவமும் ஓர் வஸ்துவைமுன்னிட்டே விளங்க வேண்டுவதாலும்; அவ்விதவஸ்துவாகிய சத்தியினிருப்பே இங்குத் தமோகுணமெனப்படுவதாலும்; அதுசுத்தமாயிருத்தலின் பிரஹ்ம அபேதமாயிருந்து பிரஹ்மத்தின் இருப்பை (சத்துத்தன்மையை) வெளிப்படுத்துவதில் ஸாதகமாயிருத்தல்பற்றி சத்துரூபசத்தியெனப் பட்டது.

வி௵—இச்சத்துரூபசத்தியை மூன்றுவதாகயேன் கூறப்பட்டது.

விடை—முதலில் ஆனந்தானுபவமும், இரண்டாவது விருத்தியில் ஆனந்தவிளக்கமும் உண்டானபின் இருந்துவிளங்கியதா? இல்லாமல் விளங்கியதா எனவிமர்சிக்குங்கால் இருந்தேவிளங்கிற்றென விளக்க அனுபவத்தின்பின் இருப்பு அனுபவமனுபவிக்கப்படுதல்பற்றி சத்தா காரசத்துரூபசத்தியை மூன்றுவதாகக்கூறப்பட்டது.

இந்தக்காரணமாமானந்தரூபவிறைவியுடன்பரப்பிரமமிசைந்துசர்வா,னந்தமாசுழுத்தியடைகாலையிந்தநாமம்போய்ப்பின் பரமானந்தநாமம், வந்ததிவன்சித்துருவச்சத்தியோடுமருவி சர்வப்பிரகாசமாங்கனவை, உந்தவடைகாலையிந்தநாமந்தானுமொழிந்துதேசோமயனென்றொருபேருற்றான். (உஎ)

(இ—ள்) இவற்றில்காரணமான ஆனந்தரூபசத்தியுடனே பரப்பிரஹ்மங்கூடிச்சர்வானந்தமெனும் (மஹா) சுழுத்தியவஸ்தையையடைகின்றபோது (இந்த) பரப்பிரஹ்மமென்கின்ற பெயர்போய் (பின்னர்) பரமானந்தரென்கின்ற பெயர்வந்தது. இந்தப்பரமானந்தர் சித்துரூப சத்தியுடனேகூடி சர்வப்பிரகாசமென்னுஞ் சொப்பனவத்தையை (உயருற) அடைகின்றபோது (இந்தப்) பரமானந்தரெனும் பெயர் போய்தேஜோமயனென்னும் (ஒப்பற்ற)பெயரையடைந்தான்.

வி௵—காரணமான என்னும்பதத்தின் கருத்துயாது?

விடை—பிரஹ்மாமுதல் *ஸ்தம்பவரையுள்ள சர்வஜீவர்களும் ஆனந்

* இது பிரம்மசிருஷ்டியில் பரமாணுவினும் நுட்பமாய சரீரத்தைப்பெற்ற ஓர் ஜந்து. இது எணிப்பானைத் தண்ணீர்வழியாய் மேல்பானையிலிருந்து அடிப்பானைக்கு ஜலத்துடனிறங்கும் சுபாவமும் மூன்றவஸ்தைகளும் உடையது என ஆன்றோர் கூறுவர்.



தத்தையேவிரும்பி, முயன்று அடைவதால் காரணமான ஆனந்தம் எனப்பட்டது.

வி௵—சர்வானந்தம் என்றுலென்ன?

விடை—அபின்ன பின்னசத்திகளால் அவாங்மானஸகோசரப்பிரஹ்மத்தினின்றும் வெளிப்பட்ட எட்டுவிதஆனந்தங்களாம்.

வி௵—இவ்வெண்வகை ஆனந்தங்களின் பெயரும், இலக்கணமும், அவைகளின் நிமித்த(துணைக்) காரணமாயசத்தியும் இன்னதெனக் கூறுக?

விடை—(1) பிரஹ்மானந்தம்-மூன்றுகாலத்தும் மிகுந்தபிரியவடிவாயிருப்பதாம். இது பிரஹ்மத்தின் சொந்தவடிவாதலின் வியாபினி சத்தியென்னும் ஆனந்தரூபஅபின்னசத்தியால்வெளிப்பட்டது. இது முமுக்ஷுக்களால் சுழுத்தியவஸ்தையைமுன்னிட்டு ஆண்டுள்ளபிம்ப வடிவாயனுபவிக்கப்படுவதாம்.

(2) விஷயானந்தம்—சப்தாதிவிஷயங்களைமுன்னிட்டுஅவ்வப்போக நிவர்த்திகாலங்களிலுண்டாவதாம்.

(3) வாசனானந்தம்—நித்திரைவிட்டெழுந்தோனால் சுழுத்திகாலத் தனுபவித்த பிம்பபூதஆனந்தலேசமானது சற்றுப்பொழுது நித்திரை யுமன்றுநித்திரையுமாம் என்னும் ஓர்தசைக்கண்ணுண்டாவதாம்.

(4) நிசானந்தம்—விருப்பு, வெறுப்பற்ற உதாசீனதசைக்கண்ணுண்டாவதாம்.

இம்மூன்றும் இனியடுத்துச்சொல்லப்புகும் பின்னசத்தியாலுண்டாகி(வெளிப்பட்டு)அதன்காரியங்களாகிய விஷயம், நித்திரை,உதாசீனதசை இவைகளைமுன்னிட்டு ஸர்வ அஞ்ஞானிகளாலும் அனுபவிக்கப்படுவதாம்.

(5) முக்கியானந்தம்—ஞானாதிகாரிகளால் சிரவணத்தின்பின்கருவிகாரணாதிகளையொடுக்கி நிர்விகற்ப நிலையையடைந்தபின் சாதனசகித உத்தமமனதிலுதிக்கக்கூடிய நிராகாரவிருத்திவடிவமாம்.

(6) ஆத்மானந்தம்—அந்தச்சமாதியால் ஆன்மாவே பிரியவஸ்துவென்றுண்டாம் ஆத்மாகாரவிருத்தியின்வடிவமாம்.

(7) வித்தியா(ஞாஞ)னந்தம்—ஆத்மானந்தத்தையடைந்தபின் அதிகாரிகளிடம் இனிச்செய்யத்தக்கதாவது, அடையத்தக்கதாவது தங்களுக்கொன்றுமில்லை என்றுண்டாம் தன்யவிருத்தியின்வடிவமாம்.

(8) அத்துவிதானந்தம்—ஜீவன்முத்திதசைக்கண் அனுபவிக்கக்கூடியவிசேஷசுகமாம்.

இந்நான்கும் அபின்னசத்தியின் மற்றோர்கூருயவிமர்சினிசத்தியின் கருணைகடாக்ஷத்தால் வெளிப்படடவைகளாம். இவைகள் எல்லாவித்வான்களாலும் அனுபவிக்கக்கூடியவைகள். இவ்வானந்தங்கள் விருத்தியை முன்னிட்டனுபவிப்பதுபோலிருப்பினும் நிர்விருத்திகமேயாம்,

வினு—சுழுத்தியவஸ்தை என்றுலென்ன?

விடை—இங்குகூறும்அவஸ்தை சிருட்டிஆரம்பகாலமானபடியாலும்; அவ்விதசிருட்டி சர்வமும் சூன்யமாயுள்ள சுழுத்திஅல்லதுபிரளயத்தை முதலாவதாகக்கொண்டுதிக்கிறபடியாலும்; அவ்விதஜகத்சத்தாசூன்யநிலையினைசுழுத்தியென்னப்பட்டது.

வினு—சர்வானந்தமெனும்சுழுத்தியவத்தை என ஒன்றுபடுத்திக்கூறுவானேன்?

விடை—கூறியஸர்வ (எண்) வித ஆனந்தங்களும், சுழுத்தி (ஒடுக்க) நிலையையடைந்தே அனுபவிக்கப்படுகிறபடியால் இரண்டையும்ஒன்றுபடுத்திக்கூறப்பட்டது.

வினு—இவ்விதசுழுத்தியில்பேதம்யாது?

விடை—ஒருசேதனத்திலேயேவியட்டி (தனி) காரணசரீரத்தைப்பற்றியதுஜீவசுழுத்தியென்றும், சமட்டியை (அனேக=பிரமாண்டசரீரத்தைப்பற்றியது)ஈசுவரசுழுத்தியென்றும், சமட்டி, வியட்டிகற்பனையில்லாத ஆனந்தரூபசத்தியைப்பற்றியது சிவசுழுத்தியென்றும்பெயராம். இங்கு இதுசிவசுழுத்தியாம். ஏனையவிரண்டும் ஆங்காங்கு (11வது 13வது அவதாரிகைகளிற்) பேசப்படும்.

வினு—பரமானந்தர்என்றுல் என்ன?

விடை—எல்லையற்ற ஆனந்தவடிவாயிருப்பவர் என்பதாம்.



வினு—சர்வப்பிரகாசம் என்றுல் என்ன?

விடை—அபின்ன, பின்னசத்திகளால் அவாங்மானஸகோசரப்பிரஹ்மத்தினின்றும் வெளிப்பட்ட நான்குவிதபிரகாசங் (சித்துக்)களாம்.

வினு—அந்தநான்குவிதசித்துக்கள் யாவை?

விடை—ஜீவன், ஈசுவரன், கூடஸ்தன், பிரஹ்மம் என்பவைகளாம்.

வினு—இவர்களுக்குச்சித்து என்றபெயர் எக்காரணம்பற்றி வந்தது?

விடை—பிரஹ்மமும் கூடஸ்தனும் அவாங்மானஸகோசரவஸ்துவேயாதலால் சித்துவடிவர். ஜீவனும் ஈசுவானும் சித்துப்போல்விளங்குபவர். ஆதலின்நால்வர்களும் சித்தாம்.

வினு—கூடஸ்தன் என்றுல் என்ன?

விடை—அவாங்மானஸகோசரவஸ்துவிற்கே சரீரத்தில்வளைபட்டதுகொண்டுகூடஸ்தன் எனப்பெயர். இதுவே ஆத்மாவென்றுஞ்சொல்லப்படும்.

வினு—பிரஹ்மம் என்றுல் என்ன?

விடை—அவாங்மானஸகோசர வஸ்துவிற்கே வியாபகமாயிருத்தல்கொண்டு பிரஹ்மம் என்றுபெயர். இம்முறையில் பிரஹ்மத்திற்கும் ஆன்மவடிவகூடஸ்தனுக்கும் எவ்விதத்தாலும் பேதமின்று. இந்நாமங்கள் அபின்னசத்தியாற் கற்பிக்கப்பட்டவைகளாம்.

வினு—ஜீவன் ஈசுவரன் என்றுல் என்ன?

விடை—இவர்கள் இனியடுத்துச்சொல்லப்புகும் பின்னசத்தியால் விளங்குபவர்கள். (ஆதலின் அங்குப்பேசுவாம்)

வினு—சொப்பனவஸ்தையென என் சொல்லவேண்டும்?

விடை—வியட்டி சொப்பனவஸ்தையில் சேதனம் தானேபிரகாசவடிவாயிருந்துகொண்டு ஆண்டுள்ள விஷயங்களை விளங்கச்செய்வதுபோல்; சிருட்டி உன்முகசுழுத்தியிலுள்ள ஆனந்தரூபானுபவத்தை சேதனமானது தனதுபிரகாசத்தால் தனக்குவேறில்லாமல் தானேதானுய் விளக்கியதுபற்றிச்சொல்லப்பட்டது.

வினு—இவ்வித சொப்பனவஸ்தையிற்பேதம் யாது?

விடை—ஒருசேதனத்திலேயே வியட்டி அந்தக்கரணத்தைப்பற்றி

யது ஜீவசொப்பனமென்றும்; சமட்டி சூக்குமசரீரத்தைப்பற்றியது ஈசுவரசொப்பனமென்றும்; சமட்டிவியட்டி கற்பனையில்லாத சித்து ரூபசத்தியைப்பற்றியது சிவசொப்பனமென்றும் சொல்லப்படும். இப்பொழுது இங்குப்பேசியது சிவசொப்பனமாம். ஏனையவிரண் டும் பின்னல் (11-வது 13-வது அவதாரிகைகளில்)பேசப்படும்.

வினா—தேஜோமயன் என்றால் என்ன?

விடை—பிரகாசவடிவாய சித்துரூபன் எனப்பொருளாம்.

இவன்சத்துரூபசத்தியுடனியைந்திங்கியம்புசர்வவியாபகமா
நனவையெய்து,மவதரத்திலப்பெயர்போயகண்டபூர்ணவபி
தானம்வந்ததிந்தவகண்டபூர்ண, சிவசச்சிதானந்தப்பிரமந்
தன்னிற்சிப்பியதிற்றேன்றுமிரசதமேமானப், பவமாயிற்
றொரு சத்தியதுதான்மூலப்பகுதியெனவிகிர்தகுணமூன்ற
ேனுடும்
(உ௪)

(இ—ள்) இந்தத்தேஜோமயர் சத்ரூபசத்தியுடனேகூடிச் (இங்குச் சொல்லாநின்ற) சர்வவியாபகமென்னுஞ் சாக்கிராவஸ்தையையடை கின்றபோது தேஜோமயரென்னும் பெயர்போய்(அகண்ட)[பரி]பூ ரணரென்னும் பெயர்வந்தது. இந்த அகண்ட[பரி]பூர்ண(சிவ) சச் சிதானந்தப்பிரஹ்மத்தினிடத்திலே சுத்தியி (ற்றேன்றும்) விரசதம் போல ஒருசத்தி *யுண்டாயிற்று. அந்தமூலப்பிரகிருதியும்விகிர்த குணமாகிய முக்குணத்தோடுகூடியிருக்கும்.

வினா—சர்வவியாபகம் என்று சொல்லுவானேன்?

விடை—சத்தாமாத்திரமாய்த்தானுமிருந்து அன்னிய சத்தையயு டையவியாவகாரிக பதார்த்தங்கட்குஞ்சத்தையைக்கொடுத்துத்தனது பூரணவியாபகசத்தைக்கும் லோபமில்லாதிருத்தல்பற்றி சர்வவியாபக மெனப்பட்டது.

வினா—சாக்கிராவஸ்தையென என்கூறவேண்டும்?

விடை—சுழுத்தி, சொப்பனங்களினின்று வெளிவரின்விடயதேசங் களில் வியாபகப்பாவுதலையடைகிறதைத்தவிர வேறில்லாததாலும்,

* உண்டு எனவும் பாடம்,



ஸர்வபதார்த்தங்களும் ஜகசிருட்டிக்குவித்தமாய் சிருட்டி உன்முக காலத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கும்விழிப்புக்காலமாயிருந்த லாலும் அத்தகையகாலத்தை சாக்ராவத்தை எனப்பட்டது.

வினா—இந்தச்சாக்கிராவத்தையிற்பேதம் யாது?

விடை—முன்சொல்லியபடி ஒருசேதனத்திலேயே வியட்டிதூலசரீ ரத்தைப்பற்றியது ஜீவசாக்கிரமென்றும்,சமட்டிதூலசரீரத்தைப்பற்றி யது ஈசுவரசாக்கிரமென்றும், சமட்டிவியட்டிகற்பனையில்லாத சத்து ரூபசத்தியைப்பற்றியது சிவசாக்கிரமென்றும் சொல்லுவர். ஈண்டு சிவசாக்கிரமாம். ஏனையவிரண்டும்பின்னற் (11வது13வது அவதா ரிகைகளில்) பேசப்படும்.

வினா—பரிபூர்ணர் என்றால் என்ன?

விடை—சத்துரூபர் எனப்பொருளாம்.

வினா—அது எப்படிச்சித்தித்தது?

விடை—பரிபூர்ணமென்பது ஸ்வய (தனது) காரிய அனுசூதத்வம் (உள்ளீடாந்தன்மை) ஆதலாலும், மண்தனதுகாரியமாகிய கடத்தில் தொடர்ந்து இருக்குந்தகைமையால் எப்படிப்பரிபூர்ணமாயிருக்கிற தோ; அப்படியே இங்கும்சத்துரூப அந்த இருக்குகையானது பூர் ணத்தன்மையாயிருப்பதால் பரிபூர்ணரென்று இச்சாத்திரத்திற்கூறி யிருப்பதை சத்துரூபர் எனவேகொள்ளவேண்டும்.

வினா—பரிபூர்ணர் என்னும்பதம்சத்துரூபரையே விளக்கிநிற்கிற தென்பதை வேறுயுக்தியாலுங்காட்டுக?

விடை—சிருட்டிக்குமுன் சர்வமும்சத்தாமாத்திரமாயிருந்தது'என்ற சுருதிப்படி சர்வபதார்த்தங்களின் உற்பத்திக்குமுந்திய இவ்வவத்தை யில் சத்தைநிரூபிக்கவேண்டியது அவசியமாயிருத்தலாலும்; இதற்குக் காரணமானசத்தியும் சத்துரூபசத்தியென வரைந்திருப்பதினாலும்; பரிபூர்ணர் சத்துரூபர் என்பது ஒருசேதனத்திற்கேபரியாயநாமமா (ஒருபொருட்கிளவியா)யமைவதாலும்;இப்பரிபூர்ணரென்னும் பதமா னது சத்துரூபரென்னும்பெயரை விளக்கவந்ததென்பதில் யாதும் ஆசங்கையின்று.

வினா—இந்த என்னும்பதம் எதைச்சுட்டுகிறது?
விடை—இதுவரை பிரஸ்தாபித்த அகண்டம், பரிபூர்ணம், சத்து, சித்து, ஆனந்தம் என்னும்ஐந்திலக்கணங்களையுமுணர்த்துகின்றது.
வினா—இதுவரைவரையப்பட்ட பிரஹ்ம இலக்கணங்களில் அகண்டம், பரிபூரணம் என்றநாமதேயங்களேயின்றியிருக்க, இந்தஎன்னும் பதமானது அகண்டம் பரிபூரணம் என்பவற்றையும்சுட்டுவதாயெப்படியறிவது?
விடை—அவாங்மானஸகோசரவஸ்துவில் கற்பிக்கப்பட்ட இலக்கணங்களில், சுத்தப்பிரஹ்மத்தினிலக்கணத்தில் அகண்ட இலக்கணமும்; பரப்பிரஹ்மத்தினிலக்கணத்தில் பரிபூர்ண இலக்கணமும்; அடங்கிக்கிடக்கின்றவாறறிக.
வினா—சுத்தப்பிரஹ்மத்தினிலக்கணத்தில் அகண்ட இலக்கணம் எப்படி இருக்கின்றது?
விடை—சுத்தப்பிரஹ்மம் என்பது பராசத்தியின் எழுச்சிக்குமுந்திய சமயமாதலால்;

(1) எழுச்சிக்காலமான சிருட்டிஉன்முககாலகற்பனையையும்

(2) எழுந்தபின் இடம்பற்றிவியாபிக்கவேண்டுமாதலால் தேசகற்பனையையும்,

(3) எழுந்த அதற்கு வஸ்துத்தன்மையானது வியாவகாரிகமாகவாவதுசித்தித்தலின் வஸ்துகற்பனையையும்,

ஆகியமூவிதகற்பனைகளையும்கடந்ததாக இருக்கிறது. கூறியமூவிதகற்பனைகளும்பிரவேசியாதது அகண்ட இலக்கணமாதலால்; மூவிதகற்பனைகளுடன் அடங்கியிருக்குமவதாரத்துள்ள அச்சத்தி அகண்டசிற்சத்தியென்னும் பெயரைவகிக்க, அதனாலுபகித (விளைபட்ட)சைதன்யமாகியசுத்தப்பிரஹ்மமும் அகண்டனெனப்பெயர்பெற்றவாறறிக.
வினா—பரப்பிரஹ்மத்தினிலக்கணத்தில் பரிபூர்ணர்என்றஇலக்கணம் எப்படி இருக்கிறது?
விடை—பரப்பிரஹ்மம் என்பதுபரையென்னும்வியாபகவுபாதியினுள்ளடங்கியது. இவ்வுபாதியேபரிபூரணரூபசத்தியாம். எப்படியெ



னில் எதாவதுஒன்று பிறிதொன்றைவியாபிக்கவேண்டுமானால் தனக்கு வியாபகசுபாவமின்றித்தான்வியாபியா. அந்தவியாபகசுபாவமோ எதுவரைதேச(இட)உபாதியிருக்குமோ அதுவரைவிரிவையடையும். அவ்விதம்ஸர்வதேசங்களிலும் வியாபித்திருப்பதுயாது அதுபூர்ணமாதலால் இப்பரிபூர்ணஉபாதியிலுபகித சேதன (விளக்க)மாகியசுத்தப்பிரஹ்மமும் பரிபூர்ணரெனப்பெயர்பெறும் என அறிக.
வினா—சத்து சித்து ஆனந்தமென்று இங்குப்பேசியதுபோல் இதற்குமுன் சிருட்டிஅவதாரத்தும் சத்தைமுதலாவதாகநிரூபியாமல்ஆனந்தத்தைமுதலாவதாகநிரூபித்ததற்குக்காரணம் என்ன?
விடை—இது முன்அவ்வச்சத்திகளைப்பற்றி உரைசெய்தவிடத்தில் வகுத்துக்கூறியிருந்தபோதிலும் ஈண்டுதொகுத்துச் சொல்லுகினேறும்:—ஸமாதி அல்லதுசுழுத்தியினின்றும்வெளிவந்தோன், முதவில் ஆனந்தமாத்திர அனுபவத்தையும்; பின் எதிரிட்டுஸேவிக்குங்கால் ஆனந்தம்விளங்கியதென ஆனந்தத்திற்குவேறில்லாத சித்ரூப அனுபவத்தையும்; பின் இருந்தேதவிளங்கவேண்டுமென ஸத்ரூப அனுபவத்தையும் அனுபவிக்கிறகிரமம்பற்றியும்; சிருட்டி உன்முககாலம் சத்தியின்கண்ணுண்டாம் க்ஷோபம் (கலக்கம்) பற்றியாதலால் முதலில்தெளிவும், பின்க்ஷோபமதிகப்படகலக்கமும், பின்மிகக்கலக்கமும் உண்டாவதுசகஜமாதலால்சத்வ, ரஜோ, தமோகுண உபாதிகளையும், அம்முறையே ஆனந்தம், சித்து, சத்து எனவுங்கூறப்பட்டன.
வினா—அப்படியானால் இங்குமட்டும் சச்சிதானந்தம் என சத்து என்னும்பதத்தை முதலில்வைப்பானேன்?
விடை—முக்குணங்களும், அவற்றின்காரணமாய்வந்த இலக்கணங்களும் வட்டவடிவாய ஓர்சக்கரம்போலாதலாலும், சக்கரத்தில்முதல் கடைசி என்றவியவகாரமில்லாமைபோல்; சொரூபத்திலும் அவ்வித பேதங்கிடையாதென்பதை விளக்கிக்காட்டவேண்டி முன்கடைசியிற்கூறிய சத்து என்னும்பதத்தையே முதலில்வைக்கப்பட்டதெனவுணர்க.

வினு—கூறிய ஐந்திலக்கணங்களும் பிரஹ்மத்தில் ஐந்துகூறுயிருக்
கின்றனவா? அல்லது ஏகரஸமா?
விடை—ஏகரஸமே. (ஓர்வடிவே.)
வினு—அதெப்படி?
விடை—குறைந்ததற்கானந்தந்தான் குவலயந்தன்னிலில்லையென்றபடி
எது அகண்டமும்பரிபூர்ணமுமாயதோ அது இருப்பனவேயாகும்.
இருந்ததேவிளங்கும். பரிபூர்ணமாயிருந்துவிளங்கியதே ஆனந்தமாம்
இல்லையெனில் அநுபவமெங்கிருந்துண்டாம்.

விளங்குவதுயாதோ அது இருப்பதேயாகும். விளங்கியிருந்
ததே ஆனந்தமாம். எது ஆனந்தமோ அதுவேபரிபூர்ணமுமாம். இல்
லையாயின் ஆனந்தானுபவமேது.

ஆனந்தமென்பது இருப்புடையதேயாகும். இருந்தால்தான்
விளங்குவதுமாம். ஆனந்தமாயிருந்து விளங்குவதுயாண்டும் பூர்ண
மாகவேயிருக்கவேண்டும். அதுவே காலதேசாதி கற்பனைகடந்த
அகண்டமுமாம். ஆகையால் கூறியஐந்திலக்கணங்களும் ஏகரஸமே.
வினு—ஆகவே அவாங்மானஸகோசரவஸ்துவிற்கும் பராசத்திகாரண
மாகவந்த ஐந்துவிதசைதன்னியங்கட்குமுள்ள பேதம்யாது?
விடை—அவாங்மானஸ கோசரமாகிய சொரூபத்தில் விவர்த்தமா
(பொய்யா)ய்த்தோன்றிய பரை என்னும் அபின்னசத்தியைமுன்
னிட்டு அவ்வஸ்துவிற்கே சுத்தப்பிரஹ்மம், அகண்டன் எனவும்;பரப்
பிரஹ்மம், பரிபூர்ணன் எனவும்; பரமானந்தன் எனவும்; தேஜோம
யன், சித்ரூபன் எனவும்; பரிபூர்ணன், ஸத்ரூபன் எனவும்பெயர்கள்
உண்டாயினமையின் அவைகள் ஏகரஸமாயிருத்தல்பற்றி உண்மை
யில் அவாங்மானஸகோசரப்பொருளிற்கும் இவைகட்கும் அற்பமும்
பேதமில்லை.
வினு—இந்த அபின்னசத்தியும் விவர்த்தமே என்பதிற்பிரமாணம்
என்ன?
விடை—"கூடஸ்தமாத்திரையி (விளக்கத்தி)ல் வியாபினிசத்தியென
வும்,விமர்சினிசத்தியெனவுமிவ்விரண்டுசத்திகள் விவர்த்தித்து அடங்
கிநிற்கும்" என்றசுவானுபூதிரஸாயனமே பிரமாணமாம்.



வினு—அகண்டம் என்றபதார்த்தமியாது?
விடை—ஒன்றினுலும் கண்டிக்க (வேறுபடுத்த) க்கூடாததாயிருப்ப
தாம்.
வினு—அகண்டத்தினிலக்ஷணம் என்ன?
விடை—தேச, கால, வஸ்துக்களால் கண்டிக்கப்படாதது அகண்ட
மாம்.
வினு—மூன்றினுலும் கண்டிக்கப்படாதது அகண்டமென்றுசொல்லு
வானேன்?
விடை—தேச(ஆகாச)த்திற்குவரும் பிரஹ்மத்துவத்தை நீக்கற்பொ
ருட்டு, காலமென்றவிசேஷணமும்; காலமேபிரஹ்மம் என்றுவரும்
சங்கையைநீக்குதற்பொருட்டு வஸ்துவென்றவிசேஷணமும் இவ்வி
தம்வரும் அதிவியாப்திக்குற்றங்களை நீக்கற்பொருட்டுக்கூறப்பட்டது.
வினு—பிரஹ்மமானது தேசத்தினுற்கண்டிக்கப்படவில்லை என்பதை
திருஷ்டாந்தபூர்வகமாய்க்காட்டுக?
விடை—பிரஹ்மம் கடமுதலானவைகளைப்போலோரிடத்து மாத்தி
ரமிராமல் ஆகாசம்போல், எல்லாவிடத்துமிருப்பதால் தேசத்தினுற்
கண்டிக்கப்படவில்லை.
வினு—பிரஹ்மம் காலத்தினுற்கண்டிக்கப்படவில்லை என்பதை திருஷ்
டாந்தபூர்வகமாய்க்காட்டுக?
விடை—கடமானது முன்னின்மை, பின்னின்மைகளையுடைத்தாயி
ருந்து காலத்தினுற்கண்டிக்கப்பட்டதுபோலில்லாமல், உற்பத்திநாச
மின்றியெக்காலத்துமிருப்பதால் பிரஹ்மம்காலத்தினுற்கண்டிக்கப்ப
டவில்லை.
வினு—பிரஹ்மம் வஸ்துவினுல் கண்டிக்கப்படவில்லை என்பதைத்
திருஷ்டாந்தபூர்வகமாய்க்காட்டுக?
விடை—கடபடங்கள் தம்முள்மாறுபட்டிருப்பதுபோலில்லாமல் மண்
ணுனது தன்னிடத்துப்பொய்யாய்த்தோற்றியகடத்தினுல் வேறுபி
ரிக்கப்படாமல் எப்படிக்கடவடிவாயிருக்கின்றதோ;அதுபோலத்தன்
னிடத்துப்பொய்யாய்த்தோற்றிக்கொண்டிருக்கிற பிரபஞ்சவஸ்துக்

களால் தான்கண்டிக்கப்படாமல் அவ்வஸ்துக்களின் சொரூபமாயி
ருத்தலால் வஸ்துக்களினுலுங்கண்டிக்கப்படவில்லை.
வினு—ஆயின் தேசகாலவஸ்துக்களுக்குப்பரிச்சின்னத்துவம் வந்தி
விட்டதா?
விடை—ஆகாச(தேச)த்திற்கு உற்பத்திநாசமிருப்பதால் காலத்தை
முன்னிட்டபரிச்சின்னத்துவமும்; காலம் வஸ்துக்களாகாதபடியால்
வஸ்துவைமுன்னிட்டுகாலத்திற்குப்பரிச்சின்னத்துவமும்;வஸ்துக்கள்
ஒன்றையொன்று கண்டித்துக்கொள்ளுகிறபடியால் வஸ்துவிற்குப்ப
ரிச்சின்னத்துவமும் எற்பட்டுவிட்டன.
வினு—பரிபூர்ணம் என்றபதார்த்தமியாது?
விடை—நிறைவு எனப்பொருள்.
வினு—அதினிலக்கணம் யாது?
விடை—ஸ்வயகாரிய அனுசூதத்துவம் பரிபூர்ணமாம்.
வினு—திருஷ்டாந்த பூர்வகமாய்விளக்குக?
விடை—பொன்னுனது தனதுகாரியமாய ஆபரணங்களைத்தொடர்ந்
துநின்று எப்படித்தான்மாத்திரமாயிருக்கிறதோ; அப்படிப்போல்
பிரஹ்மமானது தனதுகாரியமாய நாமரூபப்பிரபஞ்சத்தினிடத்தி
தொடர்ந்துநின்று தான்மாத்திரமாயிருக்கிறதென்பதாம்.
வினு—சத்து என்ற பத அர்த்தம்யாது?
விடை—உள்ளது எனப்பொருளாம்.
வினு—சத்தின் இலக்கணமியாது?
விடை—மூன்றுகாலத்தும் பொய்யென்றுநிச்சயிக்கப்படாதது சத்
தாம். (இதுமுன்சத்தியின் பிரசங்கத்திற்கூறியுளது.)
வினு—பிரஹ்மமானது மூன்றுகாலத்தும் பொய்யென்றுநிச்சயிக்கப்
படாததெப்படி?
விடை—ஸ்தூலப்பிரபஞ்சம் சொப்பனுவஸ்தையிலும்; ஸ்தூலசூக்கும
காரியப்பிரபஞ்சமானது சுழுத்தியவஸ்தையிலும்; ஸ்தூலசூக்கும
ரண அதாவதுகாரியகாரணப்பிரபஞ்சம் திரிபுடிசூந்யநிர்விகற்பசமா
தியிலும்; இல்லாதிருப்பதுபற்றிப்பொய்யென்று நிச்சயிக்கப்படுதல்
போலில்லாமல்; அவைகளைப்பொய்யென்றனுபவித்த அனுபவவடிவ



சத்துரூபப்பிரஹ்மத்தைப்பொய்யென்றுகூறஎவராலும்முடியாததால்
பிரஹ்மமானது மூன்றுகாலத்தும்பொய்யென நிச்சயிக்கமுடியாத
தேயாம்.
வினு—சித்து என்ற பத அர்த்தமியாது?
விடை—அறிவு, ஞானம், பிரகாசம் என்றுசொல்லப்படும்.
வினு—சித்தினிலக்கணமியாது?
விடை—உலகத்திலுள்ள ஜடதத்துவசாஸ்திரிகளாற்பிரகாசரூபமாய்த்
தெரிந்தெடுக்கப்பட்ட சூரியன், சந்திரன். நக்ஷத்திரங்கள், அக்கினி
மின்னல், கண், மனம், ஜீவன் என்ற அஷ்டப்பிரகாசாபேக்ஷையில்
லாமல் எல்லாவற்றையுமறிவதாயும், அறியப்பட்டவற்ருலறியப்படா
ததாயும் இருப்பது எதுவோ அதுசித்தாம்.
வினு—ஆனந்தம் என்ருலென்ன?
விடை—பிரியவிஷயம் ஆனந்தமெனப்படும்.
வினு—ஆனந்த இலக்கணமியாது?
விடை—முக்காலத்துமிகுந்தபிரிய சொரூபமாயிருப்பது ஆனந்தம்.
வினு—திருட்டாந்தமூலமாய்க்காட்டுக?
விடை—விஷயம், பெண்டு, பிள்ளை, சரீரம், கரணம், ஜீவன்முதல
பதார்த்தங்களிற்றேன்றும்சுகம்போற் பிறழ்ச்சியடையாமல் மூன்று
காலத்தும் ஒரேவடிவாயிருப்பதாலும்; அமிர்தமானது தானுஞ்சுக
சொரூபமாயிருந்துகொண்டு தன்னையடுத்துள்ள தேவர்களுக்குஞ்
சுகங்கொடுப்பதுபோல், பிரஹ்மமானது தானுஞ்சுகசொரூபமாயி
ருந்து தன்னையடுத்துள்ள பதார்த்தங்களுக்கும் அந்தர்முகவிருத்தி
மூலமாய்ச்சுகங்கொடுப்பதாலும் ஆனந்தமாம்.
வினு—இவ்விதம் அகண்டம், பரிபூர்ணம், சத்து, சித்து, ஆனந்தம்
ஆக ஐந்திலக்கணங்களுடன் போதிக்கவேண்டிய நியாயம் என்ன?
விடை—தனக்குச்சனனமரணம்வந்திருக்கிறதாயும் அதைநிவர்த்திக்க
வேண்டுமென்றும் சரணுகதியடைந்தஉத்தமஅதிகாரியின்பொருட்டு
அவற்றைநிவர்த்திக்கவேண்டி மகாவாக்கிய உபதேசரூபமாய், என்று
முள்ளது ஆனந்தவடிவப்பிரஹ்மமே; அதைத்தவிர துக்கமாவது, துக்க
காரணவஸ்துக்களாவது அற்பமுமில்லை என்றவர்த்தரூபமாய ஆனந்த

வடிவசச்சிதாதி இலக்கணமுடையபிரஹ்மத்தைக்குருவினுவுபதேசிக்கவேண்டி ஐந்திலக்கணங்களையும்சேர்த்துப்போதிக்கப்படுகிறது.

வினு—இவ்விலக்கணங்களைக்கேட்டமாத்திரத்தில் மனம்ஸமாதிகூடி திருப்தியடையாமல் ஜனனமரணபயமுள்ளவனுக்கு மேல் என்ன செய்யவேண்டும்?

விடை—அவனைக்கனிஷ்ட (சற்றுத்தாழ்ந்த) அதிகாரியெனமதித்து அவனுக்குக்கிரமசிருட்டியைப்போதித்து லய (ஒடுக்க) சிந்தனைமூலமாய்ப்பிரபஞ்சப்பற்றைநிவர்த்திசெய்தல்வாயிலாக ஜனனமரணபயத்தைவிலக்கவேண்டும்.

வினு—ஆயின் ஜீவர்களுக்கு ஜனனமரணமியல்பாக இல்லையா?

விடை—ஆன்மாவாகிய ஜீவனிடத்து எக்காலத்துமில்லை.

வினு—அப்படியானுல் ஜனனமரணனுபவம் அதிகாரிகட்கு எப்படி வந்தது?

விடை—அனுதி அஞ்ஞானத்தால் அவிசாரதிருஷ்டியில், அனுதிகர்மத்தாற்சரீரத்திற்குவந்தபிறப்பு இறப்புகளை ஆன்மாவாகியதனக்கு வந்ததாகக்கொண்டதால் வந்தது. அதுமயக்கமே.

வினு—மயக்கதிசையிலாவது பந்தவடிவஜனனமரணரூபதுக்கசம்சாரம் யாருக்கு?

விடை—புரியட்டகவடிவசரீரத்தோடுகூடிய அந்தக்கரணமானதுகர்மங்களைச்செய்ததால் கர்மபலனுகியசுகதுக்கங்களை அவ்வந்தக்கரணமேயனுபவித்தற்பொருட்டு போகத்தானமாகிய, பிறப்பு இறப்புகளோடுகூடியதூலசரீரம்வந்திருக்கிறது. அதையறியாமல் எனதென்றுபற்றுச்செய்த அந்தக்கரணத்தோடுகூடிய ஜீவனிடத்தும், அப்படியே ஆன்மாவினிடத்தும் இல்லாததாய்வந்துசேர்ந்தது.

வினு—ஜனனமரணமானது மயக்கமேஎன்பதிற்பிரமாணமென்ன?

விடை—"கரணங்களெல்லாங்கடந்துநின்றகறைமிடற்றன், சரணங்களேசென்றுசார்தலுமேதானெனக்கு, மரணம்பிறப்பென்றிவையிரண்டின்மயக்கறுத்த, கருணைக்கடலுக்கேசென்றூதாய்கோத்தும்பீ" என்றமணிவாசகமேபிரமாணமாம்.





வினு—பிரபஞ்சவிசாரத்தைச்செய்யாமல் பிரபஞ்சப்பற்றைவிடமுடியாதோ?

விடை—ஒன்றன்பற்றைவிடவேண்டுமானுல் அதன் முழுவடிவமுந்தெரிந்துகொள்ளாமல் கைவிடமுடியாது. ஆதலாற்பிரபஞ்ச விசாரத்தைச்செய்யவேண்டியதே

வினு—அப்படியாயின், பிரபஞ்சவிசாரத்திற்கு மேற்கூறியஐந்துவித இலக்கணங்களும் எப்படி உபயோகப்படுகின்றன?

விடை—பிரபஞ்ச லக்ஷணமாகிய கண்டம், அபரிபூர்ணம், அசத்து, ஜடம், துக்கம் ஆகிய இவற்றினின்றும் முமுக்ஷுக்கள் விடுபடுவதற்குச்சாதகமாயிருக்கின்றன.

வினு—கண்டமுதலிய ஐந்து இலக்கணங்களையுடையபிரபஞ்சத்தினுல் ஜீவர்கள் எவ்விதம்பந்தத்தையடைந்தவர்களாகிறார்கள்?

விடை—அகண்டசொரூபனுனதன்னைக்கண்டமாயும், குறைவோடுகூடியவனுயும், செத்துப்போகிறேன் என்றும், ஒன்றுமறியாதவனென்றும், துக்கியென்றும், தேகத்தில்நானென்னும் புத்தியைச்செய்தவர்களாய் பந்தமுற்றவர்கள்போலாகின்றார்கள்.

வினு—ஆயின் மேற்கண்டபந்தநிவர்த்திக்காக முதலில்யாதுசெய்யவேண்டும்?

விடை—அதிகாரியானவன் பிரத்தியக்ஷம்போற்றோற்றுகிற கண்டமுதலியவடிவங்கள் தனக்கா? அல்லது வேறுயாருக்கு? தன்சொரூபமியாது? எனவிசாரிக்கவேண்டும். ஆதலால்முதலிற் பிரத்தியக்ஷமாயும், தன்னைப்பந்தப்படுத்திக்கொண்டிருந்ததுபோலுந்தோற்றுகிற, அசத்துமுதல இலக்கணவடிவப்பிரபஞ்சவிசாரத்தைச் செய்யவேண்டும்.

வினு—இந்தப்பிரபஞ்சமெப்படியுண்டாயது?

விடை—அகண்டபரிபூர்ணசச்சிதானந்தப்பிரஹ்மத்தில் காரணவடிவத்தாலாவது, காரிய இப்பிரபஞ்சவடிவத்தாலாவது இருக்கிறது.

வினு—பிரபஞ்சத்தின் காரணவடிவமியாது?

விடை—அதற்கு மூலப்பிரகிருதி என்றுபெயர்

வினு—இது எப்போதுண்டாயது?
விடை—இதுவும் அனுதி (உற்பத்தியில்லாதது)யே.
வினு—பிரஹ்மமே இந்தப்பிரகிருதியையுண்டுபண்ணிற்று என்று
சொன்னுலென்?
விடை—பிரஹ்மம் நிர்விகாரியானதால் அதுவுண்டுபண்ணிற்றென்
னல்கூடாது. அன்றியும்பிரகிருதிக்கு உற்பத்திகூறின் அதனுள்ள
டங்கிய ஈசுவரன், ஜீவர்கள், இவர்களுக்கும் உற்பத்திநேரிட அதனுல்
சுருதியின் விடுபாடுண்டாம். ஆதலால் அனுதியே.
வினு—சுருதிவிரோதமெப்படியுண்டாகிறது?
விடை—சுருதியில் ஜீவன் ஈசுவரன் என்ற இரண்டுபறவைகள் மாயை
யெனும்விருக்ஷத்தில் அநாதியாயுள்ளனவென்றுகூறப்பட்டிருத்தலாலும்
இன்னும்மற்ருேரிடத்தில் ஸஜாதீய, விஜாதீய, ஸ்வகதபேதரகிதப்பி
ரஹ்மம் என்றதனுல் ஸஜாதீயஜீவ ஈசுவரர்களும், விஜாதீயப்பிரபஞ்
சமும் குறிப்பிடப்பட்டு பிரஹ்மத்திலடங்கியிருக்கிறதென்னுந்தன்
மையாலும்; அநாதிகூறப்படுதலால் விரோதமேற்படுகிறது.
வினு—அப்படியானுல் பிரஹ்மம்சிருஷ்டித்தது, அதுபார்த்தது,என்
றன்முதலியவிடங்களில் பிரஹ்மமே சிருஷ்டித்ததாய்த்தெரிகிறதே
யன்றி அனுதியென்பதுபெறப்படவில்லையே?
விடை—பிரஹ்மம்சிருஷ்டித்தது என்றன்முதலிய இடங்களில் அடங்
கியுள்ளசத்தியோடுகூடியபிரஹ்மம் என்பதேபொருள். சத்தியின்
றிய அவாங்மானஸகோசரவஸ்துவன்று; சிருஷ்டிசப்தத்திற்குப்பொ
ருள் யாதெனில் அடங்கியிருந்ததைவெளிப்படுத்திற்றுபிரஹ்மம் என்
பதேயாம். இங்கேகூறிய அவதரம் மாயையோடுகூடிய சேதனமாத
லால் அதற்குவெளிப்படுத்துதல் வடிவசிருஷ்டியுங்கூடும், ஆதலால்
அனுதியே.
வினு—அப்படியானுற்சிருட்டியெதினின்றும் ஆரம்பிக்கப்படுகிறது?
விடை—அநாதிகர்மத்தொகுதிகளுடன்கூடிய ஜீவகோடிகளையடக்கிக்
கொண்டிருக்கும் பிரகிருதியைத்தன்னிடத்து அபேதமாய்க்கொண்
டுள்ள பிரஹ்மத்தினின்றும் சிருஷ்டியாம். அதாவதுசத்தியுடன்கூ
டியபிரஹ்மத்தினின்றும் சிருஷ்டியாரம்பமாம்.



வினு—அப்படியானுலிந்த அர்த்தம் எல்லோருக்கும் விளங்காமல்
அவாங்மானஸகோசரவஸ்துவினின்றும் சிருஷ்டியென்றும், அதனுல்
நிர்விகாரவஸ்துவிற்கு விகாரஞ்சம்பவித்தது என்றும், பிரஹ்மம் இந்த
அவஸ்தையை (கஷ்டத்தை) யேன் அடையவேண்டுமென்றும் இன்
னும் இவைமுதலாகியதுஷ்ட ஆரோபங்களைச்செய்து பலர்பலகுறை
களைக்கூறுவானேன்?
விடை—அவர்கள்வேதாந்தசாஸ்திரங்களை சாதனத்துடன்குருசந்நிதி
யில்விசாரிக்க எண்ணமற்றவர்களாய் தான்தோன்றியாய் விசாரித்து
விபரீதநிச்சயத்தாற் குறைகூறநேரிடுகிறது. அவர்களுக்கு உண்மை
யர்த்தமெப்படி விளங்கும்? விளங்காது.
வினு—நல்லது, பிரஹ்மத்தினிடத்தில் மூலப்பிரகிருதிசத்தியுண்டா
யிற்றென்பதற்கும், உண்டுவென்பதற்கும் வித்தியாசமியாது?
விடை—இரண்டிற்கும் அர்த்தமொன்றானபடியால்வித்தியாஸமில்லை
வினு—எப்படி வித்தியாஸமில்லை?
விடை—உண்டாயிற்றெனில் முன்னிருந்துண்டாயிற்ரு? இல்லா
மலேயுண்டாயிற்ரு? இல்லாதது உண்டாகாதே! ஆதலால் இருந்தே
யுண்டாயிருக்கவேண்டும் என்ற இத்தியாதிவியவகாரவித்தியின்பின்
அநாதித்வமும்; உண்டுயென்றபதத்திற்குநேராக அநாதித்வமும் சித்
திக்கிறபடியால் வித்தியாசமில்லை.
வினு—அப்படியானுல் பிரஹ்மத்தில் மூலப்பிரகிருதியென்றசத்தி
எதுபோலிருக்கிறது?
விடை—சுத்தியிலிரசதம் (கிளிஞ்சலில்வெள்ளி) போலிருக்கிறது.
வினு—மலடிமகன்திருஷ்டாந்தம்போல் இருக்கிறதென்று சொன்னு
லென்ன?
விடை—மலடிமகன் சொரூபமின்றியவன். அவன் அசத்தெனப்படு
வான். யாது அசத்தோ அது அனுபவவிஷயமன்று. இங்கு அக
மஞ்ஞானியென்ற அனுபவத்தாலும்,காரியப்பிரபஞ்சத்திற்குத்தோற்
றமிருப்பதினுலும், இதன்காரியவடிவமூலப்பிரகிருதியை மலடிமகன்
போல் என்னல்கூடாது.

வினா—கட்டையிற்கள்வன்போல் என்று கூறினாலென்?

விடை—கட்டையிற்கள்வன் பிராந்திநிவர்த்திக்குப்பின் தோற்றுவதில்லை. பிரபஞ்சம் பிராந்திநிவர்த்திக்குப்பின்னும் ஜீவன்முத்தர்களிடத்து எரிக்கப்பட்டதுணிபோற்றோற்றிக்கொண்டிருக்கிறது. ஆதலாற்பிராந்திநிவர்த்திக்குப்பின் தோன்றாத கட்டையிற்கள்வன் திருட்டாந்தம், பிராந்திநிவர்த்திக்குப்பின் தோற்றும்பிரபஞ்சத்திற்கு உவமானமாகக்கூறுதல்பொருந்தாது.

வினா—அப்படியானாற்கிளிஞ்சல்வெள்ளி திருஷ்டாந்தம்போல்வேறு திருஷ்டாந்தம் யாது?

விடை—கானல்நீர் என்பதும் ஒக்கும்.

வினா—பிரஹ்மத்தினிடத்தில் கிளிஞ்சல்வெள்ளிபோல் மூலப்பிரகிருதியுண்டு என்றுசொன்னதற்கு நூலாசிரியரின் மற்றோர்கருத்தி யாது?

விடை—கியாதிகள் ஆறில் இது அநிர்வசனீயக்கியாதியென்பதுமற்றோர் அபிப்பிராயம்.

வினா—கியாதி என்றாலென்ன?

விடை—தோற்றுதலும் சொல்லுதலும் என்பர்.

வினா—கியாதிகள் யாவை?

விடை—(1) ஸத்கியாதி (2) அஸத்கியாதி (3) ஆத்மக்கியாதி (4) அந்நியதாக்கியாதி (5) அக்கியாதி (6) அநிர்வசனீயக்கியாதிகளாம்

வினா—ஈண்டு (வேதாந்தசித்தாந்தத்தில்) சத்கியாதியைக்கூறினாலென்?

விடை—கிளிஞ்சலில் வெள்ளியினவயவங்களிருப்பதுபோல் பிரஹ்மத்திற்பிரபஞ்சமும்சத்தியமென்பர். ஆனால் கிளிஞ்சலில்வெள்ளியினவயவமிருக்குமேல், கிளிஞ்சலை அக்கினியிலிடுங்கால் வெள்ளியானதுமிஞ்சவேண்டும்; அப்படியோயில்லை. அன்றியும் "ஈண்டுநாநாவென்பவைசிறிதுமில்லை" என்றல்முதலியசுருதிகட்கும் விரோதம் வருகிறபடியால் அது அங்கீகாரமன்று.

வினா—அசத்கியாதியைக்கூறின் குற்றமென்ன?



விடை—இல்லாதவெள்ளி கிளிஞ்சலிற்றோற்றுகிறதுபோல் இல்லாதபிரபஞ்சமும் தோற்றுகிறதென்பர். இல்லாததுதோற்றுமேல் இல்லாதமலடிமகன்முதலியனவும் தோற்றவேண்டுமெனவரும். அதுயுக்திக்குப்பொருந்தாதாதலால் அதுவுமங்கீகாரமன்று.

வினா—ஆத்மக்கியாதிமதத்து யாதுதோஷம்?

விடை—புத்தியின்கண் சகலபதார்த்தங்களுமிருக்கிறதென்றும் திருஷ்டாந்தத்தில் வெள்ளியும், தாஷ்டாந்தத்தில்பிரபஞ்சமும் புத்தியின்கண்ணேயேதோற்றுகிறதென்பர். அப்படியானால் புத்திக்குப்புறம்பாக வெளியேதோற்றவும்நியாயமில்லை; புத்திக்ஷணிகபரிணாமமுடையதானபடியால் க்ஷணிகத்திற்குமேற்பட்டகாலம் வெள்ளிஞானமாவது, பிரபஞ்சஞானமாவது இருத்தல்கூடாது; அப்படியோயில்லை. ஆதலால் அம்மதமும் நலமுடையதன்று.

வினா—அந்நியதாக்கியாதிமதம் எப்படி?

விடை—அந்நிய இடத்துள்ளசத்தியவெள்ளி அல்லது அந்நியபதார்த்தம் வெள்ளியாகத்தோற்றுவதுபோல் என்பர். ஆமேல்பிரபஞ்சமும் வேறிடத்துச்சத்தியமாயிருந்தாவது அல்லது பிரஹ்மமேபிரபஞ்சமாகவாவதுதோற்றவேண்டுமெனவரும். இதில்சத்கியாதிபக்ஷத்திற்கூறியதோஷமும், பிரஹ்மபரிணாமம் பிரபஞ்சமெனவும் வாசேரிடும். அதுயுத்திவிரோதமாதலால் அங்கீகரிக்கத்தக்கதன்று.

வினா—அக்கியாதிமதத்தை உடன்பட்டாலென்ன?

விடை—ஸ்மரணரூபஞானத்தாலும், பிரத்தியக்ஷ ஞானத்தாலும் வெள்ளியும், அப்படியே பிரபஞ்சமுமாமென்பர். ஸ்மரணவடிவமாயின்வெள்ளியிலாசையும் அப்படியேபிரபஞ்சத்தில் இது என்னும் விருத்திக்கு யோக்கியமாயபிரத்தியக்ஷமும்உண்டாகலாகா; அப்படியோயில்லை. ஆதலாலதுவும் ஒப்பத்தக்கதல்ல.

வினா—வேதாந்தசித்தாந்தத்திற் சம்மதிக்கப்பட்ட அநிர்வசனீயக்கி மம்யாது?

விடை—சுத்தியில்வெள்ளியென்னும் விஷயமும், அதின்ஞானமும் அவித்தியாவிருத்தியால் அநிர்வசனீயமாயுண்டாகிறதுபோல்; பிராந்

மத்தில்பிரபஞ்சமும், அதின்ஞானமும் அனாதி அவித்தியாதோஷத்தால்முன்பின்னின்றிஒரேகாலத்து அநிர்வசனீயமாயுண்டாகிறதென்பதாம்.

வினா—ஆனால் கிளிஞ்சலில்வெள்ளி அநிர்வசனீயமென்பதெப்படி?

விடை—வெள்ளியானது பிராந்திநிவர்த்திக்குப்பின் கிளிஞ்சலின்ஞானத்தாற்பாதிக்கப்பட்டு அதாவதுபொய்யெனநிச்சயிக்கப்பட்டுப்போகிறபடியால்சத்விலக்ஷணம். பிராந்திகாலத்துச்சொரூபத்துடனிருப்பதால் அசத்விலக்ஷணம். ஆகவேசதசத்துவிலக்ஷண அநிர்வசனீயமென்றாகிறது.

வினா—பிரஹ்மத்தினிடத்துள்ள இந்தமூலப்பிரகிருதியும் சதசத்துவிலக்ஷண அநிர்வசனீயமென்பதெப்படி?

விடை—மூலப்பிரகிருதியென்னுஞ்சத்தியானது ஆத்மஞானத்தின்பின், ஞானத்தாற்பாதிக்கப்பட்டுப்போகிறபடியால் சத்துவிலக்ஷணமென்றும்; அகமஞ்ஞானியென்னுமனுபவத்தாலும்,பிரபஞ்சம்நாமரூபவடிவாயனுபவிக்கப்படுவதாலும் அசத்துவிலக்ஷணமென்றும்; ஆக இருவகையாலும் சதசத்துவிலக்ஷண அநிர்வசனீயமாய்க்குறிப்பிக்கப்படுகிறது.

வினா—ஆகவேசதசத்துவிலக்ஷண அநிர்வசனீயமென்பதற்கு அர்த்தம் யாது?

விடை—பாதயோக்கிய (பொய்யென்றுநிச்சயிக்கத்தக்க) சொரூபமுடையதாந்தன்மையால் இவ்வகையென்றுநிர்ணயிக்கமுடியாதென்பது பொருளாம்.

வினா—இங்குகூறிய பிரஹ்மமோ சத்து, சித்து, ஆனந்தவடிவமாம். அதனிடத்து அசத்து, ஜட, துக்கவடிவாயபிரகிருதி அல்லது அதின் காரியமானபிரபஞ்சம் இருந்துகொண்டிருக்கிறதாய்க்கொள்ளப்படுகிறது. ஒளியையெப்படி இருள்பற்றியிராதோ அதுபோல் சச்சிதானந்தவடிவப்பிரஹ்மத்தினிடத்து அசத்துஜட துக்கவடிவமூலப்பிரகிருதி எப்படியிருத்தல்கூடும்?

விடை—ஒளியானதுசாமான்ய ஒளி, விசேஷஒளியென இருவகைப்



படும். சாமான்யஒளியென்பது கட்டையைக்கடைதலுக்குமுன்னுள்ள கட்டையின்கண்ணுள்ள ஒளியாம். (கட்டையைக்கடைந்தபின் கட்டையினின்றும்அக்கினிவெளிப்படுதல்பற்றிகட்டையின்கண்ணுள்ள வொளியெனப்பட்டது) கட்டையைக்கடைந்தபின் உண்டாமொளி விசேஷ ஒளியெனப்படும். இவ்வொளிவெளிப்பட்டபின் இருளுக்குவிரோதமேதவிர சாமான்யஒளி இருளுக்குவிரோதமென்பதில்லை. ஆனுற்சாதகமாம். அதுபோல்பிரஹ்மமும் சாமான்யசேதனம், விசேஷசேதனம் எனஇருவகை. சாமான்யசேதனமென்பது சச்சிதானந்தாதிகற்பனைகட்குமுன்னுள்ள அவாங்மானஸகோசர வஸ்துவாம். இது அனாதிவடிவமூலப்பிரகிருதிக்குவிரோதமல்ல. சச்சிதானந்தாதி இலக்கணமமைந்தசேதனம்விசேஷசேதனமாம். இதனிடத்து அசத்துவாதிதோஷங்களிரா. ஆகவே இங்கு மூலப்பிரகிருதியானதுசாமான்யசேதனத்துக்கற்பிதமானபடியால் கூடும்.

வினா—அப்படியானால் சாமான்யசேதனத்தில் மூலப்பிரகிருதிகற்பிக்கப்பட்டிருக்கிறது என என்கூறக்கூடாது?

விடை—சாமான்யசேதனமாகிய அவாங்மானஸகோசரவஸ்துவிற்கும் விசேஷசேதனமாகிய சச்சிதானந்தப்பிரஹ்மத்திற்கும் சொரூபத்தில் யாதொருபேதமுமில்லாததுபற்றி பிரித்துக்கூறாமல் அபேதமாய்க்கூறியிருக்கிறது என்றுணர்க.

வினா—அப்படியாயின் அவாங்மானஸகோசரவஸ்துவினிடத்து பின்ன, அபின்ன சத்திகள்கற்பிக்கப்பட்டதாயின் இரண்டிற்குமுள்ளபேதம் யாது?

விடை—இதற்குமுன்னுரைத்த அபின்னசத்திக்கும் இப்பிரகிருதிக்கும் காரியத்திற்பேதமேதவிர சொரூபத்தாற்பேதமில்லை. எப்படிஅபின்னசத்தி சொரூப அபின்னமகிமாவைவெளிப்படுத்தியதோ அது போல், சொரூபபின்னமகிமாவை பின்னசத்திவெளிப்படுத்துகிறது. அதுவும் அநிர்வசனீயம் இதுவும் அநிர்வசனீயமாம். அபின்னசத்தி அவாங்மானஸகோசரவஸ்துவினிடத்துக்கற்பிதம்போல் பின்னசத்தியும் சச்சிதானந்த பாவ (வடிவ)மடைந்த அவாங்மானஸகோசரவஸ்

துவிற்றான்கற்பிக்கப்பட்டிருக்கிறது. ஆயினும் இது(பின்னாசத்தி) கனிஷ்டாதிகாரியின் அனுகூலத்தையுத்தேசித்து ஆரம்பிக்கப்பட்டபடியால் இன்னும்நன்றாய்விசாரிப்பிக்கின்றோம்.

வினா—அது எப்படி?

விடை—கயிற்றிற்றோன்றியது சர்ப்பம் என்னுந்திருஷ்டாந்தத்தில் கயிற்றின்விசேஷவடிவாய மூன்றுபுரியோடுகூடியதன்மை முதலானவைகளைத்தெரிந்தபின்சர்ப்பத்தினுடையதோற்றமா? அல்லது அதைத் தெரியாதவிடத்தா? கயிற்றின்சொரூபந்தோற்றிவிடுமேல் அப்போதுஞ்சர்ப்பந்தோற்றா. தெரியாவிடினுஞ்சர்ப்பந்தோற்றா. ஆனால் கயிற்றின்சாமான்யவடிவாய இது ஒன்றுயெனச்சுட்டிஅறிந்த அவ்வடிவத்தைப்பற்றி இருள்முதலியதோஷங்களால் சர்ப்பத்தைக்கயிற்றினிடத்து ஆரோபஞ் (இலதையுளதுபோற்) செய்யப்படுகிறது. அதுபோல்ஸர்வமும்சச்சிதானந்தவடிவமே என சேதனத்தின்விசேஷத்தன்மையை உணரச்சக்தியில்லாத கனிஷ்டாதிகாரியானவன், கயிற்றின்சாமான்யஇதுவெனும்வடிவத்தையறிந்து, சர்ப்பத்தின் ஆரோபத்தினைச்செய்வதுபோல்; நான் இருக்கிறேன்அல்லது இது இருக்கிறது என பிரஹ்மத்தின்சாமான்யகற்பனையைச்செய்து அவித்தை முதலியதோஷத்தால்நான்சரீரமாக இருக்கிறேன் அல்லதுஜகந்தோற்றுகிறது என கற்பிதவிசேஷவடிவத்தைக்கற்பிக்கிறான். இங்கு திருஷ்டாந்தத்திலும், தாஷ்டாந்தத்திலும், சாமான்யவடிவத்திற்றான், கற்பிதவிசேஷத்தின் கற்பனைசெய்யப்படுகிறதேதவிர வாஸ்தவவிசேஷவடிவத்திலின்றென்றுணர்க. அதிகாரிநோக்கால் வாஸ்தவவிசேஷவடிவத்தைமுன்னிட்டுக்கற்பிக்கப்பட்டது, (தி-ம். இதுவென்பது சாமான்யமும், கயிறு என்பதுவாஸ்தவவிசேஷவடிவமும், சர்ப்பம் என்பதுகற்பிதவிசேஷவடிவமும்; தா-ம். நான் அல்லது இது என்பதுசாமான்யமும், சச்சிதானந்தம் என்பதுவாஸ்தவவிசேஷவடிவமும், சரீரவடிவப்பிரபஞ்சம் கற்பிதவிசேஷவடிவமும் என்றுணர்க.)

வினா—எவ்வெவ்வதிகாரிகள் எவ்வெவ்வுபதேசத்தால் தன்மயமடைவர்?



விடை—(1) உத்தமோத்தமாதிகாரியாயிருப்பின் குரு சுவானுபவியாய் மௌனமாயிருக்க அவர்சந்நிதிப்பட்டசீடனும் அப்படியே ஸர்வசோகமுமற்றதானேதானானநிலையை அடைந்துவிடுவன்.

(2) உத்தமஅதிகாரியாயிருப்பின் பிரஹ்மம் அவாங்மானஸகோசரவடிவாயிருக்கிறது என்றுபிரஹ்மத்தின்சாமான்யவடிவத்தைக் கிரியாதீக்ஷையாலுபதேசித்தலும் அந்நிலையை அடைந்துவிடுவன்.

(3) இந்தச்சாமான்யசைதன்யசொரூபத்தைக் கிரஹிக்கச்சாமர்த்தியமற்ற மத்திம அதிகாரியாயிருப்பின், அவனுக்கு பிரஹ்மத்தின்விசேஷவடிவாய சச்சிதானந்தாதி இலக்கணங்களைக்கிரியாதீக்ஷைமூலமாய்க்கற்பித்து அதையும் ஒடுக்கி மௌனதிசையை அடைவிக்க அடைவன்.

(4) இந்தவிசேஷசைதன்யம்வரை உபதேசித்தும் சாந்தியைப் பெறாதகநிஷ்ட அதிகாரியாயிருப்பின் அவனுக்கு இவ்விசேஷசைதன்யத்திலிருந்து கற்பிதவிசேஷவடிவப்பிரபஞ்சத்தின் மூலப்பிரகிருதியாதிகற்பனைகளை கிரியாதீக்ஷைமூலமாய்ச்செய்து பின் லயக்கிரமத்தால்விவேகிக்கச்செய்ய அப்படியேதன்மயமாவன்.

வினா—அப்படியானால் இச்சாஸ்திரத்திற்கூறிய கிளிஞ்சலில்வெள்ளி திருஷ்டாந்தத்திலும் முற்கூறியசாமான்ய விசேஷவடிவங்களை விளக்கிக்காட்டுக?

விடை—சிப்பியின்கண்மூன்றம்சங்களுள:— (1) சாமான்ய இதுவெனும் அம்சம். (2) வாஸ்தவவிசேஷவடிவசிப்பியென்னும் அம்சம். (3) கற்பிதவிசேஷவடிவவெள்ளியென்னும் அம்சம். இம்மூன்றில், சிப்பியைச்சிப்பியென அறியின் வெள்ளிதோற்ற இடமில்லை. ஆதலால் சாமான்யஇதுவெனும் அம்சத்தின்ஞானமுண்டாய் வாஸ்தவவிசேஷவடிவசிப்பியைத்தெரியாத (அஞ்ஞானத்தோடுகூடிய) புருஷனுக்கு கற்பிதவிசேஷவடிவ வெள்ளியின்தோற்றமும், அதன்ஞானமும் சாமான்யஇதுவெனும் அம்சத்திற்றோற்றுகிறது என அறிக.

வினா—இவ்விதம் சாமான்யம், விசேஷம் எனப்பாகுபாடுபண்ணியதின் பிரயோஜனம்யாது?

விடை—பிரஹ்மமும் பிரகிருதியும் ஒளியும் இருளும்போலாகுமென வும், அவை ஓரிடத்திலிருத்தல்கூடாதெனவும் குதர்க்கஞ்செய்யும்தர் யுக்திகளோடுகூடியவர்களுக்குப்பரிகாரமும்; பின்னுற்பேசப்புகும்தத் துவமஸிமகாவாக்கியத்திற்கு சுருதிசம்மதமானபொருளும், அதனுற் புருடார்த்தமும் இலகுவாய்க்கிடைக்கிறது. இதுவே அதின்பிரயோ ஜனமாம்.

வினு—இங்குகூறியசேதனப்பாகுபாட்டில் புறமதங்கட்கும், இம்ம தத்திற்குமுள்ள பேதம்யாது?

விடை—புறமதங்களில், ஜடபதார்த்தங்களில் ஆத்மபுத்தியுடையவை தவிர, ஈசுவரனை அங்கீகாரஞ்செய்த மற்றமதங்களெல்லாம் விசேஷ சேதனத்தையே எல்லையாகப்பெற்றுநின்றுவிட்டன. இவ்வேதாந்த மதம் ஒன்றே அவைகட்குமேல் சாமான்யசேதனத்தை எல்லையாகப் பெற்றுவிளங்குவதுடன், அநிர்வசனீயக்கியாதியையும் ஆதாரமாய்க் கொண்டு, பரமசாந்தமாகியபுருடார்த்தத்தையும் சிரோபூஷணமாய்க் கொண்டுள்ளது. கூறிய இரண்டின் (சாமான்யசேதன, அநிர்வசனீ யக்கியாதி) ஸ்தாபனங்களில் நிலைபெற்று வேதாந்தமானது விளங்கு கிறது. இவைகள்தான் புறமதங்கட்கும் இதற்குமுள்ளபேதங்களாம்.

வினு—நிற்க; முற்கூறியவாற்ருல் பின்ன அபின்னசத்திகள்குணமு டையன, அல்லதுபக்ஷாந்தரமாய் குணவடிவு என்றும் அவைகளும் பிரஹ்மத்தினிடத்திலிருக்கின்றனவென்றும் கூறுவதால் பிரஹ்மம் குணமுடையதாயிருக்க நிர்க்குணம் என்பதெப்படி?

விடை—சத்தியும்,குணங்களும் சத்தியமாமேல் பிரஹ்மம்நிர்க்குணமா காது. அவைகள் சிப்பிவெள்ளிபோல்மித்தையாகத்தோற்றிக்கொண் டிருத்தலின் நிர்க்குணத்தன்மைக்குக்கேடில்லையென்றறிக

வினு—அது எப்படி?

விடை—கானலிற்ருேன்றும் ஜலமானது அவ்வூஷர (உஷ்ண) பூமி யைநனைப்பதில் எப்படிச்சாமர்த்தியமற்றதாமோ, அதனுல் கானலா னதுஜலத்தையுடையதென எப்படியாகாதோ; அதுபோல்பிரஹ்மத் தினிடத்திற் கற்பிதமாயுள்ளகுணங்களும் பிரஹ்மத்திற்கு எவ்வித



ஹானியையும்செய்ய உபகாரப்படா. அவ்வேதுவாலேயே பிரஹ்
மம் குணத்தையுடையதென்ருகாமல் நிர்க்குணமென்பதுகூடும்.
வினு—பிரஹ்மத்தினிடத்தில் பிரகிருதிதோன்றிற்றென்றதால்பிரஹ்
மம் மயக்கத்தையடைந்தது என்றுகூறினுலென்ன?
விடை—சுத்தியானதுஉள்ளபடியிருக்க அதனிடத்துஇதுசுத்தியோ!
வெள்ளியோ! எனமயங்கியவனுக்குத்தான் மயக்கங்கூறலாமேதவிர,
அஃதில்லானுக்காவது, சுத்திக்காவது எங்ஙனம் மயக்கங்கூறலேலா
தோ; அதுபோல் பிரஹ்மம் உள்ளபடியேயிருக்க, அதனிடத்து இது
பிரஹ்மமோ! பிரபஞ்சமோ! எனமயங்கினவனுகியபந்தமுடைய ஜீவ
னுக்குத்தான்மயக்கங்கூறலாமேயொழிய அஃதின்றிய முக்தஜீவன்,
ஈசுவரன், பிரஹ்மம் ஆகிய இவர்களுக்கு எக்காரணத்தையிட்டும்மயக்
கமில்லவுமில்லை, கூறுதலுமடாது-
வினு—மூலப்பிரகிருதி என்ருல் அர்த்தம்யாது?
விடை—மூல=(ஜகத்) காரணமான, ப்ர=சத்துவ, கிரு=ராஜஸ, தி
=தாமஸ எனப்பொருள்படுவதால் பிரபஞ்சத்திற்குக்காரணமான
முக்குணங்களோடுகூடிய ஓர்சத்தி எனப்பொருளாம்.
வினு—மூலப்பிரகிருதி எப்படியிருக்கிறது?
விடை—சதசத்துவிலக்ஷண அநிர்வசனீயமாயும், மூன்றுகுணங்களும்
ஒன்றையொன்றுமேலிடாமல் சமத்துவத்தைப்பொருந்தியதே வடி
வாயுமிருக்கும்.
வினு—திருஷ்டாந்தபூர்வகமாய்க்காட்டுக?
விடை—வெளுப்பு,செவப்பு,கருப்புநூல்களினுற்றிரிக்கப்பட்டகயிறு
எவ்விதஞ்சமமாயிருக்குமோ; அதுபோல்மூலப்பிரகிருதியின்சமத்து
வத்தையும், நூலின்நிறங்களால் முக்குணங்களின்தாரதம்மியத்தை
யும் அறிந்துகொள்க.
வினு—இந்தச்சத்தியை மூலப்பிரகிருதியென்றபெயரால் எதுவரை
வியவகரிக்கப்படும்?
விடை—ஜீவர்களின்கர்மபரிபக்குவத்தின்பேரில் சிருஷ்டி ஆரம்பகா
லம்வரை வியவகரிக்கப்படும்.

வினு—சிருஷ்டியுண்டானபின் அது என்னஸ்திதியிலிருக்கிறது?

விடை—அடங்கியிருந்தமூன்றுகுணங்கள் ஜீவ, ஈசுவரத்தோற்றத்திற்கும் நாமரூபமயஜகத்தோற்றத்திற்கும் காரணமாயிருந்து மாறுதலடைகிறபடியால் அவ்விதமாறுதலடையுங்கால் ஒன்றையொன்றுமேலிடநேரிட்டு அதனுற்பூர்வமடைந்திருந்தசமத்துவம்நீங்க மூலப்பிரகிருதியென்றபெயரும்நீங்கி முக்குணமயப்பிரகிருதிவடிவாயிற்று.

வினு—சிருட்டிக்குப்பின் மூலப்பிரகிருதியென்றபெயர்நீங்கில், மீண்டும் எக்காலத்து அப்பெயர்பொருந்துகிறது?

விடை—ஜீவர்களின்ஜனனமரண இளைப்பைமறுபடியும்நீக்க, ஜீவர்களின்சரீரங்களையும், அவைகட்காதாரமானபஞ்சபூதங்களையும், ஈசுவரன் ஒடுக்கி, தானும்சிருட்டியாதிதொழில்களை எக்காலத்துவிட்டிருக்கிருரோ, அந்தப்பிரளயகாலத்தில் அடங்கியுஞ்சமத்துவத்தைப்பொருந்தியுமிருந்த பிரகிருதிவடிவமூன்றுகுணங்களே மூலப்பிரகிருதியென்றபெயரைத்திரும்பவுமடைகிறது.

வினு—ஆயின் மூலப்பிரகிருதிக்கும், பிரகிருதிக்கும்பேதம்யாது?

விடை—மூலப்பிரகிருதியென்ருல் ஜகத்காரணமானமூன்றுகுணங்களென்றும்; பிரகிருதியென்ருல் மூன்றுகுணங்களென்றும் தெரிந்துகொள்வாயாக.

வினு—இந்தமூலப்பிரகிருதிக்குரிய வேறுநாமங்களும் அவற்றினர்த்தங்களும்யாவை?

விடை— (1) அவித்தை=வித்தையி(ஞானத்தி)னுல் நாசமடைவது (2) சத்தி=வேறொன்றையாசிரயித்து சுதந்தரமின்றி இருப்பது. (3) சத்யை=உள்ளதுபோல் தோற்றுவது. (4) மூலை=சுத்தப்பிரஹ்மத்தை மறைப்பது. (5) தூலை=விஷயசேதனத்தை மறைப்பது. (6) யோனி=பிறப்பிடமாயிருப்பது. (7) அவ்வியத்தம்=வெளிப்படையாய்த்தோற்ருதது. (8) அவ்வியாகிருதம்=பிரிபடாதிருப்பது. (9) அஜை=பிறப்பில்லாதது. (10) அஞ்ஞானம்=ஞானத்தாற்பாதிக்கப்படுவது. (11) தமம்=அந்தகாரவடிவாயிருப்பது. (12) துச்சை=அற்பமாயிருப்பது. (13) அநிர்வசனீயை=வசனயோக்கியமில்லாதது எனப்படுதிறப்பமெ.



வினு—இதுவரைகூறிவந்த அபின்ன, பின்னசத்திகள் தம்மில்மிகுதியுமொற்றுமையுடையனவெனத்தெளிந்தேன். ஆனுல் அவைகளில் ஒன்று காரியப்படுங்கால் மற்றொன்று என்னநிலைமையிலிருக்கிறது?

விடை—கூறியசத்திகட்காதாரமாய அஸங்கப்பிரஹ்மமும் ஒன்றே. அதினிடத்து பொய்யாயுள்ளசத்தியும் ஒன்றே. அந்தச்சத்தி கூடாததையும் கூட்டிவைக்கும்படியான அற்புத, அனேககோடிசத்திகளையுடையதாந்தன்மையால் பிரஹ்மசந்நிதிமாத்திரஇருப்பைமுன்னிட்டு சத்தியசங்கற்பனுகிய ஈசுவரனுடையசங்கற்பத்திற்கியைய அபின்ன, பின்னசத்திகளாயும் இன்னும் அநேககோடிசத்திகளாயும் மாறுதலடைந்துகொண்டு, தனதுவியவகாரங்களையும் எப்படியோ அப்படி நடத்திக்கொண்டுவருகிறது. அதுபற்றியேசுருதியும் இச்சத்தியை அனந்தசத்திகளையுடையதெனவும், துர்க்கடனுநடனசாமர்த்தியமுடையதெனவும், அநிர்வசனீயையெனவும் இன்னும் பலவாருய்க்கூறியுள்ளது. ஆகையால் ஒருசத்தியேசிருஷ்டியைமுன்னிட்டு இரண்டாயும் அனேகமாயும் இருந்துகொண்டிருக்கிறது.

வினு—ஒருசத்தி(மஹாமாயை)தானே இவ்விதம் அனேகவிதமாய்த் தோற்றுமா?

விடை—இது ஓர் ஆச்சரியமன்று. அறுகோடிமாயாவிருத்திகள் இருக்கிறதென்பதாயுள்ள மணிவாசகப்பெருமானின் வாக்கியத்தை, தம்மாலனுக்கிரகிக்கப்பட்ட சுவானுபூதிரஸாயனத்தில் ஸ்ரீ சுந்தரயதீந்திரால் இதுகடம் என்ற ஒருவிருத்தியி(ஞானத்தி)னுள், நிரூபிக்கப்படவில்லையா! ஆதலின் இப்பேர்ப்பட்ட அற்புதசத்திமாயைக்கு இருத்தலாற்கூடுமெனவறிக.

வினு—இதில் அனுபவம் யாது?

விடை—மாதாவின்கருப்பையிற்றங்கிய ஜடரூபமான சுக்கிலசுரோணிதங்களானது கை, கால்களுடன்முளைத்து நடந்துதிரிவதையும்; இன்னும் நித்திரையி (சொப்பனத்தி)ல் கண்ட (கழுத்து)தேசத்தில் உரோமத்தின் ஆயிரத்திலோர்பாகம் அதிசூக்ஷுமமாயுள்ள ஹிதையென்னும் நாடியின்கண், அதிவிஸ்தாரமானபிரபஞ்சமென்ன, வியக்

சுத்தக்கதானகாக்ஷிகளென்ன ஆகிய இவைகளைநீரோராயனுபவிக்க வில்லையோ! கேவலம்வியட்டிமாயைக்கே இவ்வளவுவல்லமையிருக்கு மாயின் மஹாமாயைக்கு எவ்வளவுவல்லமையுண்டு என்பதில் வேறு பிரமாணமும்வேண்டுமோ! வேண்டுவதின்று.

வினு—விகிர்தம் என்றால் என்ன?

விடை—மாறுவதெனப்பொருளாம்.

வினு—இந்தமூலப்பிரகிருதி திரவியமா? குணமா?

விடை—இது திரவியமாம்.

வினு—சத்தியெனக்கூறியிருப்பதால் குணமென ஏன்கூறக்கூடாது?

விடை—பிறிதொன்றை ஆசிரயித்திருத்தல்பற்றி சத்தியென்னப்பட்டதேயொழிய திரவியமே; குணமன்று.

வினுவிடைகள்—236.  மொத்த வினுவிடைகள் 329.

ஸ்ரீ சுந்தரேசன் வாழ்க.

ஸ்ரீ சுந்தரற்றுணை.

இதுமுதல் 2 செய்யுட்களால் சமட்டிகாரண

சரீரகற்பனையாலுண்டாம் ஈசுவரவிளக்கத்தைக்கூறல்

இதன்சாத்துவிககுணத்தைமாயையென்றுமெலாமறியுமுபா
தியென்றுமீச்சுரன்றன், றிதன்காரணத்தனுவாமென்றுஞ்
செப்புந்தெரித்தவிந்தமாயைதனிற்றெளிந்தநீரிற், பதிபிம்ப
மெனப்பிரமமழகதாகப்பதிபலிக்குமிதைச்சருவக்கியவீசன்
னென், மதியுடையர்பகர்வரிந்தமாயைதன்னின்வழுத்திய
வம்மூக்குணமும்வயங்குமாதோ.

(இ—ள்) இந்தப்பிரகிருதியின் சத்துவகுணத்தைமாயையென்றும், சர்வக்ஞவுபாதியென்றும், (நிலைபெற்ற) ஈசுவரகாரணசரீரமென்றுஞ் சொல்லப்படும். (சொல்லப்பட்ட) இந்தமாயையினிடத்திலேநிர்ம



லஜலப்பிரதிபிம்பம்போலபிரஹ்மம் சலக்ஷணமாகப்பிரதிபிம்பிக்கும்
இந்தப்பிரதிபிம்பசைதன்யத்தைச்சர்வக்ஞனாகிய ஈசுவரனென்று(மதி
மான்கள்) சொல்(லுவர்) [லப்படும்]. (சொல்லப்பட்ட) இந்தச்சத்
துவகுணமாயையினிடத்திலே சத்துவத்தில்சத்துவம், சத்துவத்தில்
ரஜஸ், சத்துவத்தில் தமஸ் எனமூன்றுகுணங்கள் உண்டு.
மாதோ=அசை.

வினு—மாயை என்றாலென்ன?

விடை—எது இல்லாததோ அதுமாயை எனப்படும்.

வினு—மாயையின் லக்ஷணமியாது?

விடை—சிந்திக்கக்கூடாதசத்தியுள்ளதாயும், யுக்தியிலடங்காததாயும்
ருப்பது மாயையாம்.

வினு—இதற்கு சர்வக்ஞவுபாதியென்றபேர் ஏன்வந்தது?

விடை—எல்லாவற்றையும் ஈசுவரன் ஒருங்கேயறியச்சாதனமாயிருப்
பதால் அப்பெயர்வந்தது.

வினு—உபாதி என்றாலென்ன?

விடை—ஒருவஸ்துவின் சொரூபத்திற்பிரவேசியாமற் பிறவஸ்துக்க
ளினின்றும் வேறுபிறித்தறிவிப்பது உபாதியாம்.

வினு—இதிற்றிருஷ்டாந்தமியாது?

விடை—கடாகாசம்; இதுகடத்தின்சொரூபத்திற் பிரவேசியாமல்
அக்கடத்தை கலசமாதிகளினின்றும் வேறுபிரித்தறிவிப்பதாம்.

வினு—தாஷ்டாந்தம் என்ன?

விடை—ஒருவஸ்துவாகிய பிரஹ்மத்தினிடத்து அதின்சொரூபப்பிர
வேசமின்றி பிறஈசுவரசேதனம் ஜீவசேதனம் முதலியவற்றினின்றும்
பிரஹ்மத்தை வேறுபிரித்தறிவித்தற்கு இம்மாயை காரணமாயிருத்
தல்பற்றி அதற்கு உபாதித்தன்மைபொருந்துகிறது.

வினு—இந்தமாயைக்கு ஈசுவரகாரணசரீரம் என்றபெயர் ஏன்வந்தது?

விடை—ஈசுவரவிளக்கத்திற்குக்காரணமாயிருப்பதாலும், அவனுடை
ய தூல, சூக்குமசரீரங்கட்குக்காரணமாயிருத்தலாலும் ஈசுவரகாரணச
ரீரமென்றபெயர்வந்தது.

வினு—இந்தமாயை எதினின்றும் எப்படியுண்டாயின?

விடை—அகண்டபரிபூர்ணசச்சிதாநந்தப்பிரஹ்மத்தினின்றும் சுத்தியிலிரசதம்போலுண்டாயின.

வினு—இது மூலப்பிரகிருதியினின்றமுண்டாயது என்றால் என்ன?

விடை—மூலப்பிரகிருதியென்பது இந்தமாயையென்னும் சத்துவகுணத்தையும் மற்றும் இருகுணங்களேயும் சொரூபமாகப்பெற்ற ஓர்திரவியம். அது அதன் நாமத்தாலேயே விளங்கப்பெறும். அவ்விதமிருப்பதால் மூலப்பிரகிருதியினின்றும் சத்துவகுணமுண்டாயிற்றெனல் பொருத்தமுடையதன்று.

வினு—ஆயின் இந்த ஈசுவரவிளக்கம் எவ்வாறுண்டாயது?

விடை—அகண்டபரிபூர்ணசச்சிதானந்தப்பிரஹ்மத்தினின்றும் மாயையையாதாரமாய் வைத்துக்கொண்டு நிர்மலஜலப்பிரதிபிம்பம்போல் விளங்கியது

வினு—நிர்மலஜலம் என்றுலென்ன?

விடை—அழுக்குப்படியாத சுத்தஜலமாம்.

வினு—பிரதிபிம்பம் என்றுலென்ன?

விடை—பிம்பம், பிரதிபிம்பம் என்றதுவிதப்பிர்வனேயுடன் பிம்பத்தைப்போற்ருேற்றுவதாயும், அவ்விதந்தோற்றினும் பிம்பத்திற்குவேறில்லாமலும் பிம்பவடிவாயிருப்பதியாது அதுபிரதிபிம்பமாம்.

வினு—இதிற்றிருட்டாந்தமியாது?

விடை—முகம்பிம்பம், கண்ணுடிபிரதிபிம்பந்தோற்றுவதற்கு ஆதாரமாயுள்ளது. கண்ணுடியிலிருப்பது பிரதிபிம்பம். இவ்விதம்பிம்பத்திற்கு வேருய்த்தோற்றினும் பிம்பத்திற்குவேறில்லாமல் பிம்பவடிவாயிருப்பதாம்.

வினு—தார்ஷ்டாந்திமியாது?

விடை—பிரஹ்மம்பிம்பம், மாயைபிரதிபிம்ப ஆதாரம், மாயையின்கண் பிரதிபிம்பம். இப்பிரதிபிம்பம் பிரஹ்மத்திற்கு வேறுபோன்று விளங்கினும் அதற்குவேறில்லாததாம்.

வினு—இவற்றில் ஈசுவரனென்று எதைவியவகரிக்கப்படும்?



விடை—பிரஹ்மம், மாயை, மாயாப்பிரதிபிம்பம் ஆகமூன்றுஞ்சேர்ந்ததே ஈசுவரனெனவியவகரிக்கப்படும்.

வினு—இந்நூலில் பிரதிபிம்பத்தையல்லவோ ஈசுவரனென்று கூறப்பட்டிருக்கிறது?

விடை—பிம்பப்பிரதிபிம்பங்கள் என்றும் அபேதமாயிருத்தல்பற்றி
யும்; அவச்சேதவாதம், ஆபாஸவாதம் பிரதிபிம்பவாதம் என்றமூன்
றில் பிரதிபிம்பவாதமே உடன்பாடு என்னும்பொருள்பற்றியும்; பிரதி
பிம்பத்தைமுன்னிட்டுக்கூறப்பட்டிருக்கிறது.

வினு—அவச்சேதவாதம் என்றுலென்ன?

விடை—மாயையில் பிரஹ்மம் வளேபட்டதுகொண்டு ஈசுவர அங்கீ
காரஞ்செய்யும்பக்ஷமாம். இது இதரமதங்களிலுபயோகம்.

வினு—ஆபாஸவாதம் என்றுலென்ன?

விடை—இதில் பிரஹ்மம், மாயை, மாயையின்கண்ணுபாஸம், என
மூன்றனங்கீகாரமுளது. இதில்மாயாபாஸம் மித்தையெனக்கொண்டு
அதைநீக்கவேண்டுமென்பதாம். இதுகநிஷ்ட அதிகாரியின்பொருட்
டுபயோகமாம்.

வினு—பிரதிபிம்பவாதத்தின் விசேஷம் யாது?

விடை—பிரதிபிம்பத்தை ஒப்புக்கொண்டபோதிலும் பிம்பத்திற்கு
வேறில்லாததால் பிம்பமேயுளதென்றும், வேருகத்தோன்றுவது
பிராந்தியினுலென்றும்கூறி பிம்பப்பிரதிபிம்பங்கட்கு என்றும் அபே
தமேகூறும். இதனுல் அத்வைதம் இலகுவாய் ஸ்தாபிக்கப்படும். உத்
தம அதிகாரியின்பொருட்டுக்கூறப்பட்ட இதுவேசிரேஷ்டமாம்.

வினு—சலக்ஷணமாக என்றுலென்ன?

விடை—மாறுபாடின்றிப்பிம்பத்தைப்போன்றிருந்தது என்பதாம்.

வினு—முகமாகியதிரவியம் மற்ருேர்திரவியமாயகண்ணுடியினிடத்
திப்பிரதிபிம்பித்ததுபோலில்லாமல்; பிரஹ்மம் திரவியமல்லாதசத்து
வகுணத்தினிடத்து எப்படிப்பிரதிபிம்பிக்கக்கூடும்?

விடை—இங்குச்சத்துவகுணமென்பதனுல் சத்துவகுணத்தைப்பிர
தானமாயுடையபிரகிருதியெனக்கொள்க. கொள்ளின்பூர்வமேபிரகி

ருதிதிரவியமெனக்கூறியபடி பிரஹ்மமாகியதிரவியம், சத்துவகுணப் பிரகிருதியாகிய திரவியத்தில் பிரதிபிம்பித்தது என்பதுகூடும்.

வினா—ஈசுவரன் என்றாலென்ன?

விடை—ஆளுபவன் ஈசுவரனாம். அல்லது ஐசுவரியமுடையவன் ஈசுவரனும் எனவுங்கூறப்படும்.

வினா—இவ்வீசுரவரனுடைய குணங்களியாவை?

விடை— 1 சர்வக்ஞத்துவம்; 2 சர்வேசுரத்துவம்; 3 சர்வநியந்திருத்துவம்; 4 சர்வகர்த்திருத்துவம்; 5 சர்வாந்தர்யாமித்துவம்; 6 சர்வசத்திமத்துவம் என்பனவாம்.

வினா—சர்வஞ்ஞத்துவம் என்றாலென்ன?

விடை—முக்காலத்துமாறின்றி எல்லாவற்றையுமொருங்கே அறிதல்.

வினா—சர்வேசுரத்துவமென்றாலென்ன?

விடை—சர்வப்பிரபஞ்சத்திற்குந்தலைவனாயிருத்தல்.

வினா—சர்வநியந்திருத்துவமென்றாலென்ன?

விடை—எப்பொருள்களையும் நியமந்தவறாவாறு செய்தல்.

வினா—சர்வகர்த்திருத்துவமென்றாலென்ன?

விடை—சகலகாரியங்கட்குங் கர்த்தாவாயிருத்தல்.

வினா—சர்வாந்தர்யாமித்துவமென்றாலென்ன?

விடை—எப்பொருளிலுமுள்ளீடாய் நிறைந்திருத்தல்.

வினா—சர்வசத்திமத்துவமென்றாலென்ன?

விடை—எல்லாச்சாமர்த்தியமுமுடைத்தாயிருத்தல்.

வினா—இவ்வீசுவரனுக்கு எண்குணத்தானெனவோர்பெயரிருத்தலால் அந்த எண்குணங்களைவை?

விடை—1 தன்வயத்தனாதல்; 2 தூய(பரிசுத்த) உடம்பினனாதல்; 3 இயற்கையுணர்வினனாதல்; 4 முற்றுமுணர்தல்; 5 இயல்பாகவேபாசங்களினீங்குதல்; 6 பேரருளுடைமை; 7 முடிவிலாற்றலுடைமை; 8 வரம்பிலின்புடைமை என்பவைகளாம்.

வினா—இந்தச்சத்துவகுணப்பிரதானப்பிரகிருதியினின்றும் என்ன
டாயின?



விடை—சத்துவத்திற்சத்துவம், சத்துவத்திலிராசதம், சத்துவத்தில்
தாமதம் எனமூன்றுகுணங்கள் முளைத்துநின்றன.
சாத்திகத்திற்சாத்திகந்தலையெடுக்குந்தருணமதிற்பதிபலித்த
விசன்றாலங்,காத்தலினாலரியென்றுகழறற்பாலன்கழறியவச்
சத்துவத்திரசோகுணந்தான், மூத்தபோததிற்பதிம்பித்த
விசன்முளரிவருபிரமனாமுன்சொன்னாலம்,பூத்ததாற்றமசெ
மும்போததிலேதோன்றும்புண்ணியவானுருத்திரனாஞ்சங்கா (ருடு)
ரத்தால்.

(இ—ள்) [இவைகளில்] சத்துவத்தில்சத்துவம் பிரதானமாகும்போ
து அதில் பிரதிவிம்பித்த ஈசுவரன்சகத்தைரக்ஷிக்கையினால் விஷ்ணு
வென்றும், (சொல்லிய அந்தச்) சத்துவத்தில்ரஜஸுபிரதானமாகும்
போது அதிற்பிரதிபிம்பித்த ஈசுவரன்(முன்சொல்லிய) சகத்தைச்சி
ருட்டிக்கையினால் (தாமரையில்வந்தோனான) பிரம்மாவென்றும் [சத்
துவத்தில்] தமஸுபிரதானமாகும்போது அதிற்பிரதிபிம்பித்த ஈசுவ
ரன் [சகத்தை] உபசம்மாரம்பண்ணுகையினால் உருத்திரனென்றுஞ்
சொல்லப்படுவன்.

வினா—முற்கூறியசத்துவ ராஜத தமோகுணங்களினின்றும் என்ன
வுண்டாயின?

விடை—பிரதானமான சத்துவ குணமாயையோடுகூடிவிளங்கிய ஈசு
வரன், சத்துவகுணத்தையடையுங்கால் விஷ்ணுவென்றும், ரஜோகு
ணத்தை அடையுங்கால் பிரம்மாவென்றும், தமோகுணத்தையடை
யுங்கால் உருத்திரனென்றும். மூன்றுபெடரைப்பெற்றான் இவ்விதம்
மும்மூர்த்திகளுண்டானார்கள்.

வினா—பிரதானமாதல் என்றாலென்ன?

விடை—மேற்பட்டுநிற்றலாம்.

வினா—மும்மூர்த்திகளென்பார் மூவராயிருந்து மூன்றுவிததொழில்
புரிபவராயிருக்க எப்படி ஒருவராதல்கூடும்?

விடை—ஒருமனிதன் சத்துவகுணத்தோடுகூடில் சாந்தியாதிக்குரிய
தொழில்களோடும், ரஜோகுணத்தோடுகூடில் காமக்குரோதாதிக்கு
ரியதொழில்களோடும், தாமதகுணத்தோடுகூடில் அசாசம்பத்திற்கு
ரியதொழில்களோடும்கூடியிருத்தல்போல் ஒரு ஈசுவரனுக்கே பல

விததொழில்களோடுகூடியிருக்குந்தன்மையும், அதனால்வேறுவேறு பெயர்களும் கூடுமாறறிக.

வினா—சிவபக்தர்கள் மான்மழுசதுர்ப்புஜவடிவசிவத்தையும், விஷ்ணு பக்தர்கள் சங்குசக்கரகதாதாரியாயவிஷ்ணுவையும், அப்படியே ஒவ்வொரு அன்பர்களும் அவரவர்களுக்குரியகடவுளை நேரில் தரிசித்த தாய்ப்புராணங்கள் சொல்லுகின்றனவே. அப்படியிருக்கக்கடவுள் ஒருவரே என்பது எப்படிக்கூடும்?

விடை—கடவுள் ஒருவனாயினும் அவன் சர்வவல்லமையுடன் பொருந்தியிருக்கிறான் என அப்புராணங்களேதுதிக்கிறபடியால் வேண்டுவான்வேண்டுவதேயீவான்கண்டாய் என்றமறைமொழிப்படி அன்பர்களின்விருப்பப்படி அவரவர்கள்தியானித்தவண்ணம் பிரசன்னமாதல் ஏன்கூடாது! கூடுமெனவறிக.

வினா—ஆயின், எம்மூர்த்தவடிவம் யதார்த்தம்?

விடை—எல்லாம்யதார்த்தமே; ஒரேகடவுளின் அருள்வடிவாதலின்.

வினா—எப்படி எல்லாம் யதார்த்தமாதல் கூடும்?

விடை—நாடகநடனொருவன் சமயத்திற்குத்தக்கபடி நடையுடைபாவனைகளை மாற்றிவரினும் எப்படி ஒருவனேயோ அதுபோற்கூடும்.

வினா—மும்மூர்த்திகளும் ஒருவரேயென்பதிற்பிரமாணம்யாது?

விடை—“படைத்தளித்தழிப்பமும்மூர்த்திகளாயினை”

“ஒருவனாயுலகேத்தநின்றநாளோ, ஒருருவேமூவுருவமான
நாளோ” என தேவாரத்திருமுறைகளும்
“ஆதிப்பிரானுமணிமணிவண்ணனு
மாதிக்கமலத்தலர்மிசையயனும்
சோதிக்கில்மூன்றுந்தொடர்ச்சியிலொன்றானோர்
பேதித்துலகம்பிணங்குகின்றார்களே”. எனத்திருமந்திரம்; திரிமூர்த்திகளின் சேட்டகனிட்டமுறைமையும்; மற்றும்வருவனவற்றானுமுணர்க.

வினாவிடைகள் 38

மொத்தவினாவிடைகள் 367

ஸ்ரீ சுந்தரேசன் திருவடிகள் வாழ்க.



உ

ஸ்ரீ சுந்தரற்றிருவடிகளேசரணம்.

## இதுமுதல் 3 செய்யுட்களால் வியட்டிகாரண சரீரகற்பனையா லுண்டாம் ஜீவவிளக்கத்தைக்கூறல்.

இப்படிமூலப்பகுதியின்சாத்துவிதகுணத்தினியல்பையெல்
லாஞ், செப்பினமாலினியிராசதகுணந்தானனேகமாய்த்தி
ரிந்தவித்தை, யொப்பிரியுஞ்சிவகாரணமெய்யென்றுரைக்க
அறுமொண்மையோடு, செப்பமார்மனத்தவநீகேட்டியிவ்
வவித்தைகளிற்றெளிவினீரில் (௩க)

(இ—ள்) இப்படிமூலப்பிரகிருதியின் சத்துவகுணகற்பனைசொல
லப்பட்டது. (ஆல்=அசை) இனி [மூலப்பிரகிருதியின்] இரஜோகுணம்அனேகரூபமாய்ப்பிரிந்து அவித்தைகளென்றும், ஜீவகாரணசரீரங்களென்றும் ஒன்றற்கொன்று தாரதம்மியமாய்ச்சொல்லப்படும். (அறிவோடு செம்மைபொருந்தியமனத்தையுடையவனே நீகேட்பாயாக) இந்த அவித்தைகளிடத்திலும் மலினசலத்தில்,

வினா—சத்துவகுணகற்பனையென்று ஏன்கூறவேண்டும்?

விடை—அதிகாரிகனிஷ்டனாபடியால், ஜகத்தின்சத்தியபுத்திநழுவும்படி ஆங்காங்கு கற்பனை என்றபதத்தை விசேஷமாய்க்கொடுக்கப்பட்டது.

வினா—பிரகிருதியென்னும்பதத்தில் ப்ர என்னும்சப்தார்த்தமானசத்துவகுணகற்பனை சொல்விவர்த்தநுசரி. கிருயென்னும்பத அர்த்தமியாது?

விடை—ரஜோகுணம் என்றுசொல்லப்படும்.

வினா—இந்தரஜோகுணம் எதினின்றும் எப்படித்தோன்றின?

விடை-அகண்டபரிபூர்ணசச்சிதானந்தப்பிரஹ்மத்தினின்றும் கிளிஞ்சல் வெள்ளிபோல் தோன்றின.

வினா—ரஜோகுணம் திரவியமா?

விடை—ஆம் திரவியமே

வினா—ரஜோகுணம் என்பது எப்படித்திரவியமாம்?

விடை—ரஜோகுணம் என்றதால் ரஜோகுணத்தைப்பிரதானமாகவு டைய பிரகிருதியெனக்கொள்ளப்படுகிறபடியால் பிரகிருதிதிரவிய மாதலின் இதுவும்திரவியமே.

வினு—கிஞ்சிக்ஞவுபாதி யென்ருலென்ன?

விடை—அற்ப அறிவையுண்டுபண்ணும் அற்பதேசத்திருப்பதாம்.

வினு—அவித்தையென்ருலென்ன?

விடை—வித்தையினுல்நாசமடைவதால் அவித்தையாம். (இதுமுன் னும் சொல்லப்பட்டிருக்கிறது)

வினு—ஜீவகாரணசரீரம் என்ருலென்ன?

விடை—ஜீவவிளக்கத்திற்குக்காரணமாயிருத்தலாலும், ஜீவனுடைய து லசூக்குமசரீரங்கட்குக்காரணமாயிருப்பதாலும், இவ்வவித்தை ஒழிந் தவிடத்து ஜீவன்பிரஹ்மவடிவாய்ப்போதலாலும், ஜீவகாரணசரீரமெ னப்பட்டது.

வினு—இந்த அவித்தை ஒன்ரு? அனேகமா?

விடை—சொரூபத்தால் ஒன்ருயும், அம்சத்தால் அனேகமாயுமிருக் கிறது.

வினு—திருஷ்டாந்தமெப்படி?

விடை—இருட்டு என்பது ஒன்ருயிருந்தும், தன்னம்சமாகிய, கூடம், வாசல், அரங்கு, மேடை இவைகளில்வளைபட்டிருக்கும் இருட்டுகளை யுத்தேசித்து பலவாயும் வியவகரிப்பதுபோலாம்.

வினு—தாஷ்டாந்தத்தையும் விளக்கிக்காட்டுக?

விடை—ரஜோகுணவடிவ அவித்தை ஒன்ருயிருப்பதில் ஜீவபேதத் திற்குக்காரணமான அனுதிகர்மவாஸனையுடன்கூடிய அனுதிசூக்ஷ மசரீரங்கள்பலவாய்ப் புரியட்டகசரீரவடிவாய் இவ்வஞ்ஞானத்திற்றங் கிக்கொண்டிருப்பதினுல், இச்சூக்ஷமசரீரவுபாதிகளை முன்னிட்டு அனேகமாந்தன்மையுடனும், இருந்துகொண்டிருத்தலின் ஒன்ருயும் அனேகமாயும் வியவகரிக்கப்படும்.

வினு—புரியட்டக சரீரமாவதுயாது?

விடை—1, ஞானேந்திரியம்; 2, கன்மேந்திரியம்; 3, மனுதிசதுட்



டயம்; 4, பிராணுதிபஞ்சகம்; 5, விஷயாதிபஞ்சகம்; 6, காமம்; 7, கர்மம்; 8, அஞ்ஞானம். இவையெல்லாஞ்சேர்ந்து புரியட்டகசரீர மாம்.

வினு—இப்புரியட்டகசரீரத்தின் காரியமென்ன?

விடை—இகலோகத்திலிருந்து பரலோகத்திற்குப்போதல், பரலோ கத்திலிருந்து இகலோகத்திற்குவருதல்,புண்ணியபாவங்களைச்செய்து அதின் பயனுய ஜனனமரணுதியின்பொருட்டு சரீரங்களைக்கொள்ளு தல், விடுதல் முதலானவைகளே.




வினு—இது எப்போதுண்டாயது?

விடை—அனுதியாம்.

வினு—அனுதியென்ருலென்ன?

விடை—உற்பத்தியில்லாதது அனுதியாம்.

வினு—இவ்வனுதிபதார்த்தங்கள்வேறு எத்தனைவகைப்படும்?

விடை—பிரஹ்மம்; ஈசுவரன், ஜீவன், வித்தை அல்லது அவித்தை, அவித்தைக்கும் பிரஹ்மத்திற்குமுள்ளசம்பந்தம், இவற்றின்பேதம்ஆக 6-ம் அனுதியாம்.

வினு—இந்த ஆறுபதார்த்தங்களையும் அனுதியென்பதில் சாதகயுக்தி யாது?

விடை—ஆறுபதார்த்தங்கள் அனுதியென்றதனுல் அன்னியசர்வப தார்த்தங்களும் உற்பத்தியுடையனவாகும். ஆனுல் ஆறுபதார்த்தங்க ளும் பரஸ்பரம் ஒன்றிலிருந்துமற்ருென்று உண்டாயிருக்கக்கூடுமா வெனச்சோதிப்பதே இதிற்சாதகயுத்தியாம்.

வினு—அப்படியானுல்பிரஹ்மம் அனுதியென்பதெப்படி?

விடை—பிரஹ்மம் அவித்தைக்கு அதிஷ்டான (இருப்பிட)மாயிருப் பதால் அவித்தையினின்றும் உற்பத்திசொல்லக்கூடாது. ஈசுவர, ஜீவாதிகள் பிரஹ்மமின்றிச்சித்தியாமையால் பிரஹ்மமானது அந் நான்கினின்றும் உண்டாகிறதில்லை. ஆதலால்பிரஹ்மம் அனுதியே.

வினு—அவித்தை அனுதியென்பதெப்படி?

விடை—பிரஹ்மம்நிர்விகாரமாயிருத்தலின் அதனினின்றும் அவித்தை

யுண்டாகிறதில்லை. ஈசுவராதிநான்கன்சித்தியோ அவித்தையினதி
சித்தியின் அதீனமாயிருத்தலின் அவற்றினின்றும் அவித்தையுண்டா
கிறதில்லை, ஆதலால் அவித்தை அனாதியாம்.
வினு—ஈசுவர ஜீவர்கள் எப்படியனாதி?
விடை—பிரஹ்மம் நிர்விகாரியானபடியால் கேவலம்(தனி)பிரஹ்மத்
தினின்றுமுண்டாகார். சேதனவடிவாயிருத்தலின்தனி அவித்தை
யினின்றும் உண்டாகார். பிரஹ்மமும் அவித்தையும் எப்போதனா
தியோ அவற்றின்சம்பந்தமும் அனாதியே. அனாதிசம்பந்தத்தாற்
பெறப்பட்ட ஜீவேசுவரர்களும் அனாதியே. ஆதலால், சம்பந்தத்தி
னின்றுமுண்டாவதாகச்சொல்வது உபசாரமேயாகும். ஆதலின்,
சம்பந்தத்தினின்றுமுண்டாகவில்லை. ஈசுவர,ஜீவர்கள்சித்தித்துஅவற்
றின்பேதம் சித்திக்கவேண்டியதானபடியால் அதி (பேதத்தி)னின்
றும் ஈசுவர, சீவர்கள் உண்டாகார். ஆதலால் ஈசுவர சீவர்களும்
அனாதியே.
வினு—சம்பந்தம் அனாதியென்பதெப்படி?
விடை—பிரஹ்மமும் அவித்தையும் அனாதியாதலினானும், பிரஹ்மம்
சர்வவியாபகமாயிருத்தலினானும் அவற்றின் தாதாத்மியசம்பந்தமும்
அனாதியாம். அவற்றி (பிரஹ்மம், அவித்தையி)னின்றும் அது (சம்
பந்தம்) உண்டாகிறதில்லை. ஈசுவரன்முதலமூன்றன்சித்தியோ சம்
பந்தத்தினது சித்தியின்அதீனமாயிருக்கிறது. ஆதலால் அவைகளி
(ஈசுவரன் முதலவற்றி)னின்றும் அது (சம்பந்தம்) உண்டாகா. ஆத
லால் சம்பந்தமுமனாதியே.
வினு—பேதமனாதியென்பது எப்படி?
விடை—முற்கூறிய ஐந்துவஸ்துக்களும் தாமேதம்மிலிருந்து உண்டா
கின்றனவெனக்கொள்ளின் தானேதனக்குக்காரணமாம் என்னும்
தோஷமுண்டாகும். ஆகையால் இவ்வைந்துவஸ்துக்களும் தாமே
தம்மினின்றும் உண்டாகா. எதனால் இவற்றிற்கு உற்பத்தியில்லையோ
அதனால் அவ்வைந்துவஸ்துக்களுக்கும் அனாதித்தன்மையும், பரஸ்பர
பேதமும் உண்டு. ஆதலால் பேதமும் அனாதியே.



வினு—அப்படியானால் அநாதிவஸ்துக்களுக்கு அந்தமு(முடிவு)ண்டா?
விடை—அனாதியென்றால் உற்பத்தியில்லாதது. அந்தமென்றால்மு
டிவு. அநாதியென்னும்யேதுவால் அந்தமுண்டாவென்னும் விசா
ரணைவரவேண்டியதில்லை, அநாதியும் அந்தமும்சம்பந்தமின்றியிருத்
தலின். ஆனல்முடிவுடனுமிருக்கலாம், முடிவின்றியுமிருக்கலாம்.
வினு—இந்த ஆறில் அந்தமுள்ளது எது? அந்தமில்லாதது எது?
விடை—பிரஹ்மம் ஒன்றுமே அந்தமில்லாதது. மற்ற ஐந்தும் அந்
தத்துடன்கூடியது.
வினு—பிரஹ்மத்திற்கு ஏன் அந்தம் சொல்லக்கூடாது?
விடை—பிரஹ்மமானது சர்வாதாரமாயும், தானேதனதுமகிமையில்
சச்சிதானந்தாதிசொரூபமாகவேயிருப்பதாயும், அதைவிட்டு ஒன்றும்
தனித்திருக்கமுடியாதானதினாலும், பிரஹ்மத்திற்குமுடிவைக்கூறும்
மற்றொன்று அதின்முடிவை அனுபவித்தபிறிதுபதார்த்தமாயிருக்க
வேண்டியிருப்பதாலும் அதற்கு அந்தியமெல்லாம் நசுவரம் எனச்சுரு
திகள் கோஷிக்கிறபடியானும், அது அந்தமில்லாததாம்.
வினு—மற்றஐந்தும் அநாதியாயினும் அந்தமுண்டென்பதெப்படி?
விடை—மண்ணினிடத்துள்ள அநாதியானகடத்தினின்மை வினைய
ஆரம்பித்தவுடனும், அநாதியானகுகையிருட்டு தீபங்கண்டவுடனும்
நாசமடைவதுபோல் வினையஐந்தும் ஞானமடைந்தவுடன் தனக்கெ
னச்சொரூபமின்றிப்போவதால் நாசமுடையதேயாம்.
வினு—இந்த அவித்தையோபாதிகளில் தாரதம்மியம் எதைமுன்
னிட்டுவந்தன?
விடை—சூக்ஷ்மசரீரோபாதிகளிற் கட்டுப்பட்டிருக்கிற அநாதியாம்
கர்மவாஸனைகளிலுள்ளபேதம்பற்றி அவித்தையிலும் தாரதம்மியம்
வந்தன.
வினு—மலினஜலம் என்றால் என்ன?
விடை—அழுக்குப்படிந்தநீர்.
வினு—இங்கு மலினமாவது யாது?
விடை—முற்கூறியவாஸனைகளே

வினு—ஜலமாவது யாது?
விடை—அவித்தையைநிரூபிக்க எடுத்துக்கொண்டதிருஷ்டாந்தமாம்.
பதிபிம்பமெனப்பிரமசைதனியம்பதிபலிக்கும்பதிபிம்பங்கள்
மதியற்பரெனச்சிவசிதாபாசர்பிராஞ்ஞரெனவழுத்தற்பால,
விதியிந்தவவித்தைகடம்மிடந்தனிலுமுக்குணமு மேவுமூன்
றுண், முதலெழும்பிலதிற்பதிபிம்பித்தசிதாபாசனுயர்முத்த
ஞவன்
(இ—ள்) பிரதிபிம்பம்போலப்பிரமசைதன்யம்பிரதிபிம்பிக்கும். [இந்
(௯௨)
தப்] பிரதிபிம்பசைதன்யங்களை கிஞ்சிக்ஞரென்றும், சிவசிதாபாஸ
ரென்றும், பிராஞ்ஞரென்றுஞ் சொல்லப்படும். (சொல்லிய)இந்த
அவித்தைகளிடத்திலேயும், ரஜவில்சத்துவம், ரஜவில்ரஜஸு, ரஜ
வில்தமஸு என மூன்று குணங்களுண்டு. (மூன்றனுள்) இரஜவில்
சத்துவம் பிரதானமாகும்பொழுது அதிற்பிரதிபிம்பித்தசிதாபாசன்
தத்துவஞானநிஷ்டனுவன்.
வினு—இந்த அவித்தையினின்றுமுண்டாயது யாது?
விடை—ஜீவர்கள் விளங்கினுர்கள்.
வினு—இந்த ஜீவர்கள் எப்படிவிளங்கினுர்கள்?
விடை—அகண்டபரிபூர்ணசச்சிதானந்தப்பிரஹ்மம் அவித்தையிற்பி
ரதிபிம்பிக்க;பிரஹ்மம்,அவித்தை, பிரதிபிம்பம் ஆகியமூன்றுஞ்சேர்ந்
தவடிவமே தங்களதுசொரூபமாகவிளங்கினுர்கள்.
வினு—திருஷ்டாந்தமியாது
விடை—முகமானது மலினஜலத்திற்பிரதிபிம்பித்து விளங்கியது
போல் விளங்கினுர்கள்.
வினு—முகம்வடிவுடைப்பொருளானபடியாற் பிரதிபிம்பித்தல்கூடும்
பிரஹ்மம்அரூபமானபடியால் எங்ஙன்பிரதிபிம்பிக்கும்?
விடை—அருவமான ஆகாயமானதுஜலத்திற்பிரதிபிம்பித்ததுபோற்
கூடும்.
வினு—ஆகாயம் ஜலத்திற்பிரதிபிம்பித்ததாகத் தோற்றவில்லையே!
நக்ஷத்திராதிகளின் பிரதிபிம்பமல்லவோ விளங்குகிறது! ஆகாயத்
தின்பிரதிபிம்பமல்லவே! ஆதலாற்கூடா?



விடை—கண்ணுடிக்குச்சமீபமாய் நீ நிற்குங்கால் உனதுபிரதிபிம்பம்
சமீபமாயும், தூரவிலகிநிற்குங்கால்பிரதிபிம்பமும் தூரத்திற்ருேற்றுகி
றதே. அப்பிரதிபிம்பத்திற்கு முன்னிருப்பதாய்த்தோற்றிய இடம்.
உன்முன்னிருக்கும் ஆகாயத்தின் பிரதிபிம்பமல்லவோ! ஆதலின்,
ஆகாயப்பிரதிபிம்பம் கூடுமென அறிக.
வினு—ஆயினும், பிரஹ்மமும்நிரவயவம் (அவயவமில்லாதது) அவித்
தையும்நிரவயவமாகின்றதே! அது எப்படிப்பிரதிபிம்பிக்கக்கூடும்?
விடை—நிரவயவமான ஆகாயத்தில் நிரவயவமானசப்தம் பிரதிபலித்து
எப்படிப்பிரதித்வனியுண்டாகிறதோ அதுபோல்நிரவயவமானபிரஹ்
மமும், நிரவயவமான அவித்தையிற்பிரதிபிம்பிக்கக்கூடும்.
வினு—அவித்தை ஒன்ருயிருக்க அனேகஜீவர்களெப்படியுண்டா
னுர்கள்?
விடை—ஜீவர்கள் அநாதியாகையால் பூர்வகற்பத்திலிருந்தஜீவர்கள்
தங்கள்தங்கள் கர்மவாசனையுடனேகூடிய புரியட்டகவடிவசூக்ஷமச
ரீரவுபாதியோடு, ஒன்ருன இந்த அவித்தையிற் பிரளயத்திற்பொருந்
தியிருக்க, சிருஷ்டிகாலத்தில் அந்தந்தசூக்ஷமசரீரத்தில் விளைபட்ட
அவித்தையம்சங்கள் அந்தந்தவுபாதியுடனேகூடிப்பலவாய்விளங்கின.
இவ்விதம் அனேகசூக்ஷமசரீரவுபாதியுடனேபொருந்திகின்ற இந்த
அவித்தையையே அனேகரூபமாய்ப்பிரிந்ததென்றும், அதிலதிற்பிரதி
பிம்பிக்கக்கூடியவர்களும் அனேகராகையால் ஜீவர்களும் அனேகமா
கவிளங்கினுர்கள் என்றுங்கூறப்பட்டது.
வினு—இந்தஜீவர்களை அவித்தைகளினின்றும் பிரஹ்மத்தை ஆசிர
யமாய்வைத்துக்கொண்டு பிரதிபிம்பித்தனர் என்றுகூறினுலென்ன?
விடை—ஜீவன்சித்துப்போல் விஷயங்களைவிளக்கி, விளங்கும்சுபா
வத்தையுடையவனுயிருத்தலால், சித்துசுபாவமானபிரஹ்மத்தின்பிர
திபிம்பமாகக்கூறவேண்டுமேயல்லாமல் அவித்தையின்பிரதிபிம்பமா
கச்சொல்லக்கூடாது.
வினு—ஆயின் இந்தஜீவனை ஈசுவரனுடைய பிரதிபிம்பமாகச்சொன்
னுலென்ன?

விடை—ஈசுவரனென்பது மாயையென்னுமுபாதியை விசேஷணமாகக்கொண்டுள்ளசேதனம்; அவ்விதஈசுவரனோடு ஜீவனுக்குச்சமானதேசத்து இருக்குந்தன்மையைத்தத்துவமஸி மகாவாக்கியம்போதிக்கிறது. (இதுபின்னால் வியவகரிக்கப்படும்.) வாச்சியார்த்தத்தால் ஜீவனுக்கோ ஈசுவரனோடுசமத்துவம் பொருந்தாது. ஆயின்சுருதி கூறியமகாவாக்கியத்திற்குப்பொருள்யாதென்று ஜீவனுனவன்விமர்சினிசத்தியாய பராசத்தியின் கருணைகடாக்ஷத்தைப்பெற்று ஈசுவரனிடத்து ஐக்கியமாகாமல் ஈசுவரனுடையவாச்சியபாகமாகிய உபாதிகளைக்களைந்து ஈசுவர அதிஷ்டானமாகிய அவாங்மானஸகோசரவடிவசுத்தப்பிரஹ்மமாகமிஞ்சுவதாலும், எவன் எதினிடத்துப்பிரதிபிம்பித்தவனோ அவன் அதுவாகமிஞ்சுவனுனபடியாலும், அவ்விதசீவனை பிரஹ்மத்தின் பிரதிபிம்பமாகச்சொல்லவேண்டுமேயன்றி ஈசுவரனுடைய பிரதிபிம்பமாகச்சொல்லக்கூடாது.

வினு—கிஞ்சிக்ஞன் என்றால் என்ன?

விடை—அற்பவடிவ விஷயங்களினாலுண்டாம் அற்பக்ஞானத்தையுடையவனும்.

வினு—சிதாபாஸன் என்றாலென்ன?

விடை—சித்துப்போல் விளங்குபவன்சிதாபாஸன்.

வினு—சிதாபாஸர் என்பதற்கும், சீவசிதாபாஸரென்பதற்கும்பேதமியாது?

விடை—சிதாபாஸர் என்றால் சித்துப்போலிகளாகியசீவர், ஈசுவரன் இவர்களையும், சீவசிதாபாஸனென்றால் சீவனைமாத்திரமுங்குறிக்கும்.

வினு—பிராக்ஞர் என்றாலென்ன?

விடை—சுழுத்தியவஸ்தையின் ,ஆனந்தத்தை நன்றாயறிபவரெனப்பொருளாம்.

வினு—இங்குக்கூறியசீவர்களை பிரதிபிம்பவடிவாக அல்லவோ இந்நூல்கூறுகின்றது. அவர்கள் எப்படிஜனனமரணாதிகளிலுழலுதல்வடிவவியவகாரத்திற்குள்ளாதல்கூடும்?

விடை—முன் ஈசுவரனைக்கூறியதுபோல்; பிரதிபிம்பமே சீவர்கள்



எனக்கூறினும்; பிம்பப்பிரதிபிம்பங்கள் அபேதமாயிருத்தலாலும் பிம்பத்தைவிட்டுப்பிரதிபிம்பத்தைத் தனித்துக்காட்ட முடியாவாதலாலும்; பிரதிபிம்பம், அதின் ஆசிரயமான அவித்தை, அதனதிஷ்டானமாயபிரஹ்மம் ஆகமூன்றுஞ்சேர்ந்தே ஜீவ சொரூபமானபடியால் ஜனனமரணாதிவியவகாரங்களும்பொருந்தும்.

வினு—ரஜஸில் சத்துவகுணம் மேலிடில் என்னும்?

விடை—பிரதானமாயரஜஸில், பிரதிபலித்தஜீவனுக்கு, சத்துவகுணம் மேலிட்டிருக்கிறதெனப்பொருளமைவதால் அதிற்பிரதிபலித்த ஜீவன் தத்துவஞானத்தையடைதற்குரிய யோக்கியனாவன்.

வினு—தத்துவக்ஞானம் என்றால் என்ன?

விடை—பிரஹ்மத்திற்குவேறாகாத ஆன்மாவின்ஞானம் தத்துவஞானமாம்.

வினு—தத்துவஞானநிஷ்டன் என்றால் என்ன?

விடை—தத்துவஞானத்தின்கண்நிலைத்த அறிவுடையவனெனப்பொருள். அவனேஜீவன்முத்தனெனப்படுவன்.

வினு—ஆயின்சத்துவகுணத்தின் காரியங்கள்யாது?

விடை—(1) தற்புகழ்ச்சியின்மை. (2) டம்பமின்மை. (3) பிறருக்குத்துன்பஞ்செய்யாமை. (4) பொறுமை. (5) கபடமின்மை. (நோனமார்க்கத்திலிருக்குதல்). (6) சத்குருசேவை. (7) மனச்சரீரசுத்தி. (8) சன்மார்க்கத்தில்(மோக்ஷசாதனத்தில்)விடாமுயற்சி. (9) தேகஸ்வாதீனம் (அந்நியவிஷயத்திலிருக்கிற தேகேந்திரியாதிக்கூட்டங்களைமோக்ஷசாதனகாரியத்திலுபயோகித்தல்). (10) இஷ்டமானஇகபாவிஷயங்களில் ஆசையற்றிருக்குதல். (11) அகங்காரமின்மை. (12) ஜநநமரணாதிகளில் துக்கத்தையும்தோஷத்தையுமறிதல். (13) புத்ரகாராதிகளில் பிரியமற்றிருக்கை. (14) அபிமானமற்றிருத்தல். (15) இஷ்ட, அநிஷ்டங்களில்சமசித்தம். (16) பரமேசுவரனிடத்து ஸ்திரமானபக்தியோடிருத்தல். (17) திருடராதியோரில்லாத சுத்தமான இடங்களில்வசித்தல். (18) மூட, அசுத்த, வணக்கமற்ற, பிராகிருதஜனங்களிடத்தில் பிரீதியற்றிருத்தல். (19) ஆத்மசொரூபஞானத்தி

லெப்பொழுதுமிருத்தல். (20) தத்துவஞானத்திற்குப்பலன்மோக்ஷ மென்றறிதல். ஆகிய இவைகள்சத்துவகுணத்தின் காரியங்களாம்.

கவி.

பகரிராசதமெனுமிவ்வவித்தையின்ராசதமெழுங்காற்பதிலித்
தோன், மிகுகாமக்குரோதபரனுய்க்கருமநிட்டனும்மேன்
மூன்ருக, வகுகுணமேலாம்பொழுதுபதிபலித்தோன்சோம்
புறக்கமயக்கஞ்சாருஞ், சகமூலப்பகுதியிராசதகுணகற்பனை
யின்னேசாற்றினேமே. (௫௫)

(இ—ள்) (சொல்லப்பட்டஇவ்வவித்தையெனும்) ரஜஸில்ரஜஸ்பிரதானமாகும்போது [அதில்] பிரதிபிம்பித்தசிதாபாஸன் (மிகுந்த) காமக்குரோதபரனுய்க்கன்மநிஷ்டனுவன்(மூன்ருவதாகவகுத்த) இரஜஸில்தமஸ் பிரதானமாகும்போது [அதில்] பிரதிபிம்பித்தசிதாபாஸன் சோம்பல், நித்திரை, மயக்கமாகிய இவைகளையடைவன். இப்படி(ஜகத்)மூலப்பிரகிருதியின் இராஜோகுண கற்பனைசொ(ன்னேம்) [ல்லப்பட்டது.]

வினு—இராஜஸில் இராஜஸ் மேலிடிலென்னும்?

விடை—பிரதானமாய இரஜோகுணத்திற்பிரதிபலித்தஜீவனுக்குராசதகுணம் மேலிட்டிருக்கிறதெனப்பொருளமைவதால் அதிற்பிரதிபவித்தஜீவன் காமக்குரோதங்களை மிகுதியாகவுடையவனுய்க்கன்மநிஷ்டனுவன்.

வினு—ஆயின் இந்தரஜோகுணத்தின் காரியங்கள்யாவை?

விடை—இராகாதி பதின்மூன்றுகுணங்களாம்.

வினு—மேல் சத்துவகுண ஆதிக்கத்திற்பலம் ஜீவன்முக்தியென்றபடி இப்பதின்மூன்றுகுணங்கட்கும் பலனியாது?

விடை—துக்கமே பலனும்.

வினு—ஆயின்பதின்மூன்றுகுணங்களும், அவற்றின் இலக்கணங்களும் துக்கபலத்தில் திருஷ்டாந்தமும் என்ன?

விடை—(1) இராகம்=பரஸ்திரிகமனம் பண்ணவேண்டுமென்றெழாகின்ற சித்தவிருத்தி. இதில் இராவணனும் சுந்தோபசுந்தரர்களும்



துக்கானுபவிகள்.

(2) துவேஷம்=தனக்கபகாரம்பண்ணினவனுக்குப்பதில் அபகாரம்பண்ணவேண்டுமென்று எழும்சித்தவிருத்தி. இதில் இரணியகசிபுமுதலினேர் துக்கானுபவிகள்.

(3) காமம்=புத்திரதாராதி மென்மேலும் சம்பாதிக்கவேண்டுமென்று எழும்சித்தவிருத்தி. இதில்நரகாசுரன் முதலினேர் துக்கானுபவிகள்.

(4) குரோதம்=தனக்குவிரோதம் செய்பவனிடத்து ஆக்கிரகமாக எழாநின்றசித்தவிருத்தி. இதில்பகாசூரன்முதலினேர் துக்கானுபவிகள்.

(5) உலோபம்=தனக்குவந்தடைந்தபொருளை ஒருவருக்குங்கொடுக்கலாகாதென்ற சித்தவிருத்தி. இதில்துரியோதனன் முதலினேர் துக்கானுபவிகள்.

(6) மோகம்=தன்னுடையபொருளில்பிரிய,மோத, பிரமோதமாக எழாநின்றசித்தவிருத்தி. இதில்தசரதன்முதலினேர் துக்கானுபவிகள்.

(7) மதம்=ஐசுவரியகோலாகலத்தினுல் கொர்வித்துகிர்த்தியம் (செய்யத்தக்கது), அகிர்த்தியம் தெரியாமல் எழுகின்றசித்தவிருத்தி. இதில்கார்த்தவீரியார்ச்சுனன் முதலினேர்துக்கானுபவிகள்.

(8) மற்சரம்=தனக்குச்சமம் அல்லது அதிகசம்பத்துள்ளாரைக்கண்டு சகியாமலெழாநின்ற சித்தவிருத்தி. இதில்சிசுபாலன் முதலினேர் துக்கானுபவிகள்.

(9) ஈரிஷை=தனக்குவந்ததுக்கம் பிறருக்கும்வரவேண்டுமென்றெழுஞ்சித்தவிருத்தி. இதில் அருணுகூதன்முதலினேர் துக்கானுபவிகள்.

(10) அசூயை=தனக்குவந்தசுகம் பிறருக்கும்வுரலாமாயென்றெழாநின்ற சித்தவிருத்தி. இதில்பௌண்டரீகவாசுதேவன் முதலினேர் துக்கானுபவிகள்.

(11) இடம்பம்=தான்செய்ததருமத்தைப் பிறர்பார்த்துப்புகழ

வேண்டுமென்றெழாநின்ற சித்தவிருத்தி. இதில்நபூர்வமகாராசன்
முதலினோர் துக்கானுபவிகள்.

(12) தர்ப்பம்=தனக்குச்சமமாக ஒருவருமில்லையென்றெழாநின்
றசித்தவிருத்தி. இதில்சரசந்தரன் முதலினோர் துக்கானுபவிகள்.

(13) அகங்காரம்=அடாஎன்னையறியாயா!என்றல்முதலியவார்த்
தைகளைக்கொர்ச்சித்து, நீயா எனக்குப்புத்திசொல்லுகிறவன் என்றெ
ழாநின்றசித்தவிருத்தி. இதில் மது, கைடவர்முதலினோர் துக்கானு
பவிகள்.

வினா—கன்மநிஷ்டன் என்றலென்ன?
விடை—தன்ஜாதிக்குரிய கர்மங்களை, யானெனதென்னும்பற்றுடன்
பலனைவிரும்பிச்செய்பவனும்.

வினா—இராஜஸில் தமஸை மேலிடிலென்னும்?
விடை—பிரதானமாய இரஜோகுணத்திற் பிரதிபலித்தஜீவனுக்கு
தமோகுணம் மேலிட்டிருக்கிறதெனப்பொருளமைவதால் அதிற்பிர
திபலித்தஜீவன் சோம்பல்நித்திரைமயக்கங்களையடைவன்.

வினா—அப்படியானால் தமோகுணத்தின் காரியங்களியாது?
விடை—பகலிற்றூங்குதல், வம்பளத்தல், குடித்தல், வீணைதிரிச்சல்
தெய்வத்தைஒப்புக்கொள்ளாமை,அநாசாரம்,யாசகஞ்செய்தல்,அஜாக்
கிரதை, மறதிஎன்னுமிவை போன்றவைகளாம்.

வினா—இச்சிதாபாஸனுக்கு ஜீவனென்றபேர் எப்படிவந்தது?
விடை—அஞ்ஞானகாலமான மூன்றவஸ்தை, மரணம், மூர்ச்சை,பிர
ளயம் என்னுமிவைகளில் அவித்தையையும், ஞானகாலத்தும், அந்தக்
காரணத்தைப்பற்றி ஜீவித்துக்கொண்டுமிருப்பதால் சீவனென்றழைக்
கப்பட்டான்.

வினா—ஞானகாலத்தில் எப்படி அந்தக்கரணத்தாற்சீவிக்கிறான்?
விடை—ஆவாணரூபஅஞ்ஞானம் நீங்கியசீவன்முத்தரிடம், விக்ஷே
பவடிவஅஞ்ஞானத்தோடுகூடியவனாய் விக்ஷேபரூபசரீரம்விழும்வரை
ஞானிகள் வியவகரித்துக்கொண்டு குருசீடபரம்பரையாயிருக்கிறார்
கள். அந்தவியவகாரத்திற்கு ஞானத்தினாற் கெட்டுப்போனசீவனும்



அந்தச் சீவனுக்குப்பற்றிவியவகரிக்கயோக்கியமான அந்தக்கரணமு
மில்லாமல் எந்தவியவகாரந்தான்கூடும்! ஆதலால் ஞானிகளிடம் அந்
தக்கரணத்தைப்பற்றியே சீவிக்கிறான்.

வினா—முற்கூறிய ஜீவேசுவரர்களை உண்டானார்கள் என்று கூறாமி
டங்களிலெல்லாம் இவ்வுரையின்கண் விளங்கினார்களென்றும்; அப்ப
டியே ஈசுவரவிளக்கங்கூறல், ஜீவவிளக்கங்கூறல் என அவதாரிகைக
ளும் கூறுவானேன்?
விடை—அவாங்மானஸகோசரவஸ்துவிற்கு அபின்னசத்தியைமுன்
னிட்டு சுத்தப்பிரஹ்மம், பரப்பிரஹ்மம், பரமானந்தர், தேஜோமயர்
பரிபூர்ணர், என ஐந்துநாமங்கள் வந்ததுபோல்; இங்குப்பின்னசத்
தியைமுன்னிட்டு அந்தவஸ்துவிற்கே ஈசுவரன், ஜீவன் என்றநாமங்
கள் வந்தனவென்றும்; முற்கூறிய ஐந்துநாமங்களும் உபாதியின்
பேதத்தால்வந்த ஐந்து விளக்கங்கள் எனக்கண்டதுபோல்; இங்கும்
ஜீவேசுவரர்களையும் அவாங்மானஸகோசரவஸ்துவின் விளக்கமாய்க்
காணவேண்டுமென்றும்; விளக்க பதத்தாற் கூறப்பட்டது

வினா—அப்படியானாலும் ஈசுவரவிளக்கம் ஜீவவிளக்கமுண்டாயிற்
றென்று இச்சாஸ்திரத்தில் என்கூறக்கூடாது?
விடை—அவர்கள் அநாதியானபடியால் உற்பவித்தல்வடிவ தன்மை
யைக்கூறக்கூடாது.

வினா—ஆயின், இராசததுணகற்பனை என்ற விசேஷணம் எதுபற்றிக்
கூறப்பட்டது?
விடை—மூலப்பிரகிருதியானது கற்பனாரூபமாயிருத்தலால் அதுபற்
றிவந்த ஜீவபாவ (தோற்ற) மும் ஈசுவரபாவமும் கற்பனை என்பதை
முமுக்ஷுக்கள் மறவாமற்றரிக்கும்பொருட்டு ஜீவேசுவரப்பிரசங்கங்க
ளினீற்றில் அங்கங்கே கற்பனையென்றுவிசேடித்து வைக்கப்பட்டது

வினா—ஜீவேசுவரபாவங்களை எப்படிக்கற்பனையென்னலாம்?
விடை—ஈசுவரகாரணமான மாயைக்கும் ஜீவகாரணமான அவித்
தைக்கும் சமட்டி (அனேகங்கூடியது) வியட்டி (தனி) பேதந்தவிர
வேறுபேதங்கிடையாது. ஒன்றாகிய அவாங்மானஸகோசரவஸ்துவி

ணிடத்து ஈசுவரபாவ, ஜீவபாவகற்பனைகட்குக்காரணமாய மாயை,
அவித்தை கற்பனூருபமாயிருத்தலால் அதைமுன்னிட்டுவந்த ஈசுவர
ஜீவபாவமும் கற்பனையேயாம்.
வினு—அப்படியானுல் ஜீவ, ஈசுவரர்களைக்கற்பனை யென்பானேன்?
விடை—ஜீவேசுவரர்கள் கற்பனையென்பதை,ஜீவபாவமும் ஈசுவரபா
வமும் கற்பனையென்றே கொள்வாயாக; ஏனெனில் அஞ்ஞான
மொழிந்தவிடத்து அவைசொரூபமற்றுப்போதலின். ஆனுல் ஜீவ
பாவ ஈசுவரபாவங்களில் விளங்கிக்கொண்டிருந்த அவர்களின்
யதார்த்தவடிவம் அவாங்மானஸகோசரவஸ்துவாயிருப்பதால் ஜீவ
பாவ ஈசுவரபாவங்களிலுள்ள அவர்களின் யதார்த்தவடிவமாகிய ஜீவ
விளக்கத்தையும் ஈசுவரவிளக்கத்தையும் பொய்யென்றுகூறவில்லை.
வினு—அப்படியானுல் இவர்கள் சத்தியமா?
விடை—ஜீவேசுவரர்களுக்கு இருவடிவமுள. ஒன்று உபாதியினு
லாயது, அது ஜீவபாவம் ஈசுவரபாவமெனவும்; மற்ெறுன்று உபாதி
யின்றியது, அது ஜீவவிளக்கம் ஈசுவரவிளக்கம் எனவும் அங்கீகாரம்.
முன்னது உபாதியினுலாயதால் கற்பிதமும், பின்னது சொரூபமாயி
ருத்தலால் சத்தியமுமாம். ஆகவே தமது உபாதிபாகத்தால் மித்தை
யெனவும், சொரூபபாகத்தால் சத்தியமெனவும் வியவகரிக்கப்படுவர்.
வினு—அப்படியாயின் ஜகத்தின் யதார்த்தவடிவமும் அவாங்மானஸ
கோசர வடிவாய்த்தானே இருக்கவேண்டும்! அதுவும் சத்தியமா?
விடை—நன்றுசொன்னுய்! பிரபஞ்சத்திலும் நாமரூபந்தான் மித்
தையேயன்றி பிரபஞ்சயதார்த்தவடிவாய அஸ்தி, பாதி, பிரியவடி
வம்யதார்த்தமே. ஆகவே ஜீவ, ஈசுவர, ஜகத்தை அஞ்ஞானவயத்
தால் நாமரூபமாய்ப்பார்ப்பவர்களைநோக்கி மித்தையெனவும், அவை
களின் யதார்த்தவடிவாய சச்சிதானந்தவடிவாய்ப்பார்கரும் உத்தம
அதிகாரிகளைநோக்கி சத்தியம் எனவும் சுருதிகூறிற்று. இதுவே
பிம்பப்பிரதிபிம்பபக்ஷத்தின் முடிந்ததிர்மானம். ஆதலால்சகலநாம
ரூபங்களையும்விட்டுச்சச்சிதானந்தவடிவாய்த் தெரிசிப்பாயாக.
வினு—அப்படியானுல் முக்கிய சித்தாந்தத்தில் ஜீவேசுவரஜகத்பாவ



மெல்லாம் அஞ்ஞானத்தாற்பெறப்பட்டதாயிருக்க மூலப்பிரகிருதி
யின் சத்துவகுணத்தினின்று ஈசுவரனும், ரஜோகுணத்தினின்று
ஜீவர்களும் உண்டானுர்கள் என்று இச்சாஸ்திரங்கூறுவானேன்?
விடை—உத்தமபக்ஷமாகியவிது மனதிற்பதியாத கனிஷ்டாதிகா
ரிக்கு அவ்வஞ்ஞானத்தையேமூலப்பிரகிருதியெனவும், அதில்
மூன்றுகுணங்களுளவெனவும், இவற்றினின்றுங்கிரமமாய் ஈசுவரஜீவ
ஜகத்து உதித்தனவெனவும், வர்ணனை ரூபமாய்ப்போதித்து பின்
ஒன்றிலொன்ருயொடுக்கி சகல ஜகத்தும் சிவமேயென அதிகாரி
நோக்காற் கூறிற்றென்றுணர்க.
வினு—அப்படியானுல் மூலப்பிரகிருதி முதலாயுள்ள சிருஷ்டிக்கிர
மம் பிரமாணமோ? அஞ்ஞானத்தால் ஜீவேசுவரர்கள் உண்டானுர்
கள் என்ற சிருஷ்டிக்கிரமம் பிரமாணமோ?
விடை—வேதத்திற்குச் சிருஷ்டிக்கிரமத்தைக்கூறுவதில் ஆக்கிரக
மில்லை. எந்தவழியினுலாவது முமுக்ஷுக்களுக்கு யதார்த்தஞான
முண்டாகவேண்டுமென்றுகருதி இருவகைச்சிருஷ்டியையும் கூறுவ
தால் இரண்டும் பிரமாணமே.
வினு—அப்படியானுல் பிரபஞ்சசிருஷ்டியைக்கூறுவதில் வேதத்திற்
குத்தாற்பரியமில்லையாயின் பிரகிருதியையும் அதின்காரியவடிவப்பிர
பஞ்சத்தையும் சிலவிடத்துச்சுருதி சத்தியமாகச்சொல்வானேன்?
விடை—அஞ்ஞானதிசையில் சத்தியமாகவே சொல்லும்.
வினு—முமுக்ஷு திசையில் எப்படிக்கூறும்?
விடை—சதசத்துவிலக்ஷண அநிர்வசனீயமாய்க் கூறும்.
வினு—ஞானதிசையில் எப்படிக்கூறும்?
விடை—அசத்தாய்க்கூறும்.
வினு—சுருதிமூவிதங்கூறினும் அவ்வத்திசையில் அவ்வவ்வதிகாரிகட்
கெப்படி விளங்குகிறது?
விடை—அதிகாரிகட்கு விளங்குகிறவண்ணமே சுருதி கூறுமான
படியால் அப்படியப்படியே விளங்குகிறது.
வினு விடைகள் 70 மொத்த வினு விடைகள் 437.

சுந்தரம் வாழ்க.

உ

ஸ்ரீ சுந்தரற்றெண்டர் துணை

இதுமுதல் 4 செய்யுட்களால்

ஆவரண, விக்ஷேபங்களின்றன்மையைக்கூறல்.

கவி

இனிமூலப்பகுதியின்றமதகுணத்திற்கிரண்டுசத்தியம்பி
லுண்டா, நனிமூடல்விரிதலெனவாவரணஞானியொடுமீச
னன்றி, துனிமேவுமேனைச்சீவருக்கெலாமுடன்மூன்றுசொ
லுமாபாசன், றனிமேவுசாக்கிபகுப்பறியவொட்டாமேம
றைக்குஞ்சாற்றிற்றுனே (௩௪)

(இ—ள்) இனி(ப்பேசுமிடத்து)மூலப்பிரகிருதியின் தமோகுணத்திற்கு(மிரு)ஆவரணம் விக்ஷேபமென இரண்டுசத்திகளுண்டு. [இவ்விரண்டில்] ஆவரணசத்தியானது தத்துவஞானியையும், ஈசுவரனையுந்தவிர(துன்பம் பொருந்திய) மற்றைச்சீவருக்கெல்லாம் சரீரத்திரயம் (சொல்லாகின்ற) சிதாபாசன் (தனியாயுள்ள)சாக்ஷிசைதன்யம் [என்னுமிவைகளின் ஒன்றற்கொன்றுள்ள] பேதந்தெரியவொட்டாமல் மறைக்கும். தான்—ஏ—அசை

வினு—பிரகிருதி யென்னும் பதத்தில் பிர-கிரு- என்பவற்றின் அர்த்தம் தெரிந்தது. தி யென்னும் எழுத்தின் அர்த்தமியாது?

விடை—தி யென்பது தமோகுணம்.

வினு—ஆவரணசத்தி யென்றுலென்ன?

விடை—மறைத்தலைச்சுபாவமாயுடைய ஓர் சாமர்த்தியமாம்.

வினு—தத்துவக்ஞானி யென்றுலென்ன?

விடை—தத்துவக்ஞானமுடையவன் தத்துவஞானியாம்.

வினு—தத்துவக்ஞானமாவது யாது?

விடை—ஜீவப்பிரஹ்ம ஐக்கியநிச்சயம் தத்துவஞானமாம்.

வினு—இது எத்தனைவகை?

விடை—பரோக்ஷம், அபரோக்ஷம் என இருவகை.

வினு—பரோக்ஷஞானமாவது யாது?



விடை—சச்சிதானந்தமாகிய பிரஹ்மம் ஒன்றுண்டென அறிதலாம்.

வினு—இது எப்படியுண்டாம்?

விடை—சற்குரு சற்சாஸ்திரங்களில் விசுவாசம்வைத்தலாலுண்டாம்.

வினு—இதின் பலனியாது?

விடை—கடவுளில்லை என்று நினைத்துக்கொண்டிருந்த மறைப்பை நீக்கும்.

வினு—அபரோக்ஷஞானமாவது யாது?

விடை—பிரஹ்மம்நான் என்றுண்டாகும் நிச்சயானுபவம்.

வினு—இது எத்தனைவகை?

விடை—திடம், அதிடம் என இருவகைத்து.

வினு—திட அபரோக்ஷப்பிரஹ்மஞானமாவது யாது?

விடை—அஞ்ஞான, சம்சய, விபரீதமின்றிய பிரஹ்மான்ம ஐக்கியநிச்சயமாம்.

வினு—இது எதினுலுண்டாம்?

விடை—குருவருளாற்பெறப்படும் தத்துவமஸிமகாவாக்கிய உபதேசத்தால் மல, விக்ஷேபாதிகளின்றிய மனதின்கண்ணுண்டாம்.

வினு—இதின் பலனியாது?

விடை—சர்வதுக்கநிவர்த்தி பரமானந்தப்பிராப்தி ஆகியமோக்ஷமாம்.

வினு—அதிட அபரோக்ஷப்பிரஹ்மஞானமாவது யாது?

விடை—அஞ்ஞான, சம்சய, விபரீதங்களோடுண்டாம் பிரஹ்மான்ம ஐக்கிய நிச்சயமாம்.

வினு—இது எப்படியுண்டாம்?

விடை—குருமுகமஹாவாக்கிய சிரவணம்செய்தும் மலவிக்ஷேபதோஷங்களிருக்குமாயின் அதிடஅபரோக்ஷப்பிரஹ்ம ஞானமுண்டாம்.

வினு—அதிடமாவதில் ஏது யாது?

விடை—சிறிது மலவிக்ஷேபாதிகளினிருப்பும், சுருதிநாநாத்துவத்தின் விசாரமும், பேதவாதி, பாமர புருஷர்களதுசங்கத்தின் சமஸ்காரமும் ஆகிய இவைகள் அதிடப்பிரஹ்மஞானத்தை உண்டுபண்ணுவனவாம்.

வினா—இதற்குப்பலமியாது?

விடை—உத்தமலோகப்பிராப்தியும், ஸ்ரீமான்களது குலத்திலேனும், ஞானிகளது குலத்திலேனும் ஜன்மமுமுண்டாம்.

வினா—அபரோக்ஷஞானத்தாலாவரணம் எப்படிநீங்குகிறது?

விடை—முற்கூறிய பரோக்ஷஞானத்தால் கடவுளில்லையென்ற அசத்வாபாதக ஆவரணம்நீங்கியதுபோல்; நான்சிவமென்னும்ஞானத்தால் கடவுள் விளங்கவில்லையென்ற ஆவரணமாகிய அபானபாதக ஆவரணமும் நீங்குகிறது.

வினா—முற்கூறியசிரவணம் எத்தனைவகை?

விடை—அங்கரூபசிரவணம், அங்கிரூபசிரவணமென இருவகை.

வினா—அங்கரூபசிரவணம் என்றாலென்ன?

விடை—நான்யார், பிரஹ்மமென்பது யாது, பிரபஞ்சமெத்தகையதென்றுண்டாம் வேதாந்தவாக்கியத்தின் விசாரரூபசிரவணமாம்.

வினா—அங்கிரூபசிரவணம் என்றாலென்ன?

விடை—வேதாந்த மஹாவாக்கியத்திற்கும் சுரோத்திரத்திற்குமுள்ள சம்பந்தவடிவ சிரவணமாம்.

வினா—இருவகைச்சிரவணங்களுள் ஞானத்திற்கு நேர்சாதனமெது?

விடை—அங்கிரூபசிரவணமாம்.

வினா—அங்கரூபசிரவணம் ஞானத்திற்கு எப்படிச்சாதனமாம்?

விடை—வேதாந்தசாஸ்திர விசாரவடிவ இச்சிரவணத்தால் வேதாந்தசாஸ்திரத்தின்கண்ணுள்ள சம்சயநிவர்த்திவாயிலாக ஞானத்திற்குச் சாதனமாம்.

வினா—என் இதை அங்கரூபசிரவணமென்று சொல்லவேண்டும்?

விடை—தத்துவமஸிமஹாவாக்கிய அங்கிரூபசிரவணத்திற்கு அங்கவடிவதத்துவம்பதங்களின் சொரூபவிசாரம் இருந்தால்தான் பலனுண்டாம். ஆகையால் முன்னதற்குப்பின்னது சாதன (அங்க) மாயிருந்தல்பற்றி அங்கரூபசிரவணமெனப்பட்டது.

வினா—இவ்விருசிரவணங்களையுமடைந்து தத்துவஞானம்பெற்ற தத்துவஞானியை ஆவரணசத்தியேன் மறைக்கவில்லை?



விடை—ஆவரணம் என்பது தன்யதார்த்தசொரூபத்தைத்தெரியவொட்டாமல் மறைப்பதேயாம். அவ்வித யதார்த்தசொரூபத்தைக் குருமுக மஹாவாக்கியசிரவணத்தால் உள்ளங்கைநெல்லிக்கனிபோல் அடைந்தவனிடம் ஆவரணமிருக்கக்காரணமில்லை. ஆதலால்மறைக்கவில்லை.

வினா—ஈசுவரனை ஆவரணசத்தியேன் மறைக்கவில்லை?

விடை—இயல்பாகவே மறைப்பின்றியதான சுத்தசத்துவகுணமாயையிற் பிரதிபலித்த சித்துரூபனானபடியால், தன்சொரூபத்தை அறியாததான மயக்கமாவது, அதைமுன்னிட்ட ஆவரணமாவது சித்திக்கவில்லை. ஆதலால் ஈசுவரனுக்கு மறைப்பில்லை.

வினா—மற்றச்சீவர்களை மறைக்கக்காரணமென்ன?

விடை—அனாதியே மல, விக்ஷேப, ஆவரணதோஷங்களோடுகூடியவர்களாயும், அதினால் தன்சொரூபத்தில் உணர்ச்சியில்லாமைபற்றி தன்ஸந்நிதிப்பட்ட பதார்த்த (தத்துவ) ங்களிலெல்லாம் நான், எனதென்னுந்தன்மையைச்செய்து ஜனனமரணத்திற்சுழன்று அதன் நிவர்த்தியிலாவது, நிவர்த்தியுபாயங்களிலாவது கருத்தின்றி, கண்டதேகாட்சி கொண்டதேகொள்கையெனப்பராமுகர்களாயும் இருப்பதால் ஆவரணம்மறைத்தலைச்செய்யநேரிட்டது.

வினா—இந்த ஜீவேசுவரர்களாகிய இருவகைச்சித்துக்களில் மாயையுடன் கூடியது எது? கூடாதது எது?

விடை—ஜீவனும், ஈசுவரனும் மாயையுடன் கூடியவர்களே.

வினா—ஈசுவரனும், ஜீவர்களும் மாயாசகிதர்களானால் இருவருக்கும் பேதம்யாது?

விடை—ஈசுவரன் மாயையைத்தன்வசம் செய்தவன். ஆதலால் அவனுக்கு மறைப்பில்லை. ஜீவர்கள் மாயைவசத்திலகப்பட்டவர்கள். ஆதலால் இவர்களுக்கு மறைப்புள. இதுவே அவர்களுட்பேதம்.

வினா—ஈசுவரனைமாயாசகிதனெனக்கொண்டு அவனைமறையாதென்பதில் யுக்தியாது?

விடை—அழுக்கின்றிய கண்ணாடிக்குள்ளிருக்கப்பட்ட தீபமெய்யடி

மறைபடவில்லையோ அதுபோல், ஈசுவரன் மாயைக்குள்ளிருப்பினும் மறைபடான்.

வினு—இந்தஜீவனும் ஈசுவரனைப்போல் மாயைக்குள்ளகப்பட்டவனுயிருக்க இவனுக்குமட்டும் மறைப்பு எப்படிவந்தது?

விடை—அழுக்கோடுகூடிய சிமினிக்குள்ளிருக்கும் தீபமானது எப்படி மறைபட்டதோ அதுபோல், மலினசத்துவகுணத்தோடுகூடிய காரண, காரியசரீரங்களிற் பிரதிபிம்பித்த ஜீவனுக்கும் மறைப்பு எற்பட்டது.

வினு—அவ்வித சரீரமாவது யாது!

விடை—தூலசரீரம், சூக்குமசரீரம், கா்ரணசரீரம் ஆகிய இவைகளே சரீரத்திரயமாம்.

வினு—இச்சரீரங்களினிலக்கணமியாது?

விடை—காரணசரீரத்தை அவித்தை, அஞ்ஞானம் என்னும்பெயர்களால் முன்வியவகரிக்கப்பட்டிருக்கிறது. தூல, சூக்குமசரீரங்கள் பின்னுல் வியவகரிக்கப்படும்.

வினு—இவைகட்குச்சரீரமென்றபெயர் எதுகாரணம்பற்றிவந்தது?

விடை—சீரணித்தல்பற்றிச்சரீரம் என்றபெயர் வந்தது.

வினு—முச்சரீரங்கட்குஞ்சீரணித்தலைக்கூறுக?

விடை—தூலசரீரம் அன்னுதிகளின் மிகுதிக்குறைவாலும், சூக்குமசரீரம்முமுக்ஷுக்களிடத்தில் வைராக்கியாதி சாதனங்களாலும், காரணசரீரம் சுழுத்தியவஸ்தையில் அகமமதாதிகளின் ஒடுக்கத்திலுைம் சுருங்குதலடைகிறதைக் காண்க.

வினு—தேகமென்கிறபெயர் எதுகாரணம்பற்றிவந்தது?

விடை—தகிக்கப்படுதல்பற்றித் தேகமென்றபெயர் வந்தது.

வினு—முச்சரீரங்கட்குந் தகித்தலைச்சொல்லுக?

விடை—தூலசரீரம் பிரேதமானபின் பூதாக்கினியினுலும், சூக்குமசரீரம் ஞானிகளின்விதேககாலத்தில் பிரஹ்மசொரூப அக்கினியினுலும், காரணசரீரம் ஞானேதயகாலத்து தத்துவக்ஞான அக்கினியினுலும் தகிக்கப்படுகிறதைக்காண்க.



வினு—இத்தகைய முச்சரீரங்களில்வசிக்கும் சிதாபாசன் இலக்கணமியாது?

விடை—புண்ணிய, பாப, கருமானுசாரமாய் அடைந்ததேகத்தை தானடைந்ததேகம்போன்று எண்ணிக்கொண்டிருக்கிற பிராணியாகிய அத்தியாசி ஜீவனும்.

வினு—தானடையாததேகம்போல் எண்ணிக்கொண்டிருக்கப்பட்டவனை சீவனென்று சொன்னுலென்ன?

விடை—அத்தியாசத்தையுடையவன் அத்தியாசியாம். அத்தியாசமாவது அடையாததை அடைந்ததுபோலும் கொள்வதாம். சுழுத்தியாதி அனுபவங்களால் ஜீவனுக்குச்சரீரம் அடையப்பட்டதாயில்லை. ஆதலின் தானடையாததேகத்தைத் தான் அடைந்ததாகக்கொள்வதே அத்தியாசமாம். அதையுடையவனே அத்தியாசியாம். அடையாத தேகம்போலெண்ணிக் கொண்டிருக்கப்பட்டவன் உள்ளதையுள்ளபடியுணர்பவனுதலின் அவன் அத்தியாசியன்று. எக்காரணத்தால் அத்தியாசியன்றே அக்காரணத்தாலவனிடத்து ஜீவ இலக்கணமுமின்று

வினு—அப்படியானுல் புண்ணியபாபங்களைச்செய்வது எது?

விடை—புரியட்டகவடிவ சூக்குமசரீரமே.

வினு—இப்புரியட்டகவடிவ சூக்குமசரீரத்தினுற்செய்யப்பட்ட புண்ணிய, பாபகர்மங்களின் பலனுக அடையப்படுவது யாது?

விடை—தூல சரீரமாம்.

வினு—இத்தூலசரீரமேன் வரவேண்டும்?

விடை—புரியட்டகவடிவ சூக்ஷுமசரீரத்தினுற்செய்யப்பட்ட புண்ணியபாபகர்மங்களின் பயனுகிய சுகதுக்கத்தை அப்புரியட்டகசரீரமேநுகருமாறு அதற்குச்சாதனமாக போகஸ்தானவடிவமாய்வந்து சேர்ந்தது.

வினு—அப்படியானுல் ஜீவனிடத்து கர்மம், அவற்றின்சாதனம், பயன் இவைகள் தோன்றக்காரணமியாது?

விடை—அவ்விதந்தோன்றுவது அத்தியாசத்தாலாம். அவ்வுணர்ச்சி

யையுடையவன் அத்தியாசியென, மேற்கூறியவற்றோடு கண்டுணர்க.

வினா—சாக்ஷி என்றாலென்ன?

விடை—அறிவது எனப்பொருள்.

வினா—சாக்ஷியினிலக்கணமியாது?

விடை—1. திரிபுடிகள் உண்டாதலையும் மறைதலையும் அறிகின்றதாயும், தனக்குத்தோன்றுதல் மறைதல் இல்லாததாயும்; சுயம்பிரகாசமாயுமுள்ள சேதனமெதுவோ அதுஸாக்ஷியாம்.

2. அந்தக்கரணத்தையுபாதியாயுடைய சேதனம் ஸாக்ஷியாம்.

3. அந்தக்கரணத்திலுமதன் விருத்திகளிலுமுள்ளசேதனம் ஸாக்ஷியாம்.

4. உதாசீனமாய்ச்சரீரத்திலிருந்துகொண்டு அறிவதாகியசேதனம் ஸாக்ஷியாம்.

வினா—திரிபுடியென்றாலென்ன? அவையாவை?

விடை—ஞாதுரு (காண்பான்) ஞானம்(காட்சி) ஞேயம்(காண்பொருள்) என்றமூன்று வடிவங்களைத்திரிபுடியென்பர்.

வினா—இத்தசாக்ஷியின் பரியாய நாமம் யாது?

விடை—கூடஸ்தன், பிரத்தியேகாத்மா, துரியன், பாரமார்த்திகஜீவன் என்பனவாதியாய்ச்சொல்லப்படும்.

கவி

இதனான்மறைபடுசீவன்னிருபானிருநான் கொன்றையுமொன்றாக, நிதமாநானெனவபிமானிப்பனிவபிமானஞ்செறியகங்கார,மதமாம்யாப்பெனச்சமுசாரப்பந்தமாகும்மெனவழுத்திடுவார்கள்,சிதமாமாகமதுடையான்விழிபடத்திருமிதுவிநுதீர்ந்தேபின் (௬௫)

(இ—ள்) இதனால் மறைக்கப்பட்டசீவர் இருபத்தொன்பது தத்துவங்களையும் ஒருமைப்பாடாக (நிரமாக) நானென்றபிமானிப்பர். இந்தவபிமானத்தை (நெருங்கிய) அகங்காரக்கிரந்தியென்றும், சம்சாரபந்தமென்றும் சொல்(வார்கள்) [லப்படும்] (ஞானமேசரீரமாகப்பெற்றவனுடைய) [சற்குரு] கடாக்ஷத்தினாலே இந்த ஆவரணம் (நீங்கும்) நீங்கி, பிறகு.



ஆவரண, விக்ஷேபசத்திகள்.

வினா—இதனால் மறைக்கப்பட்ட சீவர் என்றதனால் மறைக்கப்படாத ஜீவர்களும் உளரோ?

விடை—சகலஜீவர்களும் அவித்தையை விசேஷணமாய்க்கொண்டவராயும் அவ்வவித்தையுடனேயே ஆவரணசத்தியுமிருந்து மறைக்கப்பட்டவராயிருத்தலின் மறைபடாதஜீவர் என்பதுகிடையாது.

வினா—அப்படியானால் மறைப்புக்கு முன் எப்படியிருந்தனர்?

விடை—ஜீவர்கள் அனாதியானமையாலும், அனாதியாம் ஆவரணசகித அவித்தை அவர்களை அனாதியாகவே பற்றிக்கொண்டிருப்பதினாலும், முன் எப்படியிருந்தனர் என்றகேள்விக்கு இடமில்லை.

வினா—இந்த சீவர்கள் வியாபகரா? பரிச்சின்னரா?

விடை—அம்ஸவடிவ அவித்தையின்நோக்கால் பரிச்சின்ன (அளவுபடுத்தப்பட்டவ)ரும், தமது நிஜவடிவநோக்கால் வியாபகருமாவர்.

வினா—அப்படியானால் மோக்ஷமடையுங்கிரமம் யாது?

விடை—எவ்வம்சவடிவ அஞ்ஞானத்திலுள்ள ஆவரணம் எச்சீவனிடத்து முற்கூறியமுறைகளில் நீங்குகிறதோ அச்சீவன்தனதுநிஜவடிவாய் நிலைக்கிறான். ஏனையசீவர்களிடத்துள்ள அம்சவடிவ அஞ்ஞானம் நீங்குகிறதில்லையாதலின் ஏனையோர்கள் மோக்ஷமடைவதில்லையாம்.

வினா—திருஷ்டாந்தம் எப்படி?

விடை—சந்திரன் ஒன்று; சட்டி, குடம், கலசம் இவற்றின் ஜலங்களில் பிரதிபிம்பித்தஜலசந்திரர் அனேகம். இதில் எந்தச்சலசந்திரனுடைய உபாதி நஷ்டமடைகிறதோ அவன்பிம்பசந்திரனாக நிலைபெறுவதும், ஏனையஜலசந்திரர் உள்ளபடியிருப்பதுவும்போல்; பிரஹ்மம் ஒன்று; அந்தக்கரண உபாதிகளிற்பிரதிபலித்தஜீவர்கள் பலர். இதில் எச்சீவனுடைய உபாதிகெடுகின்றதோ அச்சீவன்பிரஹ்மவடிவாய்நிலைப்பதும், ஏனையோர் அவ்விதமின்றி பந்தமுடையவர்களாகவேயிருப்பர் என்பதும் தெரிந்துகொள்க.

வினா—இருபத்தொன்பது தத்துவங்கள் எவை?

விடை—காரணசரீரதத்துவம் 6. சூக்ஷ்மசரீரதத்துவம் 20. தூலசரீரதத்துவம் 6.

சரீரதத்துவம் 1. ஜீவன் 1. சாக்ஷி 1. ஆக 29.

வினா—ஒருமைப்பாடாக என்றாலென்ன?

விடை—ஒரேவடிவமாக எனப்பொருள்.

வினா—நானெனவ்றபிமானிப்பர் என்றால் என்ன?

விடை—கூறிய இருபத்தொன்பது தத்துவங்களைப்பிறித்தறியாமல் அவைகளெல்லாம்சேர்ந்த முழுவடிவமே தமதுவடிவெனக்கொண்டு அதனோடு அபேதமுற்றிருப்பர் என்பதாம்.

வினா—அபிமானம் என்றாலென்ன?

விடை—தானல்லாத சரீரமாதிகளைத்தானென்றுகொள்ளும் திட அறிவு.

வினா—இதற்கு அகங்காரக்கிரந்தி யென்றபெயர் என்வந்தது?

விடை—அகங்காரவடிவ 28 பதார்த்தங்களையும் கிரந்தி (முடிச்சு) போல் ஒரேவடிவாய்த்தோற்றுவித்தலின் என்க.

வினா—இதற்குச்சம்சாரபந்த மென்றபெய ர்என்வந்தது?

விடை—தனக்குச்சம்பந்தமில்லாததாகிய 28 தத்துவங்களையும் என தென்றுபற்றுச்செய்து அதன்வயப்பட்டு அவைகளுக்குவரப்பட்ட இன்ப,துன்பாதிகளைத்தனக்குவந்ததாய்க்கொண்டு ஜனனமரணசம் சாரத்திற் கட்டுப்படுவதுபற்றி சம்சாரபந்தமென்றபெயர்வந்தது.

வினா—உலகினர்பெண்டு,பிள்ளை, தன, தான்யாதிகளைச்சம்சாரமா யும், அவைகளோடுகூடியிருத்தலைச் சம்சாரபந்தமாயுங்கூற, இங்கு 29 தத்துவங்களுக்குள்ளபேதம்தெரியாமையே சம்சாரபந்தமென்று தாங்கள்கூறக்காரணம்யாது?

விடை—உலகினர்கூறுகிறபடி பெண்டு,பிள்ளைமுதலானவர்களோடு கூடியிருத்தல்சம்சாரபந்தமாயின் அவற்றோடுபொருந்தியிருந்த யாக் ஞவல்கியர் முதலானவர்களுக்கு ஞானமில்லாதிருக்கவேண்டும். அவற்றோடுபொருந்தியிருந்தே சம்சாரபந்தத்தினின்றும் விடுபட்ட வராயிருந்தனர். ஆனல்நிவர்த்திபரராயிருந்த நாரதமகரிஷிசோ கத்தினின்றுந்தன்னைநிவர்த்திக்க பூமவித்தையையுபதேசிக்கவேண்டு மென்று சனத்குமாரரிடம் கேட்டதாகக்கூறப்பட்டிருக்கிறது. ஆத லால் பெண்டு, பிள்ளையாதிகள் சம்சாரபந்தமன்று.



வினா—சத்குரு என்றபதத்தின் அர்த்தம்யாது?

விடை—சத்=நல்ல; கு=அஞ்ஞானம்; ரு=ஞானம்; எனப்பொ ருள் தாலால் ஞானத்தால் அஞ்ஞானத்தை ஒழிக்கும் உண்மை உப தேசஞ்செய்பவர் எனப்பொருளாம்.

வினா—சற்குருவினிலக்கணமியாது?

விடை—வேதாந்தசாஸ்திராப்பியாசம்செய்து, அதன்பொருளையுள் ளவாறறிந்து, ஜீவப்பிரஹ்மஐக்கியநிச்சயத்தால் ஆத்மஞானியாயிருப் பவர் சற்குருவாம்.

வினா—வேதாந்தசாஸ்திரமட்டும், அப்பியாஸம்செய்தவரை சற்குரு வென்னக்கூடாதோ?

விடை—சிலசாஸ்திரிகள் குருகுலவாசமாயில்லாமல் பொருள்சம்பா தித்தல்முதலிய ஆசையால் வேதாந்தசாஸ்திரமட்டும் படித்தவர்களா யிருக்கிறார்கள். அவர்கள், யதார்த்த அர்த்தம் இன்னதெனத்தெ ரிந்துகொள்ளாததால் குருவாகார்.

வினா—ஆயின் வேதாந்தசாஸ்திராப்பியாசஞ்செய்து அதன்பொருளை யுமுள்ளவாறறிந்தவர் சற்குருவென்னலாமோ?

விடை—சாஸ்திராப்பியாசமும், பத, பதார்த்தஞானமும் இருப்பி னும்; சிலருக்கு அனுபவமின்மையால் ஜீவப்பிரஹ்மைக்கியநிச்சயத் தை முமுக்ஷுக்களுக்குக்கொடுக்க வகையறியாதவர்களாயிருத்தலின் ஜீவப்பிரஹ்மஐக்கியநிச்சயமும்வேண்டும். அவ்விதமில்லாதவர் குரு வாகார்.

வினா—ஆயின், சாஸ்திராப்பியாசமில்லாமல் உபதேசமாத்திரத்தில் ஜீவப்பிரஹ்மஐக்கிய நிச்சயமுடையவரைச்சற்குருவென்று சொன்ன லென்ன?

விடை—ஜீவப்பிரஹ்மஐக்கிய நிச்சயமுடையார் தத்துவ ஞானியாயி ருப்பினும் அதிகாரிகளது சம்சயாதிதோஷநிவர்த்தியிலுபயோகமான சிரவணாதிகளைச்செய்துவைக்கத் தகுதியல்லாதவராயிருத்தலின் குரு சப்தவாச்சியராகார். ஆனல் அவரைப்போன்ற உத்தம அதிகாரிகட் குக்குருவாதல் கூடும்.

வினா—சம்சயாதி தோஷங்களியாவை?
விடை—(1) பிரமாணகதசமுசயம். (2) பிரமேயகதசமுசயம். (3) விபரீதபாவனை எனமூன்று.
வினா—பிரமாண கதசமுசயமாவது யாது?
விடை—பிரமாணம் என்பது இங்குவேதாந்தசாஸ்திரங்கள். அவ்வேதாந்தசாஸ்திரங்கள் பிரஹ்மத்தைச்சொல்லுகின்றனவா? வேறு அர்த்தத்தைச்சொல்லுகின்றனவா? என்னும் சம்சயமாம்.
வினா—இது எதனல் நிவர்த்தியாம்?
விடை—வேதாந்தசாஸ்திரசிரவணத்தால் நிவர்த்தியாம்.
வினா—பிரமேயகதசம்சயமாவது யாது?
விடை—பிரமேயமென்பது இங்கு ஞானம்; இதிலுள்ள சம்சயம்பிரமேயகதசம்சயமாம். வேதாந்தசாஸ்திரமானது ஜீவப்பிரஹ்மங்களின் பேதத்தைக்கூறுகின்றதா? அபேதத்தைக்கூறுகின்றதா? என்னும் சம்சயம். கூறிய இருவிதசம்சயங்களையும் அசம்பாவனையென்பர்.
வினா—இது எதனல் நிவர்த்தியாம்?
விடை—மனனத்தால் நிவர்த்தியாம்.
வினா—விபரீதபாவனையாவது யாது?
விடை—தேகமேநான், பிரபஞ்சம்சத்தியம் என்றுண்டாகும்மாறுன நிச்சயமாம்.
வினா—இது எதனல்நீங்கும்?
விடை—நிதித்தியாஸனத்தால் நீங்கும்.
வினா—ஆயின்முற்கூறிய சம்சயாதிதோஷநிவர்த்தியிற்சாதனமான சிரவணுதிகளில் சிரவணத்தின் இலக்கணமியாது?
விடை—ஷட்விதலிங்க தாற்பரியமூலமாய் பிரஹ்மதாற்பரியஞ்செய்வதாம்.
வினா—ஷட்விதலிங்கங்களும் அவற்றினிலக்கணங்களும்யாவை?
விடை—(1) உபக்கிரம, உபசம்மாரம். (2) அப்பியாசம். (3) அபூர்வதை. (4) பலம். (5) அர்த்தவாதம். (6) உபபத்தி என்பவைகளாம்.



(1) உபக்கிரம, உபசம்மாரம்=சிருஷ்டிக்குமுன்னும் பிரஹ்மம் சன்மாத்திரமாகவே இருந்ததென்றும், ஒடுங்கியபின்னும் பிரஹ்மம் சன்மாத்திரமாகவே இருந்ததென்றும், பிரஹ்மத்தின் அத்வைதத்தன்மையைப்போதிக்கும் இவ்விரண்டும் ஒரே அத்விதீய அர்த்தத்தைப்பிரதிபாதித்தலின் ஏகலிங்கமாம்.

(2) அப்பியாசம்=பிரஹ்மம் அத்துவிதமாயிருக்கிறதென்பதனைப்பலயுக்திகளோடுகூட்டி அடிக்கடி சொல்லும்.

(3) அபூர்வதை=பிரஹ்மம்சுயம்பிரகாசமாயிருத்தலால் உபநிஷத்பிரமாணந்தவிர மற்றையபிரத்தியக்ஷாதிப்பிரமாணங்களால் அறியமுடியாவெனக்கூறும்.

(4) பலம்=ஆத்மாவையறிதலால் அதற்கு அநர்த்தநிவர்த்தியும் பிரஹ்மப்பிராப்தியுமாகியமோக்ஷமேபிரயோஜனம் எனச்சொல்லும்.

(5) அர்த்தவாதம்=பேதஞானநிந்தையையும், அபேதஞானதுதியையுங்கூறும்.

(6) உபபத்தி=அத்வைதார்த்தத்திற்கு அனுகூலமான திருஷ்டாந்தங்களைக்கூறும்.

வினா—கூறிய ஆறு அடையாளங்களும் ஷட்விதலிங்கங்களெனவும் இவற்ருேடு வேதாந்தசிரவணம்செய்வதே, வேதாந்தசாஸ்திராப்பியாஸம்செய்து, என்பதன்பொருளாகவும் உணர்ந்தேன். அதன்பொருளையுள்ளவாறறிதலாகிய மனனத்தினிலக்ஷணம் யாது?
விடை—சிரவணத்திற்கேட்ட அர்த்தமாகியஜீவப்பிரஹ்மஐக்கியத்தை அபேதசாதகமும், பேதபாதகமுமாகிய யுக்திகளாற்சிந்தித்தல்.
வினா—அபேதசாதக (ஐக்கியஅனுகூல) யுக்தியாவதுயாது?
விடை—(1) ஜீவன்பிரஹ்மத்தினும் அபின்னன்; சச்சிதாநந்தவடிவாயிருத்தலின், ஈசுவரசேதனம்போல என்பது அனுமானவடிவயுக்தியாம்

(2) கடமடவுபாதிகளைநீக்கின் எங்ஙனங்கடாகாசமும் மகாகாசமும் ஒன்ருே; அதுபோல்மாயை அவித்தியோபாதிகளைநீக்கில் கூடஸ்தனும் பிரஹ்மமும் ஏகமே என்பது உபமானவடிவயுக்தியாம்.

(3) ஈஸ்டுநாநாவென்பவை சிறிதுமில்லை என்பதிலுள்ளநி
ஷேதம் (நீக்கம்)வாஸ்தவ அபேதமின்றிச்சித்தியாது என்பது அருத்
தாபத்திப்பிரமாணவடிவயுக்தியாம்; ஆகிய இவைபோன்றவைகளாம்.
வினு—பேதத்தைப்பாதிப்பதாகிய பேதபாதக (பேதத்தைநீக்கும்)
யுக்தியாவதுயாது?
விடை—(1) ஜீவப்பிரஹ்மங்களின் பேதம்மித்தையாம்; ஔபாதிகமா
(உபாதியினுலாயதா)யிருத்தலின், கடாகாசமகாகாசங்களின் பேதத்
தைப்போல, என்பது அனுமானப்பிரமாணவடிவயுக்தியாம்.

(2) பிம்பப்பிரதிபிம்பங்களின்பேதம் மித்தையாவதுபோல
ஜீவப்பிரஹ்மங்களின்பேதம் மித்தையாம், என்பது உபமானப்பிரமா
ணவடிவயுக்தியாம்.

(3) மகாவாக்கியங்களிற்சொல்லப்பட்ட ஜீவப்பிரஹ்மங்களின்
அபேதம்யாதோ, அதுபேதத்தின் மித்தையாத்தன்மையின்றிப்பொ
ருந்தாதாதலால் பேதத்தின் மித்தையாத்தன்மையைக்கற்பிக்கிறது
என்பது அர்த்தாபத்திப்பிரமாணவடிவ யுக்தியாம்.

(4) சாக்கிரசொப்பனங்களில் உபாதியிருத்தலால் பேதந்தோற்
றுகிறது. சுழுத்தியில் உபாதிகளில்லாததால் பேதந்தோற்றுகிற
தில்லை. ஆதலால் ஜீவப்பிரஹ்மங்களுக்கு பாரமார்த்திகபேத அபா
வமிருக்கிறது என்பது அனுபலப்தி (அபாவ)ப்பிரமாணவடிவயுக்தி
யாம். ஆகிய இவைபோன்றவைகளாம்.
வினு—நல்லது, மனனமின்னதெனத் தெளிந்தேன். ஜீவப்பிரஹ்ம
ஐக்கிய நிச்சயத்தால் ஆத்மஞானியாயிருப்பவர் என்னும்சப்தார்த்
தத்திலுள்ள நிதித்தியாஸனமாவது யாது?
விடை—அநாத்மாகாரவிருத்தியின் மறைப்பின்றிய பிரஹ்மாகாரவி
ருத்தியின்ஸ்திதியாம்.
வினு—இந்தப்பிரஹ்மாகாரவிருத்தியின்ஸ்திதி எத்தனைவகைப்படும்?
விடை—ஸாக்ஷாத்காரவடிவம், அஸாக்ஷாத்காரவடிவம் என இருவகை.
வினு—ஸாக்ஷாத்காரவடிவமாவது யாது?
விடை—சிரவணமனனுதிகளுடன்கூடிய அதிகாரிக்கு பிரஹ்மாத்



மாவின் ஏகத்துவமானது விசாரபூர்வக அத்வைதப்பிரஹ்மத்தின்
சிந்தனையில் அபரோக்ஷவிளக்கத்தோடு உண்டாவது. இதில்பிரஹ்மா
காரவிருத்தியின்ஸ்திதி ஸ்வபாவமாய் வளர்ந்துகிடக்கும்மரத்தின்கி
ளைபோல் இருக்கிறது. இதை ஸாத்தியவடிவ நிர்விகற்பசமாதியென்
றுங்கூறுவர்.
வினு—அஸாக்ஷாத்காரவடிவமாவது யாது?
விடை—சிரவண,மனனுதிகளுடன்கூடிய அதிகாரிக்கு பிரஹ்மாத்மா
வின் ஏகத்துவமானதுவி சாரபூர்வகஅத்வைதப்பிரஹ்மத்தின்சிந்தனை
யில் பரோக்ஷவிளக்கத்தோடுகூடியிருத்தலாம். இதில் பிரஹ்மாகார
விருத்தியின்ஸ்திதி வளைத்துப்பிடித்துக்கொண்டிருக்கும் மரத்தின்கி
ளைபோல் இருக்கிறது. இதைச்சாதனவடிவ நிர்விகற்பசமாதியென்
பர்.
வினு—இவ்விருசமாதியுடையோரும் எப்படி வியவகரிப்பர்?
விடை—ஸாக்ஷாத்காரமுடையோன் வியவகாரத்தால் ஆத்மவிமுகனு
யினும் பிரஹ்மாகாரவிருத்தியின் அபாவத்தால் பச்சாதாபத்தையடை
கிறதில்லை. மற்றவன் வியவகாரத்தால் பிரஹ்மாகாரவிருத்தியின்றி
யிருந்தோமே! எனப்பச்சாதாபம் (பின்னிரங்குதலை) அடைவன்.
வினு—சாஸ்திரங்களில் (1) சிரவணம். (2) மனனம். (3) நிதித்தி
யாஸனம். (4) சமாதி. (5) சாக்ஷாத்காரம் இவைகளைத்தனித்தனி
யே எதுசொரூபாதிகளுடன் கூறியிருக்க;நிதித்தியாஸநத்தில் சமாதி
ஸாக்ஷாத்காரங்களைக்கூறியதில் நியாயமென்ன?
விடை—சிரவணுதி 5-ம் அதிகாரிபேதம்பற்றி தனித்தனியாயும்,
ஒருவடிவாயும் வியவகரிக்கப்படும். ஆதலின், இதில் யாதும் விரோத
மின்று.
வினு—சிரவணுதி 5-ம் ஒருவடிவாய்க்கூறுவதில் பிரமாணம்யாது?
விடை—சுவானுபூதிரஸாயனம்; விருத்திநிர்ணயம் பேசுங்கால்:—

"சிரவணமேமனனம், மனனமே நிதித்தியாஸனமாதலால் அந்
தந்த விருத்தியனுபூதிக்குத்தகுந்தபடி அச்சிரவணரூபமான நிதித்தி
யாஸனமும்," என்றும்

சுவானுபவரஸமஞ்சரி; தர்மதர்மிமுதலிய குணமுரைக்குங்கால்:— "எவருக்குச்சமாதிசாதனமின்றி சிரவணமாத்திரத்தில் பிரஹ்மாப ரோக்ஷஸாக்ஷாத்காரம் அனுபவத்திற்குவருகிறதோ" என்றும் கூறி யிருப்பதால் அவைபிரமாணமாதல் காண்க.

வினு—ஆயின் இங்குக்கூறிய சற்குருவினிடத்துள்ள ஜீவப்பிரஹ்ம ஐக்கியநிச்சயத்தால் ஆத்மஞானியாயிருப்பவர் என்னுமிலக்கணம் முற்கூறிய சமாதிகளில் எதைச்சார்ந்தது?

விடை—அது ஸாக்ஷாத்காரவடிவமென்றுரைக்கத்தக்கது.

வினு—இவ்வித இலக்கணங்களோடுற்ற சற்குருகடாக்ஷம் ஆவது யாது?

விடை—தனதுபிரஹ்மானுபூதிவடிவ சுத்தசக்தியை ஸ்வானுபூதியோ டுகூடிய மனம், நேத்திரம் இவைகளின்வாயிலாயோ அல்லது அதி காரியின் பக்குவத்திற்கிணங்க அஸ்தம் அல்லதுதிருவடி இவைகளின் மூலமாயோ குருவானவர் சிஷ்யனுடைய சரீரத்திற்செலுத்திப்பரவச் செய்தலாம்.

வினு—இதனுல் அதிகாரியாகியசீடன் அடையத்தக்கதுயாது?

விடை—அருட்சத்திபதிதல்வாயிலாக ஞான அதிகாரியாவன்.

வினு—அருட்சத்திபதிதலினுலுண்டாம் பிரசாத அடையாளங்கள் யாவை?

விடை—(1) பேரானந்தமடைதல். (2) வசனத்தளர்ச்சி. (3) சரீ ரவிழிகளில் விகாரமுண்டாதல். (4) சரீரம் ஸ்தம்பம் போன்று நிற் றல். (5) சரீரம்புளகமுற்றுநடுக்குறல். (6) சரீரம் கீழேவீழ்தல். (7) சரீரம் சுற்றுதல். (8) சரீரம் மேல்நோக்கல். (9) ஆகாயத்திலிருத் தல். (10) சோதியாய்த்தோன்றல். (11) சரீரம் மறைந்திருத்தல். (12) பரகாயப்பிரவேசம் செய்தல். (13) கற்காதுணர்தல். (14) பர் வத முதலானவைகளைப்பேர்த்தல். (15) மயங்கச்செய்தல். (16) உணர்த்தல்; இவைமுதலான அடையாளங்களில்சிற்சில அடையாளங் கள் வெளிப்படையாம் என்னும் கேனேபநிடதவாக்கியத்தாற்றெரிந் துகொள்க.



வினு—இவ்வித அடையாளமுற்றேனுக்கு குரு எப்படியுபதேசிப் பர்?

விடை:— (1) சொரூபதீக்ஷை (2)மானததீக்ஷை (3) சாக்குஷிதீக்ஷை (4) ஸ்பரிச தீக்ஷை. (5) கிரியாதீக்ஷை என ஐவகைத்தீக்ஷைகளை முன்னிட்டு அதிகாரிகட்குத்தக்கதாக உபதேசிப்பர்.

வினு—சொரூபதீக்ஷையாவதுயாது?

விடை—குரு சுபாவசித்தனுயிருக்க அவன் சன்னிதிப்பட்டசீடனும் அப்படியே விளங்கிடுதலாம்.

வினு—மானததீக்ஷையாவதுயாது?

விடை—பரமசிவமாகவிளங்கியகுருவானவர் சீடனது மனதிலனுப் பிரவேசித்து தனக்கபேதமாக அவனதுசைதன்னியத்தையடைவிப் பித்து தானுகவிளங்க அருள்செய்ய அப்படியேவிளங்கிடுதலாம்.

வினு—சாக்குஷிதீக்ஷையாவதுயாது?

விடை—ஆன்மானுபவம்பொருந்தியதிருஷ்டியோடும் சீடனைப்பார்த் தருள அப்படியேவிளங்குதலாம்.

வினு—ஸ்பரிசதீக்ஷையாவதுயாது?

விடை—ஆன்மானுபவத்தோடு அஸ்தம், திருவடி இவைகளை முடியிற் சாத்தியருள சீடனும் அப்படியேவிளங்குதலாம்.

வினு—கிரியாதீக்ஷையாவதுயாது?

விடை—சிரவண,மனன, நிதித்தியாஸந, தியான,தாரண,சமாதி இவ் விசேஷமுடைய தொடர்ச்சியால் சீடன் சுவானுபவமாய்விளங்கு தலாம்.

வினு—தீக்ஷையென்னும்பத அர்த்தம் யாது?

விடை—க்ஷணத்தில் குருவினது கிருபையால் உள்ளபடி ஆன் மானுபூதியைக் கொடுக்கின்றதும், அவித்தைமாயைகளை இல்லாமல் நசிப்பிக்கின்றதுமாகிய வல்லமையுடையது என்பதாம்.

வினு—இக்குருகிருபையினுல் ஆவரணம் நீங்கும் கிரமம்யாது?

விடை—இந்நாநாஜீவவாதக்கட்டளைக்குரிய அதிகாரி கிரியாதீக்ஷைக் குரிய அதிகாரியாதலால்பத, பதார்த்தஞானமுடைய சீடனுக்குவிதி

(சத்து, சித்துமுதலிய) வாக்கியங்களினாலாவது,நிஷேத (அகண்டன் அசங்கன்முதலிய)வாக்கியங்களினாலாவது,தத்துவமஸிமுதலிய மகாவாக்கியங்களினாலாவது; நீயேசிவம் என்பதாகப்பிரஹ்மோபதேசத்தைச்செய்யுங்காலத்து அவர்சந்நிதியிலிருந்துகொண்டோ, அல்லது தனித்திருந்தோ சமாதி (சமபுத்தி) யை, அதாவதுநிர்விர்த்திகசுபாவத்தையடையின், அதினின்றும் பகிர்முகப்பட்டு, முந்திய அவஸ்தையை (காலத்தை) நோக்குங்கால் குருவின்பூரணகிருபையைப் பெற்றிருப்பனேல், உத்தமமாயும் சாதனசகிதமாயுமிருக்கும் அதிகாரியின் சூக்குமவிருத்தியின்கண் 'நான்சிவம்' என்பதாகப்பிரதிபந்தங்களில்லாத பிரஹ்மத்தின் அபரோக்ஷபானம்(நேர்விளக்கம்) முதலாவது க்ஷணத்தில் உதயமாகின்றது. இரண்டாவதுக்ஷணத்தில் நிலைத்துப் பூர்வமிருந்த ஆவரணத்தைக்கெடுக்க ஆரம்பிக்கின்றது. மூன்றாவது க்ஷணத்தில் ஆவரணம்நாசமாகின்றது. அதனால்ஞானியெனஅழைக்கப்படுகின்றான். பின் ஆவரணபங்கநிமித்தம் விருத்தியைத் தகைதல்பூர்வக சமாதியப்பியாசத்தைச்செய்கிறதில்லை. செய்வதினாற்பிரயோஜனமுமில்லை. இவ்வாறு ஒருமுறை நிவர்த்தியானபின் மீண்டும் எக்காலத்திலாவது என்னிமித்தத்தாலாவது ஆவரணமுண்டாவதில்லை. இதுவே ஆவரணம்நீங்கும்முறையாம்.

வினா—அப்படியாயின், இச்சமாதி க்ஷணிகநேரம் நிலைத்தாற்போதுமென்பதில் பிரமாணம்யாது?

விடை—'ஒருகணஞ்செறிவருடனூறென்னினுமுயர்ந்தவப்பதமுற்றோர் வருபவந்தருமேதுவாய்க்காண்பனமருவுமிவ்விழிமேவார்' என்றவாசிட்டம் உத்தாலகன் கதையும்
"கணமதேனுநின்காரணந்தன்னையேகருத்தி லுணருமாதவர்க்கானந்தமுதவினை யொன்றும்" என்றதாயுமானவர்,எனக்கெனச்செயல் வாக்கியமும், பிரமாணங்களாம்

வினா—ஆயின், பூர்வம் அனேகம்பெரியார் அடத்தினால் விருத்தியைத் தகைந்து வரக்காரணமேன்?



விடை—அவர்கள் ஞானத்தின்பொருட்டாவது ஆவரணநிவர்த்தியின்பொருட்டாவது தகைந்ததில்லை. ஆனால் மனதின் தூலத்தன்மையின் நிவர்த்தியைச்செய்துவாசனக்ஷய, மனோநாசமூலமாய் ஜீவன்முத்தியானந்தத்தை அடைதற்பொருட்டே. (ஜீவன் முத்தி ஆனந்தமும்) உபரதி(அஷ்டாங்கயோகபலன்)அப்பியாசத்தாற்கிடைக்கத்தக்கதாம். ஞானம்காரணமன்று.

கவி.

இருபானொடு நவமாகுந்தத்துவத்தின்பேதந்தெரிதல்வீடா,
மொருவாறுரைதலாரனோடுடனுருவாஞ்சத்திதன்செ
ய்கை, தருவாமுரையினிவிரிவாஞ்சத்தியிற்சத்ததன்மாத்தி
ரைவடிவான, பெருவானமுமதிற்பரிசதன்மாத்திரைப்பெ
யர்வாதமும்பிறந்தனமாதோ. (௯௬)

(இ—ள்) இருபத்தொன்பது தத்துவங்களின்[ஒன்றற்கொன்றுள்ள] பேதந்தெரிகின்றதேமுத்தி. இப்படி (ஒருவாறு) ஆவரணசத்தியின் காரியஞ்சொல்லப்பட்டது. இனி (ச்சொல்லுகின்றோம்.) விக்ஷேபசத்தியினின்றும் சத்ததன்மாத்திரையான ஆகாசந்தோன்றிற்று. ஆகாசத்தினின்றும் பரிசதன்மாத்திரையான வாயுதோன்றிற்று. மா—து, சி, அஸச.

வினா—பேதந்தெரிகின்றது என்றலென்ன?

விடை—முற்கூறியமுறையில் ஆவரணம் நீங்கப்பெற்றவன் 28 தத்துவங்களையும் அசத்தெனவும், அசித்தெனவும், 29-ம் தத்துவமாகிய சாக்ஷியான தன்னைச்சத்தெனவும், சித்தெனவும், அதுவேதனதுயகார்த்தவடிவெனவுங்கண்டு, பின்சாக்ஷியாகிய ஆத்மாவும்பிரஹ்மமும் ஒன்றேயெனவும், அவைகளுக்கு என்றுமுள்ள அபேதத்தை அறிதலாம்.

வினா—முத்தி யென்றபதத்திற்கு அர்த்தம்யாது?

விடை—விடுபடல் என்றர்த்தம்.

வினா—முக்தியின் இலக்கணம்யாது?

விடை—சர்வதுக்கநிவர்த்தி, பரமானந்தப்பிராப்தியே முக்தியாம்.

வினு—முற்கூறியபேதந்தெரிதலுக்கும், இம்முக்தியின் இலக்கணத்
திற்கும் பேதம்யாது?
விடை—பேதந்தெரிகிறது ஞானம்; அதனாலுண்டாயதுமுந்தி. இது
வே அவைகளின் பேதம்.
வினு—பேதம் தெரிகின்றதனாலுண்டாவதாய முக்தியை, பேதந்தெ
ரிகின்றதேமுக்தியென இச்சாஸ்திரங்கூறுவானேன்?
விடை—உபசாரவழக்காற்கூறிற்று.
வினு—உபசாரவழக்காவது யாது?
விடை—ஒன்றன்தன்மையை மற்றொன்றின்மேலேற்றிக்கூறுதல்உப
சாரவழக்காம்.

வினு—பேதந்தெரிதல்வேறு; முக்திவேறு என்றறிவதெப்படி?
விடை—முக்தியென்றால் விடுபடல் எனப்பொருள். எதினின்றும்
யார்! எப்படி! விடுபடுவது என்பவற்றைவிளக்கக்கூடிய அவஸ்தாக்கி
ரமதனைவிசாரிக்கின் அதுநன்குவெளியாம்.
வினு—அவ்வவஸ்தைகள் யாவை?
விடை—(1) அஞ்ஞானம். (2) ஆவரணம். (3) விக்ஷேபம். (4)
பரோக்ஷஞானம். (5) அபரோக்ஷஞானம். (6) சர்வதுக்கநிவர்த்தி
(7) பரமானந்தப்பிராப்தி என்பவைகளாம்.
வினு—இவ்வேழு அவஸ்தைகளும் யாருக்குண்டாகிறது?
விடை—இவ்வேழும்ஜீவனிடத்து நிகழுகின்றன.
வினு—அஞ்ஞானமாவது யாது?
விடை—நான்பிரஹ்மத்தையறியேன் என்னும் வியவகாரத்திற்குக்
காரணம் அஞ்ஞானமாம்.
வினு—ஆவரணமாவது யாது?
விடை—பிரஹ்மத்தின் அசத்து (இன்மை) த்தன்மையைச்சம்பாதிப்
பதாய அஸத்வாபாதக ஆவரணம்; பிரஹ்மத்தின் அபான (விளக்க
மின்மை) த்தன்மையைச்சம்பாதிப்பதாய அபானுபாதக ஆவரணம்
என இருபிரிவுடையதாக, முறையே பிரஹ்மமில்லை, விளங்கவில்லை
என்னும் வியவகாரத்திற்குக்காரணமாயிருப்பது, ஆவரணமாம்.



வினு—விக்ஷேபமாவது யாது?
விடை—நான் கருத்தாவாதலின் எனக்குச்சனனமரணாதிசம்சாரங்க
ளுள என ஆன்மாவாய கூடஸ்தனிடத்து ஆரோபித்தலாகிய விய
வகாரத்திற்குக்காரணம் விக்ஷேபமாம்.
வினு—பரோக்ஷஞானமாவது யாது?
விடை—பிரஹ்மம் சத்திய,ஞான,ஆநந்தமாயிருக்கிறது என்னும்வாக்
கியசிரவணத்தால், பிரஹ்மம் இருக்கிறது என நம்பிக்கைமாத்திரவிய
வகாரத்திற்குக்காரணம் பரோக்ஷஞானமாம்.
வினு—அபரோக்ஷ ஞானமாவதுயாது?
விடை—நான்பிரஹ்மம் என்னும்பிரஹ்மத்தின் பிரத்தியக்ஷ (நேரா
யறிதலாகிய) அனுபவவடிவம் அபரோக்ஷஞானமாம்.
வினு—சர்வதுக்கநிவர்த்தியாவது யாது?
விடை—நான்பிரஹ்மமாயிருத்தலால் எனக்குச்சனனமரணாதி, பந்
தங்கிடையாவென்றுண்டாகும் அனுபவவடிவம் சர்வதுக்கநிவர்த்தி
யாம்.

வினு—பரமானந்தப்பிராப்தியாவது யாது?
விடை—நான் அத்வயப்பிரஹ்மமாயிருக்கிறேன், என்னும் அபரோ
க்ஷஞானத்தாலுண்டாகும் ஆநந்தம் எதுவோ அது எப்போதும்
அடைந்திருப்பதின் அடைவுவடிவாயிருத்தலின் நான் ஆநந்தன் என
வுண்டாகும் அனுபவவடிவம் பரமானந்தப்பிராப்தியாம்.
வினு—கூறியயேழவஸ்தைகளில் பந்தகாரணம்யாது? மோக்ஷகார
ணம்யாது?
விடை—முன்மூன்றும்பந்தகாரணமும், அடுத்த இரணடும்மோக்ஷசா
தனமும், கடை இரண்டும் மோக்ஷவடிவமுமாய்வியவகரிக்கப்படும்.
வினு—ஆயின்பந்தகாரண மூவவஸ்தைகள் எக்கிரமத்தால் நிவர்த்தி
யாகின்றன?
விடை—அவஸ்தைகளில்; இரண்டாவதாய,ஆவரணத்திலுள்ள ஓரம்
சமாயபிரஹ்மமில்லையென்னும் அஸத்வாபாதக ஆவரணமானதுபி
ரஹ்மமிருக்கிறதென்றுண்டாம் பரோக்ஷஞானத்தாலும்;

நான்பிரஹ்மத்தையறியேன் என்னும் முதலாவதாய அஞ்ஞா
னமும், இரண்டாவதாய ஆவரணத்திலுள்ள மற்றோரம்சமாயபி
ரஹ்மம்விளங்கவில்லையென்னும் அபாநுபாதநாவரணமும்; நான்பி
ரஹ்மமாயிருக்கிறேனென்றுண்டாம் அபரோக்ஷஞானத்தாலும்;
மூன்றாவதாய,நான்கருத்தாவாதலின் எனக்குச்சனனமரணாதி
களுள என்னும்விக்ஷேபமானது, நான்கர்த்தாவுமல்லன் எனக்குஜன
னமரணாதிகளுமில்லை என்றுண்டாம் சர்வதுக்கநிவர்த்தியாலும்;
நிவர்த்தியாகி;

நான் பரமானந்தவடிவாயிருத்தலின் எனக்குச்செய்யத்தக்கதா
வது, அடையத்தக்கதாவது ஒன்றுமில்லையென்றுண்டாம் பரமானந்
தப்பிராப்தியால் ஜீவன் முத்திநிலைக்கிறது எனவறிக.

வினா—ஆயின்பிரஹ்மத்தின்வேறாயஜீவனுக்குப்பிரஹ்மத்தின் ஞான
மெப்படியுண்டாம்?

விடை—நான் என்னும்சப்தத்தில் விளங்குகிறகூடஸ்தனுக்கு பிரஹ்
மத்தோடு எப்போதும் அபேதமிருத்தலின் அதுபற்றிநான்பிரஹ்மம்
என்றுண்டாம் முக்கியசமானாதிகரணியபக்ஷமாயாவது;
நான்என்னும் அர்த்தத்தில்விளங்குகிற ஆபாஸனுக்கு பிரதிபிம்
பத்தைப்பாதிக்குங்கால் பிம்பத்துடன்ஒற்றுமையுண்டாகிறது. ஆத
லின் ஆபாசனுகியபிரதிபிம்பத்தைப்பாதித்தவிடத்து, நான்பிரஹ்ம
மென்றுண்டாகும் பாதசமானாதிகரணியபக்ஷமாயாவது ஜீவனுக்குப்
பிரஹ்மஞானம்கூடுமாறறிக.

வினா—கூறியவாற்றால்பேதம்தெரிதல் எவ்வவஸ்தையாம்?

விடை—முற்கூறியபடி சத்தாகியதன்னைச்சத்தெனவும், அசத்தாகிய
வைகளை அசத்தெனவும் பிரித்து.அனுபவிக்குங்கால்; சத்துவடிவமாய்
மிஞ்சுதலடைகிறபடியால் இதையே அபரோக்ஷஞானம்எனக்கூற
வேண்டும்.

வினா—ஆயின் அபரோக்ஷஞானத்தாலுண்டாவது முத்தியேல் அது
காரியமாகிறபடியால் அநித்தியமாகுமே! யாதுகாரியம் அது நாசமு
டைத்து என்னும்நியமத்தால் முக்திப்பிரதிபாதனங்களெல்லாம்வி



யர்த்தமல்லவோ?

விடை—ஞானம் மோக்ஷத்தை உண்டுபண்ணுவதல்ல; ஆனல் எப்
போதுமில்லாதது ஜனனமரணாதிசம்சாரமெனவும் என்றும்நிலைத்
துள்ளது பரமானந்தமெனவும், இயல்பாய்ச்சித்தித்துள்ள மோக்ஷ
சொரூபத்தை விளக்குவிக்கின்றது. ஆகவேமோக்ஷம் நித்தியமாயி
ருப்பதாய்ப்பெறப்படுதலின் அதற்கு அநித்தியத்தன்மையாவது,
அதைப்பிரதிபாதிக்கும் சுருதிக்குவியர்த்தமாந்தன்மையாவதுகிடை
யாது.

வினா—இம்மோக்ஷ அனுபவத்தில் சர்வதுக்கநிவர்த்தி, பரமானந்தப்பி
ராப்தியென இரண்டனுபவங்காணுகிறபடியால் மோக்ஷத்தில்துவை
தத்தின் அடைவுநேரிடுகிறபடியால் எப்படி அத்வைதமாம்?

விடை—ரஜ்ஜுவில் சர்ப்பநிவர்த்தியே அதினதிஷ்டானவடிவ ரஜ்
ஜுவின்பிராப்தியாயும்; அந்நிவர்த்திரஜ்ஜுவிற்கு வேறில்லாமலும்;
விருத்தியிலுதித்ததுகொண்டு சர்ப்பநிவர்த்தி,ரஜ்ஜுப்பிராப்தி என
வியவகரிக்கப்பட்டதுபோல்; அத்வய அதிஷ்டானமாயபிரஹ்மத்தில்
பிரபஞ்சநிவர்த்தியே அதினதிஷ்டானவடிவஅத்வயப்பிராப்தியாயும்,
அந்நிவர்த்தி அத்வயசொரூபத்திற்கு வேறில்லாமலும், விருத்தியிலு
தித்ததுகொண்டு துக்கநிவர்த்தி, ஆனந்தாப்தியென விருத்தியின்
கண் வியவகரிக்கப்பட்டதேதவிர, அத்வயப்பிரஹ்மமாய மோக்ஷ
சொரூபத்தில் துவைதாபத்தி(அடைவு)கிடையா. இவ்விதம்நிவர்த்
திரூப அபாவவிருத்திக்கு,பிராப்திவடிவபாவம் அதிஷ்டானமாயிருத்
தலின், பாவாபாவங்கள் மோக்ஷமாகிய ஓரிடத்திற்பொருந்தா என்ற
சங்கைக்கும் சமாதானம் கூறியவாறறிக.

வினா—அது எப்படி?

விடை—பாவாபாவங்களை மோக்ஷமாகிய ஒருதர்மியிற்கூறின் குற்ற
மாம். இங்குப்பாவவடிவ மோக்ஷசொரூபத்தில் விருத்தியில்விளங்
கும் அபாவவடிவசம்சாராதிகள் என்றுமின்று எனக்கொள்வதால்
கூறியசமாதானம் பொருந்துமாறறிக.

வினா—விக்ஷேபசக்தி யென்றாலென்ன?

விடை—முளைத்தலை, அல்லது விரிதலைச்சுபாவமாயுடைய ஓர் வல்லமை எனப்பொருள்படும்.

வினு—இந்த விக்ஷேப சத்தியினின்றும் என்னவுண்டாயின?

விடை—சத்தமென்னும் குணத்தோடுகூடிய ஆகாசமும், ஆகாயத்தினின்றும் ஸ்பரிசமென்னும் குணத்தோடு கூடிய வாயுவுமுண்டாயின.

கவி

வாயுவினிடத்திருந்துவடிவதன்மாத்திரையான
தேயுவுமதினின் றும்மேதிசுழூமிரசதன்மாத்திரைத்
தோயமுமதினின்றெல்லைச்சுகந்தமாத்திரையாமண்ணு
மாயினதிரிகுணத்தோடவைகளினுயின்சார்பால் (ஙஎ)

(இ—ள்). வாயுவினின்றும் ரூபதன்மாத்திரையான அக்கினி தோன்றிற்று; அக்கினியினின்றும் (பிரகாசியாநின்ற) ரஸதன்மாத்திரையான அப்பு தோன்றிற்று. அப்புவினின்றும் (சீக்கிரத்தில்) கந்ததன்மாத்திரையான பிருதிவி தோன்றிற்று. இந்த சூக்ஷ்ம பஞ்சபூதத்திற்குக் காரணமாயிருக்கின்ற விக்ஷேபசத்தியினிடத்திலே தமவில் சத்வம், தமவில் ரஜசு, தமவில் தமஸ் என்னுமிவை அற்பங்கருவாக இருந்தபடியால், அதன் காரியமாகிய இந்தத்தன்மாத்திரைகளான பஞ்சபூதங்களும் முக்குணங்களுடனே பிறந்தன.

வினு—ஆகாயாதி பூதங்கள் ஜடமாதலின், அவ்வித ஜடவடிவ அசத்பதார்த்தத்தினின்றும் பிருதிவியாதி பூதங்கள் எப்படியுண்டாம்?

விடை—பூர்வகற்பத்தில் சகலபதார்த்தங்களும் விக்ஷேப விசிஷ்ட (கூடிய) ஈசுவரனிடத்திலடக்கமானபடியால் விக்ஷேபவிசிஷ்ட ஈசுவரனினின்றும் ஆகாயமும், அப்படியே ஆகாயவிசிஷ்ட ஈசுவரனினின்றும்வாயுவும், இவ்விதம்சகலபூதங்களும் ஈசுவரனினின்றேயுண்டாயினவெனப் பொருளாம்.

வினு—அப்பங்கருவிருத்தல் என்றுலென்ன?

விடை—சிறிது பீஜம் (விதை) தங்கியிருந்தது எனப்பொருள்.

வினு—எது சிறிது கருவாகவிருந்தது?



விடை—மூலப்பிரகிருதியின் சத்துவ, ரஜோகுணங்களில் முக்குண பீஜம் இருந்ததுபோலில்லாமல், இந்தத்தமோகுணம் மிகுந்தமலின சுபாவமுடையதுபற்றி குறைந்த அளவோடு குணபீஜம் கூடியிருந்தது என்பதாம்

வினு—பிறந்தன என்றதனுல் பூதங்கள் எவ்விதம் பிறந்தன என்பதை அனுபவத்திற் காட்டுக?

விடை—நாம் வேது பிரஜைகளாய்ப்பவிப்போம் என்ற ஈசுவரன சங்கற்பமுண்டாயகாலத்து, அவனதுபாதியும், சத்தியுமான மகா அகங்காரதத்துவமானது, சிருஷ்டி அவதாரத்து ஈசுவரனுடையவெகுவென்ற பிரஜாரூபசங்கற்பத்திற்கு இடங்கொடுத்ததால், அம்மகா அகங்காரதத்துவத்திலுண்டாய, இடங்கொடுத்தல்வடிவவிரிவே ஆகாயமாம். நிச்சலமாயிருந்த அகங்காரதத்துவத்தில் ஓர்விரிவு உண்டாகவேண்டுமாயின், கிரியையின்றிப்பவியாவாதலால், அக்கிரியாரூப சலனமே வாயுவாம். அவ்வித சலனவடிவவாயுவையும் அதினுதாரமான ஆகாசத்தையும், சிருஷ்டிக்குமுன் அபேதமாகவும், சிருஷ்டிக்குப்பின் பேதமாகவும் விளக்கவேண்டுமாயின் அவ்விளக்க ஆதாரமும் அவ்விரண்டின் கண்ணேயே இருக்கவேண்டும், அவ்விளக்கமே அக்கினியாம். அக்கினியின்விளக்கம் பரவிநின்றுவிளங்குகிறபடியால் அப்பாவதல்வடிவநெகிழ்ச்சியே ஜலமாம். அவ்விதநிரவகத்தியுடையஜலம், ஓர்ஸ்தலத்தைப்பற்றி திரவிக்கவேண்டுவதால், அத்தலமேபிருதிவியாம். இவ்விதம் ஒரே ஈசுவரனுடைய அகங்காரதத்துவத்தில் சிருஷ்டி அவதாரத்துண்டாம் சங்கற்பவடிவ ஒரேவியக்தியில் முன்பின்னின்றி, திருஷ்டிசிருஷ்டி, (ஞானசமகாலத்தேபதார்த்தங்களின் இருப்பு) வாதக்கிரமமாய்த் தனதுஅனுபூதியில்தெரிந்துகொள்க.

ஆக வினுவிடைகள் 126 மொத்த வினுவிடைகள் 563



உ

ஸ்ரீ சுந்தரதேசிகன் மெல்லடி துணை.

5. இதுமுதல் 13 செய்யுட்களால்

சூக்ஷ்ம சரீர கற்பனையைக் கூறல்.

இப்பஞ்சபூதங்கடாமபஞ்சிகிருதபூதமியறன்மாத்திரை
செப்பமுறுசூக்குமமேதிரிகுணபூதப்பேர்சேர்ந்திடுமிவற்றிற்
றுப்பருந்துசூக்கதனுக்களுந்தூலபூதங்கடோன்றுநிற்கும்
தப்பறுமைம்பூதசத்துவகுணத்தின்சமட்டிப்பக்கரணந்தா
னே. (௩௮)

(இ—ள்). இந்தப்பஞ்சபூதங்கட்கு (இயல்பான) தன்மாத்திரைக
ளென்றும், அபஞ்சீகிருதபூதங்களென்றும் (செம்மைபொருந்திய)
சூக்ஷ்மபூதங்களென்றும், முக்குணபூதங்களென்றும் [சாஸ்திரங்க
ளில்] நாமஞ்சொல்லப்படும். இந்தச்சூக்ஷ்ம பூதங்களினின்றும்
(போகத்தைப்புசியாநின்ற) சூக்ஷ்மசரீரங்களும், தூல பூதங்களும்
தோன்றும். [அஃதெங்ஙனமெனின்] (குற்றமற்ற) ஆகாசமுதலான
பஞ்சபூதங்களின் சத்துவாம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொரு மாத்தி
ரையெடுத்து ஒன்றாகக்கூட்டிவைத்தது அந்தக்கரணம். தான் எ
அசை.

வி௲—கூறியதமோகுணம் குணமாகவின் அத்தமோகுணத்தினின்
றும் விக்ஷேப சக்தியும், அவ்விக்ஷேப சத்தியாகிய குணத்தினின்றும்
ஆகாயமாதிய திரவியங்களும், எப்படியுண்டாம்?

விடை—தமோகுணமென்னுஞ்சொல்லால் தமோகுணப்பிரதானப்
பிரகிருதிகொள்ளத்தக்கது. அத்தமோகுணத்திற்கு ஆவரணமென
வும், விக்ஷேபமெனவும் சத்திகளுண்டென்பது வாஸ்தவமே. ஆகவே
விக்ஷேபசத்தியைப் பிரதானமாய்க்கொண்டுள்ள தமோகுணப்பிர
தானப்பிரகிருதியெனப் பொருள்படுவதால் திரவியத்தினின்றுமே
திரவியோற்பத்தியேதவிர, குணத்தினின்றும் அல்லவென அறிக.

வி௲—தன் மாத்திரை யென்றால் என்ன?

விடை—சொந்த அளவில் நிற்பதாம்.



வி௲—அபஞ்சீகிருத பூதங்கள் என்றால் என்ன?

விடை—மேற்சொல்லப்புகும் கலப்புத்தன்மையைப் பெறாத பூதங்
கள் எனப்படும்.

வி௲—சூட்சுமபூதங்கள் என்றால் என்ன?

விடை—தூலமல்லாததாயும் இந்திரியகோசரமல்லாததாயும் உள்ள
தீர் நுட்ப நிலைமையை யடைந்த பூதங்கள் எனப்படும்.

வி௲—முக்குண பூதங்கள் என்றால் என்ன?

விடை—சத்துவ, ரஜோ, தமோ குணத்துடன் கூடியிருத்தலால்முக்
குண பூதமெனப்படும்.

வி௲—இச்சூக்ஷ்மபூத சிருஷ்டி எப்போதுண்டாகிறது?

விடை—பிரளயத்தின்பின் எச்சமயத்து ஜீவர்களதுகன்மம் பக்கு
வப்பட்டு ஈசுவரனும் அச்சீவர்களுக்கு கர்மபலனைக் கொடுக்க ஸன்
முக (எதிர்முக) மாகிறாரோ அப்போது சூக்குமபூத சிருஷ்டியுண்
டாகிறது.

வி௲—அக்காலத்து ஈசுவரனாற் சிருஷ்டிக்கப்பட்ட பதார்த்தங்க
ளெவை?

விடை—தனதுமாயை, ஜீவர்கள், ஜீவகாரணமான அவித்தை இவை
கள் அணுதியாய்த்தன்னுள்ளடங்கிக்கிடத்தலால் அவைகட்குச்
சிருஷ்டியில்லை. அனாதிசொரூபமாக அப்படியேயிருக்கிறார்கள்.
இன்னும் முற்கூறிய ஜீவர்களுடைய அனாதித்தன்மைக்கு சூக்ஷ்ம
சரீரம் அவசியம் அங்கீகரிக்கவேண்டியிருப்பதால் அவ்வித சூக்ஷ்ம
சரீரங்கட்கும், அதன் காரணமாய சூக்ஷ்ம பூதங்கட்கும், காரணத்
திலொடுங்கி மீண்டும் வெளிப்படுதலேயே சிருஷ்டியாகக் கூறப்ப
டும்.

ஆனால் தூலபூதங்களும், அவற்றின் காரியமாய தூல சரீரங்க
ளுமே நூதனமாய்ச் சிருஷ்டிக்கப்படுகிறது, என்றறிவாயாக.

வி௲—ஈசுவரனானவன் ஜீவர்களின் கர்மபரிபக்குவத்தை அபேக்ஷி
யாமல் தன்னிஷ்டப்படி சிருஷ்டிசெய்கிறார் என்று சொன்னா
லென்ன?

விடை—அப்படியாயின் சிருஷ்டியில் ஏற்றத்தாழ்வு இருக்கலாகாதி

ஈசுவரன் விஷமதிருஷ்டி யுடை(சமபார்வையின்றிய) யவனுமாவன்
என்னும் குற்றம் வரும். ஆகவே ஈசுவரனென்பான் சர்வ ஜீவர்களி
டத்தும்தயையை ஒன்றுபோற்செலுத்துபவனுதலின்கற்பகவிருக்ஷத்
திற்குச் சமானமாய் அவரவர்கள் விரும்பியவண்ணமீவதே தவிரதன்
னிஷ்டப்படி ஒன்றும் செய்வதில்லை.

வினு—அப்படியானுல், நாம் செய்வதும் அனுபவிப்பதுமாயகர்மங்
களில், ஈசுவரனுல் வந்ததெது? நம்மால் வந்ததெது?

விடை—நாம் அனுபவிக்கும், சுக, துக்கங்கள் பூர்வம்செய்து இப்
போது பல (பிரயோஜன)ப்பட்டவைகள். இப்போது செய்வதோ!
நமது விவேக அவிவேகபூர்வகமாய்ச்செய்பவைகளானதால் ஈசுவர
னுல் வந்தது ஒன்றுமின்று.

வினு—அப்படியானுல் உலகினர்பலர் என்னை ஈசுவரனிப்படிச்செய்
யலாமாவென்று சொல்லுகிறூர்களே! அதில் நியாயமென்ன?

விடை—சுருதி சம்மதமறியாத பிராந்தர்கள் சொல்வரேயொழிய
உத்தமர் சொல்லார்.

வினு—அப்படியாயின்சிலசுருதிகள், எல்லாம் ஈசுவரச்செயலென்று
கூறுகின்றனவே! அதில் நியாயம் என்ன?

விடை—கர்மமானது தானேபலனைக்கொடுப்பதில் சக்தியற்றதாயி
ருப்பதாலும், அவ்விதசர்வகர்மங்கட்கும் ஈசுவரன் பல (சுகதுக்கத்
தை)தாதாவா (கொடுப்பவனு)யிருப்பதாலும், சகலமும் ஈசுவரச்
செயலென்றுகூறினதே ஒழிய, கர்மங்களையுண்டுபண்ணிக்கொள்
வது நாமே.

வினு—ஈசுவரன் தன்னிஷ்டப்படி செய்யுங்கிருத்தியந்தான் யாது?

விடை—சர்வஜீவர்கட்கும்பொதுத்தத்துவமான பிருகிவியாதி பஞ்ச
பூதங்களுங்கூட ஜீவர்களின்சாமானிய (பொது) கருமத்தால் சிருஷ்
டிக்கப்பட்டதாயின், தன்னிஷ்டப்படி யெதைச்சிருஷ்டிக்கப்போகி
றுன்! ஒன்றுந்தன்னிஷ்டப்படி செய்வதேயில்லை.

வினு—சிருஷ்டிக்குவிஷயமான சூக்ஷுமபஞ்சபூதங்களை என் சிருஷ்
டிக்கவேண்டும்?

விடை—மூலப்பிரகிருதியின் சத்துவகுணத்தில் விளங்கிய ஈசுவர



னவன், ரஜோகுணத்தினிடமாய் விளங்கிய ஜீவராசிகட்கு அவா
வர்கள் கர்மத்திற்கீடாகப்போகங்களைக்கொடுத்தற்பொருட்டு, போக
சாதனமான சூக்ஷுமசரீரங்களை வெளிப்படுத்தவும், போகஸ்தான
மான தூலசரீரங்களை உண்டாக்கவுமெண்ணி, மூலப்பிரகிருதியின்
தமோகுணத்தோடு பொருந்திநின்று, அத்தமோகுணத்தின் ஓரம்ச
மாகிய விக்ஷேபசத்தியைவிரியப்பார்க்க அவ்விரிவே ஆகாயமாகவும்,
அப்படியே எல்லாம் வெளிப்படுத்த நேரிட்டது.

வினு—இந்த சூக்ஷுமபூதங்களினின்றும் சூக்ஷுமசரீரங்களும்,
தூலபூதங்களும் எங்ஙன்றேன்றும்?

விடை—சூக்ஷுமபூதங்களின் சத்துவ, ரஜோகுணங்களினின்றும்,
காரணுத்மகமாயிருந்த அந்தக்கரணம், ஞானேந்திரியம், வாயுக்கள்,
கர்மேந்திரியம் ஆக 20 தத்துவசமுதாயமானசூக்ஷுமசரீரம் வெளிப்
பட்டதோற்றியும், ஈசுவரபார்வையால் சூக்ஷுமபூதங்களின் தமோ
குணந்தடித்து ஸ்தூலபூதங்களாயும், உண்டாயினவென்பதாம்.

வினு—இச்சூக்ஷுமசரீரத்திலுள்ள அந்தக்கரணத்தின்பரியாயநாமம்
யாது?

விடை—சத்துவம், உட்கருவியென்று பெயர்.

வினு—சத்துவமென்ற பெயரேன் வந்தது?

விடை—சத்துவகுணவடிவாயிருத்தலால், சத்துவமெனப்பட்டது.

வினு—உட்கருவியென்ற பெயர் என் வந்தது?

விடை—சரீரத்தினுள்ளிருந்து விஷயங்களை யறிதற்குச்சாதனமா
யிருத்தலால் உட்கருவியாம்.

வினு—அந்தக்கரணமாவதுயாது?

விடை—உள்ளம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் இவைகளின்
சமுதாயமாம்.

வினு—உள்ளமென்றூலென்ன?

விடை—அந்தக்கரணமானது தன்னிலைமையை விட்டு, இந்திரிய
வழித்தாய் விஷயங்களிற் செல்ல நிமித்தம் நேரிட்டு, விஷயபரிணு
மத்தையடைய ஆரம்பிக்குங்கால், அவ்விஷயபரிணுமத்திற்கு இடங்
கொடுக்கும் விருத்தியை உள்ளமென்பர். பரிணுமம்=மாறுதல்

வினா—மனமென்றாலென்ன?

விடை—இடங்கொடுக்கும் விருத்திக்குப்பின்னுண்டாம் சங்கற்பவடிவபரிணாமவிருத்தியாம். இது மனன சுபாவத்தால் மனமாம்.

வினா—புத்தியென்றாலென்ன?

விடை—ஞானரூபத்தால் விசாரணை வடிவமாறுதலடையும்விருத்தியாம். அறிகின்ற ஞானசுபாவத்தால் புத்தியாம்.

வினா—சித்தமென்றாலென்ன?

விடை—புத்தி விருத்தியால் விசாரித்தறிந்த பொருளில், சிந்தனாவடிவவிருத்தியாம். சிந்தனைசெய்வதாற் சித்தமாம்.

வினா—அகங்காரமென்றாலென்ன?

விடை—சித்தத்தில் சிந்தனைப்பட்டதை, உறுதிப்படுத்தும் விருத்தியாம். அக, மமதைவடிவாய் நிற்றலின் அகங்காரமாம்.

வினா—விருத்தியென்றாலென்ன?

விடை—விளக்கபரிணாமமே விருத்தியாம்.

வினா—விருத்தியின் இலக்கணமியாது?

விடை—இருக்கிறது என்னும் வியவகாரத்திற்கு எதுவாகிய அவித்தை அந்தக்கரணங்களின் பரிணாமம்விருத்தியெனப்படும்.

வினா—அவித்தை அல்லது அந்தக்கரணத்தின் பரிணாமம்எனகூறாது, இருக்கிறது என்றல்முதலிய பதங்களமைத்து இலக்கணம் கூறுவானேன்?

விடை—ஆகாயாதிகளும், காமக்குரோதாதிகளும் அவித்தை அல்லது அந்தக்கரணத்தின் பரிணாமமாயிருத்தலால் அவைகள் விருத்தியாகா என நீக்கி, அவைகளை விளக்கும் பரிணாமவடிவத்தினை இங்கு விருத்தியெனக்குறித்தற் பொருட்டு அவ்விதங்கூறப்பட்டது.

வினா—அப்படியாயின் இவ்வந்தக்கரணத்தின் இலக்கணம் யாது?

விடை—விசேஷவடிவத்தால் சரீரந்திலுள்ள, உச்சிமுதலிய இடங்களில், உற்பூதமா (வெளிப்படையா) காமவிருப்பதாய், சகலமான கேள்விகட்கும் இடங்கொடுத்தல் முதலான தொழில்களுக்குச் சாதகமாய் விஷயங்களை விளக்குவிக்கும் ஞானபரிணாம (விளக்க)மே வடிவமாய், சரீர அளவில் விரிந்து ஒடுங்கிநிற்பதாய், அவித்தையிற்



கட்டுப்பட்டு ஜீவபேதத்தையுண்டுபண்ணுவதாய், வெளிஷயங்களை அறியச்சாதனமாயுள்ளது அந்தக்கரணமாம்.

கவி

இந்தவகக்கரணத்திற்காயவஞ்சமியையந்ததற்கடையாளமிது
வும்விண்போ, லந்தமில்லாச்சத்தங்களனைத்தினுக்குமவகாசந்
தந்துதரித்தலினாலேயா, மிந்தவிதந்தரிக்கின்றவிருத்திக்குப்
பேரியம்பிடுவருள்ளமெனவிதுபோற்காற்சம், பந்தமதற்கறி
குறிதானிதுவுமந்தப்பவனம்போற்சலித்தலாம்பகருங்காலே (௩௯)

(இ—ள்) இந்த அந்தக்கரணத்தில் ஆகாயத்தினம்சங்கூடினதற்கடையாளம், இந்த அந்தக்கரணமும் ஆகாசத்தைப்போல (கணக்கிலடங்காத) சகலமான கேள்விகளுக்கும் இடங்கொடுத்துத்தரிக்கின்றது. இப்படித்தரிக்கின்றவிருத்திக்கு உள்ளமென்றுபெயர் (சொல்லுவர்). (இதுபோல்) [இந்த அந்தக்கரணத்தில்] வாயுவினம்சங்கூடினதற்கடையாளம், இந்த அந்தக்கரணமும் (அந்த) வாயுவைப்போல அலைகின்றது. (சொல்லுமிடத்து)

வினா—அந்தக்கரணத்தில் ஒன்றான உள்ளத்திற்கு தேவதை, ஸ்தானமெவை?

விடை—தேவதைசதாசிவனும், ஸ்தானம் உச்சியுமாம்.

கவி

இந்தமாதிரியலையும்விருத்திக்குத்தானியம்புபெயர்மனமாகு
மெழுநாவஞ்சம், வந்ததற்கடையாளமிதுவும்வன்னிமானவி
நாவின்னதெனவயக்கலேயாம், புந்தியெனப்பகர்வரிவ்விருத்
திக்குப்பேர்புனவஞ்சம்பொருந்தியதற்கடையாளந்தான்,பந்
தமுறவிதுவுமப்புமானத்தானே பகர்விடயங்களிழுக்கும்
பான்மையேயாம். (௪௰)

(இ—ள்) இப்படியலைகின்றவிருத்திக்கு மனமென்று பெயர். [இந்த அந்தக்கரணத்தில்] அக்கினியினம்சம் கூடினதற்கடையாளம், இந்த அந்தக்கரணமும் அக்கினியைப்போல ஈதின்னதென்று விளக்குவிக்

கின்றது. இப்படி விளக்குவிக்கின்ற விருத்திக்குப்புத்தியென்று பெயர். [இந்த அந்தக்காணத்தில்] அப்புவினம்சங்கூடினதற்கடையாளம் (பந்தப்படும்படியாக) இந்த அந்தக்காணமும் அப்புவைப்போல (சொல்லாகின்ற) விடயங்களிற்பற்றி இழுக்கின்ற (விதத்தால்) து.

விறு—இந்த மனதிற்கு தேவதை, ஸ்தானம் எவை?

விடை—தேவதை சந்திரனும், ஸ்தானம் கண்டமுமாம்.

விறு—இந்தப் புத்திக்கு தேவதை, ஸ்தானம் எவை?

விடை—தேவதை பிரஹ்மாவும், ஸ்தானம் இருதயமுமாம்.

கவி

வழுத்திந்தவிருத்திக்குச்சித்தமென்னவரும்பெயர்மண்ணைஞ்
சமதற்கடையாளந்தா, னழுத்தமாயிதாவும்மண்போனின்று
நானென்றபிமானஞ்செய்தலினலாகுமிந்தக், கொழுத்தவபி
மானஞ்செய்விருத்திக்குத்தான்குலவுபெயரகங்காரமாகுமின்
னு, முழுத்தபஞ்சபூதவெண்குணவியட்டிமொழிந்தசுரோத்
திரமுதலிந்திரியமாமால் (௬௪)

(இ—ள்) (கூறியபடி) இப்படியிழுக்கின்ற விருத்திக்கு சித்தமென்று பெயர். [இந்த அந்தக்கரணத்தில்] பிருதிவியினம்சம்கூடினதற்கடையாளம் இந்த அந்தக்கரணமும் பிருதிவியைப்போலக்கடினமாகநின்று நானென்றபிமானிக்கின்றது. இந்த (திட) அபிமானவிருத்திக்கு (விளங்காநின்ற) அகங்காரமென்று பெயர். இன்னம் ஆகாசமுதலான பஞ்சபூதங்களினுடைய சத்துவாம்சத்திலே [பூதத்திற்கொவ்வொரு மாத்திரையெடுத்து]தனித்தனியேவைத்தது சுரோத்திராதி ஞானேந்திரியமென்று சொல்லப்படும்.

விறு—இச்சித்தத்திற்குத்தேவதை, ஸ்தானம் எவை?

விடை—தேவதை விஷ்ணுவும், ஸ்தானம்நாபியுமாம்.

விறு—இந்த அகங்காரத்திற்குத்தேவதை, ஸ்தானமெவை?

விடை—தேவதைருத்திரனும், ஸ்தானம் சர்வாங்கமுமாம்.

விறு—இன்னம் என்றபதத்தின்தார்ப்பரியம் யாது?



விடை—பஞ்சபூதங்களில், அந்தக்கரணத்திற்காக ஐந்து அம்சங்கள் எடுத்ததுபோல, மீண்டும் ஐந்து அம்சங்கள் எடுக்கப்போகிறோம் என்பது அருத்தமாம்.

விறு—மீண்டும் என்னவுண்டாயின?

விடை—ஞானேந்திரியங்களுண்டாயின.

விறு—ஞானேந்திரியங்கள் எவை?

விடை—சுரோத்திரம் (காது) துவக்கு (மெய்) சக்ஷு (கண்) சிங்ஙுவை (நாக்கு) ஆக்கிராணம் (மூக்கு) என ஐந்தாம்.

விறு—ஞானேந்திரியத்தினிலக்கணமியாது?

விடை—சரீரத்திலுள்ள பொறிகளுடன், உற்பூதமா (வெளிப்படையா)காமல் வெளிவிஷயங்களை யறிவதற்கு சாதகமாயிருப்பது, ஞானேந்திரியமாம்.

விறு—பிரத்தியக்ஷமாய்த்தெரிகிற காதுமுதலானவைகளை, வெளிப்படையல்லவென்பதெப்படி?

விடை—பிரத்தியக்ஷயோக்கியமாய காதுமுதலானவைகள் இந்திரியங்களல்ல. அவைகள் தூலகோளகங்களாம். ஆனால் காது முதலான இடங்களில், சூக்ஷ்மமாய் நேத்திராதி இந்திரியங்கட்குப்புலப்படாதது எதுவோ, அதுவே ஞானேந்திரியமெனப்படும்.

விறு—ஞானேந்திரியங்களை சூக்ஷ்மபூதங்களினின்றும் உண்டாயின எனச்சொல்வானேன்?

விடை—இவ்விந்திரியங்கள் சூக்ஷ்மமாயிருத்தலினால் ஸ்தூல பூதத்தினின்றுமாய் அல்ல எனக்காட்டற்பொருட்டுக்கூறப்பட்டது.

விறு—சத்துவாம்சத்தில் எனச்சொல்வானேன்?

விடை—இவைகள் ஞானசாதனமாயிருத்தலினாலும்; ரஜோகுணம் சத்தில் பிராணாதி, வாக்காதியுற்பத்தியாயிருத்தலினாலுமவற்றை நீக்கற்பொருட்டுமாம்.

விறு—தனித்தனி யென்று சொல்வானேன்?

விடை—சமட்டியில் அந்தக்கரணமுற்பத்தியாயிருப்பதாலும்; ஞானேந்திரியமாய இவைகள், ஒன்றுடன் ஒன்று கூடாதபடியாலும், தனித்தனியெனப்பட்டது.

கவி

சோத்திரமாகாயவஞ்சமாதலாலேசூழ்விண்ணின்குணத்தொ
னியேதோன்றவோருங், காத்திரமார்ந்தேயிருக்குந்தொக்
குங்காற்றின்கலையாகுமதனுற்காற்குணமாமூறு, மாத்திரமே
யறியுங்கண்வன்னியஞ்சமாதலினுலதின்குணமாம்வடிவமோ
ரு, நாத்திரவமாமப்பினஞ்சமாகுநலத்திணுலுணருமந்தச்சு
வையதொன்றே. (௪௨)

(இ-ள்). [இவைகளில்] சுரோத்திரம் ஆகாசத்தினம்சமானபடியால் (சூழ்ந்திராநின்ற) ஆகாயத்தின் குணமானசத்தமாத்திரத்தையறியும் (சரீரத்தினிறைந்திராநின்ற) துவக்கு வாயுவினம்சமானபடியால் வாயுவின் குணமான பரிசமாத்திரத்தையறியும். சக்ஷு அக்கினியினம்சமானபடியால் அக்கினியின் குணமான ரூப [மாத்திர]த்தையறியும். சிங்ஙுவை (நெகிழ்ச்சிவடிவ) அப்புவினம்சமானபடியால் அப்புவின் குணமான ரஸமாத்திரத்தை அறியும்.

வி௲—சுரோத்திரேந்திரியத்தின் காரியம், தேவதை, ஸ்தானம் இவைகள் எவை?

விடை—தொனிவடிவ, வருணவடிவமாகிய இருவித சத்தங்களையும் அறியச்சாதனமாயுள்ளது; தெய்வம்-திக்கு; ஸ்தானம் காதுக்குள்ளிருக்கும் ஓர் மிருதுவான தோல்.

வி௲—தொக்கிந்திரியத்தின் காரியம், தேவதை, ஸ்தானம் இவைகள் எவை?

விடை—சீதம், உஷ்ணம், சீதோஷ்ணமில்லது ஆகிய மூவித ஸ்பரிசங்களையும் அறியச்சாதனமாயுள்ளது; தெய்வம்-வாயு; ஸ்தானம் உடம்பு அல்லது தோல்.

வி௲—சக்ஷுஇந்திரியத்தின் காரியம், தேவதை, ஸ்தானம், இவைகள் எவை?

விடை—வெண்மை, பொன்மை, கருமை, செம்மை, பசுமை என்னும் ஐந்துவித உருவங்களையுமறியச்சாதனமாயுள்ளது; தெய்வம்-சூரியன்; ஸ்தானம்-கண்ணின் கருவிழிநுனி.



வி௲—சிங்ஙுவை இந்திரியத்தின் காரியம், தேவதை, ஸ்தானம் எவை?

விடை—தித்திப்பு, கைப்பு, கார்ப்பு, உவர்ப்பு, புளிப்பு, துவர்ப்பு என்னும் அறுவகை ரசங்களையறியச்சாதனமாயுள்ளது; தெய்வம்-வருணன்; ஸ்தானம் நாநுனி.

கவி

ஆக்கமார்கிராணம்பூவஞ்சமாகுமாதலினுலதன் குணமாங்கந்
தமோரு, நீக்கமாயிருத்தலினுலிந்தவைந்தும்நேராதுவொன்
று பிறிதின்குணத்தை, நோக்குறுதகக்கரணமதனிலைந்து
நுண்பூதமாத்திரையுமொன்ருகக்கூடி, ஆக்கமாயிருத்தலினு
லறியுமைந்திந்திரியங்கடம்மாலும்விடயமைந்தை (௪௫)

(இ-ள்) (பெருமை பொருந்திய) ஆக்கிராணம் பிருதிவியினம்சமா
னபடியால் பிருதிவியின் குணமான கந்த [மாத்திர]த்தையறியும்.
இப்படி ஐந்தும் ஒன்றேடொன்றுகூடாதபடியால் ஒன்றுமற்றொன்
றின் குணத்தை கிரஹிக்கவறியாது. (பிரத்தியக்ஷமாயறியமுடியாத)
அந்தக்கரணத்தில் ஐந்து (சூக்ஷ்மபூத) மாத்திரையும் ஒன்ருய்க்
கூடி (சிறப்புற்று) இருத்தலின் ஐந்திந்திரியங்களினுலும் ஐந்துவிட
யங்களையறியும்.

வி௲—ஆக்கிராண இந்திரியத்தின் காரியம், தேவதை, ஸ்தானம் எவை?

விடை—நற்கந்தம் துர்க்கந்தமென்னுமிருவகை நாற்றங்களையும் அறியச்சாதனமாயுள்ளது; தேவதை-அசுவினிகுமாரர்; ஸ்தானம் மூக்கின் நுனி.

வி௲—இச்சத்துவகுணத்திலுண்டான அந்தக்கரணத்தை, ஒன்றாகக் கூட்டிவைத்ததினுலுண்டாய பிரயோஜனம்யாது?

விடை—ஐந்துவிருத்திகளாகிய உள்ளம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் இவைகள் ஒரே விருத்தியின்மாறுதல் வடிவாயிருந்தாலும் ஐந்துஞ்சேர்ந்து ஒவ்வொருவிஷயத்தைக்கிரஹித்தலிற்சாதகமாயிருக்கும். ஐந்து விருத்திகளில் ஒன்று குறைந்தாலும் விஷயம் கிரஹிக்கப்படாது.

ஹிக்கப்படா. இதுவே அவற்றின் பிரயோஜனமாம்.

வி௲—ஞானேந்திரியத்தைத் தனித்தனிவைத்ததினுலுண்டாய பிரயோஜனம் யாது?

விடை—ஒவ்வொரு இந்திரியங்களும் பிறவற்றின் உதவியில்லாமலே தனித்தனியாயுள்ள தங்கள் விஷயங்களைக்கிரஹிப்பதில் சாதகமாயிருக்கும். ஒன்று மற்றொன்றின் விஷயத்தைக்கிரஹித்தலிற்சாதகமாகமாட்டா. இதுவே அவற்றின் பிரயோஜனமாம்.

வி௲—கூறிய அந்தக்கரணமும், இந்திரியங்களும் தாங்கள்தாங்களே விஷயங்களைக்கிரஹிப்பதாயிச்சாத்திரத்திற்கூறியிருக்க இங்கு அவைகட்குச்சாதகமான தன்மையையேன் குறிப்பிடவேண்டும்?

விடை—ஆத்ம விளக்கத்தைப்பற்றி நின்று ஜீவித்துக்கொண்டிருக்கும் சிதாபாஸன், விருத்தியோடுகூடியவனுய் இந்திரியங்களென்ற வாயில்களின் வழித்தாய், விஷயங்களென்ற காட்டில் சஞ்சரிக்கிறான். அதில் விருத்திவிஷயாகாரமடைந்து விஷயத்தைத்தெரியவொட்டாமல் மறைத்திருந்தமறைப்பை நீக்க, அதின்கண்ணிருந்த சிதாபாஸன் விஷயங்களை அறிகிறான். இம்முறையில் இந்திரியங்கள்வாயில்வடிவமாகமாத்திரமிருத்தலினுலும், அப்படியே அந்தக்கரணவிருத்தியும் மறைப்பைமட்டும் நீக்குவதினுலும், ஆகவிரண்டும், ஜீவனுடைய விஷய ஞானத்திற்குச்சாதகமேதவிர இவைகள் நேராய் அறியவில்லையென்றுணர்க.

வி௲—ஜீவனும் ஆத்மவிளக்கத்தைப்பற்றிநின்றறிதலின் ஆத்மாவே அறிந்ததாகச் சொன்னலென்ன?

விடை—ஆத்மா அறிவுக்கட்டி (ஞானகனன்) யென்பதாக சுருதிகள் கோஷிப்பதுடன் அசங்கனுயிருத்தலின் ஆத்மா அறிந்ததல்ல. ஜீவனேயறிந்தவன்.

கவி

கரையுறுசத்துவகுணத்தில்வந்த வந்தக்கரணமைந்து ஞான
விந்தியங்களைந்தும், புரையறுமக்குணத்தினஞ்சமாதலாலே
புகன் ஞானசாதனமாம்பூதமைந்தி, னிரசதத்தின்சமட்டிபஞ்



சவாயுவாகுமிதில்வியானனிடவஞ்சமாதலான்மா, திரமென
னமெய்யெங்குமேவுமேலுஞ்செப்புவமாற் பிராணுதிச்செய்
கைதானே. (௪௪)

(இ-ள்) (சொல்லப்பட்ட) [இந்தச்] சத்துவகுணத்திலுண்டான அந்தக்கரணமைந்தும், ஞானேந்திரியங்களைந்தும் [ஆகப்பத்தும்] (குற்றமில்லாத) சத்துவகுணம்சமானபடியால் (சொல்லாநின்ற) ஞானசாதனமாயின. [இன்னும்] ஐந்து பூதங்களுடைய இராஜோம்சத்திலே [பூதத்திற்கொவ்வொரு மாத்திரையெடுத்து] ஒன்றுகக்கூட்டிவைத்தது [வியாணுதி] பஞ்சவாயுக்கள். இவைகளில் வியானவாயு ஆகாசத்தினம்சமானபடியால் ஆகாசத்தைப்போல சர்வாங்கமும் வியாபித்திருக்கும். (இன்னும் பிராணுதிச்செய்கைகளையும் சொல்லுகின்றோம்). இடவஞ்சம்-ஆகாயத்தினம்சம்: மாதிரம்-ஆகாயம்.

வி௲—ஞானசாதனதத்துவங்கள் எவை?

விடை—முற்கூறிய அந்தக்கரணம் 5; ஞானேந்திரியம் 5; ஆகப்பத்தும் ஞானசாதனதத்துவங்களாம்.

வி௲—ஞானசாதனம் எத்தனை விதம்?

விடை—விஷயக்ஞானசாதனமெனவும், ஆத்மக்ஞானசாதனமெனவும் இருவகைப்படும்.

வி௲—இவ்விந்திரியங்கட்கு விஷயஞானசாதனத்தன்மை எப்படிச் சித்திக்கிறது?

விடை—விஷயங்களென்பது சத்த, பரிச, உருவ, ரச, கந்தம் என ஐந்தாம். இதில் அந்தக்கரணமானது விருத்திவடிவமாறுதலடைந்து, இந்திரியங்களாகிற வழியாய்வாராவிடில் விஷயங்கள்கிரஹிக்கப்படாவாதலின், விஷயஞானசாதனமாகிறது.

வி௲—ஆன்மஞானசாதனத்தன்மையெப்படி சித்திக்கிறது?

விடை—நேத்திரேந்திரியத்தால்குருநாதனை தரிசித்தும், தொக்கால் அஷ்டாங்கமுதலான நமஸ்காராதிகளைச்செய்தும், ரஸனேந்திரியத்தால்குருநாதனுக்குப்பிரீதியானபதார்த்தவகைகளையுணர்ந்து, அதன் ஸஜாதீய (அதைப்போலொத்த) பதார்த்தங்களைச்சமர்ப்பித்தும், கந்த இந்திரியத்தால் சுகந்த மலர்களைத்தெரிந்து அர்ச்சித்தும், ஆகிய

இவைகளாற் குருவைத்திருப்திசெய்ய அவர்கருணையாலுபதேசிக்க வெண்ணி, சுருதிசம்மதயுக்தி, அனுபவங்களைச்சொல்லுங்கால் சுரோத்திரேந்திரியத்தாலுணர்ந்து, சுத்தமானதும், விமர்சினி சக்தியாயபராசக்தியின் அனுக்கிரஹத்தைப்பெற்ற அந்தக்கரணமூலமாய், மனன, நிதித்தியாசன, சமாதி, சாக்ஷாத்காரபரியந்தம், அடையுமனுபூதியாவும், இத்தத்துவங்களினுதவியினாலானபடியால், இவைசட்கு தத்துவஞானசாதனமும் சித்தித்தன.

வினு—இன்னும் என்றபதம் எதுநோக்கிக்கூறப்பட்டது?

விடை—சூக்ஷுமபஞ்சபூதங்களில் முன்சமட்டி, வியட்டியாய் எடுத்ததுபோல், மீண்டும் எடுக்கப்போகிறதென்னும் பொருடோன்றக் குறிக்கப்பட்டது.

வினு—வியானுதிவாயுக்களின் இலக்கணம்யாது?

விடை—சரீரத்தில் மூலாதாரமுதலிய ஸ்தானங்களை ஆதாரமாய்க் கொண்டு, கர்மேந்திரியங்களைத் தொழிற்படுத்தியும், சரீரநிலைப்புக்கேதுவாயும், சரீரகாவலாயும், கிரியாவடிவாயுமிருப்பதுவியானுதி வாயுக்களாம்.

வினு—வியானன் என்றுலென்ன?

விடை—வியானமென்றால் நான்குமுழ அளவின் பெயர். இவ்வாயு நான்குமுழ அளவான சரீரத்தில் வியாபித்திருப்பதால் வியானனும்.

வினு—வியானவாயுவின் தொழில், ஸ்தானம், அதிதேவதைகள் எவை?

விடை—தேகத்தை நிறுத்துவிப்பது தொழில்; சர்வாங்கம்ஸ்தானம்; விசிட்டன் அதிதேவதை.

கவி

பிராணன்றன்காலஞ்சமா தலாலேபெருங்காற்றேபோல விதயத்திருந்து, கிராணம்வரையலையுமபானன்றன்வன்னிக்கிணையதனுற்சாடராக்கினியேயாகப்,பராவுகுதம்பற்றியுட்டணித்துண்டன்னபானுதிகளைப்பாகம்பணியழிக்கும், விராவுசமானன்புனற்கூறுதலாலேமெய்ந்நடுவாநாபித்தானத்தைமேவி. (௬௫)



(இ-ள்) பிராணவாயு,வாயுவினம்சமானபடியால் (பெரிய) வாயுவைப்போல இருதயத்திலிருந்து நாசி [யாதி] பரியந்தம் அலையும். அபானவாயு, அக்கினியினம்சமானபடியால் [அக்கினியைப்போல] சாடராக்கினியாக உஷ்ணித்துக்கொண்டு (சொல்லாநின்ற) குதத்தைப்பற்றிநின்று உண்டவன்னபானுதிகளைச் சீரணிப்பிக்கும். (கலத்தலைச்செய்யும்) சமானவாயு, அப்புவினம்சமானபடியால் சரீரநடுவான நாபித்தானத்தினின்று,

வினு—பிராணன் என்றுலென்ன?

விடை—பிராணமென்பது பலம்; இவ்வாயு சரீரத்திற்குப்பல(தைரிய)த்தைக்கொடுத்து பலரூபமாயிருப்பதுபற்றி பிராணனும்.

வினு—பிராணவாயுவின் தொழில், ஸ்தானம், அதிதேவதை இவைகள் எவை?

விடை—உசுவாச (உட்பிரவேசித்தல்) நிசுவாசங் (வெளிவிடுதல்)களைச்செய்தல் தொழில்; இருதயம் ஸ்தானம்; விஸ்வயோனி அதிதேவதை.

வினு—அபானன் என்றுலென்ன?

விடை—அபானமென்றால் குதம்; குதத்தைப்பற்றியிருத்தலின் அபானனெனப் பெயராம்.

வினு—அபானவாயுவின் தொழில், ஸ்தானம், அதிதேவதை இவைகள் எவை?

விடை—மலமூத்திரங்களைக் கழியச்செய்தல் தொழில்; குதம் ஸ்தானம்; விஸ்வகர்மா அதிதேவதை.

வினு—சமானன் என்றுலென்ன?

விடை—சமானம் = சமம், ஒப்பு எனவாம். உதராக்கினியால் பாகம் செய்தபின் சூக்ஷுமமான ரஸபாகங்களைச்சகல நாடிகளிலும், இழுத்துச்சமம்பண்ணுவதால் சமானனும்.

கவி

உண்டவன்னபானுதிகளையப்பைப்போலுள நாடியனைத்திலுமேயுறவிழுக்குங், கண்டமதைப்பற்றிநின்றுதானவாயுக்கடி

னமாக்கடையுமனின்கலையாமாற்றால், விண்டவிவ்வைந்து
வாயுக்களன்றி வேறேயுமைந்துவாயுக்கடாமு, முண்டென
வேசிலர்பகர்வரிந்த வைந்து முயர்பிராணன் றொழிலாமுண
ிற்றனே. (௪௬)

(இ—ள்) உண்டவன்ன (பானாதி) [ரஸங்களை] அப்புவைப்போல (சரீரத்திலுள்ளநாடியனைத்திலும் பொருந்த) இழுக்கும். உதான வாயு பிருதிவியினம்சமானபடியால் கண்டத்தைப்பற்றி [பிருதிவியைப்போலக்] கடினமாகநின்று [உண்டவன்னபானாதிகளைக்] கடையும். (சொல்லப்பட்ட) இந்த பஞ்சவாயுக்களையுமல்லாமல் வேறே ஐந்து வாயுக்களுமுண்டென்று சிலர் சொல்லுவர். (யோசிக்குமிடத்து இவ்வைந்தும் உயர்வாய பிராணனது தொழிலாம்).

வினா—இந்தச்சமான வாயுவின் தொழில், ஸ்தானம், அதிதேவதை இவைகள் எவை?

விடை—அன்னரஸத்தை சர்வாங்கங்கட்கும் கொடுத்தல் தொழில்; நாபி ஸ்தானம்; அயன் அதிதேவதை.

வினா—உதானன் என்றாலென்ன?

விடை—உத்தானம் என்பது உதானமெனமருவியது. உத்தானம் என்றால் கலப்பு. உண்ட அன்னபானாதிகளைக்கடைந்து (அரைத்து) கலக்கச் செய்தலின் உதானனாம்.

வினா—உதான வாயுவின் தொழில், ஸ்தானம், அதிதெய்வம் இவைகள் எவை?

விடை—பாகயோக்கியமாய் அன்னாதிகளை அரைத்தல், தொழில்; கண்டம் ஸ்தானம்; சயன் அதிதேவதை.

வினா—இந்த வியானாதிவாயுக்கள் எதைத்தொழிற்படுத்துகின்றன?

விடை—இனி அடுத்துச்சொல்லப்புகும் கர்மேந்திரியங்களைத்தொழிற்படுத்துகின்றன.

வினா—இதைத்தவிர வேறு வாயுக்கள் யாவை?

விடை—உபவாயுக்கள் ஐந்து எனச் சிலர் சொல்வர்.

வினா—சிலர் சொல்வர் எனக் கூறவானேன்?

விடை—அது பிராணவாயுவிற்கு அந்நியமாயில்லாததால் அந்நிய





பக்ஷமாக ஒப்புக்கொள்ளப்பட்டதாம்.

கவி

வழுத்தந்தவாயுக்கடம்மைக்கூறின்வாந்திபண்ணுவிப்போன்
றானாகனாகும், விழித்திமைக்கப்பண்ணுவோன்கூர்மனாகும்வி
ரைந்துதும்மற்கிரிகரனேவிளைவிப்போனாம், தழுதழுத்துக்
கொட்டாவிசெய்வோன் தேவதத்தனாந்தனஞ்சயனாந்தனு
வைத்தானே, பழுத்தபழம்போல்வீங்கப்பணிப்போனிங்ஙன்
பகர்ந்தவிவ்வைந்துமேபிராணன்றனே.

(இ—ள்) (சொல்லப்பட்டஅந்தவாயுக்களைக்கூறுங்கால்) வாந்திபண்ணுவிக்கின்றது நாக (னாகும்) [னென்றும்] இமைத்துவிழிப்பிக்கின்றது கூர்ம (னாகும்) [னென்றும்] குறுகுறுத்துத்தும்மச்செய்கின்றது கிரிகர (னாகும்) [னென்றும்] (நாத்தடுமாறி) கொட்டாவிகொள்ளச்செய்வது தேவதத்த (னாகும்) [னென்றும்] (சரீரத்தைப்பழுத்தபழம்போல வீங்கச்செய்கின்றது தனஞ்சய (னாகும்) [னென்றும்] [சொல்லுவர்.] (கூறிய) இவ்வைந்தும் பிராணனுடைய தொழிலானபடியால் வேறல்ல. இதனுரை வெளி.

கவி

விண்முதலாம்பஞ்சபூதங்கடம்மின்விளங்குமிராசதக்கூற்றின்
விபட்டியாகும், பண்பொருவுவாக்காதியிந்திரியங்கள்பகருமிந்
தக்கருமவிந்திரியங்களைந்துள், விண்ணிடமாய்வசனிக்கும்வாக்
குவாயுவிடமாகப்பாணிமன்னிடுதலேற்றல், பண்ணுமனலிட
மாகப்பாதஞ்செல்லும் பாயுவப்பினிடமாக விசர்க்கம்பண்
ணும் (௪௮)

(இ—ள்) இன்னம் ஆகாசமுதலியபஞ்சபூதங்களுடைய (விளங்காநின்ற) இரஜோம்சத்திலே [பூதத்திற்கு ஒவ்வொருமாத்திரையெடுத்து] தனித்தனியேவைத்தது (இசைபொருந்திய) வாக்காதிகர்மேந்திரியமென்றுசொல்லப்படும். (சொல்லாநின்ற) இந்தக்கருமேந்திரியங்களைந்தனுள் ஆகாசத்தினிடமாய் வாக்குவசனிக்கும். வாயுவினிடமாகப்பாணி (மிகவும்) இடுதல் ஏற்றல்செய்யும். அக்கினியினிடமாகப்பாதம் நடக்கும். அப்புவினிடமாகப்பாயுரு [மலஜலாதிகளை]

வெளியிலேதள்ளும்.

வி௱—இன்னம் என்றபதம் எதுநோக்கிக்கூறப்பட்டது?

விடை—சூக்குமபஞ்சபூதங்களின் ரஜோகுணக்கூற்றில் முன்சமட்டியாக எடுத்ததுபோல் வியட்டியாகவும் எடுக்கப்போகிறோம் என்னும் பொருடோன்ற என்க.

விறு—ஆயின்மீண்டுமென்ன உண்டாயின?

விடை—வாக்காதி கர்மேந்திரியங்களாம்.

விறு—அப்படியானால் கருமேந்திரியங்களினிலக்கணமியாது?

விடை—சரீரத்திலுள்ள வாய்முதலியஸ்தானங்களில், வெளிப்படையாயில்லாமல், வசனித்தலாதிதொழிலியற்றுதற்குச்சாதனமாக இருப்பதாம்.

விறு—இந்தக்கர்மேந்திரியங்களெவை?

விடை—வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபத்தம் என ஐந்தாம்.

விறு—வாக்கிந்திரியத்தின் உற்பத்தி, தொழில், ஸ்தானம், அதிதேவதை இவைகள் யாவை?

விடை—ஆகாயபூதத்தினிடமாயுற்பத்தி; வசனித்தல் தொழில்; நாதுனிதாலுமூலம், மேலுதடு, கீழுதடு, இருதயம், கண்டம், தந்தம், பிரமரந்தரம் ஆகிய அஷ்டதானத்தைப்பற்றிய வாய்ஸ்தானம்; அக்கினி அதிதெய்வம்.

விறு—பாணி இந்திரியத்தின் உற்பத்தி, தொழில், ஸ்தானம், அதிதேவதை இவைகளெவை?

விடை—வாயுபூதத்தினிடமாயுற்பத்தி; கொடுக்கல் வாங்கல்தொழில்; கை ஸ்தானம்; இந்திரன் அதிதேவதை.

விறு—பாத இந்திரியத்தின் உற்பத்தி, தொழில், ஸ்தானம், அதிதேவதை இவைகளெவை?

விடை—தேயுபூதத்தினிடமாயுற்பத்தி; நடத்தல்தொழில், கால்ஸ்தானம்; வாமனன் அதிதேவதை.

விறு—பாயுரு இந்திரியத்தின் உற்பத்தி, தொழில், ஸ்தானம், அதிதேவதை இவைகளெவை?

விடை—அப்புபூதத்திடமாயுற்பத்தி; மல, ஜலம் கழித்தல் தொழில்;



குதம் ஸ்தானம்; பிராஜாபதி அதிதேவதை.

கவி

மண்ணிடமாய்க்கொண்டுபத்தஞ்சுகத்தைப்பண்ணும் வகுத்தவிவ்வைந்துமே வேறுவேறு,புன்மையா லொன்றன்வினையொன்று ஏற்றுதுரைத்தவியானன்முதலாமுலவையைந்து,
மண்மையாயிருத்தலிற் கன்மேந்தியங்களைந்தன் வழியாலுமைந்துதொழிலுமாற்றும், பண்ணுதொழிற்சாதனமாமிந்தப்பத்தும்பகரிராசதக்கூறும் பண்பினாலே. (௪௯)

உலவை=சாற்று.

(இ—ள்) பிருதிவியினிடமாக உபஸ்தம் சுகத்தைப்பண்ணும், (வகுக்கப்பட்ட) இந்த ஐந்தும் தனித்தனியேயிருந்ததுகொண்டு (ஒன்று) மறுதொழில் செய்யமாட்டாது. (சொல்லாநின்ற) வியானாதிவாயுகள் ஐந்து மாத்திரையும் ஒன்றாய்க்கூடினதுகொண்டு கர்மேந்திரியம் ஐந்தின் வழியினாலும் ஐந்து தொழில்களையும் செய்துமுடிக்கும். இந்த வாயுக்களைந்தும், கர்மேந்திரியங்களைந்தும் ஆகப்பத்தும் (சொல்லாநின்ற) இராஜோம்சமானபடியினால் (செய்தல் வடிவ) கிரியாசாதனமாயின.

விறு—ஆயின் உபஸ்த இந்திரியத்தின் உற்பத்தி, தொழில், ஸ்தானம், அதிதேவதை இவைகளெவை?

விடை—பிருதிவிபூதத்தினிடமாயுற்பத்தி; சுகஞ்செய்தல் தொழில்; ஆண்குறி அல்லது பெண்குறி ஸ்தானம்; யமன் அதிதேவதை.

விறு—இவைகளைத்தனித்தனிவைத்ததென்றதனால் அறியத்தக்கது யாது?

விடை—ஒவ்வொன்றும் தனித்தனியாயிருந்துகொண்டு பிறிதிந்தியங்களினபேக்ஷையின்றி தந்தம்தொழிலைச்செய்துமுடிக்கும், ஒன்று மற்றொன்றின் தொழிலைச்செய்யாது.

விறு—இவைகளைக் கிரியாசாதனதத்துவங்கள் என்று என்சொல்லவேண்டும்?

விடை--இப்பத்துத்தத்துவங்களுமில்லாதவிடத்து கிரியைகள் நிகழ்த

வில்லையாதலின் கிரியாசாதன கருவிகளாம்.

வினு—இவைகட்குக்கிரியாசாதனத்துவம் எப்படி சித்தித்தது?

விடை—வியானுதி, வாக்காதிஆகப்பத்தும் இரஜோகுணத்திலிருந் து உற்பத்தியாயிருப்பதாலும், ரஜோகுணமோசலனவடிவக்கிரியா ரூபமாயிருத்தலாலும்,இதினின்றுமுண்டாயதத்துவங்கட்கும்கிரியா சாதனத்துவம் சித்தித்தது.

வினு—வியானுதிவாயுக்களை சமட்டியாய் வைத்ததினுல் என்ன அறியத்தக்கது?

விடை—வியானுதி வாயுக்களென்பது தொழில்வேறுபாட்டால் ஒன்றற்குவந்த பெயர்களேயன்றித்தனித்தனியல்லவென்றும், அவை களெல்லாம் ஒன்றுசேர்ந்தே ஒவ்வொரு கர்மேந்திரியங்களின்வழித் தாயும் கிரியைக்குச்சாதகமாந்தன்மையை உண்டுபண்ணுகின்றன வெனவும், ஐந்து வாயுக்களில் ஒன்றின் கிரியை குறைந்தாலும் விய வகாரம் நடவாவெனவும் அறியத்தக்கது.

கவி

அகக்கரணமைந்துஞானேந்தியங்களைந்துவாயுக்களைந்தொ தொ ழில்களாற்றுந், தகக்கரணமைந்துமிந்தவிருபதானதத்துவ முஞ்சூக்குமதற்றனுவதாகும், சகக்கரணமாயையினிற்பதி பலித்தோன்சாற்றிந்தச்சூக்கதனுத்தனையவித்தை, தகக்கா ணமாய்வந்தசிவர்க்கெல்லாந்தனித்தனியேயொவ்வொன்று தந்தானன்றே. (ருய)

(இ-ள்) அந்தக்கரணம் 5. ஞானேந்திரியங்கள் 5. வாயுக்கள் 5. கர் மேந்திரியங்கள் 5. ஆக இருபதுதத்துவமுஞ்சூக்ஷ்ம சரீரமென்று சொல்லப்படும். இந்தச்சூக்குமசரீரத்தை(சகத்காரணமான) மாயாப் பிரதிபிம்பனுகவிருக்கின்ற ஈசுவரன், அவித்தியாப்பிரதிபிம்பராகிய சீவர்களனேகராகையால் ஒவ்வொரு சரீரமாகச்சிருஷ்டித்தளித் தான்.

வினு—மேற்கண்ட 20 தத்துவங்கட்குச் சூக்ஷ்மசரீரம் என்ற பெயர் எக்காரணம்பற்றிவந்தது?



விடை—ஸ்தூல சரீரத்தைப்போற்றூலமாய்த் தோன்ருமையாலும், சூக்குமபூதங்களிலிருந்துண்டாயிருப்பதாலும், சூக்கும சரீரமெனப் பட்டது.

வினு—இதற்குப்பரியாய நாமங்களெவை?

விடை—லிங்கசரீரம், நுண்ணுடம்பு, அருவுடம்பு எனச்சொல்வர்.

வினு—லிங்கசரீரமென்றபெயர் எதுகாரணம்பற்றி வந்தது?

விடை—லிங்கமென்ருல் குறி அல்லது அடையாளம்; இச்சூக்ஷ்ம சரீரமும் 20காரியமாகிய அடையாளங்களின் அனுமானத்தால் அறியக்கூடியதாயிருத்தலின் லிங்கசரீரமாம்.

வினு—அருவுடம்பென்ற பெயரேன் வந்தது?

விடை—நேத்திரேந்திரியத்திற்கு யோக்கியமாய வடிவுடைப்பொரு ளாயில்லாதிருத்தலால் அருவுடம்பாம்.

வினு—நுண்ணுடம்பென்ற பெயரேன் வந்தது?

விடை—பரமாணுவைவிட அதிநுட்பமாயிருத்தலால் நுண்ணுடம் பாம்.

வினு—இச்சூக்ஷ்மசரீரங்களை ஜீவர்களுக்கு ஈசுவரனுல் எதின் பொருட்டுக் கொடுக்கப்பட்டது?

விடை—ஜீவர்களாற் செய்யப்பட்ட புண்ணியபாபகர்மங்களின் பய னுகிய சுகதுக்கங்களை அனுபவித்தற்பொருட்டு போகசாதனமாகக் கொடுக்கப்பட்டது.

வினு—இதற்குப்போக சாதனத்தன்மை யெப்படிச்சித்திக்கின்றது?

விடை—ஸ்தூலசரீரத்தில் சூக்குமசரீரமிருந்தால் சுகதுக்கம் சித்திக் கிறது. எப்படியெனில் சூக்குமசரீரமில்லாத பிரேதத்தன்மையை யடைந்த தூலசரீரத்தில் அக்கினியின்தாபாதிகள்தோற்றுகிறதில்லை. ஆகவே எச்சரீரமிருப்பின் சுகதுக்கத்தோற்றமும், எச்சரீரமில்லா விடின் சுகதுக்கத்தோற்றமுமில்லையோ அதுசூக்குமசரீரமாம். ஆத லால் சூக்கும சரீரத்திற்குப்போகசாதனத்துவம் சித்திக்கிறது

வினு—நல்லது; இதற்குமுன் ஜீவப்பிரசங்கத்தில் சூக்குமசரீரம் அனுதியென்று கூறி இப்போது உற்பத்தியங்கீகரித்தல் முரணுமே?

விடை—இங்கு சிருஷ்டியென்பதனுல் முன் அடங்கியிருந்ததையே வெளிப்படுத்தப்பட்டதென்றும், நூதனமாயுண்டுபண்ணப்படவில் லையென்றும் அங்கீகரிக்கப்படுதலால் யாதும்முரண்படாவாறறிக.

வினு—இந்தச்சூக்கும சரீரங்களை ஈசுவரன்ருன் வெளிப்படுத்த வேண்டுமென்பதில் நியாயமென்ன?

விடை—ஜீவர்கள் தாமேசரீராதிகளைப்பெறுவதற்கு யோக்கியமல் லாத அஸ்வதந்திரமுடையவர்களாயிருப்பதுபற்றி அனுதிஜீவர்களை முன்னிட்டு பஞ்சகிருத்தியத்தைச்செய்வதற்காகவே அனுதிஸ்வதந்தி ரைச்வரியமுடைய ஈசுவரன் கங்கணம்பூண்டிருப்பதால் ஈசுவரனே சிருஷ்டித்துக்கொடுக்க நேரிட்டது.

வினு—இச்சூக்கும சரீர சிருஷ்டிவரை மூலப்பிரகிருதியில் என்ன அம்சங்கள்வரை சிலவாயின?

விடை—மூலப்பிரகிருதியின் சத்துவகுணத்தில் ஈசுவரனும், ரஜோ குணத்தில் ஜீவர்களும், தமோகுணத்தின் முக்குண பூதங்களில் சத் துவ, ரஜோகுணங்களில் சூக்குமசரீரங்களும் உண்டாயின என இச் சாஸ்திரங் கூறுவதால் அக்கூற்றுப்படி கூறிய அம்சங்கள்வரை சில வாயின என்னலாம்.

வினு—மீந்திருந்தது யாது?

விடை—தாமதத்திற்ருமதவடிவ சூக்குமபஞ்சபூதங்களாம்.

வினு—ஜீவர்களின் சூக்ஷ்மசரீரத்திற்காகச் சிலவானதமவில் சத் துவம், தமவில் ரஜசு ஆகிய இருகுணங்களும் பூருவாகச்சிலவாகி விட்டனவா? எப்படி?

விடை—சூக்குமபூதங்கள் எல்லையற்றிருத்தலின் மீந்துமிருக்கின் றன.

வினு—அதில் யுக்தி யாது?

விடை—சில யோகிகள் தமது அந்தக்கரணதோஷநிவர்த்திவாயி லாக எவ்வளவோ ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பாலிருக்கும் மற்ருேர் அந்தக்கரணத்திலிருக்கக்கூடிய எண்ணங்களை அறிந்து சொல்லுகிருர்கள். இதில் யோகியின் அந்தக்கரணவிருத்தியானது



வெளிச்சென்ருே அல்லது பிறருடைய அந்தக்கரணவிருத்தி யோ கியின் அந்தக்கரணவிருத்தியில்வந்துபொருந்தியோ முற்கூறிய ஞானமுண்டாகக்கூடியதென்பது யாவருக்கும் ஒப்பமுடிந்த விஷ யம். அவ்வித விருத்திகளின் போக்குவரவிற்கு அதன் ஸஜாதீயமான சூக்குமபூதங்கள் வியாபகமாகவிருந்தாலன்றி விருத்திகட்கு யாத்தி ரைகூடாவாதலால் சூக்குமபூதங்கள் மீந்திருக்கின்றனவென்றே சொல்லவேண்டும். எப்படியெனில் ஜலவடிவ அந்தக்கரணதேசத் தில் கிளம்புகிற அலைவடிவவிருத்திகள், தனது ஸஜாதீயமான சூக்கு மபூதமாகிய ஜலமிருக்குமிடம்வரை செல்லுவதாயிருக்கிறது. விஜா தீயமான பிருதிவியிருக்கிற இடத்தில் ஜலம் செல்லாதவாறுபோல் சூக்குமபூதமில்லாதவெற்றிடத்தில்விருத்திகள் செல்லமாட்டா. ஆத லால் விருத்திகள்வியாபகத்தையடைய அதன்ஸஜாதீயமான சூக்கும பூதங்களும் வியாபகமாகவேயிருந்துகொண்டிருக்கவேண்டுமென்று ணர்க.

வினு—நல்லது, தாமதத்திற்ருமதம் யேன் சேட்டிக்கவேண்டும்?

விடை—போகஸ்தானமான தூலசரீரங்கள் உண்டாகவேண்டி மீந் திருந்தன.

வினு—சூக்குமசரீரங்கள் பிரளயத்திற்காரணத்துடன் ஒற்றித்துநின் று மீண்டும் வெளிப்பட்டதுபோல், இத்தூல சரீரங்களும் உற்பத்தி யாகின்றனவா? எப்படி?

விடை—ஜீவன் அனுதியாகையால் சூக்குமசரீரங்கட்கு வெளிப்படு தல் மாத்திரமே சிருஷ்டியாகும், ஆனுல் தூலசரீரங்கள் அப்படியல் லாமல் நூதனமாகவேசிருஷ்டித்துக்கொடுக்கப்படுகிறதென்றுணர்க.

வினு—அப்படியானுல் சிருஷ்டி எத்தனை வகை?

விடை—சாமான்ய (பொது) கர்மஜன்யம் (உண்டாயது), விசேட கர்மஜன்யமென இருவகைப்படும்.

வினு—சாமான்ய கர்மமாவது யாது?

விடை—அநேக ஜீவர்களின் ஒருகர்மம்ஸாமான்யகர்மமாம்.

வினு—அநேகம் ஜீவர்களின் ஒருகர்மமாவது யாது?

விடை—ஜீவர்கள் பலவாயும், அந்தக்கரணமும் பலவாயுமிருந்தா

லும், ஒரே பலனைக்கொடுக்கக்கூடிய அநேக விருத்திகளை முன்னிட்டுதித்த கர்மம் சாமான்ய கர்மமாம்.

வினா—அனேக ஜீவர்களுக்குச்சமுதாயமாக ஒரு கர்மம் எப்படி உண்டாம்?

விடை—ஓர்குடும்பம், ஓர் ஊர், ஓர்தேசம், ஓர் உலகம் ஆகிய இவைகள் சம்பந்தப்பட்ட பலஜீவர்கள்கூடி ஓர்புண்ணியம் அல்லது ஓர் பாபமாகிய எதாவதொன்றைச்செய்வார்களாயின் அதுதான் அதுசம்பந்தமாய பலஜீவர்களுக்குப்பாத்தியப்பட்ட ஓர் பொதுக்கருமமும், அதின்பலமும் சம்பந்தப்பட்டபலஜீவர்களும் அனுபவிக்குமாறு உண்டாகக்கூடிய ஒரு கர்மமாம், இதனால் பல விருத்திகளில் உதிப்பினும் ஆகாரமொன்றாயிருத்தலின் கர்மமும், அதின் பலனும் ஒன்றாயிருத்தல்கூடும். இதையே சாமான்ய கர்மமென்பர்.

வினா—வேறுவடிவாயும் விளக்குக?

விடை—சர்வ ஜீவர்களும் நிவர்த்தியையுத்தேசித்து சுழுத்தி, பிரளயத்தையும், போகநுகர்ச்சியையுத்தேசித்து ஜாக்கிரத்தையும், சிருஷ்டியையும் விரும்புகிறார்கள். அவ்விச்சாரூபமான கர்மம் எகமாய் ஜீவசமுதாயத்தைப்பற்றிருப்பதால் அது சாமான்யகர்மமாம்.

வினா—இவ்வித சாமான்யகர்மபல சிருஷ்டி எப்படியிருக்கும்?

விடை—ஒன்றாயும், பிரதிகற்பத்திலும் அப்படியப்படி வெளிவருவதாயும், முத்திபரியந்தம் ஒரு வடிவாயுமிருக்கும்.

வினா—இவ்வித சாமான்ய கர்மத்தினாலுண்டாய சிருஷ்டி யாது?

விடை—அபின்னசத்தியின்விரிவிலிருந்து பஞ்சீகரணம்வரையுள்ள சிருஷ்டியாவும், சாமான்யகர்ம ஜன்யம் எனப்படும்.

வினா—கூறிய இவைகள் சாமான்யகர்ம ஜன்யமென எப்படிச்சொல்லலாம்?

விடை—சிருஷ்டியென்றால் உற்பத்தி. அவ்வித உற்பத்தியெல்லாம் ஜீவர்களது கர்மத்தையனுசரித்தேயன்றி ஈசுவரனிஷ்டப்படியன்று என்பதை முன்னும் நிரூபித்திருக்கிறது. இதில் எப்போதுபிரளயத்து அடங்கியிருந்த சர்வஜீவர்களும் சுகதுக்கவடிவ போகத்தையனுபவித்தற்பொருட்டு பரிபக்குவமாகி உன்முகமாகின்றார்களோ



## சூக்ஷ்ம சரீரம்

அப்போது ஆரம்பிக்கப்படுகிறது. அவ்வித சிருஷ்டி சர்வஜீவர்களுடைய பரிபக்குவ திசையைமுன்னிட்டுதிப்பதால் பஞ்சீகரணம்வரையிலுள்ள சிருஷ்டியானது அடங்கியிருந்து வெளிப்படுதல்வடிவ சிருஷ்டியாகிய சாமான்யகர்மஜன்யமாயே கொள்ளவேண்டும்.

வினா—விசேஷகர்மமாவது யாது? அதன் சிருஷ்டி யாது?

விடை—ஒவ்வொரு சீவர்களும் தனித்தனி தங்கள்தங்களுக்கென்று விவேக, அவிவேக பூர்வகமாய் இராகத்துவேஷாதிகளாற் செய்யப்பட்டஹித, அஹிதகர்மங்களாகிய புண்ணிய, பாப, மிசிரகர்மங்கள். அப்படியே பஞ்சீகரணத்தின் பின்னுண்டாகக்கூடிய ஸ்தூலசரீர சிருஷ்டியெல்லாம் விசேஷகர்மஜன்யங்களாகும்.

வினா—என் அவற்றை விசேஷகர்ம ஜன்யங்களாகக்கூறவேண்டும்?

விடை—தூலசரீரத்தினிடத்து அனுபவிக்கக்கூடிய சுக, துக்கங்களெல்லாம் அந்தந்த சரீரங்களில்மாத்திரம்பொருந்தி எனையசரீரங்களிற்பொருந்தாமையினாலும். தனித்தனிச்செய்யப்பட்டு அனுபவிக்கிறபடியாலும், அவற்றை விசேஷகர்மபலனாகக்கூறவேண்டிற்று.

வினா—கூறிய, சாமான்ய, விசேஷகர்மஜன்யப்பாகுபாட்டை ஒரே திருஷ்டாந்தத்தில் வைத்துக்காட்டுக?

விடை-குயவனால் அனேககடங்களைச்செய்யவேண்டுமென்று கொண்டுவரப்பட்டமண்ணானது பிசையப்படுத்திகிரியி(சக்கரத்தி)லேறும்வரைபொதுவாயும் ஒன்றாயும் எப்படியிருக்கிறதோ; அதுபோல் அனேகஜீவர்களுக்குசரீரங்களைச்சிருஷ்டித்துக்கொடுக்கவேண்டுமென்றுவந்த பஞ்சீகரணம்வரையுள்ள சிருஷ்டி பொதுவாயும், ஒன்றாயுமிருக்கிறது. மண் ஒன்றாயிருப்பினும் ஜனங்களது இஷ்டப்படி விசித்திரகர்மங்களால் தனித்தனையப்பட்டபாண்டவிசேஷங்கள் விசித்திரகர்மங்களால் தனித்தனியாயும்,பலவாயும் எப்படியிருக்கிறதோ: அதுபோல்பஞ்சீகரணத்தின்பின்ஜீவர்களின் இஷ்டமாகிய விசித்திரகர்மங்கட்குத்தக்கவாறு தனித்தனியாயும் அனேகமாயுமிருக்கிறது; என்பவற்றால் கர்மங்களைத் தெரிந்துகொள்க.

மொத்த வினாவிடைகள் 670.

வினாவிடைகள் 107.

ஸ்ரீ சுந்தரதேசிகன் மேலடி வாழ்க.

உ

ஸ்ரீ சுந்தரதேசிகன் சேவடி துணை

6. தூலசரீர கற்பனையைக்கூற அடியிடல்.

கவி

இன்னணஞ்சூக்கமெய்யியலியம்பினும்
அன்னமயம்மெனுந்தூலத்தாக்கமும்
பன்னுவம்பவங்கெடப்பரந்ததத்துவப்
பின்னலைப்பிரித்தலேபீடதாகுமால் (௫௧)

(இ-ள்) இப்படிச்சூக்ஷமசரீரகற்பனை சொல்லப்பட்டது. [இனி] (அன்னமயமாய) தூலபூத உற்பத்தியும் சொல்லுகின்றோம். (ஜனன மரணசம்சாரம் நீங்கவேண்டுமாயின் விஸ்தாரமாயிராநின்ற தத்துவங்களினுடைய ஒன்றற்குள் ஒன்றிருக்குந்தன்மையாகிய சேர்க்கையைப்பிரித்தறிதலே பெருமையாகும்).

ஆதலால் பஞ்சீகரணப் பின்னலை பிரித்தறியச்சாதகமாய பஞ்சீகரணகற்பனையை சொல்லப்போகிறார்.

வினா—சூக்ஷ்மசரீரகற்பனையெனவேன் சொல்லவேண்டும்?

விடை—சுத்தப்பிரஹ்மத்தில் இச்சூக்குமசரீரமும் கற்பனையென்பதை முமுக்ஷுக்கள் மறவாமற்றறித்தற்பொருட்டுச் சொல்லப்பட்டது.

7. இதுமுதல் 4 செய்யுட்களால் பஞ்சீகரணத்தையும், அதன் காரியத்தையும் கூறல்.

கவி

எஞ்சியதாமதவஞ்சப்பூதமைந்தையிவ்விரண்டாய்ப்பகுத்து
முதற்பாதியான, வஞ்சினையுநன்னான்காயாக்கிநானுமந்தந்
தப்பாதிவிட்டயலாநாலாய், விஞ்சுபூதங்கடமினைகளோ
டும்வேறரைக்காலரைக்காலாய்விரவுறேன, பஞ்சிகரணம்
மெனவேபகராகும்பகரிவற்றிற்குணங்கணிற்கும் பண்பு
சொல்வாம். (௫௨)

(இ—ள்) [அஃதெங்ஙனமெனின்] (மிஞ்சிய) தமோம்சமாயிருக்கின்ற ஐந்துபூதங்களையும் [ஒவ்வொன்றை] இரண்டிரண்டாகப்பகுத்து முதற்பாதி ஐந்தையும் [ஒவ்வொன்றை] நான்குநான்காகப்பகுத்து (நான்கையும் அந்தந்த) [இரண்டாம்பாதி ஐந்தில் தன்னம்சத்து]டனே கூட்டாமல் அந்நியமாய நான்கு பூதங்களுடன் (மிஞ்சியிருக்கும் பூதங்களுடைய அரைப்பாகத்தோடும் வேறாயிராநின்ற) அரைக்கால் அரைக்கால் மாத்திரையைக்கொடுக்கின்றது பஞ்சீகரணம் என்று சொல்லப்படும். (சொல்லப்பட்ட இவைகளிற் குணங்கள் கலந்துநிற்கக்கூடிய முறையையும் சொல்லுவோம்).



வினா—தூலசரீர உற்பத்தியினிமித்தம் மிஞ்சியிருந்த சூக்குமபஞ்சபூதங்களின் தமோகுண அம்சம்யாதாயிற்று?

விடை—ஜீவர்களுக்குத் தூலபோகமுண்டாகும் நிமித்தம் ஈசுவரபார்வையால் ஸ்தூலமாகத்தடித்தது.

வினா—என் தூலமாகவேண்டும்?

விடை—ஒன்றற்கொன்றுகலத்தல்வடிவ, பஞ்சீகரணமாமாறு தூலமாயின.

வினா—பஞ்சீகரணம் என் செய்யவேண்டும்?

விடை—மண், தண்ணீர், பொடிமணல், இவைகள் தனித்தனியிருப்பின் பாண்டம்செய்யமுடியாததுபற்றி எப்படிக்குயவனாற் கலத்தல் செய்யப்படுகிறதோ; அதுபோல், தூலசரீரங்களையுற்பத்திசெய்வதற்குத்தனித்தனியிருக்கும் பஞ்சபூதங்களையும் கலத்தல்செய்யவேண்டியது அவசியமே.

வினா—பஞ்சீகரணமென்றாலென்ன?

விடை—அவ்வைந்தாகச்செய்தல் எனப்படும்.

வினா—பஞ்சீகரணம் எப்படிச்செய்வது?

விடை—ஐந்து தூலபூதங்களையும் இரண்டிரண்டுபாகமாகப்பத்தாக்கி அவ்விதம்பாகம்பண்ணின இரண்டையும் தனித்தனிவைத்து அதில் ஒரு பாதியை, ஒவ்வொன்றையும் நன்னான்காக்கி அந்த நான்கையும் அதின்பாதிக்குக்கொடாமல் மற்றைய நான்குபூதங்கட்கும்கொடுத்து அப்படியே மற்றைப்பூதங்களையும்கலக்கச்செய்வது பஞ்சீகரணமாம்.

வினா—இதில் அனுகூலமாயயுக்தி யாது?
விடை—ஓர் ஐந்து சினேகிதர்கள் மா, பலா, வாழை, ஆரஞ்சு, ஆப்பிள் இவைகளைத்தனித்தனி ஒவ்வொருவரும்ஒவ்வொன்றுவாங்கி ஒன்றாய்த்தின்னத்தொடங்கி ஒவ்வொருவரும்தங்கள்தங்கள்பழத்தை இரண்டுபாகமாக்கி ஒருபாதியைத்தங்களுக்கும் மற்றைப்பாதியை நான்காக்கி தாமொழிந்த நான்குசிநேகிதர்கட்கும் ஒவ்வொருவரும் கொடுத்துச்சாப்பிட்டு எல்லோரும் சமபாகமாய் எல்லாவற்றையும் சாப்பிட்டவர்களானார்கள் என்பதனாலுமுய்த்துணர்க.
வினா—இவ்விதம் பஞ்சீகரணம் செய்தபின் பூதங்கள் எத்தன்மைத்தாயிருந்தன?
விடை—ஒவ்வொரு பூதங்களும் தன்னம்சத்தாற்பாதியும், வந்து சேர்ந்த இதர அம்சங்களால் நாலுஅரைக்கால்கொண்ட அரையும், ஆக ஒன்றாக விளங்கின.

கவி

விளம்புபஞ்சீகரணஞ்செய்நாலபூதவிணிற்பரிசரூபரசகந்த
மான, வளமில்குணநான்குமதில்வியாப்பியமானமாலையினாற்
காணுமன்மறைந்துநிற்க, வுளதனதுகுணமானவொலியும்வா
யுவுள்ளுருவவிரசகந்தகுணமோர்மூன்றுங், குளமதனினீ
ரென்னவியாப்பியமாகுங்குணமதனாற்காணுமன்மறைந்து
நிற்க. (௫௩)

(இ-ள்) (சொல்லாநின்ற) [இப்படி] பஞ்சீகரணம்பண்ணின நால பூதங்களிலே ஆகாசத்திலே பரிச, ரூப, ரஸ, கந்தமாகிய (வளப்பமில்லாத)நான்குகுணங்களும் வியாப்பியமானபடியினாற் அதிருசியமாய்ப் போகநிசகுணமாகியசத்தமும், வாயுவிலே ரூப, ரஸ, கந்தம் ஆகிய மூன்றுகுணங்களும் (தடாகத்துள்ளிருக்கின்ற தண்ணீர்போல) வியாப்பியமானபடியினால் அதிருசியமாய்ப்போக,
வினா—இவ்விதம் பஞ்சீகரணமானபிறகு பூதங்களின்குணங்கள் எவ்விதமாயின?
விடை—அந்தந்தப்பூதங்களின் தன்குணமும், அதனதன்காரணபூதங்களின் குணமும், வெளிப்படையாயும்; கீழ்ப்பட்டபூதங்களின் குணங்கள் உள்ளடங்கியதாயுமேற்பட்டன.



வினா—ஆகாயத்தின் திருசிய, அதிருசியங்களில் யுக்தியாது?
விடை—எந்த இடத்தில் கைகொட்டினும் சத்தமுண்டாவதால் சத்தம் திருசியமாயும்; ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தங்கள் ஆகாயத்திலில்லாவிடில் ஆகாயமானது தன்னிடம் வகிக்கக்காரணமில்லையாதலின் அனுமானத்தால் அக்குணங்களை அதிருசியமாயுங்கொள்ளத்தக்கது.
வினா—திருசியம்போல் அதிருசியத்தையும் என் பிரத்தியக்ஷமாய்க் காட்டக்கூடாது?
விடை—திருசியமென்பது வெளிப்பட்டது, அதிருசியமென்பது வெளிப்படாது அடங்கியிருந்தது எனப்பொருள்படுவதால் அதிருசியகுணத்தை அனுமானத்தானன்றிப்பிரத்தியக்ஷமாய்க்காட்டமுடியாது.

கவி

காரணமாங்குணமானவொலியும்பின்னர்க்காரியமாந்தன்கு
ணமாம்பரிசமும்மங், காரகனுமதிலிரசங்கந்தமாம்புகளகுண
மும்வியாப்பியமாற்காணுதாகக், காரணமாங்குணமானசத்த
மூறுங்கவின்றனதுகுணமானவடிவமும்பின், வாரியதின்ம
ணம்வியாப்பியமதானமாலையினாற்காணுமன்மறைந்துநிற்க. (௫௪)

(இ-ள்) காரணகுணமாகிய சத்தமும், (பின்னுண்டான)நிசகுணமாகிய பரிசமும், அக்கினியிலே ரஸ, கந்தமாகிய இரண்டுகுணங்களும் வியாப்பியமானபடியினால் அதிருசியமாய்ப்போக, காரணகுணங்களாகிய சத்த, பரிசமும் (அழகிய) நிசகுணமாகிய ரூபமும் (பின்)அப்புவிலே கந்தகுணம் வியாப்பியமானபடியினால் அதிருசியமாய்ப் போக,
வினா—வாயுவின்திருசிய, அதிருசியகுணங்களில் யுக்தியாது?
விடை—காற்றடிக்குங்கால் விற், விற், என்றசத்தத்தினாலும், வாயு சரீரத்திற்படுங்காலுண்டாம் உணர்ச்சியினாலும்,திருசியகுணங்களைப்

பிரத்தியக்ஷத்தாலும்; ரூபமுள்ளபதார்த்தங்களைச்சலிக்கச்செய்தலின் ரூபமும், சர்ப்பாதிகளால் உட்கொள்ளப்படுதலின்ரஸமும், நற்கந்த துர்க்கந்தங்களோடு கலந்துகொள்ளுதலின்கந்தமும் ஆகிய அதிருசியகுணங்களை அனுமானத்தினாலும் அறிக.

வினா—தேயுவின் திருசிய, அதிருசிய குணங்களில் யுக்தியாது?

விடை—அக்கினி எரியுங்காலத்து சட,சட என்கிறசத்தத்தினாலும், சரீரத்திற்படும் உணர்ச்சியினாலும், பார்வைக்குயோக்கியமாயரூபத்தினாலும் திரிசியகுணங்களைப்பிரத்தியக்ஷத்தாலும்; நெருப்புக்கோழியால் விழுங்கப்படுதலின்ரஸமும், நற்கந்த, துர்க்கந்தங்களோடுவிரவலின்கந்தமுமாகிய அதிருசிய குணங்களை அனுமானத்தாலுமறிக.

கவி

மூலகுணமானவொலிபரிசரூபமுந்தனதுகுணமான சுவையு
மண்ணில், வாலொலிநற்பரிசவுருவிரசகந்தமாங்குணமும்வ
யங்கிடுமச்சூக்கபூதப்,பாலிருந்துசூக்கதனுப்பவித்தவாபோற்
பஞ்சிகிருதப்பூதமவற்றினின்றும், தோலுதிரமாஞ்சஞ்சனு
யுவத்திதோய்மச்சையெனவாறுதத்துவம்மாய் (ருரு)

(இ-ள்) காரணகுணங்களாகிய சத்த, பரிச ரூபமும் நிசகுணமாகிய ரசமும்; பிருதிவியிலே [காரணகுணங்களாகிய] (பரிசுத்தமான) சத்த, (நல்ல) பரிச, ரூப, ரசமும் [நிசகுணமாகிய] கந்தமும் திருசியமாம். முன்சூக்குமபூதங்களிலிருந்தும் சூக்ஷுமசரீரங்கள்தோன்றினாற்போலப்பஞ்சீகரணம்பண்ணின ஸ்தூலபூதங்களினின்றும் (1) தோல் (2) உதிரம்=இரத்தம் (3) மாமிசம் (4) சனுயு=நரம்பு (5) அத்தி=எலும்பு (பொருந்தாநிற்கும்) (6)மச்சை=கொழுப்பு என்று ஆறுதத்துவமாய்.

வினா—அப்புவின் திருசிய, அதிருசிய குணங்களில் யுக்தியாது?

விடை—அப்புவில், ஜலமானது ஓடுங்காலுண்டாம் குழுகுழுவென்கின்ற சப்தத்தினாலும், சரீரத்திற்படுங்காலுண்டாம் சீதளபரிசத்தினாலும், நேத்திரயோக்கியமாயரூபத்தினாலும், உட்கொள்ளுங்காலுண்டாம்ரசத்தினாலும்திருசியகுணங்களைப்பிரத்தியக்ஷத்தாலும்; நற்கந்த



துர்க்கந்தங்கள் ஜலத்துடன்கலந்துகொள்ளுதலின் அதிருசியகுணத்தையனுமானத்தாலுமறிக.

வினா—பிருதிவியின் திருசிய, அதிருசியகுணங்களில் யுக்தியாது?

விடை—பிருதிவியில், வண்டிகள் செல்லுங்காலுண்டாம் கட, கடவென்றசத்தத்தினாலும், தொடுகையிலுண்டாம் ஸ்பரிசத்தினாலும், நேத்திரயோக்கியமாயரூபத்தினாலும், உட்கொள்ளுங்காலுண்டாம் மண்ணென்றருசியினாலும், முகரிலுண்டாம் பிருதிவியென்ற வாசனையினாலும் அறியப்படுதலின் திருசியகுணங்களைப்பிரத்தியக்ஷமாயறிக.

வினா—பிருதிவியில் அதிருசியமியாது?

விடை—ஒன்றுமில்லை.

வினா—என் அப்படிச்சொல்லவேண்டும்?

விடை—பிருதிவிக்குக்கீழ்ப்பட்ட பூதங்களில்லாததால் அதிருசிய குணங்களுமில்லை.

வினா—பூதத்தின் இலக்கணமியாது?

விடை—புற இந்திரியங்களாற் கிரஹிக்கப்படும் விசேடகுணமுடைமை எதற்கிருக்கிறதோ அது பூதமாம்.

வினா—புற இந்திரியங்களெவை?

விடை—சுரோத்திரம், துவக்கு,சட்சு,சிங்ஙுவை, ஆக்கிராணம் என்ற முற்கூறிய ஞானேந்திரியங்களாம்.

வினா—பஞ்சீகரணமடைந்த ஆகாயாதி பஞ்சபூதங்களின் தருமம் யாது?

விடை—முறையே நிராகாரம், சலனம், வெப்பம், நெகிழ்ச்சி,கடினமென அறிக.

வினா—அவைகளின் தொழில்கள் எவை?

விடை—முறையே இடங்கொடுத்தல், உலர்த்தல், தகித்தல், திரட்டல், பொறுத்தலெனவறிக.

வினா—அவற்றின் அதிதேவதைகளெவை?

விடை—முறையே சதாசிவன், மகேசுவரன், உருத்திரன், விஷ்ணு, பிரமன் எனவறிக.

வினு—இவ்விதபஞ்சபூதங்களினின்றும் எந்தக்கிரமத்தால் தூலசரீரங்கள் உற்பத்தியாகின்றன?

விடை—ஜீவர்கள்முந்திய சரீரத்தைவிட்டபின், தங்களதுபுரியட்டகசரீரத்தோடு வெளிப்பட்டு, ஆகாயம், வாயு, அக்கினி, புகை, மேகம், வருஷதாரை இவைகளோடு கலப்புற்று, பூமியிலிறங்கி, சமுத்திரம், நதி, வாவி, கூபமாதியஜலங்கள்; வித்து, வேர், கிழங்காதிகள்; புல், பூண்டு, செடி, கொடி முதலானவைகள்; நெல், உழுந்து முதலதானியங்களாகிய இவைகளில் எதாவதொன்றிற் பிரவேசித்து அன்னமயமாகி அவரவர்களுடைய புண்ணியபாபங்கட்குத்தக்கதாக, சரீரங்களையடைந்து, சுக்கிலசுரோணித வடிவமுற்று, மாதாவின் கருக்குழியிற் பொருந்தி அவ்வச்சாதிகட்குத்தக்கதாகக் கெர்ப்பீகரி (ஜனி)த்து தூலசரீரத்துடன் வெளிவருவர். இது சரீரத்தைப்பெறுமுறைகளில் சாதாரணமாயதொன்றும்.

வினு—இவ்விதகிரமத்தாலுண்டாம் ஆறு தத்துவங்கள் எவை?

விடை—சனுயு, அத்தி, மச்சை மூன்றும் சுக்கிலபரிணமமாயும்; சர்மம், உதிரம், மாமிசம்மூன்றும்சுரோணிதபரிநாமமாயும்என ஆகும்.

வினு—சிலவிடங்களில் சப்த (ஏழு) தாதுக்களாகக்கூறுவானேன்?

விடை—மச்சைக்கு வேறில்லாத சுக்கிலம் என்னும் தத்துவத்தை முன்னிட்டு எழென்பர். இங்கு மச்சையிலடக்கினபடியாய் ஆறு எனக்கூறப்பட்டது.

வினு—இதற்குஷட்கோசாத்மகம் என்ற பெயர் எதினுல் வந்தது?

விடை—உரோமத்தால் சர்மமும், சர்மத்தால் உதிரமும், உதிரத்தால் மாமிசமும், மாமிசத்தால் சனுயுவும், சனுயுவால் அத்தியும், அத்தியால் மச்சையும், மறைக்கப்பட்டிருத்தலின் ஷட்கோசாத்மகமென்னப்பட்டது.

வினு—இத்தூலசரீரத்தினிலக்கணமியாது?

விடை—ஸ்தம்பம்போலப் பிரத்தியக்ஷப் பிரமாணத்தாலறியப்படுவதாயும், சர்மமுதலிய தத்துவங்களாலமைக்கப்பட்டுமிருப்பது, தூலசரீரமாம்.



## தூல சரீரம்

வினு—இதற்குப்பரியாய நாமமியாது?

விடை—போகாயதனமென்று பெயர்.

வினு—போகாயதனமென்றுலென்ன?

வினு—சுகதுக்கபோகங்கள் அனுபவித்தற்குரிய இடம்.

வினு—போகமென்றுலென்ன?

விடை—சுகதுக்கங்களிரண்டிலொன்று புலப்படத்தோன்றல்.

வினு—இத்தூலதேகத்தில்வந்து பொருந்தும் சுகம் யாது?

விடை—சந்தனம், புஷ்பமாதிகளை முன்னிட்டு இது நல்லதுயென்னும் புத்தியுடன் அனுபவிப்பதாம்.

வினு—இத்தூலதேகத்தில்வந்து பொருந்தும் துக்கங்களெவை?

விடை—ஆதியான்மிகதுக்கம், ஆதிபௌதிகதுக்கம், ஆதிதெய்வீகதுக்கமெனமூன்றும்.

வினு—ஆதி ஆன்மிகமென்றுலென்ன?

விடை—ஆன்மாவையாசிரயித்திருக்கும் இந்திரியாதிகளாம்.

வினு—அதின் துக்கமாவதுயாது?

விடை—தலைவலி, கால்வலி முதலனவாம்.

வினு—ஆதிபௌதிகமென்றுலென்ன?

விடை—பூதத்தின் காரியம் பௌதிகமாம்.

வினு—அதின் துக்கமாவது யாது?

விடை—பௌதிகரூபமானபுலி, கரடி, திருடர் முதலியோராலுண்டாவதாம்.

வினு—ஆதி தெய்வீகமென்றுலென்ன?

விடை—தெய்வத்தாலாயதாம்.

வினு—அதின் துக்கமாவது யாது?

விடை—இடிவிழுதல், சுவர்விழுதல்களாலுண்டாவதாம்.

வினு—இத்தூலசரீர தர்மங்களெவை?

விடை—பெயர், ஜாதி, நிறம், சம்மந்தம், பரிமாணம், பிறப்பு, இறப்பு, முதலானவைகளாம்.

வினு—இத்தூலசரீரத்துண்டாம் விகாரங்களெவை?

விடை—கருவாசத்திருதல், சனித்தல், வளர்தல், பருத்தல், குறைதல், மரித்தல் என ஆறும்.

8. இதுமுதல் 3 செய்யுட்களால் தூலசரீரகற்பனையைக்கூறல்

சராயுசமண்டசஞ்சுவேதசம்முற்பீசம்மானசதுர்பிறப்பாய்
விராவிகலோகம்மோடுபரலோகபுத்தியிருவகையுமீயும், பரா
வுமானிடத்தனுவுத்தமச்சாதிபரலோகப்புத்திபாழாய்த், த
ரரதலமாமிகலோகப்புத்திமாத்திரமடையுந்தன்மைவாய்ந்த
(ருசு)

(இ-ள்) சராயுசம், அண்டசம். சுவேதசம், உற்பீசமாகியநால்வகைப்பிறப்பாய், இகலோகபுத்தி, பரலோகபுத்தி ஆகிய இருவகையையும் கலந்து கொடாநின்ற (புகழ்பெற்ற) மானிடசரீரம் உத்தமஜாதி, பரலோகபுத்தியை மறைத்து (பூவுலமாகிய) இகலோகபுத்திமாத்திரம் வந்துபொருந்தும் தன்மையுடைய,

வினா—சராயஜம் என்றாலென்ன?

விடை—கருப்பையினின்றுண்டாம் மக்கள், ஆடு, மாடு, முதலன.

வினா—அண்டஜம் என்றாலென்ன?

விடை—முட்டையினிடமாய்ப்பிறக்கும் கோழி, பாம்பு முதலன.

வினா—அவேதஜம் என்றாலென்ன?

விடை—வியர்வையினின்றுண்டாம் பேன், கொசுகு முதலன.

வினா—உத்பிஜம் என்றாலென்ன?

விடை—வித்து, வேர், கிழங்கு இவைகளினின்றுண்டாம் செடி, கொடி, புல் முதலன.

வினா—இந்நால்வகைத்தோற்றந்தவிர வேறேசிருஷ்டியாது?

விடை—மனோசங்கற்பத்திலுண்டான பிருகுமுதலியோர்மானஸரென ஒருவகைகூறுவர்.

வினா—ஜாதியினிக்கணமியாது?

விடை—பலவற்றைத்தொடர்ந்து, ஒன்றாய்த்தோன்றுந்தன்மையதுஜாதியாம்.

வினா—அவ்விதஜாதி எத்தனைவகை?



விடை—இகலோக, பரலோக பேதத்தாலிருவகையாம்.

வினா—அவை ஒவ்வொன்றுமெத்தனை விதம்?

விடை—உத்தமம், மத்திமம், அதமம், எனமூவகையாம்.

வினா—இந்தமூவகையும் எத்தனை பிரிவுடைத்து?

விடை—ஒவ்வொன்றும் உத்கிருஷ்டம், மத்திமம், சாமானியம் என மூவகைத்து.

வினா—உத்தம ஜாதியாவது யாது?

விடை—இம்மைப்பயன், மறுமைப்பயன், வீட்டின்றன்மை இவற்றையறியுந்தன்மையுடையது உத்தமஜாதி.

வினா—அப்படியானால் இகலோகத்தில் உத்தமஜாதியாவது யாது?

விடை—மானிட சரீரம்.

வினா—மானிடசரீரத்தை உத்தமஜாதியெனக்கூறுவானேன்?

விடை—ஈசுவரசிருஷ்டியிலகப்பட்ட 84 லக்ஷயோனிபேதங்களுள் மானிட ஆக்கையிலேயே நித்தியசுகவாழ்வை அடைதற்குரியசாதனங்களிருப்பதாலும்; அசத்தை அசத்தென்றறியச்சொப்பனுனுபவமும், சத்தைச்சத்தாயறிய சுழுத்தியனுபவமும் பொருந்தியிருக்கும்பேதுவால், தேவர்களும் மானிடஜன்மத்திற்கு வருதலினாலும்; மானிடன் என்னும்பதத்தாற்பொலிந்த அறிவையுடையவன் என மானிடன் என்னும்பதத்தாற்போருள் கோடலினாலும்; ஏனையஜீவர்களைவிட இதில் ஆறுவதாய உணர்ச்சியிருப்பதினாலும், உத்தமஜாதியெனப்பட்டது.

வினா—இந்த மானிடசரீரம் என்னகர்மத்தாலாயது?

விடை—புண்ணியம், பாபம், மிசிரம், எனமூவகைக்கர்மங்களில் மிசிரகர்மத்தாலாயது.

வினா—மிசிரகர்மமென்றாலென்ன?

விடை—புண்ணியமும், பாபமும் அனேகமாய் சமத்துவமாயுள்ளது

வினா—மிசிரகர்மத்தின் பயனாகிய இகலோக உத்தமஜாதியில் உத்கிருஷ்டபலமியாது?

விடை—நிஷ்காம்யமுதலசாதனங்களை யனுஷ்டித்து சித்தசுத்திமுதல் ஜீவன்முத்திசுகம்வரையடைந்திருக்கும் மானிடசரீரமாம்.

வினு—மிசிரகர்மத்தின்பயனுய இகலோக உத்தமஜாதியின் மத்திம பலமியாது?

விடை—அவனவனுக்கேற்பட்ட வருணாச்சிரமயோக்கியமாய ஐஸ்வரியசம்பத்துடனிருக்கும் காமியகர்மசரீரப்பிராப்தி.

வினு—மிசிரகர்மத்தின்பயனுய இகலோக உத்தமஜாதியின்சாமான்ய பலமியாது?

விடை—குஷ்டம், பாண்டுமுதலிய ரோகத்துடன்கூடிய சரீரப்பிராப்தி.

## கவி

விலங்குடனேபறவைமுதலானவைமத்திமச்சாதி விளம்பிரண்டு,தலங்கிளர்புத்தியையுமறந்திருக்கின்றதாவரங்கடாழ்ந்தசாதி, இலங்கிந்தப்படிபதிவிதத்துவமாம் பூவுலகமிடைக்கண்டென்ன, சலங்கனல்கால்காயமெனுந்தத்துவங்களான நிரைநிரையாய்நிற்கும் (௫௭)

(இ—ள்) பசுபக்ஷிமுதலானவை மத்திமச்சாதி (சொல்லாநின்ற) இரண்டுலோக(த்திலும் ஒளிரும்) புத்தியையும்மறந்திருக்கின்றமாம், கொடி, செடி முதலியவை அதமசாதி. இந்தப்படி (விளங்காநின்ற) பிருதிவிதத்துவமாயிருக்கின்ற பூலோகத்திற்கண்டாற்போல அப்பு, அக்கினி; வாயு, ஆகாசம் என்னப்பட்ட தத்துவங்களாய் நிரைநிரையேயிருக்கின்ற,

வினு—மத்திமஜாதியாவது யாது?

விடை—பரலோக உணர்ச்சியின்றி,ஓரறிவுமுதல் ஐயறிவுவரையுள்ள பசு, பக்ஷியாதிகளாம்.

வினு—ஈரறிவுள்ள சரீரங்கள் எவை?

விடை—ஸ்பரிச, ரஸ, அறிவுடைய இப்பி சங்கு முதலன.

வினு—மூவறிவுள்ள சரீரங்கள் எவை?

விடை-ஸ்பரிச, ரஸ, கந்த, அறிவுடைய எறும்பு, கரையான்முதலன.

வினு—நான்கறிவுள்ள சரீரங்கள் எவை?

விடை—ஸ்பரிச, ரஸ, கந்த, ரூப அறிவுடைய தும்பி, வண்டுமுதலன



வினு—ஐயறிவுள்ள சரீரங்களெவை?

விடை—சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்த அறிவுடைய பசு பக்ஷி முதலன.

வினு—இப்பசுபக்ஷியாதிகள் என்னகர்மத்தாலுண்டாயது?

விடை—முற்கூறியபுண்ணியம், பாபம், மிசிரமெனமூன்றனுள் பாபகர்மத்தினுலுண்டானவைகளாம்.

வினு—பாபகர்மபயனுகிய இகலோகமத்திமஜாதியில் உத்கிருஷ்ட (கொடிய) பலமியாது?

விடை—தேள், பாம்பு, புலி, கரடி, முதல சரீரப்பிராப்தி

வினு—பாபகர்மபயனுய இகலோக மத்திம ஜாதியில் மத்திம பலமியாது?

விடை—எருமை, பருந்து, முதல சரீரப்பிராப்தி.

வினு—பாபகர்மபயனுகிய இகலோகமத்திமஜாதியில் சாமான்ய பலமியாது?

விடை—பசு, யானை, குதிரை முதல சரீரப்பிராப்தி.

வினு—அதமஜாதியினிலக்கணமியாது?

விடை—இரண்டுலோகத்துப்புத்தியுமின்றி ஸ்பரிச அறிவாகிய ஓரறிவுடன்கூடியதாம்.

வினு—மரம், செடி, கொடிகளை ஓரறிவுடையதென எப்படிச்சொல்லலாம்?

விடை—வெட்டியபின் பட்டுப்போவதாலும், அக்கினிசம்பந்தத்தாற் பட்டுப்போவதாலும்,ஜலசம்பந்தத்தால்அதற்குத்தக்கபடிவிர்த்தியாவதாலும்,ஸ்பரிச அறிவையுடையதென அனுமானத்தாற்சொல்லலாம்.

வினு—இந்த அதமஜாதி என்னகர்மத்தாலுண்டாயது?

விடை—பாபமே அதிகமாயும், புண்ணியம் மிக அற்பமாயுமுள்ளபாபகர்மத்தாலுண்டாயது.

வினு—பாபகர்மபயனுகிய இகலோக அதமஜாதியில் உத்கிருஷ்ட பலமியாது;

விடை—கள்ளி, பூனைக்காஞ்சி முதல சரீரப்பிராப்தி.

வினா—பாபகர்மபயனாகிய இகலோக அதன்மஜாதியில் மத்திமபல மியாது?

விடை—புளி, மா, பலாமுதல சரீரப்பிராப்தி.

வினா—பாபகர்மபயனாகிய இகலோக அதன்மஜாதியில் சாமான்ய பலமியாது?

விடை—அரசு, துளசி, வில்வம்முதல சரீரப்பிராப்தி.

## கவி

பிதிருலகமொடு தெய்வவுலகியக்கர்பிறங்குகந்தருவருலகோ
டுசித்தர்,பதியிவைகடமினுமுடுவடிவாய்த்தோரன்றும்பான்ம
திமேமுதலானபிதிரர்பானு, முதலவாந்தேவர்கந்தருவர்சித்
தர்மொழிந்தவுத்தமச்சாதிகாமதேனு,மதவயிராவதமன்னங்
கருடன்மத்திமச்சாதியதமங்கற்பகமேயாதி. (௫௮)

(இ-ள்) பிதிர்லோகம், தெய்வலோகம், யக்ஷ (பிரகாசியாநின்ற) கந்தருவ லோகம், சித்தர்லோகங்களினும் நக்ஷத்திரமாகத்தோற்றுகின்ற (வெள்ளிய) சந்திரன்முதலான பிதிர்க்கள், சூரியன்முதலான தேவதைகள்,கந்தர்வர்சித்தரென்னப்பட்டவர்கள் உத்தமஜாதி. காமதேனு (மதம்பொருந்திய) ஐராவதம், அன்னம், கருடன் [முதலானவை] மத்திம ஜாதி; கற்பகவிருக்ஷம் [பாரிஜாதம் முதலானவை] அதன்மஜாதி.

வினா—பரலோகமாவதியாது?

விடை—இப்பூவுலகத்திற்கன்னியமாய அப்பு, தேயு, வாயு ஆகாசம்
இவைகளைப்பிரதானமாயுடைய பிதிர்லோகம், தேவலோகம், யக்ஷ,
கந்தர்வலோகம், சித்தர்லோகம் என்பவைகளாம்.

வினா—பரலோகத்தில் உத்தமஜாதியாவார் எவர்?

விடை—இகலோகத்திற் புண்ணியாதிசத்கருமங்களைச்செய்து, பர
லோகங்களிற்போகங்களையநுபவிக்கும் சரீரங்களைப்பெற்றவர்கள்.

வினா—இவர்களைப்பரலோக உத்தமஜாதியென்று ஏன் சொல்ல
வேண்டும்?

விடை—மானிடரால் வணங்கத்தக்கவர்களாயிருத்தலினாலாம்.



வினா—இவ்வுத்தமஜாதி சரீரம் என்னகர்மத்தாலுண்டாயது?

விடை—புண்ணிய கர்மத்தாலுண்டாயது.

வினா—புண்ணிய கர்மமென்றுலென்ன?

விடை—புண்ணியம் மிகுதியாயும், பாபம் குறைவாயுமுள்ள கர்மமாம்.

வினா—அப்படியானால் அப்புலோகமாகிய பிதிர்லோகத்தில் உத்தமஜாதியாவார் யாவர்?

விடை—சந்திரன் முதலிய பிதிர்க்களாம்.

வினா—தேயுலோகமாயதேவலோகத்தில் உத்தமஜாதியாவார்யாவர்?

விடை—சூரியன்முதலான தேவதைகளாம்.

வினா—வாயுலோகமாய யக்ஷகந்தர்வ லோகத்தில் உத்தமஜாதியாவார் யாவர்?

விடை—யக்ஷர், கந்தருவர் முதலாயினோர்களாம்.

வினா—ஆகாசலோகமாய சித்தர்லோகத்தில் உத்தமஜாதியாவாரியாவர்?

விடை—சித்தர் முதலாயினோர்களாம்.

வினா—புண்ணியகர்மபயனாய பரலோக உத்தமஜாதியில் உத்கிருஷ்டபலம் யாது?

விடை—இரண்யகர்ப்பாதி சரீரப்பிராப்தி.

வினா—புண்ணியகர்மபயனாய பரலோக உத்தமஜாதியில் மத்திம பலமியாது?

விடை—தெய்வேந்திராதி சரீரப்பிராப்தி.

வினா—புண்ணியகர்மபயனாயபரலோக உத்தமஜாதியில் சாமானிய பலமியாது?

விடை—யக்ஷ, ராக்ஷஸ சரீரப்பிராப்தி.

வினா—புண்ணியகர்மபயனாய பரலோக மத்திமஜாதி எவை?

விடை—காமதேனு, ஐராவதம், அன்னமுதலிய சரீரப்பிராப்தி.

வினா—இவற்றை ஏன் மத்திமஜாதியெனச் சொல்லவேண்டும்?

விடை—பசு பக்ஷி வடிவாயிருத்தலின்.

வினா—புண்ணியகர்மபயனாய பரலோக அதன்மஜாதி எவை?
விடை—கற்பகவிருக்ஷம், பாரிஜாதமுதல சரீரப்பிராப்தி.
வினா—ஏன் இவைகளை அதன்மஜாதியெனச்சொல்லவேண்டும்?
விடை—தேவவர்க்கமாயினும் மரம், கொடி, ரூபமாயிருத்தலின்
விடை--இப்புண்ணிய, பாப, மிசிரமாகிய மூவிதகர்மங்களையுஞ்செய்யும் அதிகாரசரீரமெது?
விடை—மானிடசரீரமொன்றே.
வினா—மற்ற சரீரங்களில் ஏன் அதிகாரமில்லை?
விடை—மற்ற சரீரங்கள் புண்ணிய, பாபகர்மபலன்களை யனுபவித்தற்கு ரியபோகசரீரங்களேதவிர அவைகளிற் கர்மங்களைச்செய்ய முடியாது.

வினா—இதுவரைகூறியபடி மனம் வாக்கு காயங்களால் செய்யப்பட்ட புண்ணிய, பாப, மிசிரமெனமூவித கர்மங்களின் பயனாகிய சரீரங்களினையவெனத்தெளிந்தேன். அதில் மனதாற் செய்யப்படும் புண்ணியகர்மமியாது?
விடை—பிறருக்குஹித (அனுகூல)மான காரியங்களைச்செய்தலிற் சிந்தனையும், சிவ விஷ்ணுவாதியமூர்த்தித்தியானாதிகளுமாம்.
வினா—மனதாற் செய்யப்படும் பாபகர்மமியாது?
விடை—பிறருக்கு அஹிதங்களைச்செய்யவெண்ணுதலும், சிவ விஷ்ணுவாதிகள் இல்லையெனப்பாவித்தலும், பரதனமுதலானவைகளை விரும்புதலும் இவைபோன்றவைகளுமாம்.
வினா—மனதாற்செய்யப்படும் மிசிரகர்மமியாது?
விடை—புண்ணியகர்ம அனுஷ்டானகாலத்து அதற்குமாறான விஷயங்களை மனதாற் சிந்தித்தலாம்.
வினா—வாக்காற் செய்யப்படும் புண்ணியகர்மமியாது?
விடை—பிறருக்கு ஹிதமான காரியங்களைப்பேசுதலும், மந்திரஜபம், ஈசுவர கீர்த்தனம் முதலானவைகளுமாம்.
வினா—வாக்காற் செய்யப்படும் பாபகர்மமியாது?
விடை—பிறருக்கு அஹிதமானகடுஞ்சொல்முதலியபேசுதலும், சிவ



விஷ்ணு, குரு முதலானவர்களைத் தூஷித்தலுமாம்.
வினா—வாக்காற் செய்யப்படும் மிசிரகர்மமியாது?
விடை—மந்திரஜபாதிகள் செய்யும்போது தூர்த்தரோடுரையாடலாதிகளாம்.
வினா—காயத்தாற் செய்யப்படும் புண்ணியகர்மமாவது யாது?
விடை—பிறருக்கு ஹிதமாய காரியங்களைச்செய்தல், அங்கப்பிரதக்ஷணம், தலயாத்திரை, மாதாபிதாமகிழப்பணிவிடையாதி செய்தலாதிகளாம்.
வினா—காயத்தாற் செய்யப்படும் பாபகர்மமியாது?
விடை—சிவ, விஷ்ணுமூர்த்திவிக்கிரங்களைத்தீண்டுதல், கொலைசெய்தல், திருடுதலாதிகளாம்.
வினா—காயத்தாற் செய்யப்படும் மிசிரகர்மமியாதா?
விடை—அன்னியர்பொருளால், புகழ்முதலானவைகளைக்கருதிகூலி முதலனகொடாமல் சத்திரம் கட்டுதல் முதலியனவாம்.
வினா—இதுவரை கூறிய கர்ம அதிகாரசரீரங்கள், கர்மபோகசரீரங்கள் ஆகிய இத்தூலசரீரங்களை இன்னுமெபபடிப்பிரிக்கலாம்?
விடை—எழுவகைத்தோற்றமாயுங் கூறுவர்.
வினா—எழுவகைத் தோற்றமாவது யாது?
விடை—தேவர், மக்கள், விலங்கு, பறவை, நீர்வாழ்வன, ஊர்வன, ஸ்தாவரம் என்பவைகளாம்.
வினா—இவைகளின் பேதமியாது?
விடை-தேவபேதம் 14 லக்ஷமும்; மக்கள்பேதம் 9 லக்ஷமும்; விலங்குபேதம் 10 லக்ஷமும்; பக்ஷிபேதம் 10 லக்ஷமும்; நீர்வாழ்வனபேதம் 10 லக்ஷமும்; ஊர்வனபேதம் 11 லக்ஷமும்; தாவரபேதம் 20லக்ஷமுமாக 84லக்ஷயோனிபேதமெனப் பெரியோர் கூறுவர்.
வினா விடைகள் 102. மொத்த வினா விடைகள் 772.

ஸ்ரீ சுந்தரதேசிகன் சேவடி வாழ்க.

உ

ஸ்ரீ சுந்தரதேசிகன்இணையடி துணை

9. இதுமுதல் 2 செய்யுட்களால் கோசவகையைக் கூறல்.

என மூன்றுவகையான சாதியாகியிருக்கின்ற தூலதனுவெ
ழுந்ததிந்தத், தனுவன்னமயகோசஞ்சூக்கதேகந்தானுமொ
ருமுக்கோசமாகுஞ்சாற்றிற், கனமானபிராணன்கன்மேந்தி
யங்கள்கலந்திருத்தல்பிராணமயகோசமாகும், மனஞானவிந்
தியங்கள்மருவறனேமனோமயமாங்கோசமாம்வழுத்துங்கா
லே. (௫௯)

(இ-ள்) (என்பதாக) மூவகைச்சாதியாயிருக்கின்ற ஸ்தூலசரீரங்கள் தோன்றின. இந்தத்தூலசரீரமே அன்னமயகோசம். சூக்கதேகமும் மூன்றுகோசங்களாயிருக்கும். அஃதெங்ஙனமெனின் (நிறைந்த) பிராணவாயுவும் கர்மேந்தியங்களுங்கூடி பிராணமயகோசம். மனதும் ஞானேந்திரியங்களுங்கூடிமனோமயகோசம் (சொல்லுமிடத்து)

விறு—கோசம் என்றுலென்ன?

விடை—மறைப்பு, உறை, மூடி எனப்படும்.

விறு—அக்கோசங்கள் யாவை?

விடை—அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம் எனவைந்தாம்.

விறு—மயம் என்றுலென்ன?

விடை—விகாரமெனப்பொருள்.

விறு—ஆயின் அன்னமயகோசம் ஆவது யாது?

விடை—ஆவரணவாயிலாக தூலசரீரமே அன்னமயகோசமாம்.

விறு—இதற்கு அன்னமயத்தன்மை எப்படிச்சித்தித்தது?

விடை—மாதாபிதாக்களுண்ட அன்னசாரமான சுக்கிலசோணிதச் சேர்க்கையாற் கர்ப்பீகரித்தும்; பின், மாதாவின் அன்னரூபவுணவால் விருத்தியாகியும்; அதன்பிறகு, பால்முதலிய அன்னத்தால் விருத்தியடைந்தும்; மரித்தபின் அன்னமயரூபமான பிருதிவியில் ஒடுங்குவதுபற்றி அன்னமயமெனப்பட்டது.



விறு—இதற்குக்கோசத்தன்மையெப்படிச்சித்தித்தது?

விடை—இத்தூலசரீரத்தோடுகூடிய ஜீவன் ஆவரணத்துடனிருக்கும்வரை தேகத்துடன் ஒற்றுமை வடிவத்தையடைந்து தேகதர்மத்தையாத்மாவிலும், ஆத்மசுபாவத்தை தேகத்திலும், விபரீதமாய்க் கண்டு அவ்வத்தியாசவாயிலாய் ஆத்மாவைத்தெரியாமல் மயங்குகிறான். இவ்விதம் ஆத்மாவை மறைப்பதில் இத்தூலதேகம் ஏதுவாயிருத்தலால் இதற்குக்கோசத்தன்மை சித்தித்தது.

விறு—இதின் தர்மம் யாது?

விடை—முற்கூறியவாறே உண்டாதல், இருத்தல், மாறுபடுதல், அதிகரித்தல், குறைதல், நாசமடைதல், ஆகியஷட்பாவ(ஆறுவித) விகாரங்களும்; ஜாதி, வருண, ஆச்சிரம, குல, கோத்திர, நாமாதிகளுமாம்.

விறு—பிராணமயகோசம் ஆவது யாது?

விடை—ஆவரணவாயிலாக பிராணனும், கர்மேந்திரியமும் கூடினது பிராணமயகோசமாம்.

விறு—இதற்குப்பிராணமயத்தன்மை யெப்படிச்சித்தித்தது?

விடை—இக்கருமேந்திரியங்கள் பிராணனுபபலங்கொண்டு வியவகரிக்கிறபடியால் இதற்குப்பிராணமயத்தன்மை சித்தித்தது.

விறு—இதற்குக்கோசத்தன்மையெப்படிச்சித்தித்தது?

விடை—இப்பிராணமயத்தோடிருக்கும் ஆவரணசகித ஜீவன், ஆத்மசுபாவத்தைப்பிராணுதிகளின் சுபாவமாகவும், பிராணுதிகளின்சுபாவத்தை ஆத்மசுபாவமாகவும் கண்டு மயங்குகிறான். அதனுல் இவைகட்குக்கோசத்துவமும் சித்தித்தது.

விறு—இதின் தர்மம் யாது?

விடை—அன்னமயகோசத்திற்குள்ளாய், தேகத்திற்குக்கட்டாய், அசைதல் முதலியதொழில்களையுடைத்தாயிருத்தல் இதன்றர்மமாம்.

விறு—மனோமயகோசம் ஆவதுயாது?

விடை—ஆவரணவாயிலாக மனதும் ஞானேந்திரியமுங்கூடியது மனோமயகோசமாம்.

வினா—இதற்கு மனோமயத்தன்மையெப்படிச்சித்தித்தது?

விடை—மனமன்றி ஞானேந்திரியங்களின் வியவகாரம் சித்தியாத தால் மனோமயமென்ற பெயர் வந்தது.

வினா—இதற்குக்கோசத்தன்மையெப்படிச்சித்தித்தது?

விடை—இந்த மனோமயத்துடனிருக்கும் ஆவரணசகித ஜீவனான வன் மனோமயதர்மங்களை ஆத்ம சுபாவமாகவும், ஆத்மசுபாவத்தை மனோமய வடிவதர்மமாகவும், கண்டுமயங்குகைக்கு இது ஏதுவா யிருத்தலின் இதறகுக்கோசத்துவமுஞ் சித்தித்தது.

வினா—இதன் தர்மமியாது?

விடை—பிராணமயகோசத்திற்குள்ளாய் காமக்குரோதாதி அறுப கைவர்க்கங்களிலும், சரீரத்திலும்,மனைவிமுதலியோரிடத்தும் நான் எனது என்னுஞ் சங்கற்பவிகற்பவடிவவிருத்தியுமுண்டாவது இதன் தர்மமாம்.

## கவி

புத்திஞானேந்தியங்கள் புல்லருமேனபுகரில் விஞ்ஞானமயமாங்கோசங்கார,ணத்தனுவானந்தமயகோசமாகுநவின்றனமாவிவ்வாறுபஞ்சகோசம்,தத்துவமாறுயிருக்குந்தூல மெய்யிற்றசமிரட்டித்தத்துவநுண்மெய்தானிற்ற, லெத்திறனுவெனில்விரிவா யிபம்புகின்றோம் ஏகாக்கிரமனத்தனா யிதனைக் கேட்பாய்.

(சூ0)

(இ-ள்) புத்தியும், ஞானேந்திரியங்களுங்கூடி (குற்றமில்லாத) விஞ்ஞானமயகோசமாகும். காரணசரீரமே ஆனந்தமயகோசம். இப்படிப்பஞ்சகோசங்களுஞ்சொல்லப்பட்டன. ஆறுதத்துவங்களாயிருக்கிறதூலசரீரத்தில் இருபதுதத்துவங்களாயிருக்கின்ற சூக்ஷுமசரீரம் இருக்கின்றது. அஃதெப்படியெனின் (விஸ்தாரமாய்ச்சொல்லுகின்றோம் ஒடுங்கியமனமுடையவனாயிதைக்கேட்பாயாக)

வினா—விஞ்ஞானமயகோசம் ஆவதுயாது?

விடை—ஆவரணவாயிலாக புத்தியும், ஞானேந்திரியமுங்கூடியது விஞ்ஞானமயகோசமாம்.



## பஞ்சகோசங்கள்

வினா—இதற்கு விஞ்ஞானமயத்தன்மை யெப்படிச்சித்தித்தது?

விடை—இந்தஞானேந்திரியங்களின் வியவகாரம் விஞ்ஞானவடிவ புத்தியினாலும் நடைபெறுவதால் அதற்குவிஞ்ஞானமயத்துவம் சித்தித்தது.

வினா—இதற்குக்கோசத்துவமெப்படிச் சித்தித்தது?

விடை—இந்தவிஞ்ஞானமயத்துடனிருக்கும் ஆவரணசகிதஜீவனானவன் விஞ்ஞானமயதர்மங்களை ஆத்மசுபாவமாகவும், ஆத்மசுபாவத்தை விஞ்ஞானமயதர்மமாகவும் கண்டுமயங்குகைக்குயேதுவாயிருத்தலின் கோசத்துவம் சித்தித்தது.

வினா—இதன் தர்மமியாது?

விடை—மனோமயகோசத்திற்குள்ளாய், இக, பர, கரும, விஷய, அறிவினையுடைத்தாய் கர்த்திருத்துவ அபிமானமுதலியதர்மங்களையுடைத்தாயிருத்தலாம்.

வினா—ஆனந்தமயகோசம் ஆவதுயாது?

விடை—ஆவரணத்துடன்கூடிய அவித்தையாகிய காரணசரீரமே ஆனந்தமயகோசமாம்.

வினா—இதற்கு ஆனந்தமயத்தன்மை யெப்படிச்சித்தித்தது?

விடை—சுழுத்தியவஸ்தையிலுள்ள அவித்தையானது ஆனந்தவடிவானயதார்த்தசொரூபத்தினாலேயே சத்தா (இருப்பு) ஸ்பூர்த்தியை (விளக்கத்தை) யடைகிறதினாலும்,ஜாக்கிர, சொப்பனங்களிலும் பிரியம், மோதம், பிரமோதமென்னும் விருத்திகளின்லயஸ்தானமாயிருக்கிறதினாலும் அதற்கு ஆனந்தமயத்தன்மை சித்தித்தது.

வினா—இதற்குக்கோசத்தன்மை யெப்படிச்சித்தித்தது?

விடை—இந்த அவித்தையைப்பொருந்தியிருக்கும் ஜீவனானவன் ஆத்மசுபாவத்தை அவித்தையின்தர்மமாகவும், அவித்தியாதர்மங்களை ஆத்மசுபாவமாகவும் கண்டுமயங்குகைக்கு இவ்வவித்தையே யேதுவாயிருத்தலின் இதற்குக்கோசத்துவமும்சித்தித்தது.

வினா—இதன்தர்மங்களியாவை?

விடை—விஞ்ஞானமயகோசத்திற்குள்ளாய்: ஆத்மசொரூபவடிவ

ஆனந்தத்தின் பிரதிபிம்பத்தோடுகூடிய பிரியம், மோதம், பிரமோத மென்னும் விருத்திகளின்லயத்திற்கிடமாய்; போக்தாவடிவமாயிருத் தல் இதன்றர்மங்களாம்.

வினு—பிரியமாவது யாது?

விடை—சாக்கிர, சொப்பனங்களில் புண்ணிய கர்மத்தின் பலனை அனுபவிக்க நேர்ந்தவிடத்து, இஷ்டமான வஸ்துவைப் பார்த்தவி டத்துண்டாகும் விருத்தி பிரியமாம்.

வினு—மோதமாவது யாது?

விடை—அவ்வஸ்துவின் லாபத்தாலுண்டாகும்விருத்தி மோதமாம்.

வினு—பிரமோதமாவது யாது?

விடை—அவ்வஸ்துவின் போகத்தாலுண்டாகும் விருத்தி பிரமோத மாம்.

வினு—இவைகள் அவித்தையில் லயமாவதெப்படி?

விடை--விஷயங்களிலானந்தமில்லாததாயிருக்க, அதிலானந்தவிருத் தியுண்டாதல் அஞ்ஞானத்தாலாம். ஆதலால் இவ்விருத்திகள் உண் டாதற்கும், நிலைத்தற்கும், ஒடுங்கற்கும் அஞ்ஞானமிடமாயிருத்தல் பற்றி அவித்தையில் ஒடுக்கம் கூறப்பட்டது.

வினு—இவ்வவித்தையை யெப்படி யனுபவிக்கிறது?

விடை—சாக்கிர, சொப்பனத்தில் புண்ணியகர்மபலபோகம் நிவிர்த் தியாகுங்கால், கூறிய மூன்று விருத்திகளும் ஒடுங்குமவஸ்தரமாய, லயாவஸ்தையிலுள்ள புத்தியின்மழுக்கவடிவாயும்; சுழுத்தியில் ஒன் றும் தெரியாமை வடிவாயும் அனுபவிக்கத்தக்கது.

வினு—இப்பஞ்சகோசங்களுக்கும் அவதியாது?

விடை—தத்துவஞானத்தால் ஆவரணரூப அஞ்ஞானம் நஷ்டமா கும்வரை இவ்வைந்தும் கோசரூபமாய் வியவகரிக்கப்படும். பின் இவைகள் மறைத்தலைச் செய்கிறதில்லை. ஆதலின் அத்தத்துவஞான காலமே அதற்கு அவதியாம்.

வினு—இப்பஞ்சகோசங்களும் எவ்வடிவாயிருக்கின்றன?

விடை (1) அன்னமயகோசம் போகஸ்தான வடிவமாம்.



பஞ்சகோசங்கள்

(2) பிராணமயகோசம் கிரியாசத்திவடிவம்.

(3) மனோமயகோசம் இச்சாசத்திவடிவம்.

(4) விஞ்ஞானமயகோசம் கர்த்தாவடிவமாம்.

(5) ஆனந்தமயகோசம் போக்தாவடிவமாம்.

வினு—மறைப்பு எத்தனைவிதம்?

விடை—கற்பிதமறைப்பு, எதார்த்தமறைப்பு, என இரண்டாம்.

வினு—திருஷ்டாந்தமியாது?

விடை—நத்தியை அதனது உறைமறைத்தல் யதார்த்தமறைப்பும், கயிற்றிற்றோன்றிய பாம்பு அக்கயிற்றையே மறைத்தல்கற்பிதமறைப் புமாம்.

வினு—இப்பஞ்சகோசங்கள் எம்மறைப்பைச்சார்ந்தவை?

விடை—கற்பிதமறைப்பைச்சார்ந்தவைகளாம்.

வினு--இப்பஞ்சகோசங்களோடுகூடிநின்ற ஜீவனுக்குப்பெயர்யாது?

விடை—அன்னமயன், பிராணமயன், மனோமயன், விஞ்ஞானமயன் ஆனந்தமயன் என அவ்வக்கோசங்களோடு பொருந்திநிற்குங்கால் அவ்வப்பெயரையடைகின்றான்.

வினு—இப்பஞ்சகோசங்களும் கற்பிதமறைப்பையுடையனவாயின் ஜீவனைத் தமது அவதிகாலம்வரை, எவ்விதம் பிடித்துக்கொண்டிருக் கின்றன?

விடை—விருத்திமாத்திரமாய்ப்பிடித்துக்கொண்டிருக்கின்றன.

வினு—ஆயின் அன்னமயகோசம் எப்படி ஜீவனைப்பற்றிக்கொண்டி ருக்கின்றது?

விடை--தூலதேகதத்துவங்களாகிய இரத்த, மாமிசாதிகளை அதிநுட் பமான அணுக்களாகப்பிரித்துப்பார்க்கில், அதிநுட்பமான அணுவா காா விருத்திதோன்றும், அதுவே அன்னமயம்; அவ்விருத்தியிற் பிர திபலித்து விளங்கிய சைதன்யமே அன்னமயன்; அவ்விருத்தியை யும், சைதன்யத்தையும் ஒன்றுபோற்றோற்றுவித்த அகங்காரமே அன்னமயகோசம் எனமூவடிவாய்ப்பற்றிக்கொண்டிருக்கின்றது.

வினு—பிராணமயகோசமெப்படியிருக்கிறது?

விடை—அன்னமயகோசத்திலுள்ள நான் என்னும் புத்திவிருத்தியை அங்கேயேநீக்கில் நீங்குங்காலுண்டாம் வியோக (பிரிவு)வடிவ சலனதருமவிருத்தியே பிராணமயம், அதிற்பிரதிபலித்த சைதன்யமே பிராணமயன். அவ்விருத்தியையும் சைதன்யத்தையும் ஒன்றுபோற்றோற்றுவித்த அகங்காரமே பிராணமயகோசம் என மூவடிவாய்ப்பற்றிக்கொண்டிருக்கிறது.

வினா—மனோமயகோசமெப்படியிருக்கிறது?

விடை—பிராணமயகோசத்திலுள்ள நான் என்னும் புத்திவிருத்தியின்கண், இது சலனவடிவப்பிராணமயகோசமென உண்டாகிய சங்கற்பவடிவசலனவிருத்தியே மனோமயம், அதிற்பிரதிபலித்து விளங்கிய சைதன்யமே மனோமயன், அவ்விருத்தியையும் சைதன்யத்தையும் ஒன்றுபோற்றோற்றுவித்த அகங்காரமே மனோமயகோசம் என மூவடிவாய்ப்பற்றிக்கொண்டிருக்கிறது.

வினா—விஞ்ஞானமயகோசமெப்படியிருக்கிறது?

விடை—மனோமயகோசத்தை வியாபித்து அதைத்திருசியமாக விளக்குவித்த விருத்தியேவிஞ்ஞானமயம், அதிற்பிரதிபலித்தசைதன்யமே விஞ்ஞானமயன், அவ்விருத்தியையும் சைதன்யத்தையும் ஒன்றுபோற்றோற்றுவித்த அகங்காரமே விஞ்ஞானமயகோசம் என மூவடிவாய்ப்பற்றிக்கொண்டிருக்கிறது.

வினா—ஆனந்தமயகோசமெப்படியிருக்கிறது?

விடை—முற்கூறிய நான்கு கோசங்களிலுள்ள அகங்காரத்தின் ஒற்றுமையை யொடுக்கிப்பார்க்குங்கால், அங்கங்கே அவ்வொற்றுமை வடிவசம்பந்தம் நீங்கி, நான்கு கோசங்களின் சமத்துவவடிவதிருப்தியில் இது ஆனந்தமென்றுமுன்னிலைக்கொள்ளாமலிருக்கின்ற விருத்தியே ஆனந்தமயம். அதிற்பிரதிபலித்தசைதன்யமே ஆனந்தமயன், அவ்விருத்தியையும், சைதன்யத்தையும் ஒன்றுபோற்றோற்றுவித்த அகங்காரமே ஆனந்தமயகோசம் என மூவடிவாய்ப்பற்றிக்கொண்டிருக்கிறது.

வினா—இவ்வானந்தமயகோசானுபூதியின் வடிவமியாது?





விடை—இதில் நான்குகோசவடிவ ஜகத்சத்தை இல்லாததால் இது சொரூபானுபவமென்றேகொள்ளத்தக்கது.

வினா—அப்படியானால் இதில் அஞ்ஞான அனுபவம் எப்படிவந்தது?

விடை—அவ்வவஸ்தையினின்று வெளிவந்தோன் விசாரணையின்மையால், தன்னைச்சகத்பதார்த்தங்களிலொன்றாய்க்கொண்டும், ஆண்டு தானில்லாததாகவுங்கண்டு, தனது சங்கற்பத்தால் தெரியாமையை ஆரோபிக்க (இல்லாததைச்சொல்ல) அதுவே அஞ்ஞானானுபூதியாம்.

வினா—இந்த அஞ்ஞானம் யாரால் ஆரோபிக்கப்பட்டது?

விடை—இன்னபடிவந்தது என்று சொல்லமுடியவில்லை.

வினா—ஆனந்தமயனால் ஆரோபிக்கப்பட்டதென்றாலென்ன?

விடை—ஆனந்தமயன் அஞ்ஞானத்துள்ளடக்கமாதலின் அவனால் ஆரோபிக்கப்படவில்லை.

வினா—கூடஸ்தனால் ஆரோபிக்கப்பட்டதென்றாலென்ன?

விடை—கூடஸ்தன் நிர்விகாரியானதால் அவனாலும் ஆரோபிக்கப்படவில்லை.

வினா—இவ்வானந்தமயகோசமாய அஞ்ஞானம் வியக்த (வெளி)ப்பட்டது, விருத்திக்குப்பின்னானதால் விருத்திப்பிரதிபிம்பிதனான சிதாபாசனாற் கற்பிக்கப்பட்டது என்று சொன்னாலென்ன?

விடை—சிதாபாஸன் சித்பிரதிபிம்பமாய ஞானஸ்வரூபியானதால் அவனாலும் அஞ்ஞானம் ஆரோபிக்கப்படா.

வினா—மற்று, அதன் கதி யாது?

விடை—அகங்காரத்தா (அகம்விருத்தியா)ற் கற்பிக்கப்பட்டதென்னலாம்.

வினா—முன் இன்னவிதமாரோபிக்கப்பட்டதெனச்சொல்லமுடியாவென்பதும், இப்போது அகங்காரம் ஆரோபித்ததென்பதும் எப்படிப் பொருந்தும்?

விடை—அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், அஞ்ஞான அவ்வியக்த ஆனந்தமயகோசம், அஞ்ஞானவியக்த ஆனந்தமயகோசம், ஆகிய கோசங்களை அகங்காரி

வேறாய்நின்று ஆரோபித்து அனுபவிப்பதால் அவ்வகங்காரத்தால்
ஆரோபிக்கப்பட்டதென்றும்; விசாரிக்கில் அதுவும் (அகங்காரமும்)
இல்லாமற்போகிறபடியால் இன்னவிதமெனநிர்ணயிக்கப்படவில்லை
யென்றும் கூறப்பட்டது.

வி\u0bb1ு—விசாரிக்கில் எப்படியில்லாமற்போகிறது?

விடை—அஞ்ஞானத்தைக்கற்பித்த இவ்வகம் விருத்தியாய அகங்கா
ரமானதுசடமானதால்தானே சித்தியா. சிதாபாஸனால் அத்தியாசம்
சித்தித்ததாவெனில் சிதாபாஸனன்றி விருத்தியாவது, விருத்தியின்
றிச்சிதாபாஸனாவது சித்திக்கத்திறனில்லை. ஆனாலவைகட்கு ஒன்றற்
கொன்று காரண, காரியபாவம் நிரூபித்திடில் ஒன்றையொன்றுபற்
றியிருத்தல் வடிவதோஷமுண்டாகிறபடியால் சிதாபாஸனே சித்
திக்கவில்லை. சிதாபாஸனைத்தனக்குத்தானே காரணமெனக்கூறில்
தானேதனக்குக்காரணமாதல் வடிவதோஷமுண்டாகிறது. இச்சிதா
பாஸனுக்குக்கூடஸ்தனைக்காரணமாக ஒப்பினால் சத்தாகிய சிதாபா
ஸன் பொருட்டா? அசத்தாகிய சிதாபாஸன் பொருட்டாவென
இருவிகற்பம்வர இரண்டின்பொருட்டும் காரணம்கற்பிக்கமார்க்க
மில்லை. ஏனெனில் சத்துக்கும்காரணம்வேண்டாம்; அசத்திற்கும்
காரணம்வேண்டாம். அல்லதுசிதாபாஸன் சின்மாத்திரமாகச்சத்தா?
பிரதிபிம்பமாத்திரமாகச்சத்தா? எனவிகற்பம் நேரிட, சின்மாத்திர
சத்து நிர்விகாரகூடஸ்தனேயாகிறபடியால் சிதாபாஸனில்லாதவனா
வன். பிரதிபிம்பமாகவென்னில் அதுதோன்றியதெனவர இல்லா
ததேதோன்றவேண்டும்; அதுவோ சுத்திவெள்ளிபோலாம். இதற்கு
(சிதாபாஸனுக்கு) அசங்கியாயும் அவிகாரியாயுமிருக்கப்பட்டகூடஸ்
தனிடத்தில் உற்பத்திசம்பவியா. ஆகவே இம்முறையில் அகங்காரமா
வது, அகங்காரியாவது, அபிமானியாவது, சித்திக்கத்திறனில்லாமற்
போகிறபடியால், அதினாற்கற்பிக்கப்பட்ட அஞ்ஞானமாவது ஏனைய
கோசங்களாவது சித்திக்கமார்க்கமில்லாததுபற்றிகற்பிதமறைப்பைச்
சார்ந்தனவென்னப்பட்டது.

வி\u0bb1ு—இப்பஞ்சகோசங்களும் கற்பிதமெனின் இவற்றின் விலக்ஷண



(அந்நிய) மாய ஆத்மாவை எப்படியறிவது?

விடை—அன்னமய,பிராணமய,மனோமய, விஞ்ஞானமயமாயநான்கு
கோசங்கட்கும் அப்புறப்பட்டதாயும், ஐந்தாவதாய ஆனந்தமயகோச
ஆதாரமாயும், ஆத்மாவையறிக.

வி\u0bb1ு—கூறிய நான்கு கோசங்கட்கும் வேறாக ஆத்மாவையறிந்தது
போலில்லாமல், ஐந்தாவதாய ஆனந்தமயகோசத்துள் அதின் ஆதார
மாய் அறியச்சொன்னதில் நியாயமியாது?

விடை—நான்குகோசங்களும் காரியவடிவம்; ஐந்தாவதோ காரண
வடிவகோசம். இக்காரண, காரியகோசங்களை முனனிட்டே ஆத்மவி
வக்கமறியவேண்டியிருத்தலினாலும்; ஐந்தாவதாயகோசத்திற்கப்பால்
வேறுகோசகற்பனையில்லாததாலும்; அதிகாரிகள் கோசங்களினின்
றும் அப்புறப்பட்டு தாபநீக்கம் பெறவேண்டியிருத்தலாலும்; நான்
கிற்கும் அப்புறத்ததாய் ஐந்தாவதின் விளக்கவடிவமாய், அறிக எனப்
பட்டது

வி\u0bb1ு—இதற்குப் பிரமாணமியாது?

விடை— ஐந்தாவதாய ஆனந்தமயகோசத்தைப் பக்ஷிவடிவமாய் வர்
ணனை செய்யுங்கால் ஆன்மாவைப்புச்ச சப்தத்தால், வால்வடிவமாய்ப்
பிரதிஷ்டை செய்திருக்கிறது. இதில் தைத்திரீயசுருதியும், கடருத்
ரோபநிஷதமும் பிரமாணமாதலை ஆண்டுக்காண்க

வி\u0bb1ு—அத்தகைய ஆத்மாவை எப்படியறிகிறது?

விடை—பஞ்சகோசங்களும் அநித்தியமும், ஜடமும், விகாரியும்,
வியபிசாரியுமாயிருத்தல் பற்றி அவைகளை விளக்கிவைத்துக்கொண்
டிருக்கிற ஆன்மா இவற்றின்வேறாய், சத்தாய், சொப்பிரகாசமாயி
ருந்து கொண்டிருத்தலினாலும், அவ்வனுபவத்தை நிஷேதிக்க யா
வராலும் முடியாதபடியாலும், அவ்வடிவாகநிலைத்து அறிந்தனுபவிப்
பாயாக.

வி\u0bb1ு—ஈசுவரனுக்கு மிப்பஞ்சகோசங்களுண்டா?

விடை—உண்டு.

வி\u0bb1ு—ஈசுவரனுடைய பஞ்சகோசங்கட்கு வடிவமியாது?

விடை—சர்வஜீவராசிகளுடைய காரணசரீரமாய அவித்தையையடக்கியுள்ள மாயையேஈசுவரனுக்கு ஆனந்தமயகோசமாயும்;சர்வஜீவராசிகளுடையசூக்கும சரீரங்களும், சூக்குமபூதங்களும் சேர்ந்து ஈசுவரனுக்குப்பிராணமய, மனோமய, விஞ்ஞானமயகோசங்களாயும்; சர்வஜீவராசிகளுடைய தூலசரீரங்களும் தூலபூதங்களுஞ்சேர்ந்து ஈசுவரனுக்கு அன்னமயகோசமாயுமிருக்கின்றன.

வினா--ஜீவகோசங்கட்கும், ஈசுவரகோசங்கட்கும் வித்தியாசமியாது?

விடை—தனித்தனியாயுள்ளது ஜீவகோசங்களென்றும், அனேகம் சேர்ந்தது ஈசுவரகோசங்களென்றும் அறிவதுடன், ஜீவகோசங்கள் அஞ்ஞானகாலத்து ஜீவனைமறைத்ததுபோல் ஈசுவரகோசங்கள் ஈசுவரனை எந்தக்காலத்திலும் மறைத்தலைச்செய்யா எனவும் இதுவே அவற்றின் பேதங்கள் எனவும் அறிக.

வினா—ஈசுவரகோசங்களவனையேன் மறைப்பதில்லை?

விடை—அவனது உபாதிசுத்தமாயிருத்தலின் அவைகள்மறைப்பதில்லை.

வினா—அப்படியானால் ஈசவரனுக்குக்கோசங்களைக் கூறுவதிலியாது பிரயோஜனம்?

விடை—ஈசுவரதிருஷ்டியில் அவனுக்குமறைப்பில்லையாயினும், ஈசுவரனைச்சமட்டியாய் அறிந்துகொண்டிருக்கிற ஜீவர்களது திருஷ்டியைநோக்கியும், தத்துவமஸிமகாவாக்கியத்திற்குப்பொருள்கோடுங்கால், பஞ்சகோசங்களையில்லாததாயும், தத்பதவாச்சியமாய ஈசுவரனைப் பஞ்சகோசங்களினின்றும் வேறுபடுத்திச் சுத்தப்பிரஹ்மவடிவமாக அதிகாரிகள் அறியும்பொருட்டும், ஜீவதிருஷ்டியால் ஈசுவரனிடம் பஞ்சகோசங்களை அங்கீகாரஞ்செய்யப்பட்டதேயன்றி அதனால் ஈசுவரனுக்கு எவ்விதபிரயோஜனமுமில்லை.

வினா—இதற்குமுன் தூல,சூக்ஷ்ம, காரணமாகிய சரீரத்திரயசிருஷ்டியைக்கூறியிருப்பதற்குப்பிரயோஜனமியாது?

விடை—சரீரமின்னது, சரீரத்தையுடையது இன்னது என்றபாகுபாடின்றிச்சரீராதிகளை ஆத்மாவாகவும், ஆத்மாவைச்சரீராதிகளாகவும், குளறுபடையாகச்சிந்தித்து, அதனால் பரமதுக்கத்தோடுகூடியவர்களாயிருக்கும் பாமர, விஷயிகளைநோக்கி; சுருதியானது-சரீர, ஆத்மாக்களை வேறுபிரித்தறிந்து, பின் ஆத்மாவையும், பிரஹ்மத்தையும் ஒன்றாயறிந்து பரமபுருஷார்த்தத்தை அடையக்கடவீர்! என ஆக்ஞாபித்தது. அத்தகைய விவேகத்தை ஜீவர்கள் எளிதாயடையுமாறு, இச்சாஸ்திரமானது முதலில் ஆன்மவடிவப்பிரஹ்ம இலக்கணத்தையும், பின்சரீரங்களினிலக்கணத்தையும் கூறிற்று. ஆதலின் அதற்கு முற்கூறியவிவேகமே பிரயோஜனமாம்.

வினா—அப்படியானால், முற்கூறியபடி 3 சரீரங்களைத்தானே பஞ்சகோசவடிவாய் உருவகம் பண்ணப்பட்டிருக்கிறது. இவ்விதம் திரும்பக்கூறியதில் யாதுபிரயோஜனம்?

விடை—கோசகாரமென்னும் புழுவினாற் கற்பிக்கப்பட்ட அதின் கூடானது, அப்புழுவின் கிலேசத்திற்கு எதுவாயிருத்தல்போல், இச்சீவனாற் கற்பிக்கப்பட்ட இச்சரீர வடிவகோசங்களும் கிலேச(ஜனனமரண)த்திற்கு யேதுவாயிருத்தலின், அவற்றினின்றும் வெளிவருதல் வடிவவிவேகத்தைச்செய்யும்படி சுருதியானது கருணையாற் கூறியபடி அதன்பலனையும், முமுக்ஷுக்கள் எளிதாயடையுமாறு கோசவிவேகமே தையும் இச்சாஸ்திரங் கூறிற்று. ஆதலால் பஞ்சகோசவிவேகமே இதின்பயனும்.

மொத்த வினாவிடைகள் 832.

வினாவிடைகள் 60.

ஸ்ரீ சுந்தரதேசிகன் இணையடி வெல்க

உ

ஸ்ரீ சுந்தரநாயகம்துணை

10. இதுமுதல் இரண்டு செய்யுட்களால்

தூலசரீரத்தில் சூக்கும சரீரமிருக்கும் வகையைக் கூறல்.

தூலசரீரத்தில் சூக்கும சரீரமிருக்கும் வகையைக் கூறல்.

தூலசரீரத்தில் சூச்சும சரீரமிருக்கும் வகையைக் கூறல்.

புந்திபொருந்துமிதயஞ்சமானக்கால்சித்தந்,தேக்குநாபித்தா
னந்தனிலபானன்பாயுருவுந்திரமானகுதத்தைச்சேருந்,
தோக்குமகங்காரமுடன்வியானவாயுந்தூலமெலாங்கலந்திரு
க்குஞ்சொல்விற்றூனே. (சூக)

(இ-ள்) [கர்மேந்திரியங்களுள்] வாக்கும் [ஞானேந்திரியங்களுள்] சிங்குவையும் (இரண்டும்) வாயிலிருக்கும். உதானவாயுவும், மனதும் கண்டத்திலிருக்கும். (உச்சுவாச, நிச்சுவாஸங்களோடு கூடிய)பிராண வாயுவும், புத்தியும் இருதயத்திலேயிருக்கும். சமானவாயுவும், சித்தமும் நாபியிலி (நிறைந்தி) ருக்கும். அபானவாயுவும்,பாயுருவும்,(நிலையாயுள்ள) குதத்திலிருக்கும். (சொல்லுங்கால்) வியானவாயுவும்; [ஞானேந்திரியங்களுள்] துவக்கும், அகங்காரமும், சர்வாங்கமும் வியாபித்திருக்கும். (இதனுரை வெளி)

கவி

உச்சிதனிலேயுளமுங் கருவிழியினுநிபதனிலொளிருங் கண்
ணு, மெச்சுசெவியதிற்சுரோத்திரநாசியதிற்கிராணமேவுமப்
பா, இச்சைவளருபத்தம்பாதம்பாணிக்கிடங்குப்பமியங்கு
கால்கை, இச்சடமாந்தூலதனுத்தத்துவங்களாறுமிதிலிருப்
பவான (சூ௨)

(இ-ள்) உச்சியிலே உள்ளமும், கருவிழியினுனியிலே (பிரகாசிக்கின்ற) சக்ஷு இந்திரியமும், (மேன்மையாய) காதிற்குள்ளேசுரோத்திரேந்திரியமும், மூக்குநுனியிலே கிராணேந்திரியமும் [கழுத்திற்கு மேலே தனித்தனியே]இருக்கும். (சிஷ்யனே) [கழுத்திற்குக்கீழே] கை, (சலியாநின்ற)கால், குய்யங்களில்-பாணி, பாதம், (ஆசை உண்டாகாநின்ற) உபஸ்தம் [மூன்றும்தனித்தனியே] இருக்கும். இப்படித்தூலசரீரதத்துவங்களாறும் அதிற்குடிபுகுந்த,

வினா—குடியிருத்தல் என்றூலென்ன?

விடை—ஸ்தூலசரீரத்தினிடமாய், பிராரப்தகர்மத்தின்பயனை ஜீவனனுபவிக்கும்வரை சூக்குமசரீரம் இருத்தலாம்.

வினா விடை 1

மொத்த வினா விடைகள் 833.

ஸ்ரீ சுந்தரநாயகம்வாழ்க



௨

ஸ்ரீ சுந்தரயதீந்திரர் துணை

இதுமுதல் 7 செய்யுட்களால் ஜீவ, ஈசுவரர்கட்குறும்
அவஸ்தைகளும்,அவர்கள் பரியாயங்களுங்கூறல்.

சூக்கதனுத்தத்துவங்களிருபானுஞ் சூழ்விண்ணோமுதலைம்பூதந், தாக்கியகாரியமான வகையினூற்காரியமாமாகமென்பார், சாக்கிரத்திற்சீவன் காரணவாகத்தோடுமிந்தத்தத்வத்தோடும், விக்கமுறவிருக்குங்கால்விசுவனென்றும்விவகாரச்சீவனென்றும். (சூ௩)

(இ-ள்)சூக்குமசரீரதத்துவங்களிருபதும்[ஆகத்தத்துவங்களிருபத்தாறும்] (சூழ்ந்துள்ள ஆகாயமுதலான) பஞ்சபூதங்களின் காரியமானபடியால் [ஒருமைப்பாடாக]காரியசரீரமென்று சொல்லுவார்கள். காரணசரீரத்தோடு சிதாபாஸன்சாக்கிரத்திலே இந்தஇருபத்தாறுதத்துவங்களுடனேகலந்து நின்றபோது விசுவனென்றும். வியவகாரிகசீவனென்றும்,

வினா—இதுவரை கூறிவந்த காரணசரீர (அவித்தை), காரிய (தூலசூக்கும) சரீரங்களாகிய இவைகளைப்பொருந்திய ஜீவனுடையகாலங்கள் யாவை?

விடை—சாக்கிரம், சொப்பனம், சுழுத்திஎன அவஸ்தைகள் மூன்றும்

வினா—சாக்கிரம் என்றூலென்ன?

விடை—விழிப்பு எனப்பெயர் பெறும்.

வினா—சாக்கிராவஸ்தையினிலக்கணம்யாது?

விடை—அத்தியான்மம், அதிதெய்வம், அதிபூதம் ஆகியமூன்றன் நிர்வாகத்தால் எதில் வியவகாரமுண்டாகிறதோ அக்காலம் சீவசாக்கிராவஸ்தையெனப்படும்.

வினா—அத்தியான்மமென்றூலென்ன?

விடை—ஞானேந்திரியம் 5, கர்மேந்திரியம் 5, அந்தக்கரணம் 4, ஆக 14ம் அத்தியான்மங்களாம்.

வினா—அதிதெய்வமென்றூலென்ன?

விடை—முற்கூறிய பதினான்கு இந்திரியங்களையும் இயக்குவிக்கும் தேவதைகளாம்.

வினா—அதிபூதமென்றாலென்ன?

விடை—முற்கூறிய பதினான்கு இந்திரியங்களினாலுண்டாம் விஷயங்களாம்.

வினா—இவைகளின் றன்மையும், பொதுநாமமும் யாது?

விடை—மூன்றுஞ்சேர்ந்து திரிபுடியெனப்படும், மூன்றில் ஒன்று குறைந்தாலும் மற்றயவிரண்டும் வியவகரியாவாதலால் இவைகளின் வியவகாரங்களும் பதினான்கேயென்பர்.

வினா—இந்திரியங்கட்கு அத்தியான்மம் எனப்பெயர் வருவானேன்?

விடை—ஆன்மாவை யாசிரயித்திருத்தலினாலாம்

வினா—தேவதைகட்கு ஆதிதெய்வீகமெனப்பெயர் வருவானேன்?

விடை—இந்திரியங்களை இயக்குவித்தலினாலாம்

வினா—விஷயங்கட்கு அதிபூதமெனப் பெயர் வருவானேன்?

விடை—பூதங்களின் காரியமாயிருத்தலினாலாம்.

வினா—இச்சாக்கிராவஸ்தையை விளக்குவதில் வேறிலக்கணம்யாது?

விடை—சொப்பனாவஸ்தைக்கு வேறாய், இந்திரியங்களாற்றோன்றும் ஞானத்திற்கும், அதன்வாஸனைக்கும் ஆதாரமாயிருக்குங்காலம் யாது அது சாக்கிராவஸ்தையாம்.

வினா—இச்சாக்கிராவஸ்தையில் சீவன் எத்தனை தத்துவங்களுடன் கலந்து(கூடி)நிற்கிறான்?

விடை—காரணசரீரதத்துவம் 1, சூக்குமசரீரதத்துவம் 20, தூலசரீர தத்துவம் 6, ஆக தத்துவங்கள் 27.

வினா—விசுவன் என்றாலென்ன?

விடை—விசுவ(உலக)ரூபமான தூல தேகத்தை அபிமானித்தலின் விசுவனாம்.

வினா—வியவகாரிக சீவன் என்றாலென்ன?

விடை—அத்யான்மம், அதிதெய்வம், அதிபூதம் ஆகிய இவைகளோடு சேர்ந்து வியவகரித்தலின் வியாவகாரிக ஜீவனாம்.



வினா—இவனுக்கு வேறு பரியாயநாமங்களுமுண்டா?

விடை-ஸ்தூலசரீர அபிமானி, புத்திப்பிரதிபலனசைதன்யன், விக்ஷேபரூபன், க்ஷேத்ர (இடம்)க்ஞன், சரீரி, பிரமாத்ரு, கர்த்திரு, போக்திரு, சம்சாரி, விஷயீ, பாவாத்மா, விஞ்ஞானமயன், துவம்பத முக்கியார்த்தன் எனப்பலவாம்.

கவி

சொலவுறுமாற்சொப்பனத்திற்றூலதனுத்தனைவிட்டுச்சூக்க
தேகத், தலமதனிலகக்கரணத்துடன்கூடுந்தருணந்தைசசனு
மென்று, நலபிராதிபாஸிகச்சீவன்கனவுகற்பிதனென்னவில
லாங்கே,வலசுழுத்திதனிற்றூலசூக்கம்விட்டுக்காரணத்தைமரு
ருவும்வேலை. (௬௪)

(இ-ள்) சொல்லப்படுவன். சொப்பனத்திலே தூலசரீரத்தைவிட்டு (சூக்குமதேகத்திலுள்ள) அந்தக்கரணத்துடனேகூடிநின்றபோது தைஜசனென்றும், (நல்ல) பிராதிபாஸிகஜீவனென்றும். சொப்பன கற்பிதனென்றும் சொல்லப்படுவன். சுழுத்தியிலே காரியசரீரதத்துவங்கள் [இருபத்தாறையுங்கைவிட்டு] காரணசரீரத்தைமாத்திரம் பொருந்தியிருக்கும்போது,

வினா—சொப்பனம் என்றாலென்ன?

விடை—தன்னையடைதலெனப்பொருளாம்.

வினா—சொப்பனாவஸ்தையினிலக்கணம்யாது?

விடை—வியாவகாரிக இந்திரியங்களினாலுண்டாகாத, முன்பின்றொடர்பின்றிய, விஷயகோசர அந்தக்கரணத்தினது, அபரோக்ஷவிருத்தியின்காலம் யாது, அது சீவசொப்பனாவஸ்தையாம்.

வினா—இந்தச்சொப்பனாவஸ்தையில் ஜீவன் எந்தெந்தத்தத்துவங்களுடன் கலந்துநிற்கின்றான்?

விடை--ஸ்தூலசரீரத்தைக்கைவிட்டு அந்தக்கரணத்துடனும்,காரணசரீரத்துடனும் கலந்துநிற்கின்றான்.

வினா—தைஜஸன் என்றாலென்ன?

விடை—சோம, சூர்ய, அக்கினிகளினுதவியின்றி தானேதன்னிற்

ரேன்றியவற்றையெல்லாம் விளங்கச்செய்தலின் தைஜஸ (பிரகாச வடிவாயிருப்பவ)னும்.

வினா—பிராதிபாஸிகஜீவன் என்றாலென்ன?

விடை—தத்துவஞானமில்லாமலே ஜாக்கிரத்திற்கு வந்ததும் பொய்யென்று நிச்சயிக்கத்தக்கவனாயிருத்தலால் பிராதிபாஸிக ஜீவனும்.

வினா—சொப்பனகற்பிதன் என்றாலென்ன?

விடை—சொப்பனவிஷயங்களைக் கற்பித்தலால் சொப்பனகற்பிதனும்.

வினா—இவனுக்கு வேறுபெயர்களுண்டா?

விடை—வியட்டிசூக்குமசரீராபிமானி என்றனவாதிய பெயர்களுமுண்டு.

வினா—சுழுத்தியென்றாலென்ன?

விடை—தன்னை நன்கடைதல் எனப்பொருள்.

வினா—சுழுத்தியவஸ்தையினிலக்கணம் யாது?

விடை—சுகமும், அஞ்ஞானமுமாத்திரமுள்ளகாலம், ஜீவசுழுத்தியவஸ்தையாம்.

வினா—இதற்கனுபவமியாது?

விடை—சுழுத்திவிட்டெழுந்தோன் சுகமாய்த்தூங்கினேன், ஒன்றும் தெரியவில்லையெனக்கூறுதலால் சுகமும் அஞ்ஞானமும் அனுபவிக்கப்பட்டதாகின்றது.

வினா—இச்சுழுத்தியவஸ்தையில் ஜீவன் எந்தத்தத்துவத்துடன்பொருந்திநிற்கின்றான்?

விடை—அவித்தையாகிய காரணசரீரமாத்திரத்துடன் கலந்துநிற்கின்றான்.

கவி

பிராஞ்ஞனெனப்பாரமார்த்திகச்சீவனெனப்பகர்வர்பிரமந்
தானும், விராவுசாக்கிரங்கனவுசுழுத்திகளிற்கரியாகிவிளங்கு
ம்வேலை,பராவுபெயர்நிரலேசீவான்மாவந்தரவான்மாபரம
வான்மா, நிராலம்பமாகியவத்தாத்திரயசாக்கியாய்நிற்குநேர
ம்] (௬௫)



(இ-ள்) பிராக்ஞனென்றும்,பாரமார்த்திகசீவனென்றுஞ் சொல்லப்படுவன். பிரஹ்மசைதன்யமும் (கலப்புற்ற) சாக்கிரத்திற்குச்சாக்ஷியாயிருக்கும்பொழுது (சொல்லாநின்ற)சீவாத்மாவென்றும், சொப்பனத்திற்குச்சாக்ஷியாயிருக்கும்பொழுது அந்தராத்மாவென்றும்,சுழுத்திக்குச்சாக்ஷியாயிருக்கும்பொழுது பரமான்மாவென்றும் முறையே பெயராம். (பற்றுக்கோடில்லாது) அவத்தாத்திரயசாக்ஷியாயிருக்கும் பொழுது,

வினா—பிராக்ஞன் என்றாலென்ன?

விடை—சுழுத்தியின் கண்ணுள்ள ஆனந்தத்தை நன்றாயறிபவனும்.

வினா—பாரமார்த்திகஜீவன் என்றாலென்ன?

விடை—தனது யதார்த்தவடிவாய சுக சொரூபத்துடன் ஐக்கியப்பட்டிருப்பவனும்.

வினா—இவனுக்குப்பரியாயநாமங்களியாது?

விடை—அவித்தியோபாதிகன், கார்யோபாதிகன், வியட்டிகாரணசரீராபிமானி எனப்பலவுள.

வினா—சாக்கியாயிருத்தல் என்றாலென்ன?

விடை—மூன்றவஸ்தைகளுடனிருந்தும், அவ்வவஸ்தைகளிலுறும் விகாரமுதலானசம்பந்தமின்றி அன்னியமாயிருந்து, அறிந்துகொண்டிருப்பதைச்சாக்ஷியென்பர்

வினா—ஜீவாத்மா என்றால் அர்த்தம்யாது?

விடை—ஜீவனுக்கு ஆத்மா ஜீவாத்மாவாம்.

வினா—இதினிலக்கணம் யாது?

விடை—தூலசூக்குமகாரணசரீரங்களில் விளைபட்ட ஆன்மா, 42தத்வங்களாலுண்டாம் சீவனுடையவியவகாரங்களைச் சம்பந்தமின்றியறிந்துகொண்டிருத்தலின் ஜீவாத்மாவாம்.

வினா—அந்தரான்மா என்றாலென்ன?

விடை—உள்ளிருக்கும் ஆத்மாவெனப்பொருளாம்.

வினா—இதினிலக்கணமியாது?

விடை—சொப்பனவஸ்தையில் நிகழும் ஜீவனுடைய வியவகாரங்களைத்தனக்குச்சம்பந்தமின்றியறிந்துகொண்டிருத்தலின் அந்தராத்மாவாம்.

வினா—பரமாத்மா என்றால் அர்த்தம்யாது?

விடை—ஆத்மாவென்றுவியவகரிக்கக்கூடிய தேகாதிகளுக்கு மேலா

யிருப்பதால் பரமாத்மாவெனப்பொருள்.

வினு—இதனிலக்கணம் யாது?

விடை—சுழுத்தியவத்தையிலுள்ள அஞ்ஞானவடிவ இருளைத் தொடக்கின்றியறிவதுயாது அதுபரமாத்மாவாம்.

வினு—அவத்தாத்திரயசாக்ஷி யென்றுலென்ன?

விடை-நனவு(விழிப்பு) கனவு, உறக்கமாகியமூவவஸ்தைகளையும் அறிவதெனப்பொருள்.

வினு—இக்காலத்திற்குப் பெயர்யாது?

விடை—துரியாவஸ்தை யெனப்பெயராம்.

வினு—துரியமென்றுலென்ன?

விடை—நனு, கனு, உறக்கமெனப் பெயரிய மூவவஸ்தைகட்கும் அப்பாலிருத்தலின் நான்காவதெனப்பொருளாம்.

வினு—இச்சீவதுரியத்தினிலக்கணம்யாது?

விடை-அவஸ்தாத்திரயங்களை எதிரிட்டறிந்து பின்அறிந்தோம் என்றவிருத்தியும் நழுவியகாலம் யாது, அதுதுரியாவஸ்தையென்றும், சொரூபஸ்திதியென்றும், மௌனமென்றும் கூறப்படும்.

வினு—இதற்குமேலுள்ள அவஸ்தையாது?

விடை-இதுவேமுடிந்தநிலையாதலின், மேல் அவஸ்தாகற்பனைவேண்டியதில்லை. ஆயினும் வித்வான்கள் இதைடே துரியாதீதமென்றும், சன்மயம் என்றும் பெயர்கொண்டு 93 அவஸ்தைகள்வரையும்கூறுவதுமுண்டு. அதுமேன் சிவசாக்கிரமாதியாயும், இனிபாசாக்கிரமாதியாயும், கூறிபதன்வாயிலாயும்; விரிவாய் அறியவிரும்பின் சுவானுபூதிராயனம், சுவானுபவரஸமஞ்சரி, நிஜானந்தவிலாசம், என்றபிரகரணத்திரயம் என்னும் நூல்வழியாயும் கண்டுகொள்க.

வினு—இவ்வவஸ்தையில் ஜீவனுண்டா?

விடை—இல்லை.

வினு—எனில்லை?

விடை—அபிமானிரூபஜீவனுனவன், தனதுசொரூபவிசாரணையைச் செய்யப்புகுந்து,தனதுஉபாதியையும், அப்படியே தனதுபோதத்தை



(முன்னிலைச்சுட்டை)யும் கெடுத்து, வெய்யில்விளக்குப்போற்குன்றி, லயமாய்விட்டபடியால், அபிமானிரூபஜீவனுமில்லை.

வினு—இவ்வவஸ்தையினின்று விருத்திபகிர்முகப்பட்டபிறகாவது ஜீவனுண்டா?

விடை—இல்லை.

வினு—எனில்லை?

விடை—ஜீவனுனவன் தனது வடிவத்தை விசாரிக்கப்புகுந்து, தான் பாவ, (சாக்கிர, சொப்பன) அபாவ(சுழுத்தி)விருத்திகட்குவிலக்கணமாய அகண்டபோதானந்தகனன், என எப்போது தன்னை அனுபவிக்கிறுனே, அந்நிலையிற்றற்போதமிழத்தல் வாயிலாக அத்தியாஸமும்கெட்டுப்போகிறபடியால், ஜீவசொரூபமும் கெட்டுப்போகின்றன. பின்மீண்டும் மறந்துங்கூட அத்தியாசமுண்டாகப்போகிறதில்லையாதலின்ஜீவனுமில்லை. ஆனுல் பிராரப்தமுடிவுவரை பூர்வம் ஜீவனுல் அபிமானிக்கப்பட்ட தேகாதிகரணங்கள் தங்கள் ஊழ்வலியாற் சுழன்றுகொண்டுவருகின்றன என அறிவாயாக.

கவி

ஞானவான்மாவென்னக்கூடத்தரென நாமமநவிலலாகு,மான
வாசிவனுக்குமுத்தனுவுமவத்தையொருமூன்றுஞ்சொன்னு,
மேனமாலுரைப்பதீச்சுரனுக்குமெய்ம்மூன்றுமவத்தைமூன்
அம், தானதேதெனிற்றுாலபூதமைந்துமதில்வருமுச்சாதியா
னு. (சூசூ)

(இ-ள்) ஞானத்மாவென்றும், கூடஸ்தரென்றும்(பெயர்) சொல்லப்படும். இப்படிச்சீவனுக்கு மூன்று சரீரங்களும் மூன்றவஸ்தையும் சொல்லப்பட்டன. இனி ஈசுவரனுக்கு மூன்றுசரீரங்களும் மூன்று அவஸ்தைகளுஞ்சொல்லப்படும்.(அஃதெங்ஙனமெனில்)[கற்பிதப்பிரபஞ்சவடிவமாகத்தோற்றுகின்ற] தூலபஞ்சபூதங்களும் அந்தப்பூதங்களிலேதோன்றின மூன்று சாதியாயிருக்கின்ற,

வினு—ஞானத்மா என்றுலென்ன?

விடை—ஞானவடிவ ஆத்மாஞானத்மாவாம்.

வினா—இதினிலக்கணம் யாது?

விடை—அவஸ்தாத்திரயங்களையும், அவைகள்தம்முன் மாறிமாறிவருதலையும், ஒன்றிலொன்றில்லாமையையும், சம்பந்தமின்றித்தான்விகாரமடையாமல் சாக்ஷியாயிருந்தறியும் சேதனமியாது அது ஞானாத்மாவாம்.

வினா—கூடஸ்தன் என்றாலென்ன?

விடை—விகாரமடையாதவனெனப்பொருளாம்.

வினா—இதினிலக்கணமியாது?

விடை—கூடமென்பது கொல்லனதுபணை. அது தன்சன்னிதிப்பட்ட இரும்புகள் விகாரப்படினும் தான்விகாரப்படாததுபோல் தன் சந்நிதிப்பட்ட அவஸ்தாத்திரயாதிகள் விகாரப்படினும் தான் விகாரப்படாதது எதுவோ அது கூடஸ்தனாம். சலித்தலில்லாதவனென்பதும் அமையுமாறறிக.

வினா—இதுவரைகூறிவந்த அவஸ்தைகள்மூன்றில் மனிதர்களுக்குரிய அவஸ்தைகள்யாவை?

விடை—ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தியெனமூன்றுமாம்.

வினா—தேவர்களுக்குரிய அவஸ்தையாது?

விடை—ஜாக்கிரமொன்றே

வினா—மிருகாதிகளுக்குரிய அவஸ்தைகள்யாவை?

விடை—ஜாக்கிரமும், சுழுத்தியுமெனவிரண்டு.

வினா—விருக்ஷமுதலியவைகட்குரிய அவஸ்தையாது?

விடை—சுழுத்தியொன்றே.

வினா—மலைமுதலியவைகட்குரிய அவஸ்தையாது?

விடை—சுழுத்தியொன்றே.

வினா—மரங்களின் சுழுத்தியவஸ்தைக்கும், மலைகளின் சுழுத்தியவஸ்தைக்கும் பேதமியாது?

விடை—மரங்கட்கு க்ஷீணசுழுத்தியும், மலைகட்குக்காடசுழுத்தியுமுண்டு. இதுவே பேதமாம்.

வினா—க்ஷீணசுழுத்தியென்றாலென்ன?



விடை—தானே விழித்துக்கொள்ளுதல்வடிவ குறைந்தசுழுத்தியாம்.

வினா—காடசுழுத்தியென்றாலென்ன?

விடை—விழிப்பித்து விழித்துக்கொள்ளுதல் வடிவ அழுத்தமான சுழுத்தியாம்.

வினா—ஜீவன் அவஸ்தாத்திரயங்களை யெப்படியனுபவிக்கின்றான்?

விடை—பெரியபட்டணம்போல் ஜாக்கிரமும்; அதனுள்ளிருக்கும் கோட்டைபோல்சொப்பனமும், கோட்டையினுள்ளிருக்கும்அரண்மனைபோல் சுழுத்தியும், பட்டணம், கோட்டை, அரண்மனை இவைகளின் அபிமானிராஜன்போல் ஜீவனுமாம். இதில் அரண்மனைக்குள்ளிருக்கும் ராஜாவானவன், வெளிப்பூமிகளில் தனது லீலையால் வருவதுபோல்; சுழுத்தியவஸ்தையுள்ளிருக்கும் ஜீவன் தனது போகார்த்தமாய் ஜாக்கிர, சொப்பன அவஸ்தைகளிற்பொருந்துவதாம். வெளிப்பூமிகளில் சவாரிவந்த அரசனானவன் அரண்மனைக்குட்செல்லுங்கால் பரிசனங்களையெல்லாம் வெளிப்பூமியில் நிறுத்தி, அரண்மனைக்குள், ஏகாந்தமாயிருந்து சுகிப்பதுபோல்; ஜாக்கிரசொப்பன போகங்களினாலுண்டாய சிரமத்தை, தனது அரண்மனையாகிய சுழுத்தியவஸ்தையிற்சென்று, நிவர்த்திக்கவெண்ணி, கருவிகரணாதிகளை வெளிப்பூமியின்கண்ணேயேநிறுத்திவிட்டு, தான் யேகாந்தமாய்ச்சுகிக்கிறான் எனவறிக.

வினா—நல்லது; ஈசுவரனுடையசரீரங்கட்குப் பெயர்கள் யாவை?

விடை—விராட், இரண்யகர்ப்பம், அவ்வியாகிருதமென மூன்றும்.

வினா—விராட்டு என்றாலென்ன?

விடை—விசித்திர அழகைப்பொருந்தியபெரியவடிவமெனப்பொருள்.

கவி

தூலசரீரச்சமட்டியுங்கூடியீச்சுரற்குத்தூலமென்றும், மேல
பிதானம்விராட்டென்னவுமேவிளம்பலுறு மேவியிஃதோ,
டேல நனவெய்தீசன்வைச்சுவானரனென்று மிரண்டினுக்
குஞ், சாலவதிட்டானசைதனியமது பிரமனென்றுஞ்சாற்ற (௬௭)
லாகும்.

(இ—ள்) தூலசரீரசமட்டியுங்கூடி ஈசுவர தூலசரீரமென்றும், விராட்டென்றும் (பெயர்) சொல்லப்படும். இதனுடனேகூடி (மிகவும்) சாக்கிராவஸ்தையைப்பொருந்துகின்ற ஈசுவரன்வைசுவானரனென்றும் இந்த இருவகைக்கும் (மிகவும்) அதிஷ்டானசைதன்யம் பிரமாவென்றுஞ்சொல்லப்படும்.

வினு—விராட்டினிலக்கணமியாது?

விடை—சர்வஜீவராசிகளுடைய சமட்டி தூலசரீரங்களும், தூலபஞ்சபூதங்களும், சேர்ந்தது விராட்டென்னும் ஈசுவர தூலசரீரமாம்.

வினு—சமட்டியென்றுலென்ன?

விடை—அனேக பதார்த்தங்கள் அநேகமாய்த்தோன்றுமல் ஒரு புத்திக்கு விஷயமாவது சமட்டியாம்.

வினு—திருஷ்டாந்தமியாது?

விடை—அநேகமரங்களானது தோப்பு என ஒரு புத்திக்கு விஷயமாவதாம்.

வினு—வியட்டியென்றுலென்ன?

விடை—அனேக பதார்த்தங்கள் தனித்தனி விளங்குவது வியட்டியாம்.

வினு—திருஷ்டாந்தம் யாது?

விடை—அனேக மரங்களுடன்கூடிய தோப்பானது, இது இன்ன மரம், இதின்னமரமெனத்தனித்தனியாய் விளங்குவதாம்.

வினு—இந்த விராட்சரீரத்துடன் பொருந்தியிருக்கும் ஈசுவரனுக்குள்ள அவஸ்தையின் பெயர் யாது?

விடை—விராட்டவஸ்தை, பர (ஈசுவர) சாக்கிராவஸ்தை, சிருஷ்டி அவஸ்தையெனச் சொல்லுவர்.

வினு—இந்தச் சரீரம், அவஸ்தை இவைகளைப் பொருந்தியிருக்கும் ஈசுவரனுக்குப்பெயர் யாது?

விடை—விராட் அல்லது வைசுவானரனும்.

வினு—வைசுவானரன் என்றுலென்ன?

விடை—சர்வப்பிராணிகளின் சரீரத்திலும் நான் என்று அபிமானம்



வைத்திருத்தலின் வைசுவானரனும்.

வினு—ஈசுவரனுக்கும் அபிமானம் எப்படியுண்டு?

விடை—'ஒன்றுகியயான் பலவாவேன்' என்ற சிருஷ்டியவசரம் பற்றிக்கூறியதேயன்றி ஜீவர்களுக்குப்போல் அகங்காரவடிவ அபிமானமாய்க்கூறவில்லை.

வினு—அகங்காரவடிவ அபிமானம் ஏனில்லை?

விடை—நியமமான சரீரமில்லாததாலில்லை.

வினு—இந்தச்சரீரம், அவஸ்தை, அபிமானி, இவைகளுக்கு அதிஷ்டானசைதன்யம் யாது?

விடை—தூலசிருஷ்டிக்காதாரமாய பிரம்மாவாம்.

வினு—இவைகட்குச்சாக்ஷிசைதன்யம் யாது?

விடை—அகண்டபரிபூரண சச்சிதானந்த பிரஹ்மம் ஆம்.

வினு—இவ்வித விசாரனே எதிலுபயோகம்?

விடை—'தத்துவமஸி' மகாவாக்கியத்தில் தத், ஜீவன் விசாரிக்குங்கால் தத்பதவாச்சிய(அர்த்த)மாயஈசுவரனேச்சோதிப்பதில் உபயோகமாம்.

வினு—ஆயின் ஜீவனுனவன் ஈசுவரனேச்சோதிப்பனெனில் ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் பேதம் யாது?

விடை—ஜீவன் வியட்டியும், ஈசுவரன் சமட்டியுமாம்.

வினு—வியட்டியாய ஜீவன் சமட்டியாகிய ஈசுவரசரீரமாதிகளை எப்படியனுபவிப்பன்?

விடை—வியட்டியிலுள்ள தூலசரீராபிமானியான விசுவனே, சமட்டி பார்வையில் விராட்டெனப்பெயர் பெறுவதால் அவ்வடிவாகநிலைப்பதே விராட்டனுபவமெனப்பெயர்.

வினு—ஆயின் சரீரம், அவஸ்தை, அபிமானி, அதிஷ்டானசைதன்யம், சாக்ஷிசைதன்யம் இவைகளாகிய இப்பாஜாக்கிரதாவஸ்தையை விசுவன் எப்படியனுபவிப்பன்?

விடை—பிரத்தியக்ஷவிஷயமான இச்சாக்கிரப்பிரபஞ்சம் நானுசிவர்களால் பார்வையாதி வியாபாரங்களாலனுபவிக்கப்படுகிறது. அவ்விதபார்வையாதி வியாபாரங்களில் உபயோகியாயிராநின்ற இந்திரி

யங்கள் பலவாயிருப்பினும்; தனது சொப்பனத்திலுள்ள நானு சீவர்களுடையபார்வையாதிகளும்,அதிலுபயோகியான இந்திரியங்களும் வெவ்வேறுவிதமாயிருந்தபோதிலும் விவேகவிருத்தியால் தனக்கு வேறில்லாமலனுபவிக்கப்படுவதுபோல்; பல என்றவியவஸ்தையை விமர்சினிசத்தியின் கருணை கடாக்ஷத்தால் நீக்கிப்பார்க்குங்கால், இந்திரியவியாபாரத்திலாவது, விஷயத்திலாவது, நானுத்தன்மையில்லாமல் ஒரே அகண்டவிருத்தியானது அனுபவத்திற்குவரும். அவ்வனுபவவிடயவிருத்தியே விராட்சரீரம். அவ்வகண்டவிருத்திப்பிரதிபிம்பிதசைதன்யமே விசுவனுக்கு வேறாகாதவிராட். இவ்வனுபவகாலமே சாக்கிரம். இத்தூலசரீர சிருஷ்டியானது, சிருஷ்டி அவசரத்து அகண்டவிருத்தியின் கண்ணுண்டான 'ஏகமாகிய யான் நானுவாவேன்' என்னும் ரஜோகுணமுனைப்பாலுண்டான ஓர் சங்கற்பரூபவியக்திவிசேஷத்தாலுண்டானமையின், கூறிய மூவிதவிருத்திகளையும் அடக்கிய அவ்வகண்டரஜோகுணவிருத்தியில்பிரதிபிம்பித்து விளங்கியசேதனம் பிரஹ்மா. முற்கூறப்பட்ட நான்குவிருத்திகட்கும் சாக்ஷியாயுள்ளது பிரஹ்மம், எனத்தன்னுடைய அவஸ்தாபேதங்களாக தனக்கு அபேதமாய் அறிந்தனுபவிப்பன்.

கவி

சூக்குமபூதங்களைந்துமதிற் றோன்றுசூக்கதனுத் தொகுதி
தொக்கு, சூக்கமெய்யிச்சுரர்க்காம்பொன்கர்ப்பமென்னவு
மேசொல்லலாகு, நீக்கமிலாதிதைக்கூடிக்கனவதனினிலவீ
சன்சூத்திரான்மா, ஆக்குமிவ்விருவகைக்குமதிட்டானசை
தனியமரியென்றோதும். (சூ-அ)

(இ-ள்) சூக்குமபூதங்களைந்தும், அந்தப்பூதங்களிலேதோன்றினசூக்குமசரீரசமட்டியுங்கூடி ஈசுவரசூக்கும சரீரமென்றும் இரண்யகர்ப்பமென்றுஞ்சொல்லப்படும். (பிறிவில்லாத) இதனுடனேகூடி சொப்பனவஸ்தையைப் பொருந்துகின்ற ஈசுவரன்சூத்திரான்மாவென்றும் (உண்டான) இந்தஇருவகைக்கும் அதிஷ்டான சைதன்யம் விஷ்ணுவென்றுஞ்சொல்லப்படும்.



வினு—இரணியகர்ப்பம் என்றாலென்ன?

விடை—பொன்னைப்போற் பிரகாசிப்பதாய், பிரகாசத்திரவியங்களனைத்தையும் தன்னுதரத்திற்கருப்பமாக அடக்கியிருத்தலினாலாம்.

வினு—இதினிலக்கணம்யாது?

விடை—சர்வஜீவராசிகளுடைய சூக்குமசரீரமும், சூக்குமபூதமும் சேர்ந்தது ஈசுவரசூக்குமசரீரமாம்.

வினு—இச்சூக்குமசரீரத்திற்கு இரண்யகர்ப்பமெனப்பெயர் வருவானேன்?

விடை-இரண்யகர்ப்பமென்றால் பொன்னிறமான முட்டையெனப்பொருள். முட்டைக்குள் பார்வைக்குயோக்கியமாய இறகுமுதலன அடங்கியிருத்தல்போல், இச்சூக்குமசரீரத்துள்ளும் இந்திரியயோக்கியமாய தூலபூதங்களடங்கியிருத்தலின் அப்பெயர்வந்தது.

வினு—இச்சரீரத்துடன் பொருந்தியிருக்கும் ஈசுவரனுடைய அவஸ்தைகளின் பெயர்கள்யாவை?

விடை-இரண்யகர்ப்பாவஸ்தை, பர (ஈசுவர) சொப்பனவஸ்தை,திதிஅவஸ்தையெனக் கூறுவர்.

வினு—இச்சரீராதிகளிற் பொருந்தியிருக்கும் ஈசுவரனுக்குப்பெயர்கள் யாவை?

விடை—இரண்யகர்ப்பன், சூத்திராத்மாவெனப்படுவன்.

வினு-இவனுக்குச் சூத்திரான்மா வென்ற பெயர்வரக்காரணம்யாது?

விடை—எப்பொருள்களையும் தனது சக்தியினால்சூத்திரதாரிபோல் கர்மம் என்ற கயிற்றால் இயங்கச்செய்தலின் சூத்திராத்மாவாம்.

வினு—இச்சூக்குமசரீரத்திலிவருக்கு அபிமானமுண்டா?

விடை—அபிமானகாரண தூலசரீரமின்மையால் அபிமானமில்லை.

வினு—சரீரம், அவஸ்தை, அபிமானம், இவைகட்கு அதிஷ்டான சைதன்யம் யாது?

விடை—விஷ்ணுவாம்.

வினு—சரீரம், அவஸ்தை, அபிமானம், அதிஷ்டானம் இவைகட்குச் சாக்ஷிசைதன்யம் யாது?

விடை—அகண்டபரிபூரணசச்சிதானந்தப்பிரஹ்மம்.
வினா—முற்கூறிய ஐந்தையும் அனுபவிப்பவன் யாவன்?
விடை—வியட்டி தைஜஸனே சமட்டியில் இரண்யகர்ப்பனெனப்
பெயர்பெறுவதால் தைஜஸனே யனுபவிப்பன்.
வினா—ஆயின் இப்பரசொப்பனாவஸ்தையை அதிகாரியாயஜீவர்கள்
எப்படியனுபவிப்பர்?
விடை—தைஜஸனென்பது வியட்டியில் சூக்குமசரீர அபிமானியும்,
சொப்பன அபிமானியுமாவன். சூக்குமசரீரப்பிரதானமான மனதி
னாற்கற்பிக்கப்பட்ட நம்முடைய சொப்பன அனுபவத்தை நாம் எதி
ரிட்டு அறிவதுபோல்; அநேகம் பெயர்களுடைய சொப்பனானுப
வத்தை அதற்குக்காரணமாயமனோபாதிகளையும், அதன் காரியங்க
ளையும், விமர்சினியால் நமது விருத்தியில் அனுசந்தானிக்கில் நம்மு
முடைய ஒரு அகண்ட விருத்தியில் அனேக சொப்பன ஜகங்கள்
கோவைப்பட்டிருப்பதாய் அனுபவத்திற்குவரும். இவ்விருத்தியே
இரண்யகர்ப்போபாதியும், சரீரமுமாம். அவ்வகண்டவிருத்திப்பிரதி
பிம்பிதசைதன்யமே தைஜஸனுக்கு வேறாகாத இரண்யகர்ப்பனும்.
இவ்வனுபவகாலமே மனோமயவடிவமாயிருத்தலின் பரசொப்பன
மாம். இவ்வகண்டவிருத்தியிலுள்ள மனோமயவிளக்கமானது சத்து
வகுண ஆதிக்கத்தினதாயிருத்தலின் கூறிய மூவிதவிருத்திகளையும்
அடக்கிய, அவ்வகண்டசத்துவகுணவிருத்தியில் பிரதிபிம்பித்துவிளங்
கியசேதனம் விஷ்ணு. முற்கூறப்பட்ட நான்கு விருத்திகட்கும்
ஸாக்ஷியாயுள்ளது பிரஹ்மம், என தன்னுடைய அவஸ்தாபேதங்க
ளாகத்தனக்கபேதமாய் அறிந்தனுபவிப்பன்.

கவி

இத்தூலசூக்குமமா மிருவகைவாதனையுடனே யியைந்தமா
யை, அத்தேவன்காரணமெய்யவ்வியாகிருதமெனவறைய
ச்சுகும், இத்தோடேயியைந்துறக்கமருவீசனிபம்பலுமன்
தர்யாமி, யொத்தவிவ்விருவகைக்குமதிட்டானமுருத்திர
னென்றுரைப்பர்மேலோர் (௬௯)



(இ—ள்) இந்தத்தூலம், சூக்ஷுமம் இரண்டின் வாசனையுடனே, கூடி
யிருக்கின்றமாயை (அந்த) ஈசுவரகாரணசரீரமென்றும், அவ்வியாகி
ருதமென்றுஞ்சொல்லப்படும். இதனுடனே கூடிச்சுழுத்தியவஸ்தை
யைப்பொருந்துகின்ற ஈசுவரன் அந்தர்யாமியென்றும் இந்த இரு
வகைக்கும் அதிட்டான சைதன்யம் உருத்திரனென்றுஞ் சொல்லப்
படும் (எனவித்வான்கள் சொல்லுவார்கள்.)
வினா—அவ்வியாகிருத சரீரமென்றாலென்ன?
விடை—நாம, ரூபங்களாய விஷயங்கள் வெளிப்படுதல்வடிவ விசே
ஷரூபத்தையடையாதது எனப்பொருள்.
வினா—அதனிலக்கணமியாது?
விடை—சமட்டி தூல, சூக்குமமாகிய இருவகைச்சரீரங்களின் வாச
னையுடனே கூடிய மாயையாம்.
வினா—வாசனையுடனேகூடியவென்றாலென்ன?
விடை—ஓர்விதைக்குள் இனிவெளிவருதற்குரிய இலை, கந்தமாதிகள்
அடங்கியிருப்பதுபோல்; மாயைக்குள் இனிவெளிவருதற்குரிய தூல,
சூக்குமபதார்த்தங்கள் அடங்கியிருத்தலென்பதாம்.
வினா—இச்சரீரத்துடன் பொருந்தியிருக்கும் ஈசுவரனுடைய அவஸ்
தைகள் யாவை?
விடை—அவ்வியாகிருத அவஸ்தை, பர (ஈசுவர) சுழுத்தியவஸ்தை
சம்மார அவஸ்தை, யெனக்கூறுவர்.
வினா—இச்சரீரம், அவஸ்தை இவைகளைப்பொருந்தியிருக்கும், ஈசுவ
ரனுக்குப் பெயர்கள் யாவை?
விடை—அவ்வியாகிருதன் அல்லது அந்தர்யாமியெனப்பெயராம்.
வினா—அந்தர்யாமியென்றாலென்ன?
விடை—மாலையின்கண் கயிறுபோன்றும், பிருதிவியாதி நான்கு
பூதங்களில் ஆகாயம்போன்றும், எல்லாப்பொருள்களிலும் உள்ளீ
டாயிருத்தல்பற்றி அந்தர்யாமியாம்.
வினா-இக்காரணசரீரத்திலிவனுக்கு அபிமானமுண்டா? இல்லையா?
விடை—அபிமானம் அகங்காரதர்மமானபடியாலும், அவ்வவஸ்தை

யில் அகங்காரமில்லாததுபற்றியும்; அபிமானமில்லையெனப்பட்டது.

வினா—சரீரம், அவஸ்தை, அபிமானம் இவைகட்கு அதிஷ்டான சைதன்யம் யாது?

விடை—உருத்திரன் ஆகும்.

வினா-சரீரம், அவஸ்தை, அபிமானம், அதிஷ்டானசைதன்யம் இவைகட்குச்சாக்ஷிசைதன்யம் யாது?

விடை—அகண்டபரிபூரணசச்சிதானந்தப்பிரஹ்மம்.

வினா—முற்கூறிய ஐந்தும் யாருடைய அனுபவத்திற்கு விஷயம்?

விடை—அந்தர்யாமிக்கு வேறுகாத பிராஞ்ஞனே அனுபவிக்கிறான்.

வினா—அப்படியானால் இப்பரசுழுத்தியை அதிகாரியாய ஜீவன் எப்படியனுபவிப்பன்?

விடை-வியட்டி ஜாக்கிரத்திலுள்ள இந்திரிய, மனோவியாபாரங்களை நீக்கில், தான் பிறர் என்றபேதம் நழுவிச்சுழுத்தியையெப்படியடைகின்றார்களோ அதுபோல்; பூர்வம் அனுபவிக்கப்பட்ட இந்திரிய, மனோவியாபாரவடிவவிராட், இரண்யகர்ப்ப உபாதிகளையும் அதன் காரியமானசமட்டி தூலசூக்கும விளக்கத்தையும் மறந்து அனுசந்தானிக்கில் சகலஜீவர்களும் ஜகத்சத்தாசூன்யாசாரவடிவசுழுத்தியோடிருக்கும், ஓர் அகண்ட அனுபவவிருத்தியானது அனுபவிக்கப்படும். இவ்விருத்தியே அவ்வியாகிருத உபாதியும் சரீரமுமாம். இவ்வகண்டவிருத்திப்பிரதிபிம்பிதசைதன்யமே பிராஞ்ஞனுக்கு வேறுகாத அந்தர்யாமியாம். இவ்வனுபவகாலமேஜகத்சத்தாசூன்யவடிவாயிருத்தலின் சுழுத்தியாம். இவ்வகண்டவிருத்தியிலுள்ள சூந்யாகாரத்தன்மையானது தமோகுணவிளக்கத்தினதாயிருத்தல்வேண்டுமாதலின் கூறியமூவிதவிருத்திகளையும் அடக்கிய அவ்வகண்ட தமோகுணவிருத்தியில் பிரதிபிம்பித்துவிளங்கியசேதனம் உருத்திரன். முற்கூறப்பட்டநான்கு விருத்திகட்கும் ஸாக்ஷியாயுள்ளது பிரஹ்மம், எனதன்னுடைய அவஸ்தாபேதங்களாகத் தனக்கபேதமாயறிந்து * அனுபவிப்பன்.

* இவ்விதசோதனைகளை விரிவாயறியவிரும்புவோர் சுவானுபூதிரஸாயனம் சமட்டியுபாதியுரைத்தபிரகரணத்திற் கண்டுகொள்க.



வினா—இதுகாறும் அங்கங்கே ஈசுவரனுக்கு அபிமானமில்லையெனக் கூறி, அபிமான நாமஞ் சொல்லுவானேன்?

விடை—ஜீவர்களுக்குப்போல் அபிமானமில்லாததால் இல்லையென்றும், அவ்விதமில்லாவிடினும்,ஜீவர்களிடத்துவைத்துள்ளகருணையை முன்னிட்ட அபிமானமுமின்றி சிருஷ்டியாதி நடவாவானதால் அபிமான நாமமும் கட்டப்பட்டது.

வினா-ஆயின் அபிமானிக்கும், அதிஷ்டானசைதன்யத்திற்கும் பேதம் யாது?

விடை—அபிமானி என்பது சிருஷ்டி முதற்கொண்டு பிரளயம் வரைக்கும், அவ்வச்சரீரங்களோடு கூடியிருக்கும் அகண்டவிருத்திப்பிரதிபலனசைதன்யம். அதிஷ்டானசைதன்யமென்பது அவ்வச்சரீரங்களின் சிருஷ்டி, பிரளயத்திற்கு யேதுவாய சக்திகளோடுகூடி ஆக்கல், அளித்தலாதிகளுக்குக்காரணமாயிருக்கும் சைதன்யமெனப்படும்.

வினா—அப்படியானால் பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் மூவரும் எப்படி அதிஷ்டானமாவர்?

விடை—இலக்கணையால் (தாற்பரியத்தால்) பிரஹ்மமே அதிஷ்டானமாய்க்கொள்ளத்தக்கது.

வினா—அதிஷ்டானம் என்றாலென்ன?

விடை—இருக்குமிடம் எனப்பொருளாம்.

வினா—அதனிலக்கணமியாது?

விடை—விவர்த்த (பொய்த்தோற்ற)வடிவ காரியத்தின் காரணம் விவர்த்த உபாதானம் அதுவே அதிஷ்டானமாம்.

வினா—காரணமென்றாலென்ன?

விடை-ஒரு காரியமுண்டாதற்கு இன்றியமையாததும், உற்பத்திக்கு முற்கணத்திருப்பதும் யாது அதுகாரணமாம்.

வினா—திருஷ்டாந்தம் யாது?

விடை-குடமாகிய காரியத்திற்கு மண்ணும், தண்டமும், சக்கரமும், குலாலனும் போலாம்.

வினா—அவ்விதகாரணம் எத்தனை வகைப்படும்?

விடை—உபாதானகாரணம், நிமித்தகாரணமென இருவகைப்படும்.

வினா—உபாதானகாரணமென்றாலென்ன?

விடை—ஓர் காரியமுண்டாதற்கு முதற்காரணமெனப்படும்.

வினா—அதனிலக்கணமியாது?

விடை—காரியத்தின் உற்பத்தியும், நிலைப்பும், ஒடுக்கமும் எதன் கண்ணோ! அதுமுதற்காரணமாம்.

வினா—திருஷ்டாந்தமியாது?

விடை-கடத்தின் உற்பத்தி, நிலைப்பு, ஒடுக்கம் மண்ணிடத்தாதலின் மண்முதற்காரணமாம்.

வினா—நிமித்தகாரணமென்றாலென்ன?

விடை—உற்பத்தியில் மாத்திரங்காரணமாயிருப்பதாம்.

வினா—திருஷ்டாந்தமியாது?

விடை—கடோற்பத்தியில் மட்டும் காரணமாயிருக்கும் குலாலாதி போலாம்.

வினா—உபாதானமெத்தனை வகை?

விடை—ஆரம்பம், பரிணாமம், விருத்தி, விவர்த்தம் எனநால்வகை வாதங்களை முன்னிட்டு, ஆரம்போபாதானம், பரிணாமியுபாதானம், விருத்தியுபாதானம், விவர்த்த உபாதானம் எனப்பகுக்கப்படும். இதில் விவர்த்தபக்ஷமே சித்தாந்தத்தில் அங்கீகாரமாம்.

வினா—ஆரம்போபாதானமாவது யாது?

விடை—அநேககாரணங்களால் ஒரு காரியமுண்டாவது. செங்கல், சுண்ணமிவைகளால், வீடு உண்டாவது திருஷ்டாந்தம். இதில் செங்கலாதிகள் ஆரம்போபாதானமாம்.

வினா—பரிணாமியுபாதானமாவதியாது?

விடை—காரணங்கெட்டுக்காரியமாதல் பரிணாமவிலக்கணம். திருஷ்டாந்தம்-பால்கெட்டுத்தயிராதல்போல்; இதில்பால்பரிணாமியுபாதானமாம்.

வினா—விருத்தியுபாதானமாவதுயாது?



விடை—அவயவசகிதமாகிய ஓர்காரணத்தால் அவயவசகித ஓர் காரியந்தோற்றல்; வஸ்திரங்கூடாரமாதல் திருஷ்டாந்தம். இதில் வஸ்திரம் விருத்தியுபாதானமாம்.

வினா-சித்தாந்தத்தில் அங்கீகரிக்கப்பட்ட அதிஷ்டானவடிவவிவர்த்த உபாதானமாவது யாது?

விடை—பொய்யாகத்தோற்றியதின் முதற்காரணமெனப்பொருள்.

வினா—அது எப்படி?

விடை—பொய்யாகத்தோன்றிய சர்ப்பத்திற்கு முதற்காரணம்கயிறு போலாம்.

வினா—விவர்த்தவடிவகாரியமென்றாலென்ன?

விடை—காரணத்தினின்றுண்டாயது காரியமாதலால், பொய்த்தோற்றத்தையே சொரூபமாகவுடையதாம்.

வினா—திருஷ்டாந்தம் யாது?

விடை—பொய்த்தோற்றத்தையே தனது சொரூபமாய்க்கொண்டுள்ள சர்ப்பம்போலாம்.

வினா—இவ்வதிஷ்டான ஆரோபத்தினிலக்கணம் தாஷ்டாந்தத்திலெப்படிப்பொருந்துகிறது?

விடை-பிரம்மா, விஷ்ணு, உருத்திரனாகிய இவர்களுடைய யதார்த்த வடிவமாகியபிரஹ்மத்தினிடத்து,அவர்களுடையஉபாதிபாகங்களாய விராட்டாதியபிராட்டாதிசரீரங்கள், சிருஷ்டியாதியவஸ்தைகள், பிரம்மா, விஷ்ணு, உருத்திரர் இவர்களுடைய யதார்த்தவடிவாய பிரஹ்மம் மானங்கள்,எல்லாம்;விவர்த்தமாய்த்தோற்றியிருத்தல்பற்றி; அதிஷ்டானமாயும்; உபாதிபாகமாய சரீராதிகள் ஆரோப (பொய்த்தோற்ற)மாயும் இருக்குமாறறிக.

வினா—ஆயின் அதிஷ்டானசைதன்யம், சாக்ஷிசைதன்யமென இருவிதமாய்க்கற்பிப்பானேன்?

விடை—அதிஷ்டானமென்பது, பிரஹ்மத்திற்கும் பிரபஞ்சத்திற்குமுள்ள காரணகாரியத்தை விளக்கவந்த ஓரிலக்கணமெனவும், சாக்ஷிசைதன்யம் என்பது அவ்விதகாரிய,காரணகற்பனைகளைப்பொருந்தி

யிருப்பினும் அதற்(பிரமத்திற்)கே அஸங்கோதாசீனசேதனத்துவத்தையும் நிரூபிக்கவந்த இலக்கணமெனவும் கண்டுகொள்க.

வினு—பரதுரியமாவது யாது?

விடை—மேற்கண்ட அதிஷ்டானவடிவ பிரஹ்மமாக மிஞ்சுவது பரதுரியமாம். இது பின்னல் பிரஹ்ம வியவகாரத்திற் கண்டுகொள்க.

வினு—இதுவரை கூறிவந்த அவஸ்தாப்பிரசங்கத்தின் பிரயோஜனம் யாது?

விடை-இதுவரைசரீரத்திரயம், பஞ்சகோசம், இவைகளித்தகையது எனக்கூறப்பட்டது; இனி அவைகளை அபிமானிப்பவனும் நீயல்ல. நீ அவற்றிற்கு விலக்ஷண (அந்நிய)ன், என்னும் அர்த்தத்தை சுருதி பகவதியானவள் 'நீ அவஸ்தாத்திரயஸாக்ஷி' யெனப்போதித்தலின் அத்தகைய விவேகஞானத்தை முமுக்ஷுக்கள் எளிதாயடையுமாறு. இச்சாஸ்திரமும் அவஸ்தையின் இலக்கணத்தையும், அவத்தாவானி னிலக்கணத்தையும், அவற்றில் சாக்ஷியினிலக்கணத்தையுங்கூறிற்று. ஆதலால் அவ்விவேகமே பிரயோஜனமாம்.

வினு—அப்படியானல் 'சரீரத்திரயவிலக்ஷணன்,' 'பஞ்சகோசவெதிருக்த(அந்நிய)ன்' 'அவஸ்தாத்திரயசாக்ஷி' எனச்சுருதி மூவிதங்கூறியதுமிகையல்லவோ! அதில் நியாயமென்ன?

விடை—அதிகாரிகள் பலவாதலின் எவ்வெவ்வதிகாரிக்கு, எவ்வெவ் விவேகத்தால் மனம்சாந்தமடையுமோ அப்படியப்படியடைகவென தன்னுடைய சிரமம் கருதாமல் சுருதிமாதாபரமகருணையோடுகூறியிருத்தலின் அது மிகையாகாது. இன்னும் எத்தனைவிதம் திரும்பத்திரும்பக்கூறினும் அவ்வளவும் பிரயோஜனத்தோடு கூடியதே யாதலின் இதில் யாதும் முரண் இன்றென்றுணர்க.

வினுவிடைகள் 124. மொத்த வினுவிடைகள் 957.






உ

ஸ்ரீ சுந்தரவள்ளல் துணை.

12. இதுமுதல் இரண்டு செய்யுட்களால் ஜீவன், ஈசுவரன், பிரஹ்மம் இவற்றின் வியாபகத்தைக் கூறல்.

சீவன்றனவத்தையொரு மூன்றிலுந்தன் றேகமாய்ச்செப்புகின்ற, மூவொன்பானுமந்தத்தத்துவங்களுடனுனென்முயங்கிநிற்கும்,பாவனைபோலீசனுந்தன்னுகமொருமூன்றுமுப்பத்திரண்டா, மேவுதத்துவங்களொடுமவத்தையொருமூன்றிலுமேமேவிநிற்பான். (எ௰)

(இ-ள்) சீவன் தன்மூன்றவஸ்தைகளிலும் தன்மூன்று சரீரங்களாகச் சொல்லுகின்ற இருபத்தேழுதத்துவங்களுடனும் நானென்று கலந்து நிற்கின்றதுபோல,ஈசுவரனுந்தன் மூன்றவஸ்தைகளிலும் தன்மூன்று சரீரங்களாயிருக்கின்ற முப்பத்திரண்டு தத்துவங்களுடனுங்கலந்து நிற்பான்.

வினு—ஜீவனுடைய வியாபக அளவுயாது?

விடை-தன் மூன்றுசரீரங்களாகிய 27 தத்துவங்களின்அளவேயாம்.

வினு—இருபத்தேழுதத்துவங்கள் யாவை?

விடை-தூலசரீரதத்துவம் 6; சூக்குமசரீரதத்துவம் 20; காரணசரீரதத்துவம் 1., ஆக 27.

வினு—ஈசுவரவியாபக அளவுயாது?

விடை—தன் மூன்றுசரீரமாகிய 32 தத்துவங்களினளவேயாம்.

வினு—முப்பத்திரண்டுதத்துவங்கள் எவை?

விடை-சமட்டி ஜீவர்களின் தூலசரீரதத்துவம்6, சமட்டிஜீவர்களின் சூக்குமசரீரதத்துவம்20, சமட்டிஜீவர்களின் அவித்தையைஅடக்கிய மாயை 1, தூலம் அல்லது சூக்குமபூதம் 5, ஆகமுப்பத்திரண்டு.

கவி

ஆகையாற்சீவன்றனுகமாத்திரமணைந்தங்கவிர்வனீசன், ஏக மாய்த்தனதாகமாஞ்சருவமெய்பவஞ்சத்தியைந்துநிற்பான், ஆகுமிவ்விருவகைக்குங்கரியானபிரமமேமோவனைத்தாஞ்சீவர்

தேகமொடுபவஞ்சமெலாநிறைந்தப்பாலெல்லையற்றுத்திகழு
மன்றே. (எக)

(இ-ள்) ஆகையினாலே ஜீவசிதாபாஸன் தன்சரீரமாத்திரமே கலந்து நிற்பன். ஈசுவரன் (ஒன்றாய்) தன்சரீரமாகிய சகலசரீரங்களோடும் சகலபிரபஞ்சங்களோடும் கலந்துநிற்பான். இந்தஇருவகைக்கும் சாக்ஷியாயிருக்கின்ற பிரஹ்மசைதன்யமும்(ஜீவர்களுடைய) சகலசரீரங்களிலும் சகலபிரபஞ்சங்களிலும் நிறைந்து அப்பாலும் [பத்துத் திக்கையும்] அதிக்கிரமித்து எல்லையற்றிருக்கும்.

வினா—பிரஹ்ம வியாபக அளவு யாது?

விடை—ஜீவ, ஈசுவர, ஜகத் இவற்றைக்கடந்து அப்பாலும்பத்துத் திக்கையும் மீறி எல்லையில்லாமலிருக்கும்.

வினா—ஜீவனுக்கும், ஈசுவரனுக்கும் சரீரங்கூறி அதோடுகலந்து நிற்பரெனக்கூறியதுபோல், பிரஹ்மத்திற்கும் ஏன் கூறக்கூடாது?

விடை—ஜீவன், ஈசுவரன், சரீரங்கள், ஆகிய இவைகள் பிரஹ்மத்தினிடத்து கற்பிக்கப்பட்டவைகள். பிரஹ்மமாகிய சிவத்திற்குமேல் வேறு பொருளில்லாததாலும், யாதொன்றன்கண் மனம், வாக்கு, சரீரங்கள், செல்லாதுமீளும்; அது பிரஹ்மம் என்று-சுருதிகள் கோஷிக்கிறபடியினாலும், அத்தகைய பிரஹ்மத்திற்குச் சரீராதிகளை யாவது, ஓர் எல்லையையாவது கற்பிப்பார் யாவருளர்! ஒருவருமில்லாததால் அவ்விதம் கூறப்படவில்லை.

வினா—திக்கின் இலக்கணம் யாது?

விடை—கிழக்கு முதலிய வியவகாரத்திற்குக்காரணமாய், ஒன்றாய், வியாபகமாயிருப்பது திக்காம்.

வினா—அவை யாவை?

விடை—கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு, கீழ், மேல் எனப்பத்தாம்.

வினாவிடைகள் 8.

மொத்தவினாவிடைகள் 965.






உ

ஸ்ரீ சுந்தரபரமஹம்ஸர் துணை.

## 13. இதுமுதல் 2 செய்யுட்களால் வியட்டிவியவகாரத்திற்குரிய தத்துவங்களிவையெனல்.

சீவனுக்குத் தூலதனுவிவகாரக்கனமாய்த்திகழுமாறு, மேவு
றுண்டனுவிருபான்றத்துவமுஞ்சிவேசரவித்தைவித்தை.தே
வலநற்பிரமமெனத்தத்துவமுப்பானொன்றுங் கிளருஞ்சூக்க
க், தேவனுறுவிவகாரக்கிருபானைந்தாந்தூலமிருமூன்றின்
றே. (எஉ)

(இ-ள்) சீவனுக்குத் தூலசரீரவியவகாரத்திற்கு அன்னமயமான [சட்கோசதத்துவங்கள்] 6. (பொருந்திய) சூக்குமசரீரதத்துவங்கள் 20. சீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, (தனிமையானசுகவடிவ) பிரஹ்மம் [5] ஆகத்தத்துவங்கள் 31. (பிரகாசியாநின்ற) சூக்குமசரீர (செலுத்தாநின்ற) வியவகாரத்திற்கு(தூலசரீரதத்துவம் 6 நீங்க)[சூக்குமசரீரதத்துவங்கள் 20. சீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரஹ்மம் 5] ஆக தத்துவங்கள் 25.

வினா—சீவனுக்குத் தூலசரீரவியவகாரத்திற்கு தத்துவங்களெத்தனை?

விடை—வியவகாரகாரணமான தூலசரீரதத்துவம் 6, தூலசரீரம் வியவகரிக்கச்சாதனமாய சூக்குமசரீரதத்துவம் 20, அபிமானமின்றி வியவகாரம் சித்தியாவாதலால் அபிமானிரூபஜீவன் 1, ஜீவன் அவித்தையின்றித்தனித்திரானாதலால் அவன் காரணமான அவித்தை 1, முற்கூறிய தத்துவங்கள் தாமே இயங்காவாதலின் அவைகளை இயக்கும் ஈசுவரன் 1, ஈசுவரனுக்குக் காரணமானமாயை 1, பிரஹ்மமில்லாவிடின் ஒரு வியவகாரமும் சித்தியாவாதலின், சர்வகாரணமான பிரஹ்மம் 1, ஆகத்தத்துவங்கள் 31.

வினா—இவ்வியவகாரம் நிகழுங்காலம் யாது?

விடை—சீவசாக்கிராவஸ்தை.

வினா—சூக்குமசரீரவியவகாரத்திற்குத்தத்துவங்களெத்தனை?

விடை—வியவகாரகாரணமான சூக்குமசரீரதத்துவம் 20, அபிமானிரூபஜீவன் 1, ஜீவகாரண சரீரமான அவித்தை 1, சர்வநியந்தாவான, ஈசுவரன் 1, ஈசுவர காரணசரீரமான மாயை 1, சர்வகாரணமாயபிரஹ்மம் 1, ஆகத்தத்துவங்கள் 25.

வினா—இது நிகழுங்காலமியாது?

விடை—மரணத்திற்குப்பின், வேறு சரீரங்களை யெடுத்தற்பொருட்டுச்செல்லுங்காலமாம். (சிலர் சீவசொப்பனாவஸ்தை என்பர்; அது பக்ஷாந்தரமாம்).

வினா—சூக்குமசரீரவியவகாரத்தை சொப்பனாவஸ்தையில் கூறினாலென்ன?

விடை-இங்குச்சூக்குமசரீரமென்பது வியாவகாரிகசூக்குமசரீரமாம். வியாவகாரிகதூலசரீரம் எப்படிச் சொப்பனத்திலில்லையோ அதுபோல் வியாவகாரிக சூக்குமசரீரமுமின்று. மற்றோ அங்கு, (சொப்பனத்தில்) விஷயங்கள், அவற்றின் சாதனமாய சரீர, இந்திரிய, கரணங்கள், யாவும் நூதனமாய்ப்பிராதிபாவிகமாய் கற்பிக்கப்படுகின்றன. ஆதலால் கூறக்கூடாது.

வினா—சொப்பனாவஸ்தையில் சூக்குமசரீரப்பிரதானமான அந்தக்கரணமிருப்பதால் சூக்குமசரீரவியவகாரத்தை ஆண்டுக்கூறினாலென்ன?

விடை—சூக்குமசரீரத்தில் அந்தக்கரணம் எப்படிப்பிரதானமோ அதுபோல் பிராணாதிகளுமாம். அன்றியும் வியவகாரத்திற்குச் சாதனம் பிராணாதிகளே தவிர அந்தக்கரணமன்று; எனெனில் வியவகாரமென்பது சலித்தல் வடிவமாதலின் என்க. இன்னும் ஆண்டுள்ள வியாவகாரிக அந்தக்கரணமும் பிராதிபாவிக தூலாவித்தையால் மூடப்பெற்றிருத்தலின் அதை முன்னிட்டுண்டாம் விஷயம், ஞானம், கரணம், தேகமுதலிய சகலமும் பிராதிபாவிகமாயிருக்கின்றன. சொப்பனாவஸ்தையில் வியாவகாரிக சூக்குமசரீர வியவகாரத்தைக்கூறின் ஆண்டுள்ளவியவகாரங்களும் வியாவகாரிகமாகவேயிருக்கவேண்டும். அவ்விதமில்லாததால் சூக்குமசரீரவியவகாரமும் சொப்பனாவஸ்தையிலின்று.



வினா—மரணத்திற்குப்பின் எப்படி சித்திக்கிறது?

விடை-ஞானேந்திரிய, கர்மேந்திரியங்களாலுண்டாய வாஸனையின் ஆதிக்கம் அந்தக்கரணமூலமாய்ஸ்புரிக்க, அதற்குத்தக்கபடி சூக்குமசரீரப்பிரதானமான பிராணனால் இழுக்கப்பட்டு மாதாவின் உதரமுதலிய ஸ்தானங்கட்குக்கொண்டுபோகப்படுகிறது. அன்றியும் இச்சூக்குமசரீரத்தை அங்கமாய்க்கொண்டுள்ள, புரிபட்டக சரீரத்தாலேயே இகலோகத்திற்கு வருதலாதிவியவகாரங்கள் கேட்கப்படலால், மரணத்திற்குப்பின்னுள்ளகாலமே சூக்குமசரீரவியவகாரத்திற்குப் பொருத்தமாயதாம்.

கவி

புகன்றவிருபானைந்தாந்தத்துவங்களிடைச்சூக்கமிருபான்
போக்கி, மிகுந்தவைந்துங்காரணமெய்விவகாரதத்துவமா
மெய்போற்றேன்றும், தகுசீவவிவகாரந்தனக்கவித்தைவித்
தையிவைதள்ளிமூன்று, நகுஞ்சாக்கிவிவகாரந்தனக்குமே
சாக்கியொன்றாநவிலுங்காலே. (எௗ)

(இ-ள்) காரணசரீரவியவகாரத்திற்கு (கூறிய விருபத்தைந்துதத்துவங்களுள் சூக்குமசரீர தத்துவங்கள் இருபதும் நீங்கி மீந்த) [சீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை,பிரஹ்மம்] ஐந்து (தத்துவங்களாம்). (சத்தியம்போற் றோன்றுந் தகுதியுடைய) சீவவியவகாரத்திற்கு (அவித்தை, வித்தை இவைகள்நீங்கலாக) [சீவன், ஈசுவரன், பிரஹ்மம்] 3. (விளக்கவடிவ)சாக்ஷி வியவகாரத்திற்கு (சொல்லுமிடத்து) சாக்ஷி ஒன்று.

வினா—சீவ காரணசரீரவியவகாரத்திற்கு தத்துவங்களெத்தனை?

விடை—வியவகாரகாரணமான காரணசரீரம், 1; அபிமானிரூபஜீவன், 1; சர்வநியந்தாவான ஈசுவரன், 1; ஈசுவரகாரணசரீரமான மாயை, 1; சர்வகாரணமாயபிரஹ்மம், 1; ஆகத்தத்துவங்கள், 5.

வினா—இது நிகழுங்காலம் யாது?

விடை— ஜீவ சுழுத்தி அவஸ்தையாம்.

வினா—ஜீவவியவகாரத்திற்கு தத்துவங்களெத்தனை?

விடை—ஜீவன், 1; சர்வப்பிரேரகனான ஈசுவரன், 1; சர்வகாரணமான பிரஹ்மம், 1; ஆகத்தத்துவங்கள் மூன்று.

விஞ—இதுஎப்போது சித்திக்கிறது?

விடை—நிஷ்காமிய கருமோபாசனை மூலமாய் சித்தசுத்தி, ஏகாக்கிரதையைப்பெற்று, சாதனசதுட்டய பூர்வகமாய் சற்குருசந்நிதியில் மஹாவாக்கியவிசாரத்தைச் செய்யுங்கால், அவராற்கொடுக்கப்பட்ட அகண்டாகாரவிருத்திமூலமாய், தனதுநிஜஸ்வருபத்தை யறிதற்பொருட்டு அந்தர்முகவிருத்தியாற்சோதனைசெய்யுங்கால், தன்னைச் சிவனாகத்தரிசித்தகாலத்துச் சித்திக்கின்றது.

விஞ—இந்தஅவஸ்தைக்குப்பெயர்யாது?

விடை—ஆந்தர சவிகற்பசமாதி யெனப்படும்.

விஞ—ஸமாதியென்றாலென்ன?

விடை—ஸமபுத்தியோடிருத்தல் ஸமாதியாம்

விஞ—இச்சமாதி எத்தனை வகைத்து?

விடை—ஸவிகற்ப ஸமாதி, நிர்விகற்பஸமாதி, ஸகஜஸமாதி என மூவகைப்படும்.

விஞ—சவிகற்ப ஸமாதியாவது யாது?

விடை—காண்பவன், காக்ஷி, காண்பொருள் இவைகளின் தோற்றத்தோடு கூடிய அகண்டபிரஹ்மாகார விருத்தியின் ஸ்திதியாம்.

விஞ—ஏன் இதை சவிகற்பஸமாதி எனச்சொல்லவேண்டும்?

விடை-திரிபுடித்தோற்றமாகிய விகற்பத்தோடு, பிரஹ்மாகார விருத்தியும் நிகழுவதால் ஸவிகற்பஸமாதி யெனப்பட்டது.

விஞ—இது எத்தனை வகைப்படும்?

விடை—ஆந்தரம் (உள்), பாஹ்யம் (வெளி), என இருவகைப்படும்

விஞ—ஆந்தர சவிகற்ப ஸமாதி யாவது யாது?

விடை-நான் என்னும் சப்த விசாரணையில், ஜீவசோதனையைச்செய்யுங்கால் தூலசரீரமுதல் சாக்ஷிவரையுள்ள தத்துவங்களில். நான் சாக்ஷி என்னும் பரோக்ஷவிருத்தியாதாரமாய், அபரோக்ஷமாய கருவிகாரணாதிகளை ஒடுக்கிப்பார்க்குங்காலம் ஆந்தரசவிகற்ப ஸமாதியாம்.



விஞ—இந்தஆந்தரசவிகற்ப ஸமாதியைப் பழகும் விதம் எப்படி?

விடை—நான்யார் என்னும் விசாரணையில் விருப்புடைய சாதனசகிதமுமுக்ஷுவிற்கு குருவினால் முதன் முதல் உபதேசிக்கப்படுவது யாதெனில்—நீ அகண்டன், பரிபூரணன், சச்சிதானந்தன், என்ப காதி பிரஹ்மஇலக்கணங்களே. இதைக்கேட்டமாத்திரத்து அவ்வுபதேசத்தில் நம்பிக்கையையுடைய முமுக்ஷுவானவன் பிரஹ்மத்தின் இலக்கணங்களை நம்பிக்கை (பரோக்ஷ)மாத்திரமாய்க்கொண்டு அதனாலுண்டாய அகண்டவடிவ விருத்தியால், தனக்குப் பிரத்தியக்ஷம்போல் விளங்குகிற தூலசரீரம், பிராணன், மனம், புத்தி, அஞ்ஞானம் ஆகியஇத்தத்துவங்களானது, தன்னால் அறியப்படுதலின் அவைகள் காண்பொருள்களெனவும், அதனால் ஜடமெனவும், அதனால் அசத்து (இருப்பில்லாதது) எனவும் நேராயறிந்தும், மீண்டும் அவற்றில் மறந்தாவது நான் என்னும் புத்திவிருத்தி யுண்டாகாவண்ணம் களைகிற அகண்டாகார விருத்திவடிவாயிருக்கிறது. இதில் குருநாதனாற்கொடுக்கப்பட்ட பிரஹ்ம இலக்கணம் இன்னும்நேராய் அனுபவிக்கப்படாததால் அதனைப் பரோக்ஷமெனவும், இவனாற்றள்ளப்பட்ட தத்துவங்கள்நேராயறியப்படுதலின் அவற்றை அபரோக்ஷமெனவும், தத்துவங்களைக் காண்டல், காண்பவன், தத்துவங்கள் என்ற காக்ஷிகளோடுகூடியிருத்தலின் விகற்பத்தோடுகூடியது எனவுங் குறித்ததை, நியதி(நீக்குதல்)வாயிலாய் அனுபவத்திற் கண்டுகொள்க.

விஞ—பாஹ்ய சவிகற்ப ஸமாதியாவது யாது?

விடை—ஈசுவர சரீராதி சோதனையைச் செய்யுங்கால் விராட்முதல் பிரஹ்மமீறுயுள்ள தத்துவங்களில் பிரஹ்மம் அகண்டமென்னும் பரோக்ஷவிருத்தியாதாரமாய், அபரோக்ஷமாய விராட்டாதிசரீரங்களை ஒடுக்கிப்பார்க்குங்காலம் பாஹ்யஸவிகற்பசமாதியாம்.

விஞ—இந்தப்பாஹ்ய சவிகற்ப சமாதியைப் பழகும் விதம் எப்படி?

விடை—ஆந்தரநிர்விகற்ப சமாதியால் தன்னை அகண்டபோதகனாகத் தெரிசித்தபின், அந்தப் பிரத்தியக்ஷ ஞானத்தை ஆதாரமாய்க்

கொண்டு ஈசுவரனுடைய சரீராதிகளாய பஞ்சபூதங்கள் சமட்டி
தூலசரீரம், சமட்டிசூக்குமசரீரம், காரணசரீரமாயமாயை இவைகள்
தன்னால் அறியப்படுதலின் அவைகள் காண்பொருள்களெனவும் அத
னால் அவைகளை அசத்து, ஜடசுபாவமாய் நேராய்க்கண்டு, மீண்டும்
அவைகளில் சத்தியத்துவாதி புத்தி விருத்தியுண்டாகாதபடிதனக்கு
வேறில்லாமற்களைகின்ற விவேக விருத்திவடிவாயிருக்கிறது. இது
அபரோக்ஷவடிவ ஆந்தரநிர்விகற்ப சமாதியின் ஞானத்தை ஆதார
மாய்க்கொண்டு அப்பியாசஞ் செய்யப்பட்டபோதிலும் சமட்டிபார்
வையில் அகண்டஅபரோக்ஷம் வாராததால் பிரஹ்மமாய தன்னைப்ப
ரோக்ஷமாகவும், பஞ்சபூதாதிகளை அபரோக்ஷமாகவும் அனுபவிக்கக்
கூடியது எனவும்; அப்படியே பஞ்சபூதாதி தத்துவங்களின் திரிபுடி
யிருத்தலின் விகற்பத்தோடு கூடியது எனவும், குறிக்கப்பட்டதை
நியதியைச்செய்தல் வாயிலாகக் கண்டுகொள்க.
வினா—நிர்விகற்ப சமாதியாவது யாது?
விடை-ஞாதுரு, ஞான, ஞேயத்தோற்றமின்றிய அகண்ட பிரஹ்மா
காரவிருத்தியின் ஸ்திதியாம்
வினா—ஏனிதை நிற்விகற்ப சமாதியெனச் சொல்லவேண்டும்?
விடை—திரிபுடித்தோற்றமின்றி அகண்ட பிரஹ்மாகாரமாகநிலைத்தி
ருத்தலின் நிர்விகற்ப சமாதியாம்.
வினா—இது எத்தனை வகை?
விடை—ஆந்தரம், பாஹியம் எனவிருவகை.
வினா—ஆந்தர நிர்விகற்ப சமாதியாவது யாது?
விடை—ஆந்தர சவிகற்ப சமாதியைப்பழகுவோன், கருவிகரணாதிக
ளில் அபரோக்ஷமித்தியாபுத்திபூர்வகமாய்த், திரிபுடியின்றி நான்
சாக்ஷிஎன அபரோக்ஷ அவஸ்தையைப் பொருந்தி நிற்றலாம்,
வினா—ஆந்தர நிர்விகற்ப சமாதியைப்பழகும் விதம்எப்படி?
விடை-ஆந்தரசவிகற்ப சமாதியைப் பழகுங்கால் குருவருளினாலும்;
பூர்வபுண்ணிய பரிபக்குவத்தாலும், உத்தமமாயும், சாதனசகித
மாயுமிருக்கும் அதிகாரியின் உள்ளத்தில், சமாதிப் பழக்கத்திலுள்ள



திரிபுடி இயல்பாய்மறைந்து அகண்டபிரஹ்மாகாரமாக நிலைத்தல்
வடிவ நிர்விருத்திக (விருத்தியில்லாத) சுபாவத்தை, பின் அனுபவித்
தற்கு யோக்கியமான நிலைமையில், துவம்பத சோதனையில் க்ஷணிக
நேரம் அல்லது அதிகநேரம் சமபுத்தியை யடைகிறான். அத்தகைய
காலத்தை அறிஞர் ஆந்தரநிர்விகற்பசமாதி என்பர். இதில் அகண்ட
வடிவமாய், திரிபுடியின்றி நிலைத்தலின் கூறிய இலக்கணத்தை அனு
பவித்துக் கண்டுகொள்க.
வினா—பாஹிய நிர்விகற்பசமாதியாவது யாது?
விடை—பாஹ்யஸவிகற்பஸமாதியிலிருப்போன், விராட்டாதிசரீரங்
களில் அபரோக்ஷ மித்தியாபுத்தி பூர்வகமாய் திரிபுடியின்றி, நான்
பிரஹ்மம் என அபரோக்ஷ அவஸ்தையைப்பொருந்தி நிற்றலாம்.
வினா—பாஹ்யநிர்விகற்பஸமாதியையடையும் விதம் எப்படி?
விடை—பாஹ்யஸவிகற்பஸமாதியைப்பழகுங்கால் குருவருள்முதல
சாதனங்களைக்கொண்டு தத்பதசோதனைவடிவ இதில், அகண்ட
பிரஹ்மவடிவாக, தத்பதலக்ஷியார்த்தவடிவாயேனும் அல்லது அவி
பதார்த்தவடிவாயேனும் அதிகாரிக்குத்தக்கதாக நிலைக்கிறான். இதில்
திரிபுடியின்றிய பிரஹ்மாகாரவடிவ நிலைப்பிருத்தல்பற்றி அறிஞர்
பாஹ்யநிர்விகற்பஸமாதிஎன்பர்.(லக்ஷியார்த்தம்=தாற்பரியார்த்தம்)
வினா—பாஹ்யநிர்விகற்ஸமாதியால் அவிபதார்த்தமாக மிஞ்சுதல
டையாமல் தத்பத லக்ஷியார்த்தமாய் மிஞ்சுவனேல் அவன் யாது
செய்யவேண்டும்?
விடை-.அவிபதார்த்த ஞானமே புருடார்த்தசாதனமாதலின், பிரதி
பந்த (தடை) வயத்தாய் தத்பதலக்ஷியார்த்தமாக மிஞ்சுவனேல்
துவம்பதலக்ஷியார்த்தமாய ஆன்மஞானத்தையும், தத்பதலக்ஷியார்த்
தமாய பிரஹ்மஞானத்தையும் ஒன்றிலொன்றுகலத்தல்வடிவ ஓதப்
புரோதபாவ (குறுக்குநெடுக்கு) ஸமாதியப்பியாசத்தைச் செய்ய
வேண்டும். இதுநிர்விகற்பசமாதியிலடங்கும்
வினா-அந்தஓதப்புரோதபாவநிர்விகற்பஸமாதியைப்பழகுவதெப்படி?
விடை—அதிகாரியானவன் துவம் (ஜீவ) பதலக்ஷியார்த்தமாய ஆத்

மாவை அபரோக்ஷமாயறிந்திருப்பினும், சரீரத்தில் வளைபட்டிருப்பதுகொண்டுகண்டமாயும்;தத் (ஈசுவர) பதலக்ஷியார்த்தமாய பிரஹ்மத்தை அகண்டவடிவாயறிந்திருப்பினும், பரோக்ஷமாத்திரமாகவும்; பிரதிபந்தங்களின் ஆதிக்கத்தால் அநுபவித்துவிடுகிறான். இதனால் ஒழுங்கான அவிபதார்த்தஞானமுதிக்க மார்க்கமில்லாமல் சாந்தியையடைகின்றானில்லை. ஆதலால் ஈரிடத்து (துவம்பத, தத்பதங்களிலு)முள்ள பிரதிகூலபாகமாயகண்டத்துவ, பரோக்ஷத்துவபாகங்களை மனதிற்றியானியாமல், ஐக்கிய அநுகூலமாய அபரோக்ஷத்துவ, அகண்டத்துவ அநுபவவிருத்திகளையே மேற்கொண்டு! தத்பதம், துவம்பதம் என்றவிகற்பம் நேரிடுங்கால், முற்கூறப்பட்ட இரண்டு அநுகூலவிருத்திகளையும், பரஸ்பரம்சேர்த்து அப்பியாசஞ்செய்து அவிபதார்த்தஞானவாயிலாய் பரமபுருஷார்த்தத்தையடையவேண்டும்.

வினா—முற்கூறிய இருவகைச்சமாதிகளும் எவ்விதசம்பந்தமுடையன?

விடை—ஸவிகற்பஸமாதி சாதனமும், நிர்விகற்பஸமாதிஸாத்தியமுமாம்.

வினா—இரண்டிற்குமுள்ள முக்கிய பேதம் யாது?

விடை—ஸவிகற்பஸமாதியில் அபரோக்ஷ அநாத்மாகாரவிருத்தியும், பரோக்ஷஆத்மாகாரவிருத்தியுமுண்டு; ஆதலால் இதை விருத்தியோடுகூடியதென்பர். நிர்விகற்பஸமாதியில் அநாத்மாகாரவிருத்தியின் ஒழிபும்; விருத்தியினுதிப்பின்றிய அகண்டபிரஹ்மாகாரமாக எஞ்சுதலடைதலுமாம்; ஆதலால் இதை விருத்தியின்றியதென்பர். இவைகளே அவற்றின் பேதங்களாம்.

வினா—கூறிய ஆந்தர, பாஹ்ய நிர்விகற்பஸமாதிகளின் பலமியாது?

விடை—ஆந்தர நிர்விகற்பஸமாதியால் ஜீவனுடைய யதார்த்தவடிவாய சாக்ஷியாகவும், பாஹ்யநிர்விகற்பஸமாதியால் ஈசுவரனுடைய யதார்த்தவடிவாய பிரஹ்மமாகவும் மிஞ்சுவதே பலனும்.

வினா—ஜீவனுடைய யதார்த்த வடிவ சாக்ஷியாகவும், ஈசுவரனுடைய



யதார்த்தவடிவாய பிரஹ்மமாகவும், மிஞ்சுதலடையின் அவர்களின் ஐக்கியம் எப்படிச் சித்திக்கும்?

விடை—அவ்வவிபதார்த்த அபரோக்ஷமானது குரு கிருபையினால், நிர்விகற்பஸமாதியின் பரிபக்குவவடிவாய், சாக்ஷாத்கரிக்கப்படும். இதையே மௌனமெனவும் முடிந்தநிலையெனவும் கூறுவர்.

வினா—சகஜஸமாதியாவது யாது?

விடை-பிரஹ்மவித்தாதியோரால், ஜீவன்முக்தியின் விசேஷ ஆனந்தத்தின்பொருட்டு, வாசனக்ஷய, மனோநாச பூர்வகமாய் பிரஹ்மாபரோக்ஷ சாக்ஷாத்காரவிருத்தியுடன், சரீராதிகாரணங்கள் வியவகரிக்குங்கால், செய்யும் விவேகவிருத்தியாம்.

வினா—வாசனக்ஷய, மனோநாசங்களின் அப்பியாசத்தை பூர்வஸமாதிகளில் எப்படிப் பழகுவது? இச்சகஜசமாதியிலெப்படிப் பழகுவது?

விடை—பூர்வ ஸமாதிகளில் தத்துவஞானம் அடையப்படாததால் அதை (தத்துவஞானத்தை) முக்கியமாயும், அதற்குச்சாதனமாந்தன்மையில் மனோநாச, வாசனக்ஷயங்களை அமுக்கியமாயும்; இச்சகஜஸமாதியிலோ தத்துவஞானம் அடையப்பட்டுவிட்டபடியால் அதை (தத்துவஞானத்தை) அப்பிரதானமாயும், சுகவிக்நமாய வாஸனக்ஷய மனோநாசங்களைப்பிரதானமாயும் பழகவேண்டும்.

வினா—நிர்விகற்பஸமாதிக்கும் சகஜஸமாதிக்கும் பேதம் யாது?

விடை-நிர்விகற்பஸமாதியில் விருத்தியின்றடை அபேக்ஷையும், சகஜஸமாதியில் விருத்தியோடுகூடிய அபேக்ஷையும் பேதமாம்.

வினா—இச்சகஜஸமாதியை எப்படிப்பழகுவது?

விடை—முற்கூறிய முறையில் சவிகற்ப, நிர்விகற்பஸமாதியைப் பழகிவந்தோன் அதன் பயனாகிய ஞானத்தையும், மோக்ஷத்தையும் அடைந்து-பிரமவித்து என்னும் ஜீவன்முத்தனாய்ச்சஞ்சரிக்குங்கால் அச்சீவன் முத்தி விசேஷசுகத்னத அநுபவிக்கவெண்ணி தனது இச்சையினாலில்லாமல் ஊழ்வலியால் இச்சமாதியிற் பிரவிர்த்திக்கிறான். அப்போது வாசனாதிக்கத்தால் விடயங்களிற் செல்லுவதா

யும், அதனால் திருஷ்டதுக்கத்தோடுகூடியதாயுமிருக்கும் அந்தக்கரணத்திலுள்ள வாசனையையும், மனதின் பிரவிருத்தியையும் கெடுக்க உத்தேசித்து; எங்கேயெங்கே எப்படியெப்படி எவ்வெவ்விஷயவடிவாய் விருத்தியுதிக்குமோ அந்தந்தஇடத்திலேயே அவ்வவ்வாசனைகட்குத்தக்கபடி தோஷதிருஷ்டியைச்செய்து அந்தந்த விஷயங்களிலுள்ள அநித்தியத்துவாதி தர்மங்களை நினைப்பூட்டுதல் வாயிலாக அவ்விஷயவிருத்திகளை தனது சொரூபானுபூதியாம் அக்கினியில் ஆஹுதிசெய்து ஏகத்தையடைகிறான். இதுவே அவ்வப்பியாசத்தின் கிரமமாம்.

வினா—இச்சகஜசமாதியின் பலனியாது?

விடை—நிராவரணமாய், பரிபூரணமாய், விருத்தியோடுகூடியதாயுள்ள ஜீவன்முத்தியின் விசேஷ ஆனந்தானுபவமாம்.

வினா—சமாதிகளின் பெயரும், இலக்கணமும், பலனும் தெரிந்தது. முன் ஜீவவியவகாரத்தைக்கூறுங்கால்மாயையையும், அவித்தையையும் என் சேர்க்கவில்லை?

விடை—கூறிய சவிகற்பஸமாதியில் விகற்பயேதுவான அவித்தையும், மாயையும் பூர்ணமாயெடுபடாவிடினும் விமர்சினிசத்தியின் அருட்டிறத்தால் அவற்றின் சத்திகுன்றியிருப்பதுபற்றி அவற்றைச் சேர்க்கவில்லை.

வினா—ஆயின் ஈசுவரனைச்சேர்த்திருப்பதால் பிரயோஜனமுண்டா?

விடை—ஜீவபோதமிருக்கும்வரை ஜீவநியந்தாவான ஈசுவரனும், அவனதருளும், வேண்டியதவசியமாகையால் பிரயோஜனமுண்டு.

வினா—சாக்ஷிவியவகாரத்திற்குத் தத்துவமெத்தனை?

விடை—சாக்ஷி ஒன்றே.

வினா—இது எப்போது சித்திக்கின்றது?

விடை—மேல் ஜீவவியவகாரத்திற்கூறியபிரகாரம்-தன்னை ஜீவனாகத்தரிசித்தபின், குருநாதனது அனுக்கிரகத்தால், தற்போதமும் நழுவி, திரிபுடியின்றி, வியட்டி சாக்ஷிமாத்திரமாய்ச் சேஷித்தவிடத்துச் சித்திக்கிறது.



வினா—இந்த அவஸ்தைக்குப் பெயர் யாது?

விடை—ஆந்தர நிர்விகற்பஸமாதிவடிவ ஜீவதுரியாவஸ்தையெனக் கூறுவர்.

வினா—இதில் ஜீவனையும், ஈசுவரனையும் என் சேர்க்கவில்லை?

விடை—ஜீவன் சாக்ஷிவடிவாக நிலைத்தவிடத்து தனதுபோதங்கெடுதல்வாயிலாக ஜீவேசுவரபாவமுங்கழன்றுவிடுதலின் அத்தத்துவங்களைச் சேர்க்கவில்லை.

வினா—முற்கூறிய வியவகாரங்களில் ஜீவகாரணசரீரவியவகாரம், ஜீவவியவகாரம், சாக்ஷிவியவகாரங்களாகிய மூன்றும் தூலசரீரத்துடனிருக்கும்பொழுது தானே சித்திக்கிறது. ஆயின் அதை (தூலசரீரத்தை) யேன் சேர்க்கவில்லை?

விடை—ஸ்தூல சரீரத்துடனிருக்கும்பொழுது நேரிடினும் ஸ்தூலசரீர அனுபவமில்லாததாற் சேர்க்கவில்லை.

வினா—அப்படியானால் அந்தக்கரணமின்றி எவ்வியவகாரந்தான் கூடும்! அதையேன் சேர்க்கவில்லை?

விடை—விருத்தி விடயங்களிற் சஞ்சரிக்கும்பொழுது அந்தக்கரணமென்றும், பசுகரணமென்றும்பெயர். அதுவிமர்சினிசத்தியின் அனுக்கிரகங்கொண்டு, ஆத்மா, அனாத்மா இவைகளின் விவேகத்தைச்செய்யுங்கால் விவேகவிருத்தியென்றும், பதிகரணம்என்றும், பெயரையடைகிறது. இங்குக்கூறிய சமாதியில் எப்படிசர்ப்பமானது ரஜ்ஜுவடிவாய் நிலைத்திருக்கிறதோ அதுபோல் விருத்தியானது தனதுபாவம் (தோற்றம்) கெட்டவிடத்து பசுகரணத்தன்மைகெட்டு, பதிவடிவாய் நிலைத்தலின் அந்தக்கரணம் என்றதத்துவத்தைச்சேர்க்கவில்லை

வினா விடைகள் 47

மொத்த வினா விடைகள் 1012.



உ

ஸ்ரீ சுந்தரதேவர் துணை

14. சமட்டிவியவகாரத்திற்குரிய தத்துவங்களிவையெனல்.

இத்தத்துவங்கட்டமின் சமட்டியேயீச்சுரர்க்காமெனினு முன்
னர், வைத்திடுதூலஞ்சூக்கமதிற்பூதமைந்துமுடன் மருவுமீ
சன், வித்தையொடுபிரமமெனக்காரணக்குமூன் றீசவியவகா
ரக்கு, மெத்தீசன்பிரமமெனவிரண்டாகும்பிரமமொன் றவ்
வியவகாரக்கே (௭௪)

(இ-ள்) (இந்தத்தத்துவங்களுக்குள்) ஈசுவரனுக்குத் தூலசரீரவியவகாரத்திற்கு சமட்டி அன்னமயகோசதத்துவங்கள் 6. சமட்டிசூக்கும சரீரதத்துவங்கள் 20, சமட்டிஜீவன் அவித்தை 2, ஈசுவரன், வித்தை. பிரஹ்மம் 3, தூலபூதங்கள் 5, ஆகத்தத்துவங்கள் 36; சூக்குமசரீர வியவகாரத்திற்கு சமட்டி சூக்குமசரீரதத்துவங்கள் 20, சமட்டி ஜீவன் அவித்தை 2, சூக்ஷமபூதங்கள் 5, வித்தை, ஈசுவரன், பிரஹ்மம் 3, ஆகத்தத்துவங்கள் 30. காரணசரீர வியவகாரத்திற்கு ஈசுவரன், வித்தை, பிரஹ்மம் 3. ஈசுவரவியவகாரத்திற்கு(துட்பமாய) ஈசுவரன், பிரஹ்மம் 2. பிரஹ்மவியவகாரத்திற்குப் பிரஹ்மம் 1.

வினு—ஈசுவரனுக்குத்தூலசரீரவியவகாரம் ஆவது யாது?

விடை—ஈசுவரனுக்குச் சராசரவடிவப்பிரபஞ்சம் அவயவமாதலின் அவன் தூலசரீரம்வரை விரியப்பார்த்து, அப்படியே சிருஷ்டித்து அதனோடு பொருந்தி நிற்றலாம்.

வினு—இதற்குரிய தத்துவங்களியாவை?

விடை—வியவகாரசம்பந்தமான சமட்டி தூலசரீரதத்துவங்கள் 6. ஈசுவரன் வியாபகனாதலால் பரிச்சின்ன ஜீவர்களின் சரீரங்களை ஒன்றுபடுத்தும் தூலபூதங்கள் 5. சகல ஜீவர்களுக்கும் தூலசரீரசாதகமாய சமட்டிசூக்குமசரீரதத்துவம் 20. ஈசுவரவியாபகத்துள்ளடங்கியசமட்டி ஜீவர்கள்1. ஜீவகாரணமான சமட்டி அவித்தை1. இதிற் பொருந்தியிருக்கும் ஈசுவரன் 1. ஈசுவரகாரணமான மாயை 1. சர்வகாரணமான பிரஹ்மம் 1. ஆகத்தத்துவங்கள் 36.



வினு—இவ்வவஸ்தைக்குப் பெயர்யாது?

விடை—விராட்டவஸ்தை பரஜாக்கிர அவஸ்தையெனப் பெயராம்.

வினு—ஈசுவரசூக்குமசரீர வியவகாரத்திற்கு தத்துவங்களி யாவை?

விடை—வியவகாரகாரணமான சமட்டி சூக்குமசரீரதத்துவம் 20, அவற்றையொற்றுமைப்படுத்தும் சூக்குமபூதங்கள் 5, சமட்டி ஜீவன் 1, ஜீவகாரண அவித்தை 1, இதனோடுபொருந்தியிருக்கும் ஈசுவரன்1, ஈசுவரகாரணமாயை 1, சர்வகாரணமாய பிரஹ்மம் 1, ஆக 30.

வினு—ஈசுவரசூக்குமசரீர வியவகாரமென்றதென்ன?

விடை—ஈசுவரன் தனது தூலசரீரமின்றி இரண்யகர்ப்பசரீரத்துடன் பொருந்திநிற்றல்.

வினு—இந்த அவஸ்தைக்குப் பெயர் யாது?

விடை—இரண்யகர்ப்பாவஸ்தை பரசொப்பனவஸ்தை எனப்பெயராம்

வினு—ஈசுவரகாரணசரீர வியவகாரத்திற்குந்தத்துவங்களியாவை?

விடை—வியவகார காரணமான மாயை 1, இதிற்பொருந்தியுள்ள ஈசுவரன் 1, சர்வகாரணமாய பிரஹ்மம் 1, ஆகத்தத்துவங்கள் 3.

வினு—ஈசுவரகாரணசரீர வியவகாரமென்றதென்ன?

விடை—ஈசுவரன், தனது தூலசூக்ஷமசரீரங்களை வாசனைமாத்திரமாய்க்கொண்டுள்ள மாயையுடன் நிற்றலாகும்.

வினு—இந்தஅவஸ்தைக்குப்பெயர் யாது?

விடை—அவ்வியாகிருதஅவஸ்தை பரசுழுத்தியவஸ்தையெனப்பெயர்.

வினு—ஈசுவர வியவகாரத்திற்குத் தத்துவங்களெவை?

விடை—ஈசுவரன், சர்வகாரணமாயபிரஹ்மம் ஆக 2.

வினு—ஈசுவர வியவகாரமென்றதென்ன?

விடை—அதிகாரியானவன் ஜீவனுடைய சரீராதிகளைச் சோதித்து, தான் சாக்ஷியென மிஞ்சுதலடைந்து, பின் ஈசுவர சரீராதிகளைச் சோதித்து, ஈசுவரனாகமிஞ்சி அந்தப்பாவத்தைப் பெற்றிருத்தலாம்.

வினு—ஜீவதூலசரீரவியவகாரமுதல் சாக்ஷி வியவகாரம்வரை ஜீவனிடத்திற்காட்டியதுபோல்; ஈசுவரவியவகாரத்தையும் ஈசுவரனிடத்திற்காட்டாமல், ஜீவன் ஈசுவரபாவத்தைப் பொருந்தி நிற்றல் ஈசுவர வியவகாரமென்று சொல்லுவானேன்?

விடை—ஈசுவரனுக்குச் சரீரங்களாவது, அவஸ்தை, அபிமானமாதி
களாவது பரமார்த்தமாய் எக்காலத்துமின்று. ஆனால் துக்க நிவர்த்
தியில் அபிப்பிராயமுடைய ஜீவர்கள் அவனை உபாசித்து அவனரு
ளைப் பெறுதற்பொருட்டு, விராட்டாதிசரீரகற்பனைகளையும்; உபா
ஸனானந்தரம் அவனதுயதார்த்த வடிவஞானம்பெற்று,பரமசாந்தியை
யடைதற்பொருட்டு, விராட்டாதிகளின் அதீதவியவகாரமும்; சுருதி
கூறிற்றேயன்றி ஈசுவரனை நோக்கிக்கூறவில்லை. ஆதலால் ஈசுவரனி
டத்துள்ளசர்வகற்பனைகளும் ஜீவனைமுன்னிட்டாதலால் அவனிடத்
தேதான் கூறவேண்டும்.
வினா—ஆயின் ஜீவன் ஈசுவரபாவத்தைப் பெறுவனெனில், சர்வக்
ஞத்வாதிகலியாண குணங்களையும் அவன் அடைவதுண்டா?
விடை—தாரதம்மியமாய் அடைவன்.
வினா—எப்படி யடைவன்?
விடை—ஈசுவரனிடத்திலுள்ள சர்வக்ஞத்வாதி இருவிதம். ஒன்று
பாரமார்த்திகம்; மற்றொன்று வியாவகாரிகம். இதில் வியாவகாரிக
மென்பது அவனது உபாதியாகியமாயை சம்மந்தமுடைய வடிவமும்;
பாரமார்த்திகமென்பது அஃதின்றிய நிருபாதிகவடிவமுமாம். எவ்
வதிகாரி மாயாசம்பந்த வடிவத்துடன் அபேத உபாசனையைச் செய்
கின்றானோ,அவனது உபாஸனைக்குத்தகுதியாக யோகி, சுத்தயோகி,
சர்வக்ஞசித்தயோகி, மஹாயோகியென தாரதம்மியத்துடன் அணி
மாதி ஐசுவரியங்களோடு கூடிவிளங்குவன். எவ்வதிகாரி நிருபாதிக
வடிவத்துடன் அபேத உபாசனையிற் கருத்தாய், வியாவகாரிக உபா
திகளைச்சோதனைசெய்து பின் பாரமார்த்திகவடிவாய் நிலைபெறுகின்
றானோ, அவன் பாரமார்த்திக சர்வக்ஞமாய அறிவுக்கட்டியாய் நிலை
பெறுகின்றான். இவனிடத்து மறைந்துள்ள பொருள்களைக் காணுத
லாதிவடிவ அணிமாதிகள் தோன்றா. இதுவே அவற்றின் தாரதம்மி
யமாம். இங்குகூறிய அதிகாரி ஞானாதிகாரியானதால் ஈசுவரபாவ
முற்றுப் பின்பாரமார்த்திக சர்வக்ஞத்துவத்தைப்பெறுவான்
வினா—அப்படியாயின் இங்கு ஞானாதிகாரிக்குரிய இவ்வீசுவர வியவ
கார அவஸ்தைக்குப்பெயர் யாது?



விடை—பாஹ்ய சவிகற்பசமாதியெனப்படும்.
வினா-இந்த ஈசுவரவியவகாரத்திற்கு அவனதுகாரணமானமாயையை
யேன் சேர்க்கவில்லை?
விடை—விமர்சினி வல்லபத்தால் மாயை அடங்கியிருப்பது பற்றி
அதைச் சேர்க்கவில்லை.
வினா—பிரம்மவியவகாரத்திற்கு தத்துவம்யாது?
விடை—பிரஹ்மம் ஒன்றே
வினா—இந்த அவஸ்தைக்குப் பெயர் யாது?
விடை....பாஹ்ய நிர்விகற்ப சமாதிவடிவ பாதுரியம் எனப்படும்.
வினா—ஜீவ, ஈசுவரவியவகாரங்களாகிய சவிகற்பசமாதியில் மாயை
யும் அவித்தையும் அடங்கியிருந்ததுபோல, இந்நிர்விகற்பசமாதியிலு
மவைகளுண்டா?
விடை— அது (முன்) சவிகற்பசமாதியானபடியால் அடக்கம் கூறப்
பட்டது. நிர்விகற்ப சமாதியில் அவைகள் (ஜீவபாவமும், ஈசுவரபா
வமும்) ஜீவனுக்கு இறந்தாலன்றி, அவனுக்கு (ஜீவனுக்கு) சாக்ஷாத்
காரமுண்டாகாவாதலால், இங்கு அவற்றின் நாசமே அங்கீகாரமாம்
வினா—சவிகற்ப ஸமாதியிலுள்ள அவற்றின் ஒடுக்கத்திற்கும், நிர்வி
கற்ப ஸமாதியிலுள்ள அவற்றின் நாசத்திற்கும் பேதம் யாது?
விடை—சவிகற்ப ஸமாதியில் யதார்த்த ஞானமில்லாததால் ஜீவன்
தற்போதங்கெடாமல் வெளிவருதலின், ஜீவபாவ ஈசுவரபாவங்கட்கு
சத்தியத்துவமுதலான அனாத்ம தர்மங்கள் கெடாததால் ஒடுக்கங்
கூறப்பட்டது; நிர்விகற்ப ஸமாதியிலோ! சொரூபம் பிரகாசமாத
லின், தற்போதங்கெடுதல்வாயிலாக ஜீவேசுவர பாவங்கள் பூர்வம்
(அஞ்ஞானகாலம்) போல் தோற்றினும், வறுத்தவிதைபோல் பல
னின்றிப்போகிறது. ஆதலால் அவைகட்கு அத்தியந்த நாசம் கூறப்
பட்டது.

மொத்த வினா விடைகள் 1032.

வினா விடைகள் 20

ஸ்ரீ சுந்தரதேவர் வாழ்க.

உ

சுந்தரவிக்கிரகம் துணை

15. இதுமுதல் 2 செய்யுட்களால் எந்தியவியாட்டி இந்திரிய, அந்தக்கரண வியவகாரதத்துவங்கள் இனையவெனல்.

இந்திரியவிவகாரக்கிந்திரியமொன் றுசட் கோசமா று,மந்தரிந்
திரியமெனுங்கரணமோரைந் நுடனேவாயுவைந்து, முந்த
வுரை சிவேசரவித்தைவித்தைபிரமமெனமுறையேயைந்து,
மிந்தவிருபானிரண்டாமனோவிராச்சியமதற்குமியம்புவாமே (எரு)

(இ-ள்-)இந்திரியவியவகாரத்திற்கு இந்திரியமொன்று, சட்கோசதத்துவங்கள் 6, அந்தக்கரணம் 5, வாயு, 5, (முன்சொன்ன)சீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரஹ்மம்(எனக்கிரமமாயுள்ள) 5 ஆகத் தத்துவங்கள் 22. மனோராச்சிய வியவகாரத்திற்கு (சொல்லுவோம்)

வினு—இந்திரிய வியவகாரத்திற்கு தத்துவங்கள் எவை?

விடை-வியவகாரகாரணமான இந்திரியம் 1, இந்திரியகோளகமான தூலசரீரதத்துவம் 6, கோளகங்களின் வியவகார யோக்கிய காரணமான வியானுதிவாயுக்கள் 5, இந்திரியவழி வியவகரிக்கக்கூடிய அந்தக்கரணம் 5, அபிமானி ரூபஜீவன் 1, ஜீவகாரணமாய அவித்தை 1, சர்வநியந்தாவாய ஈசுவரன் 1, ஈசுவரகாரணமான மாயை 1, சர்வகாரணமாய பிரஹ்மம் 1, ஆகதத்தத்துவங்கள் 22.

வினு—இது நிகழுங்காலமியாது?

விடை—ஜீவஜாக்கிராவஸ்தை.

கவி

அகக்கரணமைந்தொடுசிவேசரவித்தைவித்தைபிரமமைந்தா
க், தொகுத்தவீரைந்தாகுமிப்படியேதத்துவத்தின்றோற்ற
மோடு, வகுத்தனமாலதனிலையுமினியதன்றனெடுக்கமதைவ
ழுத்துவாநீ, செகுத்தமயலுடையோனுப்சிரத்தையொடுஞ்சி
ரவணத்தைச்செய்குவாயே (எசு)

(இ-ள்) அந்தக்கரணம் 5. சீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை,



பிரஹ்மம் 5. ஆகத்தத்துவங்கள் 10. இப்படித்தத்துவங்களினுடைய தோற்றமும் (அதன்) நிலையும் சொல்லப்பட்டன.' இனியதனுடைய ஒடுங்குகின்ற வழியைச் சொல்லுகின்றோம் (நீ மயக்கத்தைக்கெடுத்தவனாய் விசுவாசத்துடன் கேட்பாயாக.)

வினு—மனோராச்சியவியவகாரத்திற்குத் தத்துவங்களெவை?

விடை-வியவகாரகாரணமான அந்தக்கரணம் 5, அபிமானிரூபஜீவன் 1, ஈசுவர 1, ஜீவகாரண அவித்தை 1, சர்வநியந்தாவான ஈசுவரன் 1, ஆகத்தத்துகாரணமான மாயை 1, சர்வகாரணமான பிரஹ்மம் 1, வங்கள் 10.

வினு—இது நிகழுங்காலம் யாது?

விடை—ஜீவசாக்கிராவஸ்தை.

வினு—ஜீவசாக்கிராவஸ்தையானுல் சரீரம், வாயுக்கள் என் சேர்க்கப்படவில்லை?

விடை—மனோராச்சியஞ்செய்யுங்கால், சரீரம், இந்திரியம், பிராண இயக்கம், முதலானவற்றின் ஸ்மரணமின்றியிருத்தலால் அவைகளைச் சேர்க்கவில்லை.

வினு—ஆயின்மனோராச்சியமாவதுயாது?

விடை—வீண் எண்ணங்கள்.

வினு—அவை யாவை?

விடை—இலௌகிகம் அனந்தவிதம் எனவும், சாஸ்திரீயம் எட்டுவிதமெனவும் சுருக்கிப்பெரியோர் பகர்வர்.

வினு—முதலாவது மனோராச்சியமெப்படிப்பட்டது?

விடை—மனமானது, சம்ஸார விருக்ஷத்தில், சரீரத்திரய முதலான அவஸ்தைகளாகிய கிளைகளைக்கற்பித்து, அதில் யானெனதுவடிவமாய அகங்காரமெனுஞ் சர்ப்பத்தைச்சுற்றச்செய்து ஆன்மாவெனும் ஆனந்தநிதியாய பெருஞ்செல்வத்தைப்புசிக்கவொட்டாமல் ஆளும்.

வினு—இதை எப்படி நீக்குவது?

விடை—சரீரத்திரயங்களை நீக்கி ஆன்மாமாத்திரமாய் சேவிக்கின் அம்மனம் இறக்கும்.

வினு—இரண்டாவது மனோராச்சியமெப்படிப்பட்டது?
விடை-இருதலை மணியன் சர்ப்பம்போல்; ஆவரண, விக்ஷேபமென்ற இரண்டு முனைகளைத்தனக்குச்சிரசாய்க்கொண்டு, யாரும் அணுக வொட்டாமல் வியாபித்துநிற்கும்படி செய்யும்.
வினு—இதை எப்படி நீக்குவது?
விடை-சர்வவிக்ஷேபங்களையும் திருக்கு (பார்ப்பவன்) மாத்திரமாய்க் கரைத்து, அப்பார்வையில் ஆவரண, ஆரோபமில்லாதபார்வைவரின் ஆவரண, விக்ஷேபவடிவ இருசிரமுமாளும்.
வினு—மூன்றாவதாய மனோராச்சியம் எப்படிப்பட்டது?
விடை—அனேக கோடிபிரமாண்டங்கள், பஞ்சகர்த்தாக்கள் இவைகளைக்கண்ணாடியில் நகரம்போல் தோற்றிப்பித்து, யாரையும் இப்பிரபஞ்சத்தைச் சத்தியம்போல் நம்பும்படிச்செய்யும்.
வினு—இதை எப்படி நீக்குவது?
விடை—அவிவேகதிசையில் சத்தியம்போற்றோற்றினும், விவேக திசையில் வஸ்துத்வசித்தியேயில்லாமற்போங்கால், அதனால் அவஸ்தைகளும், துவைதப்பிரபஞ்சமும், தானாகியமனதும், மித்தை என நீங்கிநிற்கும்.

வினு—நான்காவதாய மனோராச்சியமெப்படிப்பட்டது?
விடை—ஸ்தூல, சூக்குமப்பிரபஞ்சத்தை ஜடம்போலவும், சேதனம் போலவும் தோன்றச்செய்து, இவற்றின் சாக்ஷியாயபிரஹ்மத்தை அன்னியமாயறியவொட்டாமலும் செய்யும்.
வினு—இதை எப்படி நீக்குவது?
விடை—ஓடு, இரத்தினம் இவ்விரண்டும் மிருத்திகையில் உண்டாகியும் சமானமாயில்லாமல் பின்னபதார்த்தம்போற்றோற்றினும், ஊகிக்கில் அஜடமாய இரத்தினமும் ஜடமே, எனவகுப்பற்றுவிளங்குவதுபோல்; ஜடாஜடவடிவப் பிரபஞ்சம் திருசியமாதல்கொண்டு திருக்காகிய ஆன்மா வேறு என அனுபவிக்கில், நீங்கிநிற்கும்.
வினு—ஐந்தாவதாய மனோராச்சிய மெப்படிப்பட்டது?
விடை-ஜீவன் என்னுங் கட்டையில், இருபுறமும் ஜனனமரணமென்



னும் அக்கினியைச்சூழச்செய்து, அவ்விததுக்கத்தை நீக்க மார்க்கந் தெரியாமல், துக்கிக்கச்செய்யும்.
வினு—இதை எப்படி நீக்குவது?
விடை—ஜனனமரணம் ஜீவனுக்கு இல்லையென்றும், ஜீவனுடைய யதார்த்த சொரூபமும் ஆகாயம்போல் அசங்கம் என்றும், அவனை (ஜீவனை) ஆத்மாவாகத்தரிசிக்கின் அதுவு(துக்கமு)ம் நீங்கும்.
வினு—ஆருவதாய மனோராச்சியமெப்படிப்பட்டது?
விடை—பிரபஞ்சத்தைச் சுழுத்தியவஸ்தையில் நாம ரூபமின்றியும், ஜாக்கிர, சொப்பனத்தில் நாமரூபமயமாயும் காட்டிநிற்கும்.
வினு—இதை எப்படி நீக்குவது?
விடை—சமுத்திரத்தில் காற்றினால் அலையாதிகளும், அஃதின்மையினால் அலையாதிளிகளின்மையும்போல்; சாக்ஷிசைதன்யத்தை அஸங்க உதாசீனமாய் ஆலோசிக்கில் அந்நாமரூபப்பேய் நீங்கும்.
வினு—எழாவதாய மனோராச்சிய மெப்படிப்பட்டது?
விடை—காலமெனுமொரு தத்துவத்துடன், தானும் சமட்டி வடிவாய்க்கலந்துநின்று, சராசரவஸ்துக்களனைத்தையும்சம்மாரம்செய்ய, யாரையும் மூர்ச்சித்து நிற்கச்செய்யும்.
வினு—இதை எப்படி நீக்குவது?
விடை-வியட்டியாகிய இந்தமனதை சமட்டிவடிவ சர்வசம்மாரகாலத்திலுள்ள மனதாக அனுசந்தானித்து, சர்வத்தையும் அம்மனதிற்கரைத்து, அனைத்தையும் புசித்திராநின்ற காலனாய அம்மனதையும், எதிரிட்டறிவதால் நாமே கால காலனென்றும், நாம் மூர்ச்சிக்கப்படவில்லையென்றும், அறியில் நீங்கி நிற்கும்.
வினு—எட்டாவதாய மனோராச்சியமெப்படிப்பட்டது?
விடை—சுருதியாதிகளையும், அதனாற் புண்ணியபாபாதிகளையும், அதின் பலனாகிய சுவர்க்க, நரகங்களையும் கற்பித்து; அதினின்றும் தலையெடுக்கவொட்டாமல் யாரையும் தபிக்கச் செய்யும்.
வினு—இதை எப்படி நீக்குவது?
விடை—புண்ணிய பாபசம்பந்தமான சகலகிரியா சாஸ்திரங்களும்,

சரீரசம்பந்தமாகியதென்றும், சரீர விலக்ஷண ஆத்மாவாகிய நம்மை ஒன்றும் ஸ்பரிசியாதென விவேகித்தனுபவிக்கில், மனோகற்பனையாவும் நீங்குமென்பதாம். இன்னும் இவற்றை விரிவாயறியவிரும்புவோர்; நிஜானந்தவிலாசம் மனோநாசமார்க்கப்பிரகாணத்திற்கண்டு கொள்க.

வினா—மனோநாசம் எத்தனை வகைப்படும்?

விடை—இலயவடிவம், அத்தியந்த நாசவடிவம் என இருவகைத்து

வினா—இலயவடிவமாவது யாது?

விடை—ஏதேனும் ஓர் நிமித்தத்தால் ஒடுக்கமுற்று மீண்டும் அப்படியே வெளிவருவதாம். அதாவது கர்மவசத்தால் அன்றாடகசுழுத்தி, பிரளயங்களில் ஒடுங்கும் மனதை இலயவடிவமுடையதென்பர். இது சர்வ அஞ்ஞானிகளாலும் அனுபவிக்கப்படும்.

வினா—அத்தியந்த நாச வடிவமாவது யாது?

விடை-முற்றிலும் விருத்தி வியவகாரமில்லாமற் போவதல்ல. ஆனால் தத்துவஞான அக்கினியால் வெதுப்பப்பட்டதும்; அவ்வேதுவால் இனிமுளைக்க ஏதுவில்லாமல், சத்துவகுண ஆதிக்கத்தால் சரீர போக ஏதுவில் வியவகரிக்கப்பட்டதும்; ஆயமனதை அத்தியந்தநாச வடிவமுடையதென்பர். இது எல்லாஞானிகளிடத்தும் காணப்படும்.

வினா—இதுகாறுங் கூறிவந்தவியாபினி சத்தியின் காரியமாயசிருஷ்டியாகிய தோற்றம் எத்தனை வகை?

விடை—அஜாதவாதம், உகபத்சிருஷ்டி, கிரமசிருஷ்டி என மூவகையாகும்.

வினா—ஏன் மூவகையாகக் கூறவேண்டும்?

விடை—உத்தம, மத்திம, கனிஷ்ட அதிகாரிகளின் பொருட்டு முறையே அஜாதவாதம், யுகபத்சிருஷ்டி, கிரமசிருஷ்டி இவைகளைச் சுருதி கூறிற்று.

வினா—அஜாதவாதமென்றாலென்ன?

விடை—உண்மையாகவுள்ளது பிரஹ்மமே. தேகாதிப் பிரபஞ்சங்கள் எக்காலத்துமின்று என்னும் பக்ஷம் அஜாதவாதமாம்.



வினா—உகபத்சிருஷ்டி என்றாலென்ன?

விடை—சொப்பன உலகுகிரமமின்றி மனத்தினின்றுமுண்டாயதுபோல்; தேகாதிப் பிரபஞ்சமுங், கிரமமின்றி பிரஹ்மத்தினின்றுமுண்டாயிருக்கிறதென்னும் பக்ஷம் உகபத்சிருஷ்டியாம்.

வினா—கிரமசிருஷ்டி என்றாலென்ன?

விடை—இக்கட்டளையிற்கூறிவந்த அபின்னசத்தி முதல் தூலப்பிரபஞ்சம்வரையுள்ள சிருஷ்டி கிரம சிருஷ்டியாம்.

வினா—கூறிய மூவகைச் சிருஷ்டிகளுள் வேதாந்த சித்தாந்தத்திற்கு உடன்பாடு யாது?

விடை—மூவித சிருஷ்டியும் உடன்பாடே.

வினா—மூவித சிருஷ்டிகளும் எப்படியுடன்பாடாம்?

விடை—அஜாதவாதமே முக்கிய உடன்பாடாயினும், வேதத்திற்குச் சிருஷ்டியைக் கூறுவதில் ஆக்கிரகமில்லை. மற்றியாதெனில் எவ்விதமாயாவது முமுக்ஷுக்கட்குப் பிரஹ்மஞானம் உண்டாகவேண்டுமென்று மூவகைச்சிருஷ்டியுங்கூறப்பட்டிருப்பதால் எல்லாமுடன்பாடே.

வினா—மற்ற இருவகைச் சிருஷ்டிகளைவிட்டுக் கிரமசிருஷ்டியை இந்நூல் கூறுவானேன்?

விடை—அஜாதவாதம், யுகபத்சிருஷ்டி இவைகளால் எதார்த்தக்ஞானமுதயமாகாத முமுக்ஷுக்களுக்கு, லயசிந்தனையில் பிரயோஜனப்படுவதாலிதைக் கூறிற்று.

வினா—ஏன் மற்றவைகள் லயசிந்தனையிற் பிரயோஜனப்படா?

விடை—சிருஷ்டியில் வரிசைக்கிரமம் தெரிந்தாற்றான் காரியங்களைத் தமது காரணத்திலடக்குதல்வடிவசிந்தனைக்கு ஏதுவுண்டாம், மற்றசிருஷ்டி அவ்விதம் கூறாததால் அவைகள் பிரயோஜனப்படுகிறதில்லை.

வினாவிடைகள் 35. மொத்த வினாவிடைகள் 1067.

ஸ்ரீ சுந்தர விக்கிரகம் வாழ்க.

உ

ஸ்ரீ சுந்தரதாஸர்கள் துணை

## விமர்சினிசத்தியின் காரியமாய அபவாதக்கிரமம்.

### 16. விராட் பிரளயங் கூறல்.

எந்தவாறொடுங்குமெனினெலாச்சிவரிடத்தினிலுமிருப்பதான, வந்தமிலாத்தூலதநுவத்தனையுமவைகளுக்காதாரமாகு, மைந்துவிதமாந்தூலபூதங்களிடையமைந்தவ்வடிவமாகுமிந்தவைந்துதூலபூதங்களும்பஞ்சிகரணமிகந்துபின்னர் (எஎ)

(இ—ள்) (எப்படியொடுங்குகிறதென்றால்) சகலஜீவரிடத்தினிலுமிருக்கின்ற (அளவில்லாத) தூலசரீரங்களனைத்தும் தமக்கு ஆதாரமான (ஐந்துவிதமாய) தூலபூதங்களிலேலமடிந்து பூதமாத்திரமாகவொடுங்கும், இந்த (ஐந்து) தூலபூதங்களும் பஞ்சிகரணம்விட்டு, (பின்னர்)

வினா— அபவாதவடிவலயசிந்தனையென்றாலென்ன?

விடை—காரியத்தை அது உண்டான வழிப்படி காரணத்துள்ளடக்கிப் பார்த்தலாம்.

வினா—கிரமசிருஷ்டியில், லயசிந்தனையை எப்படிச்செய்து பிரயோஜனத்தையடைகிறது?

விடை—காரியமாய பிரபஞ்சத்தை அது உண்டானவழியே மூலப்பிரகிருதிவரையொடுக்கி, அந்த மூலப்பிரகிருதியையும், அபின்னசத்தியையும் கற்பனையாகக்கண்டு, சுத்தப்பிரஹ்மமாத்திரமாய் மிஞ்சி, அதுவே தனதுநிஜவடிவமென உணர்ந்து, நித்தியதிருப்தியையடைவதே பிரயோஜனமாம்.

வினா—தத்துவங்களின் ஒடுக்கம் எப்போதுண்டாம்?

விடை—ஈசுவரனானவன் ஜீவர்களுடைய ஜனனமரண இளைப்பை நீக்க, எப்போது சிருஷ்டித்தொழிலைவிடுத்து நிற்கின்றாரோ; அல்லது பராசத்தியின் அருள்வலியால், விமர்சினி சத்தியின் வல்லமையை, முமுக்ஷுக்களெப்போதடைகிறார்களோ, அப்போதுண்டாகிறது. இதையே பிரளயமென்றுங் கூறுவர்.





வினா—பிரளயமென்றாலென்ன?

விடை--காரியங்களை தமதுகாரணத்திலொடுக்கி ஈசுவரன் நிற்றலாம்.

வினா-காரியங்களைத் தமது காரணத்துளடக்குதல்வடிவ ஈசுவரசங்கற்பத்தாலுண்டாம் பிரளயம் எனுண்டாகவேண்டும்?

விடை—உலகின்கண்ணுள்ள சர்வஜீவர்களும் நிவர்த்தியின்கண்ணேயே தாற்பரியமுடையோராயிருக்கின்றார்கள். ஆனால் அனாதிகர்மபந்தத்தின்வலியால், வியவகாரத்திற் பிரவிருத்திக்கின்றார்கள். அவ்விதம் நிவர்த்தியை உத்தேசிப்பவர்கள் அறியாமைவசத்தாய் நிற்பதால், நித்திய நிவர்த்திரூபமான மோக்ஷத்திற்கு வழிதெரியாமல் மயங்கி, உலகப்பிரவிருத்திகள் ஒவ்வொன்றில் நிவர்த்தியிருப்பதாய்ப் புகுந்து, புகுந்து, ஆங்காங்குச்சுகமில்லை என அனுபவித்தும், அப்படியே அவைகளினின்றும் நிவர்த்தியையடையாமல், மீண்டும் மீண்டும் வேறுவேறு கர்மங்களிற்பிரவிருத்தியுடையவர்களாயுமாகின்றார்கள். விவேகியோவெனில், அப்படியன்றிமற்றப்பிரவிருத்திகளிற்சுகமில்லையென்றுகண்டு, நித்தியநிவர்த்திரூபமான மோக்ஷசுகத்தை அதற்கு வேண்டிய சாதனங்களுடன் சம்பாதித்து, அடைபவனாகின்றான். ஆகவே விவேகி, அவிவேகி இருவரும் நிவர்த்தியின்பொருட்டே பிரவிருத்திக்கப்பட்டவர்களாயிருப்பினும் விவேகியால் யதார்த்த நிவர்த்தி அடையப்பட்டும், அவிவேகியால் அடையப்படாமல் கேவலம் ஜனனமரண இளைப்பையேபலனாகவும் அடையப்படுகிறது. அவ்வித அஸ்வதந்தரஜீவர்களின் இளைப்பை நீக்குதற்பொருட்டு அவர்களுக்குச்சம்மதமான நிவர்த்திவடிவபிரளயத்தை ஈசுவரனால் உண்டு பண்ணப்படுகிறது.

வினா—இப்பிரளயத்தின் கால அளவு யாது?

விடை—பிரவிருத்தி சாதகமான பகல் 30 நாளிகைக்கு நிவிர்த்திபரமாக 30 நாளிகை இரவு யேற்பட்டது போல்; பிரவிர்த்தி ரூபமான ஒருகல்பத்திற்கு, அந்த அளவின்படியே பிரளயகாலமும் யேற்பட்டிருக்கிறது என அறிக.

வினா—அவ்விதபிரளய மெத்தனை வகை?

விடை—விராட்பிரளயம், இரண்யகர்ப்பப்பிரளயம், அவ்வியாகிரு

தப்பிரளயம், அத்தியந்தப் பிரளயங்கள் என நான்காம்.

வினா—தூலப்(விராட்)பிரளயமென்றாலென்ன?

விடை-சர்வஜீவராசிகளின் தூலசரீர ஒடுக்ககாலம்விராட்பிரளயமாம்.

வினா—அது எப்படியொடுக்கப் படுகிறது?

விடை—பௌதிக (பூதங்களின்காரிய)மாய இந்தச்சகமானது சமஷ்டிஜீவர்களின் போகநிவர்த்திருபமானகர்மம் பக்குவப்பட்டவுடனே, ஈசுவரேச்சையால் தனக்காதாரமான பஞ்சபூதங்களிலொடுங்க, பஞ்சபூதங்களும் பஞ்சீகரணம் விடுபட்டு அவைகட்கு ஆதாரமான, சூக்ஷுமபூதங்களின் தமோகுணமாத்திரமாய் ஒடுங்கி நிற்கும்.

வினாவிடைகள் 9.

மொத்த வினாவிடைகள் 1076.

உ

ஸ்ரீ சுந்தர குரு சகாயம்

17. இதுமுதல் 3செய்யுட்களால் இரண்யகர்ப்பப்பிரளயங் கூறல்

தன்மாத்திரைத்தாமதகுண பூதங்களாந்தருணஞ்சுத்த, பொன் கர்ப்பவவத்தையெனப்புகல லுறுஞ்சூக்கமெய்ப்புணர்ப்பு நீங்கி பின்சாத்துவிகவிரசோகுணமாகவிலயமுறும்விளம்பிற்றேனே, பன்சிவரிடந்தனில்வாழகங்காரங்கிராணமுதானன் னுபத்தம் (எஅ)

(இ—ள்) தன்மாத்திரைகளான தமோகுண பூதங்களாக மிஞ்சும். அப்போது கேவலம் இரண்யகர்ப்பாவஸ்தை என்று சொல்லப்படும் சூக்ஷ்மசரீர [தத்துவங்களிருபதும்] கட்டுவிட்டுப் [பூதங்களினுடைய] (பிரகாசியாகின்ற) சத்துவகுணமும், இராஜோகுணமுமாக ஒடுங்கும். அஃதெங்ஙனெனில்! சகலப்பிராணிகளிடத்திலுமிருக்கின்ற அகங்காரமும், கிராணேந்திரியமும், உதானவாயுவும், உபஸ்தேந்திரியமும்,

வினா-இவ்விதம் விராட்பிரளயம் நேரிட்டவிடத்து பிரபஞ்சம் எப்படி விளங்குகிறது?

விடை-சர்வஜீவராசிகளும் தங்கள் தங்கள் சூக்கும சரீரத்துடனும், சூக்கும பஞ்சபூதங்களுடனும் கலந்து நிற்கும் அவதரமாய இரண்யகர்ப்பாவஸ்தையை அடைகிறது.



வினா— சூக்கும (இரண்யகர்ப்பப்) பிரளயமாவது யாது?

விடை—சர்வஜீவர்களுடைய சூக்குமசரீரமும் தமது காரணமான மாயையின்கண் ஒடுங்குவதாம்.

கவி

இந்நான் கும்ப திவியி லுஞ்சித்தநாவிபம்புசமானன்றுன்பாயு, வந்நான் குமப்பதிலும்புத்திசக்கபானன்காலனிலும் மேற், சொன்னான் குமநந்தொக்குப்பிராணன்கைவாயுவிலுந் தூலங் குழுள்ள, பின்னான்கில்சோத்திரம்வியானன்வாக்கந்தரத்து இலயமாமால் (எகூ)

(இ-ள்) (இந்நான்கும்) பிருதிவியிலும் ஒடுங்கும். சித்தமும், சிங்ஙுவையும், (சொல்லாநின்ற)சமானனும், பாயுருவும்(இந்நான்கும்)அப்புவிலொடுங்கும். புத்தியும், சக்ஷுவும், அபானனும், பாதமும், அக்கினியிலொடுங்கும். மனதும், தொக்கும், பிராணனும், பாணியும் (ஆகிய மேற்சொன்னநான்கும்) வாயுவிலொடுங்கும். (பிரகாசியாநின்ற) உள்ளமும், சுரோத்திரமும், வியானனும், வாக்கும், (ஆகிய இந்நான்கும்) ஆகாசத்திலும் ஒடுங்கும். (இதனுரைவெளி).

கவி

அப்போதழுன் போலவினைத்துமுக்குணப்பூதமாகுமொப்ப இப்பூதங்களுமேதான்பதிவியப்பிற்கரைந்தப்புமெழுநாத்த னில், வெப்பாலேசுவறிபுமவ்வனல்விளக்கேயெனக்காற்றில்விழிந்துங்காற்று,மப்பாலாம்வெளிதனிலும்வெளிபதாவிக்கேடத்தடங்குமன்றே. (அய)

(இ-ள்) அப்பொழுது பழையபடியே (எல்லாம்)முக்குணபூதங்களாகும். இந்தச்சூக்குமபூதங்களும், பிருதிவி அப்புவிற்கரைந்து ஒடுங்கும்; அப்புவும் அக்கினியிற் (உஷ்ணசுபாவத்தால்) சுவறி ஒடுங்கும்; வாயு(அந்த)அக்கினியும் விளக்குப்போல வாயுவிலணைந்து ஒடுங்கும்; ஆகாசமும் (அதற்குமேலுள்ள) ஆகாயத்திலே [ஓய்ந்து] ஒடுங்கும்; ஆகாசமும் விக்ஷேபசக்தியில் ஒடுங்கும். (இதனுரைவெளி)

வினாவிடைகள் 2.

மொத்தவினாவிடைகள் 1078.

ஸ்ரீ சுந்தர குரு வாழ்க.

உ

ஸ்ரீ சுந்தரானந்தர் துணை

18. முன் மூன்றடிகளால் இரணியகர்ப்பப்பிரளயத்தை முடித்து, பின் அடியால் அவ்வியாகிருதப்பிரளயங்கூறி, அதன்முடிவிலுள்ள பிரகிருதியின் சாமியாவஸ்தையுங் கூறல்.

ஆவரணம்விக்கேபமெனுமிரண்டுமாலமரமதன்வித்துள்ளே,
ஆவவடங்கிடல்போன்மூலப்பகுதிதமகுணமாத்திரமேயாகி
மேவுமொருசிருட்டிக்குவித்தாமாயையவித்தைதமீதிவைதாம்
ஓவுமூலப்பகுதியெனும்விந்துதத்துவமாமுண்மைதன்னில். (அக)

(இ-ள்) ஆவரணசக்தியும், விக்ஷேபசக்தியும் மூலப்பிரகிருதியின் தமோகுணமாத்திரமாய், ஆலமரம் ஆலம்விரையில் ஒடுங்கினாற்போல இன்னமொரு சிருஷ்டிக்கு வித்தாக மாயையிலும், அவித்தையிலும் [ஒடுங்கும்] இந்தமாயையும், அவித்தையும்[அதிநுண்மையான] (எல்லாம் ஒழிந்த) மூலப்பிரகிருதியென்று சொல்லப்பட்ட (உண்மையென்ற) விந்துதத்துவத்தில் [ஒடுங்கும்].

வினு—இந்த ஆவரண, விக்ஷேபசக்திகள் யாதாயிற்று?

விடை—தமோகுணத்தின் விக்ஷேபசக்தியும், மற்றோர் சக்தியான ஆவரணசக்தியுமாகியவிரண்டில், ஆவரணசக்தியானது ஜீவகாரணமாய ரஜோகுணத்தினிடமும், விக்ஷேபசக்தியானது பிரபஞ்சகாரணமாய, பிரபஞ்சகர்த்தாவான ஈசுவரகாரணசரீரமாகிய, மாயையிலும் ஒடுங்கின.

வினு—அவ்வியாகிருதப்பிரளயமாவது யாது?

விடை—ஈசுவரகாரணசரீரமானமாயையானது மூலப்பிரகிருதியில் அடங்கிநிற்றலாம்.

வினு—இப்போது என்ன அவஸ்தை சித்திக்கிறது?

விடை—இதை, முக்குணங்களின் சமத்துவகாலமான மூலப்பிரகிருதிவடிவ சாம்மியா(சமத்துவ) அவஸ்தையென ஆன்றோர் கூறுவர்.

வினுவிடைகள் 3.

மொத்த வினுவிடைகள் 1081.

ஸ்ரீ சுந்தரானந்தர் வாழ்க.



உ

ஸ்ரீ சுந்தரசிவம் துணை

19. அத்தியந்தப்பிரளயமும், அதன் முடிவிலுள்ள அத்வைத நிலையும், இனையவெனல்.

அவ்விந்துதத்துவமுமரவெனும்பேர்போய்க்கயிறேயானவா
போ, லெவ்வமிறன்னதிட்டானப்பிரமசைதன்னியமாயிலங்
குமிவ்வா,றவ்வளவுபொய்யுமோரேமெய்ப்பொருளென்றறி
ந்ததுவேயியல்பாய்மெய்யாந், திவ்வியதன்வடிவமெனத்தெ
ந்தகிலகவலைகெட்டோன்சீவன்முத்தன். (அஉ)

(இ-ள்) அந்தவிந்துதத்துவமும் பாம்பென்கின்றபெயர்போய் பழுதையாகக்கண்டாற்போல் (குற்றமில்லாத) தனக்கதிஷ்டானசைதன்யமான பிரஹ்மசைதன்யமாத்திரமாக (விளங்கும்) [ஒடுங்கும்]. இப்படிப்பொய்யெல்லாம் மெய்ப்பொருளொன்றாய்க்கண்டு அதுவே சுபாவசித்தமாய் நிசமாயிருக்கின்ற தன்வடிவெனக்கண்டுதெளிந்து (உலக) கவலைகெட்டிருக்கின்றவனே சீவன்முத்தன்.

வினு—இனி அத்தியந்தப்பிரளயமாவது யாது?

விடை—இதுவரை விராட்பிரளயமுதல் சாமியாவஸ்தைவரை, ஈசுவரன் ஜீவர்களைமுன்னிட்டுச்செய்யும் பிரளயகிருத்தியமாம். இப்பிரளயத்தையே முமுக்ஷுக்கள் சற்குருசன்னிதியிற்சிரவணாதிகளைச்செய்து, கூறியலயக்கிரமப்படி தங்கள் விருத்தியிலனுபவித்து மிஞ்சிய மூலப்பிரகிருதியென்னும் விந்துதத்துவத்தையும், மீண்டுண்டாகாதபடி அத்தியந்தநாசமாய்ப்பார்த்தல் எதுவோ அதுவே அத்தியந்தப்பிரளயமாம்.

வினு—அவ்வத்தியந்தாபாவவடிவப்பிரளயத்தை எப்படி யடைவது?

விடை-கயிற்றினிடத்துத்தோன்றிய சர்ப்பமானது, ஓடுவதுபோன்றும், நகர்வதுபோன்றும் தோற்றினும் உற்றுநோக்கிப்பார்க்குங்கால் சர்ப்பமும் அதின்காரியமும் திரிகாலத்துமில்லையெனவும், எப்படியனுபவிக்கப்பட்டதோ அது என்றுமுள்ளதுகயிறெனவும், போல்; பிரஹ்மத்தினிடத்துத்தோன்றிய மூலப்பிரகிருதியானது,

அதன்காரியமாய பிரபஞ்சகாரணம்போன்றிருப்பினும், மகாவாக்கி
யவிசாரபூர்வகமாய் உற்றுநோக்குங்கால் பிரகிருதியும் அதன்காரிய
மும் மித்தை(பாரமார்த்திகமாயெக்காலத்துமில்லாதது)என அனுப
விப்பதே அத்தியந்தப்பிரளய அனுபவமாம்.

வினு—பிரஹ்மசைதன்யமாத்திரம் என்றுலென்ன?

விடை—இரண்டாவதற்றதாய அத்வைதம் எனப்பொருளாம்.

வினு—பிரபஞ்சம் தோற்றிக்கொண்டிருக்குங்கால் இரண்டாவதற்ற
தெனவெப்படிச்சொல்லலாம்?

விடை—பிரஹ்மத்திற்கு அன்னியமாய் மேற்பட்டதாகவாவது, சம
மாகவாவது, தாழ்ந்த நிலைமையிலாவது எதாவதொன்று சத்தியமா
யிருக்குமேல் அது இரண்டாவதாந்தன்மையைச் சம்பாதித்துக்
கொடுக்கும். சித்தாந்தத்திலோ அப்படியில்லை. ஆனல் கானல்ஜலமா
னது நிகிருஷ்ட(தாழ்ந்த)சத்தையுடையதாயும்,மித்தையாயுமிருந்து
கொண்டு எப்படிக்கானலுக்கு இரண்டாவதாந்தன்மையைச்சம்பாத்
தியம்பண்ணமுடியாமலும், அவ்விதமாயினும் வியவகாரத்திலும்
தோற்றன்மாத்திரமாயுமிருந்துகொண்டிருக்கிறதோ அதுபோல்;
பிரஹ்மத்தினிடத்திற்றேற்றியுள்ள பிரபஞ்சம் அல்லதுபிரகிருதியா
னது பிரஹ்மத்தினும்தாழ்ந்தசத்தையுடையதாயும் மித்தையாயுமி
ருப்பதுடன் பிரஹ்மத்திற்கு துவைதத்தன்மையைச்சம்பாத்தியம்
பண்ணமலே பிரஹ்மமாத்திரமாகவேயிருக்கிறதெனஅறிக.

வினு-எப்படியாயினும், தாழ்ந்தசத்தையுடைய வியாவகாரிகபதார்த்
தங்களை ஒப்புக்கொண்டமட்டிலும், அத்வைதத்தன்மை சித்தியாது.
எனெனில்; அத்வைதமென்றல் இரண்டாவதற்றது அல்லது இரண்
டாவதிலாதது. ஆதலின்பதார்த்தங்கள் அழிந்துஅத்வைதஞ் சித்திக்
கவேண்டும்; அல்லது பதார்த்தங்களே இல்லாமல் அத்வைதம் சித்
திக்கவேண்டும், ஈண்டோ இருவகையும் சித்தியாததால் அத்வைத
மெப்படிக்கூடும்?

விடை-துவைதபதார்த்தங்கள் இல்லாதவிடத்தும், அழிந்தவிடத்தும்
அத்துவிதமென்றபேச்சேகிடையாது. அப்படியே துவைதம்சத்திய



மாயுள்ளவிடத்தும் அத்வைதமென்றவார்த்தை சித்தியா. ஆனல்
எங்குப்பதார்த்தங்களிருந்து துவைதத்தன்மையை சித்திக்கச்செய்
யாதோ, அங்குத்தான் அத்வைதத்தன்மைகூடும். இவ்விஷயத்தில்
துவைதம் அழிந்து அத்வைதம் சித்திக்கத்தக்கதல்ல; ஆனல் துவை
தத்தைக்காண்கின்ற அறிவாகத்தானே அத்வைதஞ்சித்திக்கும் என்ற
பிரமாணங்களைக் கண்டு தெளிக.

வினு-இவ்விதமான அத்வைத உண்மை அனுபூதிகிடைப்பதற்கு முக்
கியப் பிரமாண (உண்மையனுபவசாதன)ங்கள் எவை?

விடை--இதுவரை கூறிவந்த லயசிந்தனைவடிவ அபவாதமே முக்கிய
காரணமாம்.

வினு-பதார்த்த நிச்சயங்களைச் செய்வதற்கு மனதுடன் நேத்திராதி
ஆறு இந்திரியங்களைச் சாதனமெனச் சாஸ்திரங்களிற் கேட்கப்ப
டலின் அவை (பிரமாணங்)கள் எதில் உபயோகமாம்?

விடை--கூறிய அத்வைதவஸ்துவானது, நேத்திராதி இந்திரியங்க
ளுக்குப்புலப்படாமையின், பிரத்தியக்ஷப்பிரமாணத்திற்கும்; காரண,
காரிய பாவங்களின்றி இருத்தலின், அனுமானப்பிரமாணத்திற்கும்;
இரண்டாவதற்றதாயிருத்தலின், உபமானப்பிரமாணத்திற்கும்;குண
தோஷங்களற்றிருத்தலின், வசனவடிவ சத்தப்பிரமாணத்திற்கும்;
விடயமாகமாட்டா. ஆனல், கூறியபிரமாணங்கள் அனாத்மாக்களை
விஷயம் பண்ணுவனவாம்.

வினு—அப்படியானல் வாக்குவடிவ சாஸ்திரமானது சத்தப்பிரமா
ணவடிவாதலின் அதுவும்பிரயோஜனமில்லை எனின், குருஉபதேசங்
களும், அதை அனுசரித்தசாஸ்திரங்களும் வியர்த்தமாய்ப்போகாதா?

விடை—கூறிய அத்வைதப்பிரஹ்மமானது ஸஜாதீய, விஜாதீய, ஸ்வ
கதபேத ரஹிதமாய், அஸங்கோதாஸீனமாய், அவாங்மானஸகோசர
மாய், அகண்ட பரிபூரண தேஜோமயமாய், தானே பிரமாண பிர
மேயவடிவாய், தனதுமகிமையின்கண்ணேயேவிளங்குவதாய் இருத்
தலின், அத்தகையவஸ்துவை எப்பிரமாணங்கொண்டு எவராலறிய
முடியும்! ஆனல் அவ்விதவஸ்துவைஅதிகாரியாகியபுருஷர்கள்சாதன

சகித உத்தம பாவத்தையடைந்தும் அவர்களுக்கு நேராயறிவிக்கச் சக்தியின்றி, பரமகுருவை முன்னிட்டுத் தாற்பரியார்த்தவாயிலாய் சுருதியானது, கூறியஇலக்கணங்களை அறிவித்தது. ஆதலின்நேராய் அறிவிக்காததால் சத்தப்பிரமாணத்திற்குள்ளடாத்தன்மையும்; தாற்பரியார்த்தவாயிலாய்ப் பிரயோஜனமடையப்படுகிறபடியால், சுருதிக்குப்பிரயோஜனமும் சித்திக்கின்றது.

வினா—பிரஹ்மசைதன்யமாத்திரமாக என்றதால் எந்த அவஸ்தை அடையப்பட்டதாக ஆகிறது?

விடை—இது சிவசப்தாவஸ்தையில் ஐந்தாமவஸ்தைவடிவ அபரோக்ஷஞானம் எனப்படும்.

வினா—தெளிந்து என்றாலென்ன?

விடை-இந்த அபரோக்ஷவடிவாயநிர்விகற்பநிலையினையடைந்து, பின் வெளிவந்து, ஆவரணம் நீங்கியவனாய் நான் அகண்டனென அனுபவித்த இடமாம்.

வினா—கவலை ஆவதுயாது?

விடை—வியவசாயாதிகளிற்பலனைவிரும்புவோன் உழவாதிகளைச் செய்ய எண்ணுவன்; பரலோகாதிகளை அடையவிரும்புபவன், எக்ஞாதிகளைச்செய்ய எண்ணுவன்; பிரஹ்ம சொரூபத்தை அறியவிரும்புமவன் குருவையடைந்து சிரவணத்தைச் செய்யக்கவலைகொள்வன்; சந்தேகங்கொண்டவன் மனனஞ்செய்யஎண்ணுவன்; விபரீதபாவனையுள்ளோன் சமாதியிற்றற்பாவன்; துக்கத்தில் ஆழ்ந்தோன் ஆனந்தத்தை அடையஎண்ணுவன்; இன்னும் இவைபோன்றவைகளுமாம்.

வினா—கவலைகெட்டிருத்தல் ஆவதுயாது?

விடை—முற்கூறிய பிரஹ்ம அபரோக்ஷ அனுபவத்தால், எல்லாம் ஒருங்கே அடையப்படலின் சர்வக்கிலேசங்களும்நீங்கிவிட்டபடியால் சர்வ துக்கங்களும் என்னிடத்தில்லையென ஆறும் அவஸ்தையையும்; அதனாற் செய்யத்தக்கதாவது, அடையவேண்டியதாவது யாதொன்றுமில்லையெனப்பரமானந்தப்பிராப்தியாகிய ஏழாம் அவஸ்தையையும்; அடைந்திருத்தல் எனப்பொருளாம்.



வினா—சீவன்முத்தன் என்றாலென்ன?

விடை—கூறியகிரமத்தில் எழுவஸ்தைகளும்பொருந்தியவனும்.

வினா—முக்தி எத்தனை விதம்?

விடை—சீவன்முத்தி, விதேகமுத்தியென இரண்டு விதமாம்.

வினா—ஜீவன் முத்தியாவது யாது?

விடை—ஜீவத்வம் விடுபடுதல் ஜீவன்முத்தியாம்.

வினா—ஜீவத்வமாவது யாது?

விடை—தேகாதிகளில் நான் என்னும் புத்தியும், கிருஹாதிகளில் எனது என்னும்புத்தியும் ஜீவத்வமாம்.

வினா—ஜீவன் முக்தியினிலக்கணம்யாது?

விடை—தேகாதிப்பிரபஞ்சம் தோற்றிக்கொண்டிருக்கப் பிரஹ்மசொரூபமாக நிலைத்தல் ஜீவன் முத்தியாம்.

வினா—தேகாதிப்பிரபஞ்சத்தோற்றத்தைக்கூறுவானேன்?

விடை—முக்தாத்மாக்களுக்கு வியவகாரமே கிடையாதெனவும், பிரபஞ்சமே தோற்றாதெனவும், பலர்கூறுகிறபடியால் அவ்வித மயக்கத்தை நீக்கற்பொருட்டு அவர்கள்(முத்தர்களுடைய) விருத்தியில்விஷயமாகிறபடி பிரபஞ்சத்தையும் விசேடிக்கப்பட்டது.

வினா—அவித்தையாய அஞ்ஞானம் நஷ்டமானபிறகு பிரபஞ்சமெப்படித்தோற்றலாம்?

விடை-ஆவரணரூப அவித்தையெனவும், விக்ஷேபரூபஅவித்தை எனவும், அவித்தையானது இரண்டாய்ப்பகுக்கப்படும். இதில் சொரூபத்தைமறைத்தல்வாயிலாய் ஜனனமரணகாரணமாயுள்ளது ஆவரணரூபஅவித்தை. பிரபஞ்சவடிவகாரியபரிணாமத்தையடைந்தது விக்ஷேபரூபஅவித்தை. இதில்முன்னதை நீக்கமுயன்று ஜீவன்முத்தன் நீக்கிக்கொண்டகாலும்; விக்ஷேபரூப அவித்தை அதிற்சாதகமாயிருந்து, பின் அத்வைத அனுபவத்திற்கும் ஏதுவாயிருத்தலாலும், பிரபஞ்சம் தோற்றிக்கொண்டிருக்கிறதென்பதுகூடும்.

வினா-ஆனால் இந்த விக்ஷேபரூபஅவித்தையுடனிருக்குங்கால் பிரஹ்மசொரூபமாக நிலைத்தலெங்ஙனங்கூடும்?

விடை—விக்ஷேபரூபமானகுரு, சாஸ்திரம், சாதுசங்கம் இவைகளை முன்னிட்டுத் தனது அனுபவவிலாசத்திற் கிரீடித்துக்கொண்டும்; ஏனையலௌகிக, வைதிக வியவகாரங்களைத் திரிகரணங்களாலனுஷ்டித்தும், சகலத்தையுங்காண்கின்ற அறிவுமாத்திரமாக நிலைத்திருத்தலுங்கூடும்; இதில் யாதும் விரோதமின்று.

வினா-ஆனல் அவித்தையைத்தடையெனச்சுருதிகள் கூறுவானேன்?

விடை—அச்சுருதிகள் ஆவரணரூபஅவித்தையைச் சொல்லிற்றேயொழிய, விக்ஷேபரூப அவித்தையைச்சொல்லவில்லை. அன்றியும் ஞானியானவன்; சர்வபூதங்களிடத்துத்தன்னையும் தன்னைச்சர்வபூதங்களிடத்தும் தரிசிக்கக்கடவன் எனச்சுருதிகூறுவதால் விக்ஷேபம் நிஷேதிக்கப்படவில்லை. விக்ஷேபவடிவப்பிரபஞ்சத்தை நீக்கின் அனுபவமெங்ஙனுண்டாம்! ஆதலால், ஆவரணரூப அவித்தைஞானப்பிரதிபந்தமெனவும், விக்ஷேபரூபஅவித்தை ஞானசாதகமெனவுமறிவாயாக.

வினா—இவ்விக்ஷேபரூப அவித்தையமெப்போது நீங்கும்?

விடை—கர்மக்ஷயகாலமான விதேகமுத்தியில் நீங்கும்.

வினா—விதேகமுத்தியென்றுலென்ன?

விடை—சரீரமின்றிய முத்தியாம்.

வினா—இது எப்போது சித்திக்கிறது?

விடை—ஜீவன்முத்தனுடைய தூலசரீரம் நழுவியகாலத்து அல்லது ஜீவன்முத்திதசையிலேயே சித்திக்கிறது.

வினா—ஆயின் ஜீவன்முத்தனுடையசரீரமறைவில் நியமம் உண்டா?

விடை-கூறியமுத்தனானவன், பிரஹ்மசொருபத்தையறிந்த அன்றே (அப்பொழுதே) பிரஹ்மமாய்விட்டமையின் கால (உத்தராயணாதி), தேச (காசிமுதல), ஆசன (பதுமாசனமுதல), முதலாகிய பேதங்களை அபேக்ஷியாமல், மனோவாக்குக்காயங்கள் எவ்வித உயர்ந்த அல்லது தாழ்ந்த நிலைமையிலிருந்து வீழினும் விதேகியே ஆகின்றான் எனச்சுருதிகள் கோஷிக்கின்றபடியால் நியமமின்று.

வினா—ஜீவன் முத்தனுடைய சரீரம் நழுவியவிடத்துப்பிராணன் எங்குச் செல்லுகின்றது?





விடை—ஞானியின் பிராணன் இந்த லோகத்திலாவது, வேறெந்த லோகத்திலாவது செல்லுகிறதில்லை, எனச்சுருதிகள் கூறுகிறபடி பால் ஓரிடத்தும் செல்லாமல், சரீரம் பிரேதவடிவாய் நழுவியவிடத் துள்ள சேதனத்திலேயே ஒடுங்குகிறது.

வினா—ஞானியின் சரீரத்திற்கு இவ்விடத்திலேயே பிரேதவடிவான ஷ்டமிருப்பின், முன் அநேகர் ஒளியிலும், சிதாகாயத்திலும், விக்கத்திலும், கலந்தார்களென்றும், சரீரம் கைலாயத்திற்குச்சென்றது வென்றும், சாஸ்திரங்கள் கூறுகின்றதே அதில் நியாயம் யாது?

விடை—அவர்கள் தங்கள் யோகமகிமையினால் தங்கள் சரீரம் விழுங்காலமறிந்து செய்துகொண்டார்கள்; அது உபாதியின்பயனும், ஞானபலனன்று.

வினா—ஆயின்முத்தியடைந்த ஜீவனின் கதியென்ன?

விடை—ஜீவகாரணமான ஆவரணரூபஅவித்தியோபாதி எந்தத்த அஞ்ஞானகாலத்து நசித்ததோ, அப்போதே அவன் பிரஹ்மவடிவாயினன். பின், சரீரம்நழுவியகாலத்து, முமுக்ஷுக்களாது திருஷ்டியில் பிரஹ்மபாவத்தையடைந்தனன் என உபசரிக்கப்படுவதால், அவன் பிரஹ்மமேயாவன்.

வினா—இச்சீவன்முத்தனாகிய ஞானிக்கு பிராரப்தகர்மங்களுளவெனச் சாஸ்திரங்கள் கூறுங்கால், அவனெப்படிப்பிரஹ்மமாவன்?

விடை—ஜீவன்முத்தனென்றால் முத்தியையடைந்த ஜீவன் எனப் பொருள். அதில் ஜீவனுக்கு இருவடிவம். ஒன்றோ உபாதியினாலாய மித்தியாவடிவம், மற்றொன்று நிஜவடிவம். (இதுமுன் சொல்லப்பட்டிருக்கிறது). இவற்றில் நிஜவடிவத்தில்ஞான,அஞ்ஞானகாலமாய சரிடத்தும் கர்மானுபவம்கிடையாது: ஏனெனில் கர்மகாரணதத்துவங்கள்நிஜசொரூபத்திற்பிரவேசியாமையின் என்க.உபாதிவடிவத்திலோ அஞ்ஞானகாலத்தில், தனது நிஜவடிவம் சுத்தப்பிரஹ்மமென அறியாதகாரணத்தால் தன்சன்னிதிப்பட்டபதார்த்தங்களில், நான் என் னும்புத்தியைச்செய்து, அதனால் அவைகளிடத்தில் நிகழும் புண்ணிய, பாபரூபகர்மங்களைத்தனதாகவும், அவைகளின் பலனும்தனக்கே யெனவும், அத்தியாசத்தினால் கர்மங்களும் அவற்றின் பலன்களும்

வந்தடைந்தன. ஞானோதயத்தின்பின் தனது நிஜஸ்வரூபஞானத்தால் கூறிய அத்தியாசம் நீங்கிவிட்டதால், அக்கர்மங்களாவது அவற்றின் பலனாவது இவனைச்சார மார்க்கமில்லை. ஆகவே எக்காலத்தும் இச்சீவனிடத்துக்கர்மங்கள் யதார்த்தமாயில்லை எனச்சித்தித்தது. ஆயினும் மந்தமுமுக்ஷுக்கள் தங்களுடைய மயக்கத்தால், ஞானியைச்சரீரசம்பந்தமுடையவனாகப்பார்த்தலின், அவர்களது திருஷ்டியால் சீவன்முத்தனிடம் பிராரப்தத்தையொப்பியதேயன்றி, யதார்த்தமாய் அவர்கள் பிரஹ்மவடிவமேயாம்.

வினா-ஜீவனானவன் உபாதிகள் கெட்டு, தானுங்கெட்டுள்ள நிலைமையில் எவ்விதசுகத்தையடைதல் கூடும்?

விடை—ஜீவனானவன் தத்துவஞான உதயகாலத்து அவித்தியோபாதிகெட்டதும் அறிவுக்கட்டியாக மிஞ்சினபோதிலும், அவன் சன்னிதியிலுள்ளகரணங்கள் ஆனந்தத்தில் மூழ்குகின்றன. பின்சர்வோபாதிகளும் இறந்த விதேகமுத்தியில், நித்திய, நிரதிசய (ஒப்புவமையில்லாத), நிருபாதிக சுகவடிவப்பிரஹ்மமாத்திரமேயாக இருக்கின்றான். சுகத்தையடைதல் என்பதின்று.

வினா—சுகம், அதைத்துய்ப்பவன், அதன் சாதனம் இவைகளின்றி எச்சுகானுபவந்தான், ஜீவர்களால் விரும்பத்தக்கதாயிருக்கிறது! ஒன்றுமில்லை. ஆகலின், திரிபுடியின்றிச்சுகம் எவ்வாறு கூடும்?

விடை—அஞ்ஞானகாலந்தொடங்கி இதுவரையனுபவித்ததிரிபுடியுடன்கூடியசுகானுபவமான துக்கவரமென்றும், அதனால் நித்தியதிருப்திவாவில்லையென்றும், பரமானந்தம்பெற விச்சித்து, அதைவிசாரிக்கும் புருஷனானவன், மீண்டும் அத்திரிபுடிகளோடு கூடிய ஆனந்தத்தைக்கருதுவானாயின் அவனுக்குப் பரமானந்தம் எப்படிக் கிடைக்கும்; கிடைப்பினும் அது எப்படிப்பரமானந்தமாம்! ஆதலால்திரிபுடியின்றி சொரூபமாக மிஞ்சியவிடத்துள்ள ஆனந்தக்கட்டியே பரமானந்தமாம். அவ்வடிவாகவேபரமுத்தனாகியவிவேகியும் இருக்கிறான்.

வினாவிடைகள் 27.

மொத்த வினாவிடைகள் 1108.

ஸ்ரீ சுந்தரசிவம் வாழ்க.



உ

ஸ்ரீ சுந்தர சுவாமிகள் துணை

## 20. தோற்றியொடுங்குந் தத்துவங்கள் இவையெனல்

இன்னணந்தத் துவங்கடமினிலயமதையிபம்பிறுமிங்ஙன்றே
ன்றி, மின்னென்னவடங்குந்தத்துவநாலொன்பதுவிளம்பிற்
பூதமைந்து, மன்னமயகோசமாறைந்நான்குசூக்கமெய்யவித்
தைவித்தை, யென்னவிரண்டிகிற்றேன்றுசிவேசரிரண்டி-
லைகட்கிறைதாமென்றே. (அரு)

(இ-ள்) இப்படித்தத்துவங்களின் ஒடுக்கஞ் சொல்லப்பட்டது; இப்படி (மின்போன்று) தோற்றி ஒடுங்கினதத்துவங்கள் 36, அவையெதெனில்—பூதங்கள், 5. ஸ்தூலசரீரதத்துவங்கள், 6. சூக்குமசரீரதத்துவங்கள், 20. காரணசரீரமானமாயை, அவித்தை, 2. இவற்றிற் பிரதிபிம்பித்த சீவன், ஈசுவரன், 2. இவைகட்கெல்லாம் அதிஷ்டான சைதன்யமாயிருக்கின்ற பிரஹ்மம், 1. [ஆக 36].

வினா-பிரஹ்மத்தையுந் தோற்றி ஒடுங்குகின்ற தத்துவமாக எப்படிச் சொல்லலாம்?

விடை—ஓர் நாமமுமில்லாத பிரஹ்மத்திற்கு, பிரஹ்மம் என்ற நாமகற்பனைவந்ததைமுன்னிட்டு, சொரூபத்திற்குத்தோற்ற ஒடுக்கங்கூறாமல், நாமமாத்திரத்திற் கூறியவாறறிக.

வினா விடை 1

மொத்த வினாவிடைகள் 1109.

ஸ்ரீ சுந்தர சுவாமிகள் வாழ்க.

உ

ஸ்ரீ சுந்தரகுருமணி சகாயம்

## 21. இதுமுதல் 4 செய்யுட்களால் தானாய்விளங்குவதும், அன்னியமாய் விளங்குவதுமாய தத்துவங்கள், இவையெனல்

பேசிந்தமுப்பானுறதிற் பூதமைந்து வித்தைபிரதிபிம்ப, வீச
னொடு பிரமமென விவ்வெட்டும் பொதுவாக வெல்லாராலு

நேசமுறவநுபவிக்கலாகுமற்றைநாலேழுநீக்கமாகப், பாச
முறவநுபவிக்கப்படுமெங்ஙனெனக்கேட்கிற்பகருவோமே.
(௪௪)

(இ-ள்) (சொல்லப்பட்ட 36 தத்துவங்களாகிய) இவைகளில்; பூதங்
கள், 5; மாயை, 1; மாயாப்பிரதிபிம்பான ஈசுவரன், 1; பிரஹ்மம்,
1. ஆக இந்த எட்டும் சகல பிராணிகட்கும் (பிரியமாய்) சமுதாய
மாக அனுபவிக்கப்படும். மற்ற இருபத்தெட்டும் அவனவனுக்குப்
பிருதக்காக (ஆசையுடன்) அனுபவிக்கப்படும். அஃதெங்ஙனமெனில்
(சொல்லுவோம்) (இதனுரைவெளி)

கவி

பதிவிதத்துவமொன்றுபாழாகி லெவர்கட்கும்பதிபோவில்லை
நிதிபுரையுமழை யிறக்கினீரில்லை நெருப்பிறக்கிற்பாகமில்லை
கதிதருநல் லுயிர்ப்பில்லைக்காலிலாக்காற் காயமின்றேல்பார்க்
கு,மதிதிரிதற்கவகாசமிலைமாயையீசனின்றேன்மதத்தேவில்
லை.
(௪௫)

(இ-ள்) பிருதிவி தத்துவம் ஒன்று இறக்கில் எல்லோருக்கும் ஆதார
மில்லை. (ஐசுவரியம்போன்ற) மழைமறுக்கில் [எல்லோருக்கும்] ஜல
மில்லை. தேயுவில்லாதிருந்தாற்பாகமில்லை. காற்றில்லாவிட்டால்
(வேகமுடைய) வாடை, தென்றலில்லை. ஆகாசமிறக்கில் ஒருவருக்
கும் (நடப்பதற்கு) அவகாசமில்லை. மாயையும்; மாயாப்பிரதிபிம்பரும்
இறக்கில் சகல சமயங்கட்கும் தெய்வமில்லை (எனமதிப்பாயாக).

வினா—மாயையும், ஈசுவரனும் பொதுவென்றதெப்படி?

விடை—அகண்டபரிபூரணசச்சிதானந்தப்பிரஹ்மத்தினிடத்து மா
யையைமுன்னிட்டு ஈசுவரன் என்ற வியவகாரம்வந்தது. அவ்விதமா
யையுடன்கூடியபிரஹ்மமாகியஈசுவரன் ஒருவனையே, பலமதஸ்தர்க
ளும் அவரவர்களுக்கு ஏற்றவாறு பல நாமங்களையும், ரூபங்களையும்
கற்பித்து என் கடவுள், உன்கடவுள், எனவாதுசெய்துகொள்வதால்
சகலசமயங்கட்கும் பொதுவாம்.

வினா-பலசமயங்களும் ஒரேகடவுளைச் சொல்லுகிறதென்பதெப்படி?



தானய், அன்னியமாய் விளங்கும்

விடை—பலசமயங்களும் பல்வேறு நாம கற்பனைகளைச் செய்யினும்,
அந்நாமங்களின் அர்த்தமும், தெய்வத்தின் இலக்கணமும் ஒன்றாக
வேயிருத்தலின் ஒன்றெனப்பட்டது.

வினா-ஈசுவர இலக்கணம் ஒன்றாகவே இருக்கின்றதென்பதெப்படி?

விடை—ஒவ்வொரு சமயிகளும் தங்கள் தங்கள் ஈசுவரனை ஒன்றின
ஆம் கண்டிக்கப்படாதவன் (அகண்டன்) என்றும், எங்கும் நிறைந்
துள்ளவன் (பரிபூரணன்) என்றும், என்றுமுள்ளவன் (சத்து) என்
றும், எல்லாமறிபவன் (சித்து) என்றும். ஆனந்தவடிவன் என்றும்,
இவைமுதலான இலக்ஷணங்களாற்கூறுதலின் ஒன்றாகவேகாணப்ப
டுகிறது. ஆதலால் தெய்வ இலக்கணம் ஒன்றேயாம்.

வினா—நாமங்களினர்த்தமும் ஒன்றென்பதெப்படி?

விடை—சிவம் என்றால் மங்களவடிவமாம்.

விஷ்ணு என்றால் வியாபக வடிவமாம்.

விக்கினேசுவரன் என்றால் விக்கினவடிவ மாயைக்கு ஈசுவரனும்,

சுப்பிரமணியனென்றால் ஆனந்த வடிவனும்,

இப்படியே பல மதஸ்தர்களுடைய பலநாமங்களுக்கும் அர்த்தம் சித்
திபபதால் ஒன்றற்சொன்று பரியாயபதமாகவேவிளங்குதலின் நா
மார்த்தங்களிலும் பேதமின்றாம்.

வினா—ஆயின் புராணங்களில், பிறிதுசமயங்களையும், அத்தேவதைக
ளையும், கண்டித்துத்தாழ்த்தி, எடுத்துக்கொண்டதை உயர்த்திக்கூறு
வானேன்?

விடை.-அப்புராணங்கள் எடுத்துக்கொண்டசமயம், தேவதை இவை
களை உயர்த்திச்சொல்வதில் தாற்பரியமாய்ப்புறமதங்களைக்கண்டித்த
தேதவிர, மற்றொன்றைத்தாழ்த்துவதிலின்றென்றுணர்க.

வினா—அதெப்படி?

விடை—மற்றொன்றைத்தாழ்த்துவதிலேயே புராணங்களின்தாற்ப
ரியமிருப்பின், எல்லாசமயங்களும், தேவதைகளும் மற்றொன்றாற்
கண்டிக்கப்படுதலின் எல்லாம் தாழ்ந்தனவேயாகும். ஆயின் ஒன்றும்
அனுஷ்டிக்க மார்க்கமில்லாததாகுமாதலால், அதில் தாற்பரியமில்லை.

ஆனால் எடுத்துக்கொண்ட ஒன்றை, உயர்த்திக்காட்டுதல்வாயிலாக அதையனுட்டிப்போருக்கு திடத்தையுண்டாக்குதலிலேயே கருத்தாதலின் எல்லாச்சமயங்களும், தெய்வங்களும் நன்குமதிக்கத்தக்கனவேயாம்.

வினா-அப்படியாயின் இவ்வேதாந்தமதமட்டும் எப்படியுயர்வையுடைத்தாம்?

விடை—அவ்விதமதங்களில் ஆங்காங்குக் கூறிய அனுட்டானங்களை விடாது ஆசரித்து, அவைகளால் சித்த சுத்தியேகாக்கிரத்தன்மையைப்பெற்று, சாத்தியமாயவேதாந்த அனுபவத்தை அனுபவித்தவர்கள், மற்றமதங்களை இம்மதத்திற கண்டுதெரிசித்தும், புறமதங்களையாவது, தேவதைகளையாவது அவற்றையனுட்டிப்போரையாவது தூஷியாமல், அவர்களுடனும் அளவளாவிநின்றும், அவர்களுக்கு வேதாந்தத்தையுபதேசித்தும், பக்குவாந்தரம்ஞானத்துவாராமோக்ஷத்தையடைவித்தலின் இவ்வேதாந்தம் உயர்வையுடையதேயாம்.

வினா-இவ்வேதாந்த நூல்களில் எங்கேயாவது இவ்வேதாந்தமதத்தை மற்றமதங்களுடன் ஒற்றுமைப்படுத்தி எழுதப்பட்டிருக்கிறதா?

விடை—சுவானுபூதிரஸாயனம் சர்வமதநிரூபணப்பிரகரணம், நிஜானந்தவிலாசம் மதசங்கேதநிரூபணப்பிரகரணம் முதலானவிடங்களினும் பிறநூல்களினும் காண்க.

கவி

ஓகைநிறைபிரமந்தானில்லையெனிலொருவருக்கு முணர்விங்
கில்லை,யாகையாலிவ்வெட்டுமெல்லார்க்குஞ் சமுதாயமாகுமு
ன்னர்ப், பாகமாநாலேழென்றுரைத்ததெவனெனிற்றாலம்
பாழேயாகி, லேகனுக்கிங்கனைவருக்குமிறவாமையாலுமினு
மிசைப்பக்கேளாய். (௮௬)

(இ-ள்) (பூரணானந்த)பிரஹ்மமில்லையேல் ஒருவருக்கும் அறிவில்லை ஆகையால் இந்த எட்டும் எல்லோருக்குஞ் சமுதாயமாம். (முன்னர் 28-ம்) பிருதக்கெங்ஙனமெனில் ஒருவனுக்குத் தூலசரீரம் இறக்கில் எல்லோருக்கும் தூலசரீரமிறவாத படியினாலும், (இன்னுஞ்சொல்லுகிறோம் கேட்பாயாக)



வினா—பிரஹ்மம் பொதுவென்பதெப்படி?
விடை-பிரஹ்மம் அறிவுவடிவாயிருத்தலினாலும், எல்லோரும் அறிவு
வடிவாய்விளங்கலினாலும், பிரஹ்மம் பொதுத்தத்துவமாம்.
வினா—இந்திரியத்திற்கு அறிவாகாரத்தன்மை சொன்னாலென்ன?
விடை—அந்தக்கரணமின்றி இந்திரியமொன்றையறியா, ஆதலால்
அதற்கறிவாகாரத்தன்மை கிடையாது.
வினா—ஆயின் அந்தக்கரணத்திற்கு அறிவாகாரத்தன்மையைக் கூறி
னாலென்?
விடை-அபிமானி ரூபஜீவனன்றி அந்தக்கரணமறியாவாதலின், அதற்
கும் அறிவாகாரத்தன்மை கிடையாது.
வினா—அப்படியானால் ஜீவனுக்கு அறிவாகாரத்தன்மையைக் கூறி
னாலென்ன?
விடை—நிர்விகற்பசமாதியில் பிரஹ்மசொருபத்தை எதிரிட்டறிய அவனுக்கும்
வசமின்றி ஜீவதற்போதமுங் கெட்டுப்போகிறபடியால்
அறிவாகாரத்தன்மை பொருந்தாது.
வினா-பிரஹ்மத்திற்கு அறிவாகாரத்தன்மை யெப்படிச்சித்திக்கிறது?
விடை—இந்திரிய அறிவு, கரண அறிவு, ஜீவ அறிவு இவைகள் வருவதை
யும், போவதையும் ஒன்றிலொன்றில்லாதிருத்தலையும் அவைகட்கு
அன்னியமாயிருந்து தன் பிரகாசத்தாலேயே, விளக்கி, விளங்கிக்
கொண்டிருத்தலின், அதற்குச்சொப்பிரகாசத்துவமும் அதனால் அறி
வாகாரத்தன்மையும் சித்தித்தது.

கவி

சூக்கதேகத்தொருவர்க்கேதேனும் குறைவந்தாற்சொச்சப்
பேர்க்கு, மாக்கமதுகுறைபாமையாலுநன்முத்தராயவிராநி
ன்ற, மாக்கருணைச்சுகவாமதேவாதிகட்கவித்தைசிவன்மாய்
ந்தப்,பாக்கியமிங்கெவர்க்குமிலாப்படியாலுமிவ்வாறுபகந்தா
மன்றே. (௮௭)

(இ-ள்) சூக்குமசரீரத்தில் ஒருவனுக்கு அங்கவைகல்யம் வந்தால் யெல்லோருக்கும் (அவ்வாறுதல்) வாராதபடியாலும், நல்லமுத்தராயி

(பிரகாசித்து பெருங்கருணையோடி)ருந்த சுகர்,வாமதேவர் முதலான பேருக்கு அவித்தையும் ஜீவனுமிறந்துபோயிருக்க(அவ்வைசுவரியம்) மற்றைப்பேருக்கெல்லாம் அவித்தையும் சீவனுமிறவாதபடியாலும் (இப்படிச் சொன்னோம்) [இந்த இருபத்தெட்டுத்தத்துவங்களும் அவனவனுக்குப்பிருதக்கென்பதிலே சந்தேகமேயில்லை]

வினா—சுகர்வாமதேவரென்பார் யாவர்?

விடை—சுகமார்க்கம், வாமதேவமார்க்கமிவைகளையனுட்டித்தவர்களாய தத்துவஞானிகளாவர்.

வினா—சுகமார்க்கமென்றாலென்ன?

விடை—பக்ஷிமார்க்கம்.

வினா—ஏனிதைச்சுகமார்க்கமெனச் சொல்லவேண்டும்?

விடை-பக்ஷிகள் குறித்தவிடத்திற்குப் பக்ஷங்களாற் செல்வதுபோல் மோக்ஷமென்னும் குறிப்பிட்ட இடத்தில் அநாயாசமாய்ச் சேர்ப்பித்தலால் பக்ஷிமார்க்கமெனப்பட்டது.

வினா—இம்மார்க்கம் எவ்விதகிரமத்தாலடையப்படும்?

விடை—1. பிரஹ்மத்தைநேராயறிவிப்பதாயசத்து, சித்து முதலிய விதிவாக்கிய உபதேசங்களினாலாவது; (2) பிரபஞ்சத்தை நீக்கிப்பிரஹ்மத்தையறிவிப்பதாய அகண்டாதி நிஷேதவாக்கிய உபதேசங்களினாலாவது; (3) ஜீவப்பிரஹ்மங்களின் ஒருமையையறிவிக்கும் தத்துவமஸி முதலிய மகாவாக்கியங்களினாலாவது; (4) சாங்கியயோக சமாதி, அஸம்பிரக்ஞாத சமாதியினாலாவது அடையப்படும்.

வினா—இதற்குப் பலனியாது?

விடை—சரீரமிருக்குங் காலத்திலேயே சரீரவிலக்ஷண ஆத்மாவின் ஞானமுண்டாய் முக்தராவர்.

வினா—வாமதேவமார்க்க மென்றாலென்ன?

விடை—எறும்புமார்க்கமெனப் பொருள்.

வினா—ஏன் எறும்புமார்க்கமென்ன வேண்டும்?

விடை—எறும்பானது குறித்தவிடத்திற்குப் போகவேண்டுமானால் கிரமக்கிரமமாய் ஊர்ந்து, ஆயாசத்துடன் செல்வதுபோல்; அநேக



ஜன்ம அப்பியாசபலத்தால் உத்தம கதியையும், மீண்டு ஜன்மத்தை
யும், அணிமாதிசித்திகளாகிய அநேக தடையுடனடைந்து, பின் ஓர்
காலத்து பிரஹ்மலோகஞ்சென்று பிரஹ்மாவுடன் முக்தியடையும்
கிரம சாத்தியத்தால் எறும்புமார்க்கமெனப்பட்டது.

வினா—இது எவ்விதமடையப்படும்?

விடை—இயம, நியம, ஆசன, பிராணாயாம, பிரத்தியாகார, தாரண
தியான, ஸமாதிகளின் ஹட அப்பியாசத்தாலடையப்படும்.

வினா—இதின்பலனியாது?

விடை—சரீரம் நீங்கியபின் பிரஹ்மலோகஞ்சென்று, அந்தலோகம்
பிரளயமாங்கால் பிரஹ்மாவினால் தத்துவஞானம் உபதேசிக்கப்பட்டு
பிரஹ்மாவுடன் தானும் விதேகமுத்தியை யடைவர்.

வினா—இவ்விருமார்க்கங்கட்கும் பேதமியாது?

விடை-இருமார்க்கங்களும் மோக்ஷசாதகமேயாயினும், சுகமார்க்கம்
லெகுவாயும், சீக்கிரஞானத்தைக்கொடுத்தல்வாயிலாக மோக்ஷத்தை
யடைவிக்கும். வாமதேவமார்க்கமோ! நீடித்தகால அப்பியாசத்தால்
அநேகதடைகட்குட்படுத்தி காலாந்தரத்திலடைவிக்கும். இதுவே
அவற்றிற் பேதம்.

மொத்தவினாவிடைகள் 1136.

வினாவிடைகள் 23.

ஸ்ரீ சுந்தரகுருமணி வாழ்க

உ
ஸ்ரீ சுந்தரவிறைவன் றுணை

ஸ்ரீ சுந்தரவிறைவன் செய்யுட்களால்

22. இதுமுதல் 10 செய்யுட்களால்
ஆங்ஙவை தவசிவமே நாறுய் விளங்குவதெனல்.

சாற்றுமிகாலொன்பதாந் தத்துவங்கடமுளென் றுந்தாணுப்
காணு, மேற்றமாந்தத்துவமொன்றேழ்வேறுக்காண்டலிவ்
விரண்டாய்க்காணுஞ், சிற்றமார்தத்துவநாலேழுங்கனெனி
னவத்தாத்திரயசாக்கி, போற்றுமெலாவவத்தையிலுந்தாணு (அஅ)
கப்பொலிந்தணியம்போலாதாலும்

(இ-ள்) (சொல்லப்பட்ட)இந்தத்தத்துவங்கள் 36-ல் எப்போதுந்தானாகவே காணப்படுகின்ற (மேலாய)தத்துவம் 1. எப்போதும் தனக்கன்னியமாய்க்காணப்படுகின்ற தத்துவங்கள் 7. தானாகவும் தனக்கன்னியமாகவும் அனுபவிக்கப்படுகின்ற (சிறப்புமிக்க) தத்துவங்கள் 28. அஃதெங்ஙனமெனில்:— அவததாத்திரயசாக்ஷியாயிருக்கின்ற (புகழ்தற்குரிய) [பிரஹ்மசைதன்யம்]எல்லாவவஸ்தைகளிலும் தானாகவிளங்குகையினாலும் [மற்றத்தத்துவங்கள்போல] அன்னியமாக விளங்காதபடியினாலும், (இதனுரைவெளி)

கவி

பிரமமொன்றேதானாகும்பேசுபூதங்களைந்துமாயை மாயாப்,
பிரதிபிம்பனெனுமீசனிவையேழின்றொழிலதனைப் பேதை
யாலும், கிரமுறத்தன்றொழிலாகச்சிந்தித்தலிலையதனால்வே
ருந்தற்கிங், கிருபதினெட்டுநான்குதத்துவத்தினியற்றனையுமி
யம்பக்கேளாய் (அகூ)

(இ-ள்) [அந்த] பிரஹ்மசைதன்யமொன்றுமே தானாகக்காணப்படுகின்றது. (பேசாநின்ற) பூதங்கள் 5; மாயை, மாயாப்பிரதிபிம்ப[2] ஆக ஏழும் தந்தந்தொழிலான [வெட்டு, குத்து, உழவு பஞ்சகிருத்தியம் தசாவதாரமுதலானவை] (மடமையினும்) [ஒருக்காலும்] (திடமாகத்) தன் தொழிலாகக்காணப்படாதபடியினாலே,தனக்கன்னியங்களே[யல்லாமல் தானாகமாட்டா. இங்குமற்றை] 28 தத்துவங்களின் (இயல்பையும் சொல்லக்கேட்பாயாக) தற்கு = தனக்கு.

வினா—பிரஹ்மம் ஒன்றும் தானாகக்காணப்பட்டதத்துவம் என்பதெப்படி?

விடை—சாக்கிர, சொப்பன, சுழுத்தியாகிய அவஸ்தைகளினபிமானியும், அகம்சப்தவாச்சியனுமான விசுவ, தைஜஸ, பிராஞ்ஞர்களைப்போல் அன்னியமாய் விளங்காமல் தனக்குத்தோற்றுதல் மறைதலின்றி எவ்வவஸ்தைகளிலும் தானாகவே விளங்குகையினாலும், எவ்வஞ்ஞானியினாலும் அன்னியமாய் அனுபவிக்கப்படாததுகொண்டும் பிரஹ்மம் ஒன்றே தானாகக்காணப்பட்டதத்துவமாம்.



வினா—பூதம் 5. மாயை, மாயாப்பிரதிபிம்ப ஈசுவான் ஆக ஏழும் தனக்கன்னியமென்பதெப்படி?

விடை-கூறிய ஏழுதத்துவங்களும் நான் என்னுஞ் சப்தத்திற்கு விஷயமாகாமல், தனக்குப்புறம்பாக இது என்னும் சப்தானுபவ விருத்திக்கு விஷயமாயிருத்தலின் தனக்கன்னியமேயாம்.

வினா—பஞ்சகிருத்தியம் என்றதென்ன?

விடை-ஈசுவரன் உலகை முன்னிட்டு நடத்தும் ஐந்தொழில்களாம்.

வினா—அவையாவை?

விடை-சிருஷ்டி = படைத்தல், திதி = காத்தல், சம்மாரம் = அழித்தல், திரோபவம் = மறைத்தல், அனுக்கிரகம் = அருளுதல் என ஐந்து.

வினா—இப்பஞ்சகிருத்தியங்கள் எதை விஷயம் செய்கின்றன?

விடை—சிருஷ்டி, திதி, சம்மாரம் மூன்றையும் தூலசரீரங்களிடத்தும், திரோபவம் அனுக்கிரஹமாகிய இரண்டையும் ஜீவர்களிடத்தும் மாகச் செலுத்தப்படுகின்றன.

வினா-ஜீவனுக்குச்சிருஷ்டி, திதி, சம்மாரங்களைச்சொன்னாலென்ன? என்றுமொருபடித்

விடை—அநாதியாயிருத்தலின் சிருஷ்டியில்லை; ஞானகாலத்தாயிருத்தலின் திதியில்லை; பிரளயத்தில் ஒடுக்கமாயும், மிஞ்சுவதில் நாசமென்பதும் இல்லாமல் தனது யதார்த்தவடிவாக காலம் சம்மாரமுமில்லை.

வினா—ஆயின் ஜீவனுக்குத்திரோபவ, அனுக்கிரஹங்களுண்டென்பதெப்படி?

விடை-ஜீவனுடையயதார்த்தவடிவம் பிரஹ்மமாகவேயிருக்க, சரீராதிகளில் நான் என்னும் புத்திதோன்றுவதால் திரோபவமும்; அவ்விதமறைப்பும் சற்குரு, சற்சாஸ்திராதிகளால் ஈசுவரானுக்கிரஹத்தைமுன்னிட்டு நீங்குவதால் அனுக்கிரஹமும், ஜனிக்கின்றன.

வினா-அப்படியானால் சரீரத்திற்கும் திரோபவ, அனுக்கிரஹங்களைக் கூறினாலென்ன?

விடை—சரீரங்கள்தமோகுணகாரியமாதலின் இயல்பாகவே மறைப்

புடையன; ஆதலின் திரோபவம் தேவையில்லை. சுவரை மண்ண
றக்கழுவமுடியாததுபோல் எவ்வித சௌசத்தாலும் சுத்தமாகாமை
பற்றி அனுக்கிரஹமும் தேவையில்லை, ஆதலின் கூறக்கூடாது.

வினா—சரீரங்கட்குச் சிருஷ்டிமுதல் 3ம் வேண்டுமென்பதெப்படி?

விடை-உற்பத்திக்கு யேதுவாயிருத்தலின் சிருட்டியும், ஷட்பாவவி
காரத்தையடைதலின் திதியும்: அழியும்சுபாவத்தோடிருத்தலால்
சம்மாரமும் வேண்டியதே.

வினா—இயஃபாகவே சிருஷ்டியாதிகளையுடைய சரீரங்கட்கு அதை
நடத்த ஈசுவரன் வேண்டியதுதானா?

விடை-சரீராதிகள் சடமாயும், அஸ்வதந்தரமுள்ளதாயுமிருப்பதால்
அவைகளைத்தொழிற்படுத்த சுவதந்தரசர்வக்ஞ ஈசுவரன் அவசியமே.

வினா—அப்படியானால் ஜீவேசுவரர்களின் இலக்கணம் யாது?

விடை-இதற்குமுன் ஜீவ, ஈசுவர இலக்கணங்களைக்கூறியவிடத்தும்,
ஏனையஇடங்களிலும், ஜீவ, ஈசுவரர்களுடையவடிவத்தை விரிவாய்க்
கூறிவந்தோமாயினும், ஈண்டும் தொகுத்துக் கூறுகின்றோம்:—

அவாக்மானஸகோசரவஸ்துவில் அனாதிகற்பிதபின்னசத்தியாய
மாயையென்னும் உபாதியால் அவ்வஸ்துவிற்கே ஈசுவாவியவகாரம்
வந்தது. அவ்வீசுவரன் அனாதியாய், அகண்டபரிபூரணசச்சிதானந்த
வடிவாய், தன்வயத்தனாகி, சர்வக்ஞத்துவாதிகுணசகிதமாய், ஜீவர்
களை அவரவர்கள் கர்மத்தைமுன்னிட்டு சிருஷ்டியாதியில்நடத்தக்
கங்கணம்பூண்டஸ்வதந்தரமுள்ளவனாய், சிருஷ்டிகாலத்து தூலசரீ
ரம்வரை விரியப்பார்த்து, பிரளயத்தில் சகலஜீவர்களையும்தன்னுள்ள
டக்கி தான் ஒடுங்காதவடிவுடைத்தாய், அவிவேகிகளால் சர்வக்ஞத்
துவாதிகல்யாணகுணகாரணமாய் மாயையுடன்கூட்டி அனுபவிக்கப்
படுபவனாய், விவேகிகளால் அவனுடைய யதார்த்தவடிவாயஅவாங்
மானஸகோசர அஸங்கோதாசீனவஸ்துவாய், அனுபவிக்கப்படக்கூ
டியவனாயிருக்கிறான்.

ஜீவனேதெனில்:—

அவாங்மானஸகோசரவஸ்துவில் அனாதிகற்பிதபின்னசத்தியாய



அவித்தையென்னும் உபாதியால் அவ்வஸ்துவிற்கே ஜீவவியவகாரம்
வந்தது. அச்சீவன் அனாதியாய், சிருஷ்டிக்கப்படாதவனாய், அசத்துத்
தன்மை முதலவற்றோடுகூடிய சரீராதிகளிற் கட்டுப்பட்டு அச்சரீரா
திகளினளவேதனது வியாபகமாய், சேதனனாய், பாதந்திரத்துவாதி,
கிஞ்சிக்ஞத்வாதி அற்பகுணமுடையவனாய், கர்மங்களைச்செய்பவ
னாய், அவற்றிற்கிடாய் ஈசுவரனாற் சரீராதிகளைப்பெறுபவனாய், அத்
தியாஸம் செய்வதே தன்வடிவாய், தன்னை விசாரியாதவரை பந்
தமுடையவனாய், குருவருளால் தன்னை விசாரித்தவிடத்து தானே
அஸங்கோதாஸீன வஸ்துவாய் மிஞ்சுபவனாயிருந்துகொண்டிருக்கி
றான்.

வினா—அவதாரம் என்றாலென்ன?

விடை—இறங்குதலெனச்சொன்முடிபாம்.

வினா—அவதார இலக்கணமியாது?

விடை—கருமத்தினாலின்றி தனது இச்சையினால் காலதேசநிமித்தங்
கட்குத் தக்கவாறு ஈசுவரன் கொள்ளும்வடிவம் அவதாரமாம்.

கவி

வேதியனான்வேந்தனான்வைசியனான்சூத்திரனான்வேதமெல்
லா, மோதியுணர்ந்தபிரமசாரிநானில்லானானுலவையப்புத்
தாதிலைகளுண்டுவனத்திருப்பவனான்நான்றுறவிநானாண் பெ
ண்ணான், கோதிலாச்சேபனான்கரியனானெடியனான்குறியனா
னே (கூ௰)

(இ-ள்) நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன் நான்
சூத்திரன், (நான்கு வேதங்களையும் அத்தியயனஞ்செய்து பொருள்
விசாரஞ்செய்யும்) பிரமச்சாரி நான், நான் கிருகஸ்தன், (காற்று,
தண்ணீர், கிழங்கு, இலைகளைபபுசித்துவரும்) வானப்பிரஸ்தனான்,
நான் சந்நியாஸி, நான் ஆண், நான் பெண், நான் (குற்றமில்லாத)
சிவலை. நான் கறுவல், நான் கட்டையன், நான் நெட்டையன்,

வினா—இச்செய்யுளின் கருத்துயாது?

விடை—தானாகவும், தனக்கன்னியமாகவும் வழங்கும் தத்துவங்கள்

28-ல் சிலதர்மங்களைக் கற்பனையாகவும், சிலதர்மங்களைச் சுபாவமா
யுங்கொண்டுள்ள தூலசரீரமானது நான் என்னும்விருத்திக்கு விஷ
யமாய், தானாகக்காணப்படுகின்றதென்பதில் அனுபவங்கூறியதாம்.
வினு—பிரஹ்மசாரியென்றுலென்ன?
விடை—விவாகம் பண்ணிக்கொள்ளாமல் விரதங்காத்து ஆசிரியரி
டத்துப் பாடங்கேட்டுக்கொண்டிருப்பவன்.
வினு—கிருகஸ்தன் என்றுலென்ன?
விடை-இல்லறதர்மத்தை விடாது மனையாளுடன் கூடி வாழ்பவன்.
வினு—வானப்பிரஸ்தன் என்றுலென்ன?
விடை—இல்லறதர்மத்தை விட்டு, வனஞ்சென்று மனையாளுடனு
வது, தனித்தாவது தபஞ்செய்துகொண்டிருப்பவன்.
வினு—சந்நியாஸி என்றுலென்ன?
விடை—முற்றத்துறந்தவன்.
வினு—சந்நியாஸப் பாகுபாடி யாது?
விடை—இலிங்க சந்நியாசம், அலிங்க சந்நியாசமெனை இருவகையாம்.
வினு—இலிங்க சந்நியாஸமாவது யாது?
விடை—தண்டக்கிரஹணதிலிங்க(அடையாள) பூர்வகமாய பிக்ஷாட
ணதி, சமையாதிகளோடு கூடியதாம்.
வினு—இதற்கதிகாரி எவன்?
விடை—பிராஹ்மணன் ஒருவனே அதிகாரியாம்
வினு—இவ்விலிங்க சந்நியாசத்தினுட் பிரிவியாது?
விடை—திரிதண்ட சந்நியாசம், ஏகதண்ட சன்னியாசமெனவிரண்
டாம்.
வினு—திரிதண்ட சந்நியாசமாவது யாது?
விடை—மூன்றுதண்டம்முதலிய அடையாளங்களோடு கூடியதாம்.
வினு—இதிற்பாகுபாடி யாது?
விடை—குடீசகம், பெகூதகமென இருவகையாம்.
வினு—குடீசகசந்நியாசத்தில் அதிகாரி யார்?
விடை-புத்திரன்கிருஹம், தனம், ஜரை, நோய் இவைகளுடையோ



ராய்; பிக்ஷை புணவருந்துமாற்றல், இலேசத்தைப் பொறுத்தலிலைக
ளில்லாதவராயுள்ள மனைவியின்றியமறையவர் அதிகாரியாம்.
வினு—இவருக்குக்குடீசகசந்நியாசியெனப்பெயர்வருவானேன்?
விடை—தமது மைந்தர்மூலமாய் அன்னவஸ்திராதிகளைக்கொண்டு,
பிரணவாதிமந்திரஜபமுதலான தர்மவிசேஷங்களால் குடில்கட்டி
வசிப்பதால் என்க.
வினு—பகூதகசந்நியாசத்திற்கு அதிகாரி யாவர்?
விடை-ஸ்திரி, தனதிகளில் பிரியமற்று, பிரஹ்மச்சரியவிரதத்தோடு
கூடிய; ஜராவஸ்தையைப்பொருந்திய, மறையவர் அதிகாரியாம்
வினு—இவருக்குப்பகூதகசன்னியாசி எனப்பெயர்வருவானேன்?
விடை—கமண்டலம், வஸ்திர முதலானவைகளோடுகூடி, சந்தியா,
உபாஸனதிகளைச் செய்வதில் சிரத்தையுடன், பிருதிவியில் சஞ்சா
ரம் செய்து வருதலின் என்க.
வினு—ஏகதண்ட சன்னியாசமாவதியாது?
விடை—ஓர் தண்டம் தாங்கிய லிங்கத்தடனுள்ளதாம்.
வினு—இதின் பாகுபாடி யாது?
விடை-ஹம்ஸசந்நியாசம், பரமஹம்ஸசந்நியாசமென இருவகையாம்.
வினு—ஹம்ஸசந்நியாஸத்திற்கு அதிகாரி யார்?
விடை—பரமவைராக்கியமுடையவனாய், கருமங்களிற் பற்றுடைய
வனுயிருக்கும் மறையோன் சிகையற்று, உபவீதந்தரித்து பிரண
வாதி மந்திரசெபமுதலானதர்மங்களையுங்கொள்பவன் அதிகாரியாம்.
வினு—பரமஹம்ஸ சந்நியாஸத்திற்கு அதிகாரியார்?
விடை-பரமவைராக்கியத்தடன் கருமவாதனையின்றி ஆன்மசாக்ஷாத்
காரப்பொருட்டு எப்பொழுதும் வேதாந்தசிரவணஞ்செய்யும் மறை
யோனும்.
வினு—அலிங்க சந்நியாசமாவது யாது?
விடை—தண்டமுதலிய அடையாளங்களின்றியதாம்.
வினு—இதற்கதிகாரி யாவார் எவர்?
விடை—க்ஷத்திரிய, வைசியரும், முதல் மூவருண ஸ்திரிகளுமாவர்.

வி௫—இவர்களுக்குரிய தர்மம் யாது?

விடை—தண்ட முதலிய அடையாளங்களில்லாத பிக்ஷாடனுதிபாவறிய சர்மங்களும், சமை, தமை முதலிய ஆந்தா கருமங்களுமாம்.

வி௫—இச்சந்நியாசங்கட்குப் பலமியாது?

விடை—பரமஹம்ஸசந்நியாசமானது ஆன்மசாக்ஷாத்காரப்பொருட்டுக்கவரப்படுதலின் அதுவேமிக்குயர்ந்ததும், அவ்வான்மசாக்ஷாத்காரத்தால் இவ்வுலகத்தில் இச்சரீரத்துடனேயே முக்தியும், ஏனையோருக்கு உபாஸனையின் ஏற்றத்தாழ்வுகட்குத்தக்கதாக பிரஹ்மலோகப்பிராப்தியும் உண்டாகும்; இச்சந்நியாசங்களைக்கவரும் முறை, அவற்றின்மகிமைமுதலானவைகளையும், இங்குக்கூறியிருக்கின்றவைகளின் விரிவையும் தெரியவிரும்புவோர் ஆத்மபுராணத்திற் கண்டுகொள்க.

கவி

நான்பருத்தே னிளைத்தேனெனத் தானப்நாடிடு மிந்தலமின்
மெய்யை, மானென தமனை யெனதுவென்றாற்போலெனது
மெய்வாடிற்றின்று, வான்மருவுமாறுமிகவளர்ப்பனிபானே
ன்னவேமற்றொரேல்லை,தான்வேறுதா லம்வேறெனக்கன்
டபடியாலுஞ்சக்குவாதி. (௬௧)

(இ-ள்) நான்பருத்தேன், நானிளைத்தேனென்று தானைவழங்குகிற (இந்த நன்மையில்லாத) தூலசரீரம் [ஆறுதத்துவங்களும்]மற்றொரு வேளையிலே தனக்குப் புறம்புபட்டு என்மாடு (என்வீடு) [என்சன்று என்றாற்போல] என் சரீரம் பருத்தது என்சரீரம் இளைத்தது (இன்று ஆகாயத்தையளாவ நான் நன்றாய் வளர்ப்பேன்) [என் மயிர் நரைத்தது, என் சரீரம் பிறந்து இத்தனைநாளாயிற்று] என்று தான் வேறு தூலம் வேறென வழங்குகிறபடியாலும், (கண் முதலான)

வி௫—இச்செய்யுளின் கருத்துயாது?

விடை—முற்கூற்றப்படி தானைக்காணப்பட்ட தூலசரீரமானது, மற்றோர் வேளையில் எனது என்னும் விருத்திக்கு விஷயமாய்த் தனக்கன்னியமாயும் அனுபவிக்கப்படுகிறதென்பதாம்.



கவி

தத்துவங்கடனை யொருகால்யான் கண்டேன்யான் கேட்டே
ன்றந்தே தனைகி, யித்தகையவதுபவத்தாற்றனையுமொருவேளை
யென்கண்கைகால், புத்தி யகங்காரமெனத் தனக்கனியமாக
வுமேபுகறலானுன், சித்தமிந்நாலேழாகுந் ,தத்துவமுமிருவ
கையாச் செப்புமாறே (௬௨)

(இ-ள்) (தத்துவங்களை ஒருபோது) நான் கண்டேன், நான் கேட்டேன், நான்கொடுத்தேன், நான் தொட்டேன், நான்போகித்தேன், நான் வாங்கினேன், நான் நடந்தேன், நான் புசித்தேன், நான் சிந்தித்தேன், நான் நிச்சயித்தேன், நான் இந்தப்பஞ்சத்திற்கு ஜீவித்தேன் என்று தானைக வழங்குகிற [சூக்குமசரீரதத்துவங்கள் இருபதும்] மற்றொரு வேளையிலே, தனக்குப்புறம்புபட்டு [என் வீடு, என் உடைமையென்றாற்போல] என் கண், [என் காது, என் மூக்கு, என் நாக்கு] என் கை, என் கால், [என் மனம்] என் புத்தி, என் அகங்காரம், [என்சித்தம், என்பிராணன்]என்று தான் வேறு அவைகள் வேறாக வழங்குகிறபடியாலும், [நான் அறிவேன் நான் அறியேனென்று தானைவழங்குகிற அஞ்ஞானமும், சிதாபாசனும், மற்றொரு வேளையிலே தனக்குப்புறம்புபட்டு என்னஞ்ஞானம், என் ஜீவன் என்று வழங்கக்கண்டபடியாலும்] இந்த 28 தத்துவங்களும் தானைவும் தனக்கன்னியமாகவும் வழங்குகின்றது சித்தம்.

வி௫—இச்செய்யுளின் கருத்தியாது?

விடை—முன் தூலசரீரத்திற்குச்சொன்னதுபோல், சூக்குமசரீரதத்துவம் 20, காரணசரீரதத்துவம் 1, ஜீவன் 1, ஆக 22 தத்துவங்களும் ஒருக்கால் நான் என்னும்விருத்திக்குவிஷயமாய்த்தானைவும், மற்றொருவேளையில் எனது என்னும் விருத்திக்குவிஷயமாய்த்தனக்கன்னியமாகவும் காண்கின்றதென்பதாம்.

கவி

இன்பமிங்கெனக் களிக்குமாவெழுந்தருளிறைவனிருபத்தெட்டு, டென்பதானதத்துவங்களுந் தானெனி லென்றுமோர்ப

டித்தாகி, மன்பெருங்கரிபோலவேவயங்கிடவேண்டுமஃதல் லான்மற்; றென்பெரும்பஞ்சபூதம்போலனியமாயிலங்கிடுமி யாறேன (கூஙா)

(இ-ள்) (எனக்கு ஆனந்தத்தைக்கொடுக்கும்படி எழுந்தருளாநின்ற குருவே!) [இப்படிச்சொன்ன குருவைப்பார்த்து சீடன் கேட்கும் படி:--] அவ்விருபத்தெட்டு தத்துவங்களும் தானானால் (நிலைபெற்ற சாக்ஷியைப்போல் ஒரு தன்மையாகத்தோற்றவேண்டுமேயல்லாமல் பெரிதாய) பஞ்சபூதங்களைப்போலத்தனக்கன்னியமாகக் (காண்ட லென்ன?) காணக்கணக்கில்லை.

விரு—இச்செய்யுளின் கருத்தியாது?

விடை—28-தத்துவங்களுந்தானாயின் அன்னியமாய் விளங்குதல் கூடாவென்பதாம்.

கவி

அன்றியன்னியமாயிடினனவரதமும்புறமாய்த்தானே, நின் றிலங்கிடவேண்டுந்தானென்னவேநிகழ்த்திட நெறியின்றே, தன்றனக்கனியம்மெனத்தானெனச்சாற்றுதமைப்பானு;வெ ன்றல்போலும்வேளாளவேதியனென விளம்பல்போன்மிழு க்காமல் (கூச)

(இ-ள்) [இந்த 28-ந்தனக்கு] அன்னியமேயானால் எப்போதும்புறம் புபட்டேயிருக்கவேண்டுமேல்லாமல் தானாகவே வழங்கக்கணக்கில்லை. தானுமாய் தனக்கு அன்னியமுமாய் இருக்குமென்கின்றது இருட்டா நித்தன் என்றாற்போலும் வேளாள வேதியன் என்றாற்போலும் விருத்த (குற்ற)மாம் [என்னுஞ்சங்கைக்கு]

விரு—இச்செய்யுளின் கருத்தியாது?

விடை—28 தத்துவங்களும் அன்னியமாயின் தானாய் விளங்குதல் கூடா; இரண்டும் கூடுமென்பது விரோதமெனக்கூறியதாம்.

கவி

மைந்தகேட்டிநீயுண்மையாத்தானெனவொருவகை மயக்கத் தாற், புந்திசேர்ந்துதானெனவொருவகையெனப்புகலினிவ்



விரண்டுண்டாம், சந்தமார்கரிதானெனலுண்மையேதப்பல விருபத்தெண், பந்தமாகுதத்துவங்களைத்தானெனப்பகர்ந்தி டன்மயக்கேயாம். (கூரு)

(இ-ள்) (மைந்தனே நீ கேட்பாயாக) பரமார்த்தமாகத்தானென்கி றது ஒருவகையும், அத்தியாஸத்தினாலே தானென்கிறதுஒருவகையும் (சொல்லுங்கால்)ஆக இருவகையும் உண்டு. (நிறைந்த) சாக்ஷிசைதன் யத்தைத்தான் என்கிறது பரமார்த்தமல்லாமல் உபசாரமல்ல.[தனக் கன்னியமாயிருக்கின்ற] (பந்தரூப) 28 தத்துவங்களையும் தான் என் கிறது, (மயக்கமாம்).

விரு—இச்செய்யுளின் கருத்தியாது?

விடை—தானென்பது யதார்த்தத்தாலெனவும், அத்தியாஸத்தாலெ னவும் இருவகைப்படும். அதில் சாக்ஷியைத்தானென்பது யதார்த்த மும், 28 தத்துவங்களைத்தானென்பது அத்தியாஸமுமாம் எனப்பட் டது.

விரு—இவ்விருபத்தெட்டுத்தத்துவங்களும் எவ்வடிவங்களால் அத்தி யாசமாய்த் தோன்றுகின்றன?

விடை—தூலதேகம், சூக்குமதேகம், காரணதேகம், ஜீவன், ஆகிய இவ்வடிவங்களாய் சொரூபத்தாலும், சம்பந்தத்தாலும், தர்மங்களா லும் அத்தியாசமாய்த்தோன்றுகின்றன.

விரு—ஸ்தூலசரீர தர்மமியாது?

விடை-பிராமணாதி ஜாதியும்; பிரமச்சரியாதி ஆச்சிரமங்களும், ஆண் பெண் என்ற அங்கங்களும்; சிவலை, கட்டையென்னும் தர்மங்களும்; பருத்தலிளைத்தலாதி விகாரங்களும்; பரமசிவன், பார்பதி என்பன வாதி நாமங்களுமாம்.

விரு—சூக்கும சரீரதர்மமியாது?

விடை—காண்டலாதி, வசனித்தலாதி, ஜீவித்தலாதி, சங்கற்பித்த லாதிகளாம்.

விரு—காரணதேகதர்மமியாது?

விடை—அறியாமையாம்.

வினு—ஜீவதர்மமியாது?
விடை—அறிதலாம்.
வினு—இந்தத்தர்மங்கள் எதில் அத்தியாசம் செய்யப்படுகின்றன?
விடை—ஆத்மாவினிடத்திலாம்.
வினு—எவனுல் அத்தியாசம் செய்யப்படுகிறது?
விடை—ஜீவனுலாம்.
வினு—முற்கூறிய தர்மங்களை ஆத்மதர்மமென்றுலென்ன?
விடை—அவைகள் அவ்வதத்துவங்களிடமாய் ஆன்ம சன்னிதியில் விளங்குவதால் ஆன்மதர்மமன்று.
வினு—ஆன்மசந்நிதியில்விளங்குவதால் அதன் தர்மமல்லவென்பதெப்படி?
விடை—தீபசந்நிதியில் அல்லது தீபத்தால்விளங்கும் வஸ்துக்கள் எப்படி தீபதர்மங்களல்லவோ அதுபோல்; ஆன்மசன்னிதியில், அல்லது ஆன்மாவினுல் விளங்கும் தத்துவங்களாவது அவற்றின் தர்மமாவது, சம்பந்தமாவது ஆன்மாவினதாகாது.
வினு-அப்படியானுல் ஆன்மாவின் கண் தோற்றக்காரணமியாது?
விடை-ஆத்மாவையறியாததால், அதனிடத்தில்லாததாய், ஜீவனுக்கு அத்தியாசத்தால் தோன்றுகின்றன.
வினு—அத்தியாசம் என்ற பதத்தின் அர்த்தம் யாது?
விடை—விஷயமும், ஞானமுமெனப்பொருளாம்.
வினு—அத்தியாசத்தின் இலக்கணமியாது?
விடை—1. தானில்லாதவிடத்துத் தனதுதோற்றம்; அல்லது,
2. அதிஷ்டானசத்தையினும் அன்னியசத்தையின் தோற்றம்; ஆம்.
வினு—இங்கு அதிஷ்டானமாவது யாது?
விடை—சச்சிதானந்தாதி இலக்கணங்களோடு கூடிய பிரஹ்மமாம்.
வினு—அத்தியாசத்தின் உபாதான (முதற்) காரணமியாது?
விடை—அதிஷ்டானத்தின் விசேஷவடிவத்தையறியாததான அறியாமையாம்.



வினு—நிமித்தகாரணமியாது?
விடை—அதிஷ்டானத்தின் சாமானிய ஞானம் முதலனவாம்.
வினு—இவ்வத்தியாசம் எத்தனை வகை?
விடை—அன்னியோன்னிய அத்தியாச வடிவாய் ஒன்றேயாம்.
வினு—அன்னியோன்னிய அத்தியாசமென்றுலென்ன?
விடை-பரஸ்பரத்தில் பரஸ்பரத்தின்அத்தியாசம்; அதாவது ஒன்று
மற்றொன்றிலில்லாததாய் விளங்குவதாம்.
வினு—இவ்வன்னியோன்னிய அத்தியாசம் எத்தனை வகை?
விடை—ஆத்ம, அனுத்மாக்களுள்ளும்; அனுத்மவஸ்துக்களுக்குள்
பரஸ்பரமும்; நிகழ்வதுபற்றி அநேகவிதமாய்க்கூறலாம்.
வினு—ஆயினும், வேதாந்தசித்தாந்தத்தில் அங்கிகரிக்கப்பட்டிருப்ப
தான அன்னியோன்னிய அத்தியாசமாவது யாது?
விடை—ஆத்ம, அனுத்மாக்களுடைய பரஸ்பரத்தோற்றத்தினையே
அங்கிகரிக்கப்பட்டிருக்கிறது. ஏனையவை அளவில்லனவாயும், மூமூ
க்ஷுக்களுக்குப்பிரயோஜனமில்லாதவையாயுமிருத்தல்பற்றி அவை
களை விடுக்கப்பட்டன.
வினு—ஆயின், அன்னியோன்யாத்தியாசம் எப்படி விளங்குகிறது?
விடை—எவ்விடத்தும் எக்காலத்தும் ஆத்மாவின் சொரூபம் சுயம்
பிரகாசமாதலின், அதுபிறிதொன்றில் தோற்றுவதில்லை; ஆனுல் ஆத்
மாவின்சம்பந்தம், அனுத்மாக்களிலும்; அனுத்மாக்களின்சொரூபம்,
சம்பந்தம், தர்மம் இவைமுதலன ஆத்மாவின் கண்ணும்; இல்லாத
னவாய் விளங்குகின்றன.
வினு-அப்படியானுலிது (அன்னியோன்யாத்தியாசம்) எத்தனைவகை?
விடை—காரண, காரிய வேறுபாட்டால் இருவகையாம்.
வினு—காரண அத்தியாசமாவது யாது?
விடை—காரியப்பிரபஞ்சத்தோற்றமாகியஅத்தியாசத்திற்கு, காரண
மாயுள்ள மாயை, பிரகிருதியென்னும் பெயர்களோடுகூடிய அஞ்ஞா
னமானது, அம்சமில்லாத பிரஹ்மத்தினிடத்துத் தோற்றுவதாம்.
வினு—பிரபஞ்சகாரணமாகிய அஞ்ஞானம் எப்படி அத்தியஸ்தமாம்?

விடை—தீபமானது விளங்கியும், விளக்கியும் இருப்பபோல்; அஞ்ஞானமானது தனது அத்தியாசத்தையும், தனது காரிய அத்தியாசங்களையும், தானே நிர்வாகம் செய்வதாயிருக்கிறது.

விநா—கூறிய அத்தியாசங்கட்கு அஞ்ஞானமே காரணமாயின், அது ஸ்வதந்தர வஸ்துவாகுமே?

விடை—ஆகாது.

விநா—எப்படியாகாது?

விடை—சர்வகாரணமாயும், அகாரணமாயும், சுதந்தரமாயும், சத்தா வடிவாயுமுள்ள பிரஹ்மத்தின் சன்னிதியில், கற்பிதபேதத்தோடு வாஸ்தவ அபேதமாய் இவ்வஞ்ஞானமிருப்பதால், பிரஹ்மத்தின் காரணதிபாவங்களைசத்தையுடன் ஜீவர்களால் அத்தியவஸிக்கப்பெற்று, பிரஹ்மசன்னிதியில் விளங்கலின், தனதத்தியாசத்திற்கும், பிறவற்றின் அத்தியாசங்கட்கும், தானே காரணம்போலும், சுதந்தரமுள்ளதுபோலும் முமுக்ஷுக்களுக்குத்தோன்றுகிறது. அவ்விததோற்றமும் அத்தியாசத்தாலாம். இது அதன் (பிரஹ்மசன்னிதியிலுள்ள அவித்தையின்)கண்ணுள்ள அற்புதமாம்.

விநா—இதற்குக் காரண அத்தியாசமென்னும் பெயர் எதுகாரணம் பற்றி வந்தது?

விடை—சர்வநாமரூபப் பிரபஞ்சகாரிய ஜால (கூட்ட) ங்கட்கும், காரணமாயுள்ள இவ்வஞ்ஞானமும், பிரஹ்மத்தினிடத்தில் இல்லாது தோற்றுதல்பற்றிக்காரண அத்தியாசமெனப்பட்டது.

விநா—இல்லாத ஒன்று எப்படித்தோன்றும்?

விடை—இல்லாதது என்பதனால் பாரமார்த்திகத்தில் இல்லாதது எனவும்; வியாவகாரிக, பிராதிபாஸிகத்தில் அதாவது அஞ்ஞான தசையில் உள்ளதுபோலும் விளங்குவது எனப்பொருளாம்.

விநா-இக்காரண அத்தியாசத்தினிடத்தும் அந்நியோந்நிய அத்தியாசத்தன்மை எப்படிச்சித்திக்கின்றது?

விடை—ஜகத்காரணத்துவம் பிரஹ்மத்தினிடத்திருக்க, அதன் தாதாத்மியசம்பந்தமானது மாயையின்கண்ணுளதாக,கேவலமாயையே



ஜகத்காரணம் எனக்கொள்ளப்படுவதால், ஆத்மசம்பந்த அத்தியாசம் அனாத்மாவிலும்; அனாத்மாவாயமாயை அநிர்வசநீய அசத்துவடிவாயிருந்துகொண்டு, ஆத்மாவில் சொரூபத்துடன்தோற்றிப் பிரகிருதியேயுளது பிரஹ்மமென்பதில்லையெனக்கொள்ளப்படுவதால், அனாத்மாவின் அத்தியாசம் ஆத்மாவிலும்; இவ்விதம் பரஸ்பர அத்தியாசங்கள் சித்திக்கின்றன.

விநா—இனி, காரியவடிவ அந்நியோந்நிய அத்தியாசமாவது யாது?

விடை-காரியவடிவ அனாத்மாக்களின் சொரூபம், சம்பந்தம், தர்மம் இவைகள் ஆத்மாவிலும், ஆத்மாவின் சம்பந்த மாத்திரம் அனாத்மாக்களிலும் தோற்றுவதாம்.

விநா—இதில் திருஷ்டாந்தமியாது?

விடை—பழுக்கக்காய்ச்சிய இரும்புத்துண்டில் அக்கினியின் சிவப்பு நிறமானது இரும்பிலும்; இரும்பின் நீளம், அகலம்முதலானவை அக்கினியிலும்; தோற்றுவதுபோலாம்.

விநா—தாஷ்டாந்தமெப்படி?

விடை—ஆத்மாவினிடத்து சத்து, சித்து, ஆனந்தம், அத்வைதத்துவம், இவைகள் சொரூபமாயிருக்கின்றன. அனாத்மாவினிடத்தும் அசத்து, ஜடம், துக்கம், துவைதசகிதத்துவம், இவைகளிருக்கின்றன. இவற்றில் ஆத்மாவினிடத்துள்ளசத்து, சித்து என்னுமனுபவம், பாமரர்களுக்கு ஆத்மாவிலேயே விளங்காமல்,அனாத்மாவின்கண்ணுள்ள அசத்துவ, ஜடத்துவ அனுபவங்களைத்தோற்றுவியாது தாதாத்மிய சம்பந்தவாயிலாய் அனாத்மாக்களிருக்கிறது, விளங்குகிறது, என விளங்கிநிற்கிறது; இது ஆத்மசம்பந்தம் அனாத்மாவில் விளங்குவதாம். அப்படியே அனாத்மாவின்கண்ணுள்ள துக்கம் துவைதசகிதத்துவம் அதன்கண்ணேயே விளங்காமல், ஆத்மாவின் ஆனந்த, அத்வைதசுபாவத்தைமறைத்து, நான் துக்கியெனவும், நான் ஈசுவராதிகளினும் வேறெனவும் தோற்றுவிக்கின்றது. இது அனாத்மாவின் சொரூபம் தனது சுபாவங்களுடன் ஆத்மாவின்கண்ணே விளங்குவதாம். இவ்விதம் பரஸ்பரத்தில் பரஸ்பரம் அத்தியாஸிக்கப்படுகிறது.

வினா-அனாத்மாவின்சொரூபம் ஆத்மாவிற்றோன்றக்காரணமும், ஆத்மாவின் சொரூபம் அனாத்மாவில் தோற்றாத காரணமும் யாது?

விடை—ஆத்மாவோ பிறிதொன்றை ஆசிரயியாமல் தன்னிலேயில், தனது சத்தையின் கண்ணேயே இருந்துவிளங்குவதாயும்; எண் இறந்து எல்லையில்லனவாய், ஆழ்ந்து, அகன்று, நுண்ணியவாய், வாக்குமனமெட்டாததாய், இருந்துகொண்டிருத்தலின்; இது, இதனினும் விபரீத இலக்கணமுடைய அனாத்மாவில் எங்ஙனம் தோற்றும்! தோற்றமுடியாவாம். ஆனாலும் இத்தகையவத்துவின் சம்பந்தமின்றி எப்பொருளும் இருந்து விளங்காவாதலின், சம்பந்தமாத்திரம் அத்தியஸ்தமாதல் வேண்டும். அனாத்மாவின்சொரூபமோவென்றால், ஆத்மாவையாசிரயித்தும், ஆத்மசத்தையைப்பற்றிச்சீவித்தும், ஆத்மசத்தையைத்தவிர தனக்கெனப்பிறிது சத்தையில்லாமலும், மனம், வாக்குகளால் நிர்ணயப்படுத்தக்கூடிய அற்பத்தன்மையுடனும், அடுத்த கணத்தில் நிலைத்திராததாயும், இருத்தலின்; ஆத்மாவினிடத்து சொரூபம், சம்பந்தம், தர்மம்முதலானவைகளுடன் தோன்றநேரிடுகிறது. ஆதலின் ஆத்மாவின் சொரூபம் பிறிதொன்றிற்றோற்றாமல் சம்பந்தமாத்திரம் பிரதிதியாம்.

வினா—ஆனால் இவ்வத்தியாசங்கள் எத்தனைவகுப்பாய்ச் சாஸ்திரங்களில் வியவகரிக்கப்படுகிறது?

விடை-I. (1) ஆத்மாவின் சம்பந்தமாத்திரம் அனாத்மாவில் தோற்றுவதை கேவலசம்பந்த அத்தியாசமாயும்; (2) அனாத்மாவின் சொரூபமும், சம்பந்தமும் ஆத்மாவில் தோற்றுமாயின் அதைச்சம்பந்தசகிதசம்பந்தி அத்தியாசமாயும்; (3) அனாத்மாவின் தர்மமாத்திரம் ஆத்மாவிற்றோற்றுமேல் அதைக்கேவல தர்ம அத்தியாசமாயும்; (4) அனாத்மாவின் சொரூபமும், தர்மமுஞ்சேர்ந்து தோற்றுமேல் அதைத் தர்மசகிததர்மி அத்தியாசமாயும்; (5) முற்கூறியபடிபரஸ்பரத்தில்பரஸ்பரத்தின் அத்தியாசத்தினை அந்யோந்நிய அத்தியாசமாயும்; (6) அனாத்மாவின்வடிவமாத்திரம் ஆத்மாவிற்றோற்றுவதை அந்யதாத்தியாசமாயும், ஆக அறுவகையாயும்;



II. இவைகளையே; (1) ஆத்மாவின் சம்பந்தமாத்திரம் அனாத்மாவில் தோற்றுவதை சம்ஸர்க்காத்தியாசமெனவும்; (2) அனாத்மாவின் சொரூபமாதிகள் ஆத்மாவிற்றோற்றுவதை சொரூபாத்தியாசமென இரண்டாகவும்;

III. இவற்றையே; முற்கூறிவந்தபடி, (1) காரணாத்தியாசம் (2) காரியாத்தியாசம் என இருவகையாயும்; வியவகரிக்கப்படும். இவற்றின் விரிவை ஸ்ரீ விருத்திப்பிரபாகரமுதல நூல்களிலறிக.

வினா—இவைகளை எம்முறையில் அடக்கிக்கூறலாம்?

விடை—இவற்றில் முதலாவதாகக்கூறிய அறுவகையும், இரண்டாவதிலும்; முதலதும், இரண்டாவதும் மூன்றாவதிலும்; முதல்மூன்றும் அந்யோந்யாத்தியாசவடிவத்திற்குவேறில்லாமையின் அதிலுமடங்குமாறறிக. ஆதலின் இவ்வந்யோந்ய அத்தியாசத்தினையே வேதாந்தசித்தாந்தத்திலங்கீகரிக்கப்பட்டுள்ளது. இதுவரை கூறிவந்த அத்தியாசங்கள் எல்லாம் விஷயங்களாயிருப்பதுபற்றி இவையெல்லாஞ்சேர்ந்து அர்த்தாத்தியாசமென வியவகரிக்கப்படும்.

வினா—ஞானாத்தியாசமாவது யாது?

விடை—கூறிய அத்தியாசங்களின்விருத்திவடிவ அனுபவத்தினையே ஞானாத்தியாசமென்பர்.

வினா—அது எத்தனை வகை?

விடை-ஞானமானது ஞேய(விஷய)அனுசாரமானபடியால் எத்தனை விஷய அத்தியாசங்களுளவோ அத்தனை ஞானாத்தியாசங்களுளவாம்.

வினா—அப்படியானாலிங்குக்கூறிய அத்தியாசங்களுள் பூர்வங்கூறிய தூலதேகமுதல் ஜீவனீறாயுள்ள 28 தத்துவங்களினத்தியாசமானது எவ்வத்தியாசத்தில் அடங்குகின்றது?

விடை—கூறிய 28 தத்துவங்களும் விஷயவடிவாதலின் அர்த்த அத்

தியாசத்திலடங்கியதாய், இவைகள் அனாத்மாக்களாயிருந்து ஆத்மா
வின்கண் இல்லாததுதோற்றுவதால், அந்நியோந்நிய அத்தியாசத்தின்
ஒரு பாகமாயிருத்தலின் அவ்வத்தியாசமாகவே வியவகரிக்கப்படும்.

வினா-இந்த ஆன்ம, அனான்மாக்கள் ஒன்றிலொன்றுதோன்றுகிறது,
அதை விவேகித்துக்கொள்; என்று மட்டும் கூறினாற்போதாதா?
ஏனையமதங்களால் விசாரிக்கப்படாத அத்தியாசத்தை விரிவாய்க்
கூறுவானேன்?

விடை—ஒன்றில் மற்றொன்று தோன்றுகிறதெனச்சாமானியமாய்
மட்டுங்கூறின்; பிரஹ்மத்தினிடத்துத்தோன்றும்பதார்த்தங்கள் சத்
தியமா? மித்தையா? என அதிகாரிகட்குச்சங்கையுண்டாம். அச்சங்
கையைமுன்னிட்டு பதார்த்தங்கள் சத்தியமாயின், சத்தியமானசிவத்
தினிடத்து பதார்த்தங்கட்குள்ள சம்பந்தமும் சத்தியமாய்த்தானே
இருக்கவேண்டுமெனச்சங்கையுண்டாகி, சத்தியசம்பந்தத்தாலுண்
டாயபந்தத்தை, எவராற்றான்நீக்கமுடியும்! எனஅயர்ச்சியுற்றோ;அல்
லது, பதார்த்தங்கள் சத்தியமில்லாதிருந்து சிவத்தினிடத்துத்தோற்
றுகிறதெனக்கொள்ளினும், அத்தோற்றம் சத்தியமா? மித்தையா?
வெனச்சங்கையுண்டாகி சத்தியமேல் பதார்த்தம் சத்தியமாயில்லா
மல் தோற்றமாத்திரம் எப்படிச்சத்தியமாம்! எனவும்; ஒருவாறு அங்
கீகரிக்கினும் பந்தம் நீங்கா எனவும்; மித்தையேல், அப்படியே சுருதி
களிற்கூறப்பட்டிருக்கிறதா? எனவும்; இச்சங்கையுற்றோ கலக்கம
டைந்து,ஏனையமதக்கிரந்தங்களிற் சாந்தியைப்பெறாதவனாய், சாதன
முறையில் அம்மத நூல்களைவிசாரித்ததாலுண்டாய ஆலோசனைவல்ல
மையைப்பெற்றுநிற்க, அவ்விதம்பரிபக்குவமுற்ற அதிகாரிகளை நோக்
கி, அவர்கள் கலக்கம் ஒழிந்து துக்கநீக்க, இன்பவடைவுகளைப்பெறு
மாறு இவ்வேதாந்தசித்தாந்தமானது தனதுசாஸ்திரங்களில்; அத்
தியாச இலக்கணம், அதின்பாகுபாடு, பூர்வபக்ஷம், அதன்கண்டனம்,
முதலானவைகளை ஸ்ரீ சங்கரபகவத்பாதாள் முதலான ஆசிரியர்கள்
வாயிலாய் விரிவாய்க்கூறலாயின.

வினா—அத்தியாசப்பிரசங்கத்தில், துக்க நீக்க, சுக அடைவுகட்குச்



சாதனமாய அத்வைதஞானத்தை எவ்விதம் நிலைநாட்டியிருக்கிறது?

விடை-புறமதங்கள், அனாதிநித்தியத்தன்மையில் சிவத்தோடு சகல
பதார்த்தங்கட்கும், அல்லதுசிலபதார்த்தங்கட்கும் சமத்தன்மையைக்
கூறியதனால், சிவம் இரண்டாவதற்றதெனக்கொள்ள இடமின்றிவ
லிந்துபொருள்கொண்டு அத்வைதஹானியைச்சம்பாத்தியம்செய்து
கொண்டன. இம்மதமோவெனின்! சிவத்தைத்தவிர மற்றப்பதார்த்
தங்கள் எல்லாம் அசிவமாதலின், எவ்விதத்திலும் சிவத்தோடு சமா
னத்தன்மையைக்காட்டாமல், ஆனால் அஞ்ஞானதசையில் அனுப
விக்கக்கூடியஇந்த நாமரூபப்பிரபஞ்சமும் அதன்காரணமானமாயை
யும் தோற்றுதன்மாத்திரமெனவும், அதனால் நித்தியமன்றெனவும்,
அநிர்வசனீயக்கியாதிநிரூபணவாயிலாய் அத்தியாசமெனவும், அனாத்
மாக்களாகிய பிறபதார்த்தங்களில் அனாதரவு புத்தியைவரவழைத்து,
சிவம் ஒன்றற்கேயோக்கியதையைக்கூறி அதுமாத்திரமாக மிஞ்சுதல்
வடிவ அத்வைதரூபபரமபுருஷார்த்தத்தை இலகுவாய் அடைவிக்
கின்றது. இதுவே அத்தியாசப்பிரசங்கத்தாலுண்டாயபலனும். இது
வுமன்றி மற்றோர் விசேஷத்தாலும் புறமதங்களினும் மிகுயோக்கிய
தையோடுகூடியதாயிருக்கின்றது.

வினா—அவ்விசேஷம் யாது?

விடை-முற்கூறிய அத்தியாசப்பிரசங்கமானது காரண, காரியவடிவப்
பிரபஞ்சத்தைப்பற்றியது. பிரபஞ்சாதீதமாய சிவத்தைப்பற்றிக்கூறு
மிடத்து, புறமதங்களெல்லாம் சிவமானது மாயைக்கு அப்பாற்பட்ட
தெனக்கூறினும், மாயையின்பிரவேசத்துடனேயே சிவத்தைவிசிட்
டவடிவமாய்த்தரிசிப்பித்து, மாயையினின்றும் முமுக்ஷுக்களை நீக்க
மார்க்கமில்லாமல் சிரமப்படுகின்றன. இம்மதமோ! சிவமானது மா
யைக்கு, அப்பாற்பட்டதென்பதையுங்கூறி, அதை, உபாதிப்பிரசங்
கத்தாலும், சாமான்யசேதனத்தைநிலைநிறுத்தும் பிரசங்கத்தாலும்
தரிசிப்பித்து; முமுக்ஷுக்களை அத்வைதப்பிரஹ்மத்தில் நிலைநிறுத்து
தல்வாயிலாகப்பரமசாந்தியைக்கொடுக்கின்றது.இவ்விதஉபாயங்களை
வடமொழியிற் பாஷ்யாதிகளிற் பரக்கக்காணலாமாயினும், தமிழில்

அறியவிருப்புள்ளார் ஸ்ரீ விருத்திப்பிரபாகரமுதலான பெரும் நூல்க
ளிற்கண்டுகொள்க. இவ்விதபரமோபாயங்கள் வேறு எம்மதங்களி
லுங்கிடையாது. மற்றமதங்களினும் விலக்ஷணத்தன்மையை இம்ம
தத்திற்குக்கூறும் விசேஷங்களில் இதுவே சிரோரத்தினமாம்.
வினா—இதுவரைகேட்ட அத்தியாசப்பிரசங்கத்தால் சிவம் ஒன்றே
யுளது எனவும், மற்றவைகள் பரமார்த்தமாயில்லையெனவும் உணர்ந்
தேன். ஆயின், சிப்பியின்கண் வெள்ளியினத்தியாசம் ஓர்புருஷனுக்
குண்டாகி, நிவர்த்தியாமாறுபோல், பந்தம் (அத்தியாசம்) யாருக்கு?
அதன் நிவிர்த்தி யாருக்கு?
விடை—வேதாந்த சித்தாந்தத்தில், முற்கூறப்பட்டுள்ள சத்தாப்பிர
சங்காநுசாரமாய், பாரமார்த்திகமாய பிரஹ்மம் ஒன்றும்; வியாவகா
ரிக அல்லது பிராதிபாஸிகவடிவாயும் அத்தியாசமாயுமுள்ள ஜீவன்,
ஈசுவரன், அவித்தைமுதலாயபதார்த்தங்களுமுள (இதுவும் முற்கூறப்
பட்டிருக்கிறது). இதில் அனுதியாய ஜீவனுக்கு, அனுதியாய சுத்தப்
பிரஹ்மத்தினிடத்து, பின் பின் அத்தியாசங்கட்கு, முன் முன் அத்
தியாசஉாயிலாய், தன்னோடு சகல பிரசஞ்சத்தின்அத்தியாசமும், அத
ஞற் சனனமரணாதி துக்கங்களும் வந்தன. பின்சாதனுந்தரங்களால்
குருவையடைந்து விசாரணையைச்செய்ய, ஏனையவஸ்துக்கள் எல்
லாம் மித்தையெனவும், தான்பிரஹ்மமெனவும் அதுமாத்திரமாய்
நிலைத்து அத்தியாசநிவிர்த்தியையும் அடைகிறான். இதுமுற்கூறிய
அவஸ்தாப்பிரசங்கத்தாலும் வெளியாம்.
வினா-இதுவரைகூறிவந்த பிரசங்கங்களால், பிரஹ்மம் ஒன்றே உண்
மையெனவும் ஏனையபதார்த்தங்களெல்லாம் மித்தையெனவும் சித்
தாந்தத்திலங்கிகரிக்கப்பட்டிருந்தபோதிலும், பிரஹ்மத்திற்கு அன்
னியமாய ஜீவேசுவரர்முதல சகலபதார்த்தங்களில் சில சொரூபமா
யும், சிலபிரவாகவடிவாயும் அனுதியென்றும்; அதில் எச்சீவன் தனது
அஞ்ஞான அம்சத்தினைக்குருமுன்னிலையாகநிவர்த்திசெய்துகொண்
டானே, அவனுக்கு ஜீவேசுவர ஜகத்பாவம் நசித்ததென்றும்; அவ
னைத்தவிர மற்றைச்சீவருக்கெல்லாம், சச்சிதானந்தவடிவப்பிரஹ்மமி



ருக்கும்வரை அசத்து ஜட, துக்கவடிவபிரபஞ்சமும் உள்ளபடியே
நிலைத்திருக்கக்கூடியதென்றும்; எனக்குத் தோன்றுவதால், ஜீவர்கள்
எண்ணிறந்தனவாய் விளங்கலின், பிரபஞ்சத்தின் அத்தியந்தநாசம்
எப்படியுண்டாய்விடும்! பந்தமும் எப்படியொழியும்! இவ்விதயோக்
கியதையோடுகூடியிருக்கும்பந்தமான துநித்தியம் என்பதாக, மற்றை
யமதஸ்தர்களின்கூற்றுப்படி இவ்வேதாந்தமும் என்கூறக்கூடாது?
விடை—பிரஹ்மமிருக்கும்வரை பிரபஞ்சமுமிருக்கும் என்பதில் நிய
மயுக்தி ஒன்றுமில்லை. எப்படியெனில் புகையிருக்குமிடங்களிலெல்
லாம் அக்கினியிருந்தீரும்; ஏனெனில் புகைக்குப்பற்றுக்கோடு அக்
கினியாதலின் என்க. அதுபோல்நெருப்பிருக்குமிடங்களிலெல்லாம்
புகையுமிருக்கும் என்றநியமமில்லை; ஏனெனில் நெருப்புக்குப் பற்
றுக்கோடு புகையின்றாதலின் என்க. இது பழுக்கக்காய்ச்சிய இரும்
புத்துண்டில் நெருப்பிருக்கப் புகையில்லையென்பதால் பிரசித்தியை
அடைகிறது. ஆதலாற் கூறியயுக்திபொருந்தாது. அல்லாமலும்;
உன்னால் நித்திரையின்கண் அநுபவிக்கக்கூடிய சொப்பனப்
பிரபஞ்சத்தில் எத்தனையோ ஜீவர்களும், அவரவர்களுக்குரியபோக்
கியவடிவப்பிரபஞ்சமும், குறிப்பிட்ட ஓர் அற்ப காலத்தும் (இன்ன
வருஷம், மாசம், தெய்தி, கிழமை, இரவு, மணி, சிலநிமிஷத்திற்குள்
என), ஹிதை என்னும் நாடியில் அற்ப தேசத்தும், எவரும் ஆச்
சரியப்படக்கூடியநிலைமையில் கூறிய இப்பிரபஞ்சசமானமாய், அநு
தித்தன்மை, ஞானம் அஞ்ஞானம், கர்ம பக்தி ஞானம், சொர்க்கம்
நரகம், மோக்ஷம் மோக்ஷசாதனங்கள் மோக்ஷ அடைவு, முதல சர்வ
வியவகாரங்களும் தோற்றினும், அவ்விததோற்றத்தை முன்னிட்டு
அச்சொப்பன அவஸ்தையின் கண்ணேயேயுள்ள ஓர் ஜீவனுனவன்,
சொப்பனத்தையும் அதன் விஷயங்களையும் சத்தியமெனச்சொல்லு
வானாயின், நித்திரைமயக்கத்தோடிருக்கும் அச்சீவனுக்கு, விழித்துக்
கொண்டிருக்கும் மற்றோர் புருஷன், சமாதானஞ்சொல்லவாவது,
சமாதானத்தை அடைவிக்கவாவது எப்படிமுடியாதோ; ஆனால்
அச்சீவன்தானே சாக்கிரத்தை (விழிப்பை)யடையின் அவன்தானே

யுணர்ந்து, தன்னிலேயேசமாதானமும் அடையுமாறுபோல; அனாதி அஞ்ஞானமாகிய நித்திரையால் மயக்கமுற்ற உனக்கு, இதற்குமுன் வேண்டியசமாதானங்களை ஆங்காங்குச்சொல்லியும் சமாதானமடையமார்க்கமில்லாமல் இவ்வித விகற்பவடிவ சங்கை உனக்குண்டாயின. உன்னுடையசாதனங்களின்குறைவால்உனக்குத்தெளிவானஞானம் உண்டாகாமையின் மீண்டும் நாம் எவ்வளவுபோதிப்பினும் நீ சமாதானமடையமுடியாது; ஆதலால் குரு சந்நிதியில் விசுவாசத்துடன் பணிவிடையாதிகளை இயற்றி, அவனருளால் ஞானமென்னும்விழிப்பையடைகுவையேல் அப்போது தானேவிளங்கும். எப்படியெனில் இதுவரைபிரஸ்தாபித்தபடி, சொப்பனம்கண்டவன் எப்படி எதார்த்தமோ அதுபோல்; என்றுமோரியல்பினதாகியபிரஹ்மம் ஒன்றுமே எதார்த்தமாம்; சொப்பனம்கண்டவனைத்தவிர மற்றவையாவும் மறுகணத்திலில்லாததால் எப்படிமித்தையோ அதுபோல், ஜாக்கிரப்பிரபஞ்சமுதலானவைகளில் எவ்வளவுயோக்கியதைகள் உன்னாலனுபவிக்கப்படினும், ஞானமென்னும் ஜாக்கிரத்தில் அவையெல்லாவற்றையும் என்றுமில்லாததாய அசத்துவடிவாக வித்துவான்களால் அனுபவிக்கப்படலின் சர்வம் மித்தையே. இவ்விதம் அனுபவிப்பாயாக. ஆகவின் உண்மையைவிளக்குதல்வாயிலாக ஜீவர்களுக்குப் பரமசுகத்தைக்கொடுக்க உத்தேசித்து, மற்றையர் கூற்றுப்படிச்சாதனசாத்தியங்களில் சத்தியபுத்தியுடன் அப்பியாசஞ்செய்யப்பக்குவாந்தரம் பரமமோக்ஷத்தை அடைவிக்கவெண்ணி, வேதாந்தமானது கருணையுடன் இவ்விதம் போதித்தது. அதனாற்றான் அதற்கு உத்தமப்பிரமாமாணமாந்தன்மையும் கிடைத்ததென்றுணர்க.

வினா—கூறியமுறையில்பிரஹ்மந்தவிரமற்றப்பதார்த்தங்களெல்லாம் சத்தியமல்லவெனில், மித்தியாவடிவ ஈசுவரன், குரு, வேதம், சாதனங்கள் இவைகளைமுன்னிட்டு அடைந்தமுக்தியும் மித்தையாகத்தானேயிருக்கவேண்டும்! இவ்விதமித்தியாரூபமுக்தியின் பொருட்டு இவ்வளவு சிரமசாத்தியமேன்?

விடை-முக்தியென்பது என்றுமில்லாததாய சர்வதுக்கங்களினின்று



விடுபடுவதும், என்றும் பிராப்தமாய் அடைந்திருப்பதாய ஆனந்தத்தை அடைவதுமாம். இவ்வடிவாயுள்ளது பிரஹ்மமே. அது நித்தியமாம். அவ்வித நித்தியரூபமாயமோக்ஷவடிவப்பிரஹ்மம் ஜீவனுடைய யதார்த்தவடிவாயிருந்தும், அம்மோக்ஷவடிவப்பிரஹ்மம் அடையப்படாததுபோன்றும், அதனால் ஜனனமரணாதிதுக்கங்கள் அடையப்பட்டனபோன்றும், என்றுமில்லாததை அனுபவிக்க நேர்ந்தன. இவ்வித அனுபவம் பெற்ற சர்வக்கிலேசசகித இச்சீவனானவன் மித்தியாரூபஇத்துக்கநிவர்த்தியின்பொருட்டு அதன் சாதனமாய மித்தியாரூபகுரு, சாஸ்திராதிகளைமுன்னிட்டு அடைந்தமோக்ஷமும் என்றுமுள்ளபடிநித்தியவடிவாகவேநிலைபெற்று, யதார்த்தவடிவையடைந்ததாகின்றது. அத்துக்கம்மித்தியாவடிவாயிருப்பினும் அதன்நிவர்த்தியின் பொருட்டுள்ளசிரமவடிவ அப்பியாசங்களும் அவசியம்வேண்டியதே.

வினா—அப்படியானால் மித்தியாவடிவ சாதனங்களை முன்னிட்டுண்டாய சாத்தியமும் நித்தியமாதல் கூடும் என்பதிலும்; அவற்றின்(துக்கங்களின்) நிவிர்த்தியில் சிரமசாதனங்களும்வேண்டும் என்பதிலும் பிரசித்தி யாது?

விடை-சொப்பனம் மித்தையாயினும் மித்தியாரூபபுலியினால் தாக்கப்பட்ட ஒருவன் யதார்த்தமான சாக்கிரத்தையடைவதுவும்; அந்த மித்தியாரூப துஷ்ட சொப்பனநிவிர்த்தியின் பொருட்டுச்செய்யும் கஜேந்திர மோக்ஷபடனமுதலாய சிரமசாதனங்களும் உலகத்தில் அனுபவிக்கப்படலால் அதுவே பிரசித்தியாம்.

கவி

எந்தவாறெனிற் றானுவைச்சோரனென் றிரச்சுவைப்பணியென்று, மைந்தராயிழையிவர்களைத்தானென் றுவழங்கிடுமலந்தொட்டிங், கிந்தநாள்வரைதானெனவியம்பிடாதியனுதருள்போலாம், பந்தநீக்கவ!வாதலாற்பண்டையஞ்ஞானகாத்துவமேழும். (௬௬)

(இ-ள்) (எப்படியிருக்கிறதென்றால்) கட்டையைக் கள்வனென்றாற்போலும், பழுதையைப் பாம்பென்றாற்போலும், புத்திரதாராதிக

ளைத் தானென்றூற்போலும் மயக்கமே. [உண்மையல்ல](அஞ்ஞான மாகிய பந்தத்தை நீக்கிக்கொண்டவனே!) ஆகையினல் (அனுதி) அஞ்ஞானகாலந்தொடங்கி (இதுவரை) தானல்லவென்று காணப் பட்ட தத்துவங்கள், 7.

வினு—இச்செய்யுளின் முற்பாதியின் கருத்தியாது?

விடை—28 தத்துவங்களையும் தானென்பதானது மயக்கமல்லாமல் உண்மையல்லவெனக்கூறியதாம்.

கவி

ஞானம்வந்தபின் ருனெனக்கருதிடா நலமிறத்துவநாலே
ழானமுப்பதினைந்துதத்துவங்களுமறைகுணங் குறிகொண்டு
தானறிந்திடுமறிவு காண்பவன்கடந்தனக்குத்தான்வேருதன்
மானவேறென்றுமம்முப்பாறுறதாவயங்குதத்துவந்தானே. (கூஎ)

(இ-ள்) [இப்போது] இப்படிக்கொத்த விவேகம்பண்ணினபிற்பாடு தானல்லவென்றுகாணப்பட்ட (நன்மையில்லனவாய) தத்துவங்கள் 28, ஆக இந்த 35தத்துவங்களையும் அததற்குச்சொன்ன குணம், குறி களுடனே கூடக்காண்கின்ற அறிவானது கடத்தைப்பார்க்கின்ற வன் கடத்திற்குப்புறம்பாகவேயிருந்து கடத்தைப்பார்க்கின்றது போல, அவைகட்கன்னியமாகவேயிருந்து அவைகளையறிகிறதென் றும் முப்பத்தாருந்தத்துவமாகியவதுவே,

வினு-பூர்வசெய்யுளின்பிற்பாதியுடன்கூடிய இச்செய்யுளின் கருத்தி யாது?

விடை--அஞ்ஞானகாலந்தொட்டு நாளிதுவரை தனக்கன்னியமாகக் காணப்பட்ட தத்துவங்கள் 7; ஞானமுண்டாயபின் தனக்கன்னிய மென்று காணப்பட்ட தத்துவங்கள் 28; ஆக 35 யும், முப்பத்தியா ருந்தத்துவமானது அவ்வவைகளுடைய குணங்குறிசகிதம் அறிந்து விளங்கிக்கொண்டிருக்கிறதென்பதாம்.

வினுவிடைகள் 87.

மொத்த வினுவிடைகள் 1223.

ஸ்ரீ சுந்தரவிறைவன் வாழ்க.



உ

ஸ்ரீ சுந்தரநாதன் துணை

23. தத்துவமஸி மகாவாக்கிய உபதேசமும், அதன் பலனுன ஞானமுமிவையெனல்.

எங்குமாயொளிர் பரசிவமென்றுமப்பரசிவந்தானென்றுஞ்,
செங்கையாமலகம்மெனமனத்திடைத் திடமதாய்த்தெளிந்
தோனே, துங்கமாஞ்சிவதரிசனமுடையனுந்துகளில்சீவன்
முத்தன், சங்கையன்றிதிற்சத்தியமெனவருமறைகள்சாற்றி
டுந்தானே. (கூஅ)

(இ-ள்) (எல்லாவற்றிலுமாய்ப்பிரகாசிக்கும்) பரமசிவமென்றும், அது வேதானென்றும் (செம்மையாகியகையினுள்ளிடத்துள்ள நெல்லிக்க னிக்குச்சமானமாக மனதினிடத்து) கலக்கமறத்தெளிந்தவனே (பரி சுத்தமாய) சிவதரிசனமுடைய (குற்றமில்லாத)சீவன்முத்தனென்று (அருமறைகளாற்) சொல்லப்படுவன். (இதிற்சந்தேகமில்லை சத்தியம்) [என்றுத்தரம்]

வினு—தத்துவமஸி மகாவாக்கியத்தை இந்நாநாசீவவாதக்கட்டளை எப்படியுபதேசிக்கின்றது?

விடை-'அதுதானென்று' என்றவாக்கியரூபமாய் உபதேசிக்கின்றது.

வினு—ஆயின், அது என்றபதம் எதை அறிவிக்கிறது?

விடை—ஜகசிருஷ்டியாதிதொழிலுக்கு ஆதாரமாய மாயையோடு கூடிய பிரஹ்மமாகிய ஈசுவரனையறிவிக்கின்றது.

வினு—தான் என்றபதம் எதை அறிவிக்கின்றது?

விடை—பந்தத்தையுடையவனும், மோக்ஷ விருப்புடையவனுமுள்ள, அதிகாரியாகிய அஞ்ஞானத்தோடுகூடிய ஆத்மாவாகிய ஜீவனை அறிவிக்கின்றது.

வினு—என்ஜீவனை அர்த்தஞ்செய்யவேண்டும்?

விடை—தனி ஆத்மாவோ சுத்தசிவவடிவாதலின் அதற்கு உபதேசந் தேவையில்லை. பந்தமுடையவன் ஜீவனுதலின் பந்தநிவர்த்தியின் பொருட்டு அவனுக்கு உபதேசம்வேண்டியிருத்தலின் ஜீவனையே அர்த் தஞ்செய்யவேண்டும்.

வினா—என்று என்றபதம் எதைஅறிவிக்கிறது?

விடை—ஜீவனானவன் தன்னை ஈசுவரவடிவாக அறியும்படி அறிவிக்கிறது.

வினா—ஆனால் ஜீவனானவன் ஈசுவரவடிவாயிருந்தாலல்லவோ அவ்விதமறிதல் கூடும், அதுநன்ஞானமுமாகும், அப்படியேயிருக்கிறானா?

விடை—ஜீவன் ஈசுவரனாகவே இல்லை. இருவரும் அநேகபேதத்தோடுகூடியவராயிருக்கின்றார்கள்.

வினா—அப்பேதங்களாவது யாது?

விடை— (1) ஜீவன், ஈசுவரன் என்ற நாமங்களாலும்;

(2) ஜீவன் பிண்டத்திருப்பவன், ஈசுவரன் அண்டமெங்குமிருப்பவன் என்னுந்தன்மையால் ஸ்தானங்களாலும்;

(3) ஜீவன் அவித்தையென்னும் காரிய உபாதியையுடையவன், ஈசுவரன் மாயையென்னும் காரணஉபாதியையுடையவன் என்னும் தன்மையால் உபாதியாலும்;

(4) ஜீவன் வியட்டிசரீரத்தையுடையவன், ஈசுவரன் சமட்டி சரீரத்தையுடையவன் என்னும்தன்மையால் உடலாலும்;

(5) ஜீவன்மறைப்புடைமையால் அற்ப அறிவும், ஈசுவரன் மறைப்பில்லாமையால் எல்லாவற்றையும் ஒருங்கேயறியும் அறிவுடைமையால் உணர்ச்சியாலும்;

இன்னும் அநேகநியாயங்களாலும், ஞான, அஞ்ஞானகாலமாகிய எக்காலத்தும் வியாவகாரிக பேதமுடையவர்களாகவே இருக்கிறார்கள்.

வினா—இவ்விதம் பரஸ்பர விரோததர்மமுடையவர்களாயிருக்கும் இருவர்களையும், ஒன்றென்றறியும்படி சர்வக்ஞ சுருதியானது விதிக்கலாமா?

விடை—அது, தான் என்னும்பதங்களின் வாக்கிய அர்த்மாகிய ஜீவன், ஈசுவரன்என்னுமிவர்களைஒன்றென்றறியும்படிவிதிக்கவில்லை.

வினா-ஆனால்,கூறியமகாவாக்கியமானது சர்வக்ஞசுருதியின் ஆக்ஞையாயிருத்தலினாலும், முற்கூறியபடி பேதம் அனுபவிக்கப்பட்டு அதனால் விரோதம் ஏற்படுவதினாலும், கூறியவாக்கியத்தின் தாற்பரியமென்ன?



விடை—ஜீவனுடைய எதார்த்தவடிவமும்; ஈசுவரனுடைய எதார்த்தவடிவமும், ஆகிய இருவர்களது முக்கியவடிவமானது என்றும் ஒன்றாகவே இருத்தலின், அவ்வித ஐக்கியத்தை ஒன்றென்றறியும்படி தாற்பரியமாம்.

வினா—ஒன்றாகவேயிருக்கிறதென்பதின் தாற்பரியமென்ன?

விடை—வியாபகமாய் முன்பின்கவனித்துப்பொருள்கொள்க. அதாவது:—பிரஹ்மம், மாயை, மாயையின்கண் ஆபாசம், இம்மூன்றுஞ்சேர்ந்தது ஈசுவரவடிவெனவும்; ஆத்மா, அவித்தை, அவித்தையின்கண்ணுள்ள ஆபாசம், இம்மூன்றுஞ்சேர்ந்தது ஜீவனது வடிவெனவும்; முன்னமேயேநிரூபிக்கப்பட்டிருக்கிறது. இதில்ஈசுவரனுக்கு மாயையையும், ஜீவனுக்கு அவித்தையையும் முன்னிட்டு அவ்விரண்டு பாதியும் கற்பிதமாயிருத்தல்பற்றி அவர்களுக்குக்கற்பிதவடிவமென ஒன்றும்;பிரஹ்மம், ஆத்மா இவ்விருவடிவும் எதார்த்தமாயிருத்தல்பற்றி அதைமுன்னிட்டுஅவ்விருவர்(ஜீவ ஈசுவரர்)களுக்கும்யதார்த்தவடிவென ஒன்றும்; இரண்டிரண்டுவடிவங்களுளவென முற்கூறப்பட்டிருக்கிறது. இவ்விருவடிவங்களில் சர்வஞ்ஞத்வாதி கல்யாணகுணங்கட்குக்காரணமாயமாயையோடுகூடிய ஈசுவரனுடையகற்பிதவடிவத்திற்கும்; அற்பஞ்ஞத்வாதி அற்பகுணங்கட்குக்காரணமாய அவித்தையோடுகூடிய ஜீவனுடையகற்பிதவடிவத்திற்கும், வாஸ்தவவடிவாயுள்ளபிரஹ்மமும், ஆத்மாவும் ஒன்றாயிருத்தலின்; அவ்விருவடிவங்கட்கும் ஐக்கியம்பொருந்துமென்ற இத்தாற்பரியங்கொண்டு ஒன்றாயிருக்கிறதெனச் சுருதிகூறிற்று.

வினா—அவ்விதமாயினும் ஆத்மா, பிரஹ்மம் எனநாமத்தினாலும், ஜீவனதுயதார்த்தவடிவம், ஈசுவரயதார்த்தவடிவம், எனவடிவத்தாலும், அவித்தையில்விளைபட்டது, மாயையில் விளைபட்டது என உபாதிகளாலும் பேதமுடையனவாயிருக்க எப்படியொன்றும்?

விடை—தனதுவடிவம் இன்னதெனவறியாது அன்னியமான சரீராதிகளில் நானெனனும்புத்தியைச்செய்து ஜனனமரணாதிதுன்பத்திற் சுழலும் அதிகாரிகள், தனதுவடிவம் ஆனந்தமெனவறிந்து துக்கநீங்கு

மாறு, அதிகாரிநோக்கால் ஒருசேதனத்திற்கே மாயை, அவித்தை
என்னும்உபாதிகளைமுன்னிட்டு பிரஹ்மம், ஆத்மாவென இருநாமங்க
ளைக்கற்பனையாக ஒப்புக்கொண்டதேயன்றி, சொரூபத்தில் பேதமில்
லாததாலும், மாயை அவித்தைகளில் வளைபட்டிருந்தபோதிலும்
அம்மாயையும், அவித்தையும் சேதனசொரூபத்தில் பிரவேசியாமல்
உபாதிமாத்திரமாயிருத்தலினாலும், பிரஹ்மமும், ஆத்மாவும் ஞான,
அஞ்ஞானகாலமாகிய எக்காலத்தும் ஒன்றாகவேயிருக்கிறது.
வினா—இதில் அநுகூல திருஷ்டாந்தமியாது?
விடை—ஆகாசமொன்றே கட முதல உபாதிகளை முன்னிட்டுக்
கடாகாசம், மகாகாசமென வியவகரிக்கப்படினும், கடாகாசம் எப்
படிமகாகாசவடிவமாயிருக்கிறதோ, அன்றியும் கடரூபஉபாதிதிருஷ்
டியைவிட்டுத்தரிசிக்கில் உள்ளபடி ஆகாசமாத்திரமே அனுபவிக்கப்
படுவதுபோல; பிரஹ்மம் ஒன்றே சரீரத்திரய உபாதிதிருஷ்டியால்
ஆன்மாவென்னும் நாமத்தால் வியவகரிக்கப்படினும், சரீரத்திரய
உபாதிதிருஷ்டியைவிட்டனுபவிக்கில் பிரஹ்மவடிவாகவேமிஞ்சுதல்
பற்றி பிரஹ்மமே ஆத்மாவாம்.
வினா—அவ்விதம் வளைபட்ட ஆத்மாவிற்குப்பிரஹ்மம் வேறுபட்ட
தென்றாலென்ன?
விடை—ஆன்மாவிற்குப்பிரஹ்மம் வேறாயிருக்குமானால், ஆன்மாவிற்
கன்னியமியாவும் அநாத்மாவாகையால், பிரஹ்மம் அநாத்மாவாகவா
கும். இது எவருக்கும் சம்மதமாகாமையால் ஆன்மாவிற்குப்பிரஹ்மம்
வேறல்ல.
வினா—பிரஹ்மத்திற்கு ஆன்மா வேறுபட்டதென்றாலென்ன?
விடை-பிரஹ்மத்திற்கு ஆன்மாவேறாகுமானால், ஆன்மாவிருந்தவிடத்
தில்பிரஹ்மமில்லையென்றும், பிரஹ்மமிருந்தவிடத்தில் ஆத்மாவில்லை
யென்றும் வியவகாரம்வர, பிரஹ்மம் தேசத்தினாற் கண்டிக்கப்பட்ட
தாய், அவ்வேதாவால் வஸ்துவினாலும் கண்டிக்கப்பட்டதாய்விடும்;
ஆகவேபிரஹ்மத்தின் அகண்ட இலக்கணத்திற்கு லோபம்வருதலின்
அவ்விதமுஞ்சொல்லக்கூடாது.



வினா—வஸ்துவினாலும் கண்டத்துவமெப்படிச்சித்திக்கிறது?
விடை-கண்டமென்றால் வேறுபடுத்துவது. ஆகவேபிரஹ்மம் வேறு
ஆன்மாவேறாயின், ஆன்மவஸ்துவால் பிரஹ்மம் கண்டிக்கப்பட்டதா
கவாகின்றதை யூகித்துணர்க.
வினா—இவ்விதசோதனையிற் கிடைத்த முடிவியாது?
விடை—ஆன்மாவும் பிரஹ்மமும் ஒன்றற்கொன்று வேறாயிருக்குமா
னால், இரண்டும் கண்டமும், அநித்தியமும், சடமும் ஆகும். ஆதலால்
பிரஹ்மமே ஆன்மா, ஆன்மாவேபிரஹ்மம் என்பது முடிபாம்.
வினா—மற்றமதஸ்தர்களெல்லாம், பிரஹ்மம் வேறு ஆன்மா வேறு
யென்று கூறியிருக்க, இங்கே ஆன்மாவும் பிரஹ்மமும் ஒன்றென்றசம்
பிரதாயம் வரக்காரணமென்ன?
விடை—மற்றமதஸ்தர்களிற்சிலர் ஆகமங்களை முக்கியப்பிரமாண
மாய்க்கொள்ளுகின்றனர். அவர்களுக்குச் சுருதியிற்கூறிய தத்துவ
மஸியாதிவாக்கியங்கட்குப்பொருள்கொள்ளத்தேவையில்லை. வேதப்
பிராமாணிகர்களாயுள்ளோர் சிலர், கூறியமகாவாக்கியங்கட்கு வாக்கி
யார்த்தத்திற்பொருள்கொண்டு இடர்ப்படுகின்றனர். இவ்வேதாந்த
மதமோ அப்படிக்கன்றி அவ்வாக்கியங்கட்கு நேரான .யர்த்தசித்தி
செய்யும்பொருட்டு, சரீரத்திரயங்களில் வளைபட்ட பிரஹ்மத்திற்கு
துவம்பதலக்ஷியார்த்தம் கூறவேண்டி, பிரஹ்மபரியாய நாமமாக
ஆன்மாவென்னும் ஓர் தத்துவத்தை வியவகாரத்திலொப்பி, அர்த்த
சித்தியைச்செய்கிறபடியால், பிரஹ்ம அபின்ன ஆன்மாஎன்னும் ஓர்
தத்துவத்தை அங்கீகரிக்கநேரிட்டது.
வினா—ஆயின், இவ்வேதாந்தமதம் இவ்விடத்தில் புறமதங்களோடு
சமரஸபாவத்தையும், அதீதபாவத்தையும் எப்படியடைகிறது?
விடை—வைதீக, தாந்திரீகமாய புறமதங்களிற்கூறிய ஆன்ம இலக்க
ணமும், பிரஹ்ம இலக்கணமும் வேதாந்தத்திற்கூறிய ஜீவ இலக்க
ணத்துடனும், ஈசுவர இலக்கணத்துடனும்; ஜீவேசுவர ஐக்கியத்தில்
ஜீவனும் ஈசுவரனும் சமமாகார் என்பதிலும்; ஒற்றுமைப்பட்டு நிற்ப
தால், வேதாந்தத்திற்குப்புறமதங்களோடு அதுவரை சமரஸபாவம்

பொருந்துகிறது. அந்தஜீவேசுவரர்களை பின் சோதித்துச்சுத்தம் பண்ணி 'தத்துவமஸி' யாதிமகாவாக்கியங்கட்கு ஆன்ம, பிரஹ்ம ஐக்கியமாய அர்த்தவிர்த்தியைச் செய்யுங்கால் இவ்வேதாந்தமதம் அப்பாற்பட்டு நிற்றலின் அதீதபாவத்தையும் அடைந்திருக்குமாறறிக. கூறியவாற்றால் வேதாந்தமதம் ஏனையமதங்களைத்தழுவி, மேலோங்கி நிற்பதையும்; ஏனையமதங்கள் வேதாந்தமதத்தின் கீழ்நிற்றலையும் இவ்விடத்தும் ஊகித்துணர்வாயாக.

வினா—இவ்வித அர்த்தத்தோடு கூடிய இம்மகாவாக்கியமானது எப்படிப்பிரயோஜனத்தைஉண்டுபண்ணுகிறது?

விடை—தத், துவம்பதங்களின் அர்த்தஞானத்தையுடையவனும் சாதனசகித சூக்ஷ்மவிருத்தியோடுகூடியவனுமாய அதிகாரியினிடத்துக்குருவாயிலாய் சுரோத்திரசம்பந்தத்தையடைந்ததும், ஞானமாகிய பிரயோஜனத்தையுண்டுபண்ணுகிறது.

வினா-அதிகாரிக்கு முற்கூறப்பட்டுள்ளசாதனவலிமை இருப்பினும், வாக்கியமானது எப்படிப்பிரத்தியக்ஷ ஞானத்தை யுண்டுபண்ணும்?

விடை—எப்பதார்த்த ஞானத்திற்கு எதுவானபதங்களமைந்த வாக்கியமானது, எச்சுரோத்திரசம்பந்தத்தை அடைகிறதோ, அச்சுரோத்திரசம்பந்தியான ஜீவனுக்கு, அப்பதார்த்தத்தின் பிரத்தியக்ஷ ஞானமே உண்டாகிறதென்பது நியமம். கண்டோ! அத்தியந்த சமீபமாயும், மறைவில்லாததாயும், கேட்பவனுடையசொரூபமாயுமிருக்கும் பிரஹ்மசொரூபத்தை அறிவிக்கும்பதங்களமைந்த மகாவாக்கியமானது, அதிகாரிகட்கு அபரோக்ஷ ஞானத்தையே உண்டுபண்ணும். ஆனால் அதிகாரிதடைகளை உடையவனாயிருப்பின் அவனுக்குமட்டும் அதிட அபரோக்ஷ ஞானத்தையுண்டாக்குமென்றறிவாயாக.

வினா—அந்த அபரோக்ஷ பிரஹ்மஞானம் எவ்வடிவினது?

விடை—முற்கூறிய அர்த்தத்தைச் சிரவணாதிசாதனங்களுடன்விசாரிக்க, பிரஹ்ம ஆத்மாக்களது என்றுமுள்ளதான ஐக்கியத்தில் அவ்வடிவாய்நிலைத்து, ஊமைகண்ட கனவு ஒக்க, விமர்சினிவிருத்தியினளவாய் அனுபவிக்கும் ஓர் அனுபவவடிவாயுள்ளது.



வினா—ஆத்மா, பிரஹ்மத்தில் ஐக்கியமடைதல் அல்லவோ ஞானமா
யிருக்கவேண்டும்; பிரஹ்ம ஆத்மாக்களதுவடிவாய் ஜீவன் நிலைத்தல்
எங்ஙனம்ஞானமாதல்கூடும்?
விடை—ஆத்மாவானது பிரஹ்மத்தினின்றும் பிரிந்த ஓர்தனித்தத்
துவமாயிருப்பின், ஆத்மாவைப்பிரஹ்மத்திற்கொண்டு சேர்த்தல் ஐக்
கியமெனல் பொருந்தும். அவ்விதம் சுபாவமாய்ப்பிரிந்திருக்குமேல்
ஜீவனேல் எப்படிப்பொருத்திவைக்கக்கூடும்! அன்றியும் ஞானம் ஜீவ
சுதந்தரத்திற்குட்பட்டதல்ல; ஆகையால்பிரஹ்ம, ஆத்மாக்களுக்கு
என்றுமுள்ளதானஐக்கியத்தை, சீவன் தற்போத இழப்பைப்பெற்று
சாதனசகித சூக்ஷ்மமனசால் ஒருவாறுசோதித்து அவ்வடிவில் அது
வாகக்கரைந்துநின்று, பின்கரைந்துநின்ற அவன் அதுவானசுபாவத்
தைத்தெரிதல் ஞானமாம் எனப்பெரியோர் கூறுவர்.
வினா—அப்படியானல் ஞானத்தின் கதிதான் யாது?
விடை-உள்ளதானபிரஹ்மத்தை உள்ளதாகவும், இல்லாததாயபிரஹ்
மத்திற்கந்நியமானசகலபதார்த்தங்களையும் இல்லாததெனவும், அறிந்
து சத்தின்வடிவாய் நிலைப்பதுதான் ஞானத்தின் கதியாம்.
வினா—சிவோஹம்பாவனையைக்கூறும் சுருதிகட்கு சீவன் பிரஹ்ம
மாதல்பொருளாயேற்படுவதாலும், அப்படியே கொள்கைகளுமிருந்
துகொண்டிருப்பதாலும், சீவன் பிரஹ்மமாதலே ஞானமாதல் என்
கூடா?
விடை-பிரஹ்மம் சீவனாகவந்திருந்தாலல்லவோ சீவன் பிரஹ்மமா
கப்போதல்கூடும். அப்படியோயில்லை. அன்றியும் சர்வக்ஞ ஈசுவரனு
லேயே ஒருசீவனைச்சிருஷ்டிக்கமுடியாதெனின், அற்பக்ஞசீவமுயற்
சியால் ஜீவன் பிரஹ்மமாதல் யெங்ஙன்கூடும்! ஆதலால் ஒன்றுமற்
றென்றாதலாவது, அடங்கிநிற்றலாவது, ஐக்கியமாதலாவது, இன்
னும் இவைபோன்றவைகளாவது ஞானமல்ல. ஆனல் அதுவாய்
மேவிஉள்ளதையுள்ளதாகவும், இல்லாததை இல்லாததாகவும் திட
மாய்த்தடைகளின்றி நேராயறிந்து நிற்றலே ஞானமாம்.
வினா—இவ்விதஞானத்தை குருசந்நிதிப்பட்டுவிசாரிக்கும் அதிகாரி
எவ்வளவுகாலத்தில் தெளிவான ஞானத்தை அடைவன்?

விடை-அதிகாரி சாதனசகித உத்தமனுகவாவது, அல்லது தத்துவம் பதார்த்தசோதனைகளைச்செய்து பத, பதார்த்த ஞானங்களோடு கூடியவனுகவாவதிருப்பின் குருசந்நிதியில் விசாரிக்குங்காலத்திலே யே க்ஷணிகநிர்விகற்பசமாதிவாயிலாக ஜீவப்பிரஹ்ம ஐக்கியமாய இந்தஞானத்தைஎளிதிலடைவன். சற்றுத்தாழ்ந்த அதிகாரியாயின் அதிகாரிக்குத்தக்கதாக காலாந்தரத்தில் மனன, நிதித்தியாசனவாயிலாகச்சமாதிகூடி கலக்கமற்ற சாக்ஷாத்கார ஞானத்தையடைவன்.

விறு—நல்லது, ஞானத்தின் காரியம் யாது?

விடை—நஷ்டமடைந்த அகங்காரக்கிரந்தியானது மீண்டுண்டாகாதிருத்தலாம்.

விறு-அகங்காரவடிவப்பிரபஞ்சத்தின்தோற்றமிருக்கும்வரைஅதோடு ஒற்றுமைவடிவ அகங்காரக்கிரந்தி எப்படியில்லாதிருக்கக்கூடும்?

விடை—ஆத்ம, அகங்காரங்களை வேறுபிரித்தறிந்து, ஆத்மாவேதானென்று சாக்ஷாத்காரமடைந்தோனிடம் அகங்காரவடிவகாரியஜாலங்கள் வியவகாரத்தில் எவ்வளவு இருப்பதுபோற்றோற்றினும். அவ்வளவும் ஆத்மாவாய தன்னிடத்து எற்றியனுபவிக்கப்பெறுமையின், தக்தபட(வெந்துபோன துணி)நியாயம்போல் தோற்றன் மாத்திரமாயிருக்குமேயல்லாது; யாதொரு ஹானியையும் செய்யத்தக்கதல்ல. ஆதலால் அகங்காரக்கிரந்தி இல்லையெனப்பட்டது.

விறு—அப்படியாயின் இந்தஞானத்திற்கு அவதி (வரம்பு) யாது?

விடை—அஞ்ஞானகாலத்துத் தேகமேநான் என்று நின்றுற்போல, பிரஹ்மமேநான் என்றதிடமாம்.

விறு—இதின் (ஞானத்தின்) பலமியாது?

விடை—துக்கநீக்க, இன்ப அடைவுவடிவ மோக்ஷமாம்

விறு—கலக்கம் ஆவது யாது?

விடை—தடைகள் எனப்படும்.

விறு—இத்தடைகள் எத்தனைவிதம்?

விடை-ஞானமடைதலிற்றடையெனவும்; ஞானமடைந்தபின் ஞானுனுபூதியிற்றடையெனவும் இருவகைப்படும்.



விறு—ஞானமடைதலிற்றடையாயுள்ளவை யாவை?

விடை—பூதப்பிரதிபந்தம், வர்த்தமானப்பிரதிபந்தம்,பௌதிகப்பிரதிபந்தம் எனமூவகைப்படும்.

விறு—பூதப்பிரதிபந்தமாவது யாது?

விடை—குருவையடைந்து சிரவணுதிகளைச்செய்யுங்கால், கடந்துபோனவிஷயங்களில் மனோராஜ்ஜியமுற்று சிரவணத்தில் ஓர்முகப்படாதிருத்தலாம்.

விறு—இதையெப்படி நீக்குவது?

விடை—அவனவன் புத்தியையனுசரித்துப்போதிக்கத்தீரும்.

விறு—வர்த்தமானப் பிரதிபந்தமாவது யாது?

விடை— (1) விஷயங்களிலாசையும் (2) மந்தப்பிரக்ஞையும் (3) குர்யுக்தியும் (4) மாருனபாவனையும் என நான்காம்.

விறு—இவற்றையெப்படி நீக்குவது?

விடை—முறையே (1) சாதனசதுஷ்டயத்தாலும், (2) பலகாலுஞ் செய்யுஞ் சிரவணத்தாலும், (3) மனனத்தாலும், (4) நிதித்தியாசன வடிவ சமாதியாலும் நிவர்த்திக்கவேண்டும்.

விறு—பௌதிகப்பிரதிபந்தமாவது யாது?

விடை-நமக்கு இன்னும் இரண்டொருஜென்மம் வந்தாற்றான் ஞானமுண்டாகும், என வருங்காலநோக்கால் சிரவணத்தில் ஓர்முகப்படாதிருத்தலாம்.

விறு—இது எப்படித்தீரும்?

விடை—இது ஜனனமெடுத்தே தீரும்.

விறு—ஞானுனுபூதியிற்றடையாயுள்ளவை யாவை?

விடை—மகாவாக்கிய உபதேசத்தின்பின்னர், உண்டாயஞானத்தை அதிடமாக்குதலிற்சாதகமாய அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம் என மூன்றும்.

விறு—அஞ்ஞானமாவது யாது?

விடை—சிவோஹம் (நான் சிவம் என்னும்) பாவனையைமறைத்து நான் பிரஹ்மமல்ல என்னும்நினைப்பை ஊட்டுவதாம்.

வினா—சந்தேகமாவது யாது?

விடை—நான் பிரஹ்மமோ? அலனோ? எனக்கலங்குவதாம்.

வினா—விபரீதமாவது யாது?

விடை—ஜகத்சத்தியம், நான் தேகமே என்றுண்டாம் மாறான நிச்சயமாம்.

வினா—இவற்றை எப்படி நீக்குவது?

விடை-முறையே (1) தத், துவம் பதார்த்த சோதனைவடிவ சிந்தனையினாலும் (2) மனனவடிவ யுக்தியினாலும் (3) சித்தநிரோதவடிவசமாதியினாலும், பிரஹ்மாகாரமாய் நிலைத்து நீக்கவேண்டியது.

வினா—இவற்றைத்தவிர வேறுதடைகளுமுளவோ?

விடை—உண்டு. அதாவது:— ஞானமடைதவிற்றடையாயுள்ள,

(1) லயம்=ஆலஸியம், சோம்பல், நித்திரை, இவைகளினால் விருத்தியில்லாமலிருப்பதாம். இதைச்சாவதானமாய் விருத்தியை எழுப்புதல்வாயிலாக நீக்கவேண்டும்.

(2) விக்ஷேபம்=பிரஹ்மதெரிசனத்திற்கு அடுத்து நின்றும் விருத்தி பகிர்முகமடைதலாம். இதை விஷயத்தில் தோஷதிருஷ்டியைச் செய்தல்வாயிலாக நீக்கவேண்டும்.

(3) கஷாயம்=உற்பூத(வெளிப்பட்ட) இராகாதிகளின் சமஸ்கார (வாசனை)வடிவமாம். இதையும் தோஷதிருஷ்டியைச்செய்தே விலக்கவேண்டும்.

(4) ரஸாஸ்வாதம்=விக்ஷேப நீக்கத்தினாலுண்டான துக்கநிவர்த்தியைமுன்னிட்டுதிக்கும் ஆனந்தவிருத்தியாம். யுக்தியால்இவ்விருத்தியையும் நீக்கவேண்டும்.

இவ்விதம் பிரசங்கானுசாரமாய் எழுதப்பட்டது. இத்தடைகள் மிகுதியும் ஹடயோகபூர்வக அஷ்டாங்கயோக அப்பியாசத்தில் சம்பவிக்கக்கூடியவைகளாம் என்றறிவாயாக.

வினாவிடைகள் 44. மொத்த வினாவிடைகள் 1267.

ஸ்ரீ சுந்தரநாதன் வாழ்க.



உ

ஸ்ரீ சுந்தரக்கழல் துணை

24. பந்தத்தையுடைய அவிவேகியின் இலக்கணமும், கர்மம் வந்த வகையும், அதின் பலனுங் கூறல்.

இந்தவாறந்தப்பிரமமேதானென்றுமிதரமாமுப்பானே
டைந்துதத்துவமுந்தனக்கன்னியமாகவுமறியாதார்
புந்தியென்னவாகங்காரக்கிரந்தியாற்புத்திரதாராதி
வெந்துநோவதைத்தனக்குற்றநோவெனவிளம்பிடுமடம்
போல. (௯௯)

(இ-ள்) இப்படிப்பிரஹ்மமே தானென்றும், மற்றை 35 தத்துவங்களும் தனக்கன்னியமென்றும் பிரித்தறியாத அவிவேகிகள் (அவர் புத்தியென்ன!) அகங்காரக்கிரந்தியினாலே புத்திரதாராதிகள்தபிக்கின்றதை நாம் தபிக்கின்றோம் என்கின்ற மூடத்தனம்போல; (இதனுரைவெளி)

கவி

முன்னமுரை யிருபத்தெண்டத்துவங்கண் முயன்றுசெயுந்
தொழிலெலாந்தனதாய்முன்னி, யின்னலுறமயங்குகின்றப
டியாலென்றுமிவைகளாலீட்டுமிருவினைகளாலும், பின்னலு
றக்கட்டுண்டக்கருமவாற்றாற் பிறப்பிறப்பாம்பெருங்கடலிற்
பிறழுகின்றே, னென்னமயங்குவனந்தோவிந்தமையலிரித்த
வவனிருக்குமியல்பியம்பக்கேளாய். (௱)

(இ-ள்) (முன்மொழிந்த)இந்த இருபத்தெட்டுத்தத்துவங்கள் (தமது முயற்சியினாற்)செய்யுந்தொழில்களெல்லாம் தன் தொழிலென்று (துக்கமடையும்படி நினைத்து) மயங்குகின்றபடியால் (எக்காலத்தும்) இந்த இருபத்தெட்டினாலுஞ்சம்பாதிக்கப்பட்ட புண்ணிய, பாபங்களினால் (பின்னலுற=சிக்கி) கட்டுப்பட்டு அந்தக்கர்மத்தின்படியே ஜனனமரணதிசம்சாரத்தி (மகாசமுத்திரத்தி)லே அடிபடுகிறேனென்று மயங்குவன்(ஐயோ! இந்தமயக்கத்தை நீக்கிய அவனிருக்குமியல்பையும் சொல்லக்கேட்பாயாக).

வினு—கர்மம் என்ருலென்ன?
விடை-கூறிய 28 தத்துவங்களில் நிகழும் செய்கையெனப்பொருள்.
வினு—கர்மத்தினிலக்கணமியாது?
விடை—கர்த்திருத்துவ (நான் செய்கிறேன்)போக்திருத்துவ (நான் அனுபவிக்கிறேன்)புத்தியுடன்மனம், வாக்கு, காயங்களாற்செய்யப்படுவது கர்மமாம்.
வினு—மனம், வாக்கு, காயங்களால் மட்டுஞ்செய்யப்படுவது கர்மம் எனக்கூறினுற்போதாதோ?
விடை—இங்குக்கர்மமென்பது ஜனனமரணகாரணத்தைக்குறிப்பிடுவதாலும்; சிசுக்கள், விவேகிகள், இவர்களிடத்து மனம், வாக்கு, காயங்களில் கிரியை நிகழ்ந்தும் அது ஜனனமரணகாரணமாக, சாஸ்திரங்களில் அங்கீகரிக்கப்படாததாலும்: கர்த்திருத்துவ, போக்திருத்துவசகித என்று விசேஷிக்கப்பட்டன.
வினு—அவ்வித கர்மங்கள் எத்தனை?
விடை—ஆகாமியம், சஞ்சிதம், பிராரப்தம் என மூன்ரும்.
வினு—இந்தக்கர்மங்கள் எந்தக்கிரமத்தாலுண்டாகின்றன?
விடை—ஒருசெய்கை ஆரம்பிக்கும்போது ஆகாமியமெனவும், பின் பலனுக்குவாராமற்கட்டுப்பட்டிருக்கும்போது அதற்கே சஞ்சிதமெனவும், பின் பல (சுக, துக்க) அனுபவகாலத்தில் அதற்குப்பிராரப்தமெனவும், ஒருகர்மத்திற்குக் காலபேதத்தால் மூன்றுபெயர்கள் வர்தன.
வினு—இந்தக்கர்மங்கள் எப்போதுண்டாயிற்று?
விடை-ஜாக்கிர,சொப்பன அவஸ்தைகளில் பிரதிகணத்திலும் மனம், வாக்கு, காயங்களிடத்து அவைகளின் சலனவடிவாயுண்டாகி களஞ்சியத்திற்ருனியத்தைக்கொட்டுதல்போல மலைமலையாய்க் குவிந்துகொண்டேயிருக்கிறது. கர்மம்செய்யாத கணமே கிடையாது.
வினு—அப்படியானுல், இதை உற்பத்தியில்லாததென்று சிலசாஸ்திரங்களிற்கேட்கப்படுகிறதே, அதில் நியாயமென்ன?
விடை-முற்கூறியவாறு ஜன்ம, ஜன்மங்களாய்ச்செய்யப்பட்டு, மலைக்



குச்சமானமாய்க்குவிந்துகிடக்கும், குப்பலின் ஆரம்பகாலமெப்போதென்று தெரியாததாலும்; அனுதியாம் அந்தக்கரணத்திற்கு, அனுதியாகவே சரீரங்கள் வருவதுவும், போவதுவுமாயிருப்பதுபற்றியும்; அவ்விதகர்மத்தொகுதியை அனுதியென்றுகூறியதேதவிர, கர்மங்களானது உற்பத்தியையும், போகத்தால் அல்லது ஞானத்தால் நாசத்தையும் உடையதாகவேயிருக்கின்றன.
வினு—இம்மூன்றுகர்மங்களும் எதை ஆசிரயித்துக்கொண்டிருக்கொண்டிருக்கின்றன?
விடை—முற்கூறியபுரியட்டகவடிவசரீரத்தில் அந்தக்கரணத்தையே ஆசிரயித்துக்கொண்டிருக்கின்றன.
வினு—ஆன்மாவையாசிரயித்துக் கொண்டிருக்கிறதென்ருலென்ன?
விடை--இச்சித்தாந்தத்தில் ஆன்மாவென்பது சிவபரியாயநாமமாய்க் கொள்ளப்படுவதாலும், யாதொன்றினிடத்துமனம், வாக்கு, காயங்கள் செல்லாதுமீளுமோ, அது ஆத்மாவென்று வேதங்கள்கோஷிக்கிறபடியாலும் ஆன்மாவையாசிரயிக்கவில்லை.
வினு—ஜீவனை ஆசிரயித்துக்கொண்டிருக்கின்றது என்ருலென்ன?
விடை—இங்கு ஜீவனென்பது புறமதங்களிற் கூறப்படும் ஆன்மசமானமாம். அவ்விதஜீவனுடையயதார்த்தவடிவம் நிர்விகாரமாயிருப்பதாலும், ஜீவன்தனித்திருக்கும் சுழுத்தியவஸ்தையில் கர்மங்களாவது, அதன்பலனுவது, காணப்படாதபடியாலும் ஜீவனை ஆசிரயித்ததென்னலும் கூடாது.
வினு-ஆயின் அந்தக்கரணத்தை ஆசிரயித்துக்கொண்டிருக்கிறதென்பதில்யுக்தியாது?
விடை—எங்கேயெங்கே அந்தக்கரணமுண்டோ, அங்கேயங்கே கர்மமும் அதின்பலனும் உண்டு, சாக்கிரசொப்பன அனுபவம்போல! எங்கேயெங்கே அந்தக்கரணமில்லையோ, அங்கேயங்கே கர்மமாவது அதின் பலவடிவ சுகதுக்கமாவது இல்லை, சுழுத்தியனுபவம்போல; என உடன்பாட்டு எதிர்மறையுக்திகள் சாதகமாமாறுகாண்க.
வினு—ஆகாமிய கர்மமென்ருலென்ன?

விடை—வருங்காலத்துப்பயனைத் தருவதென்பதாம்.
வினு—ஆகாமிய கர்ம இலக்கணமியாது?
விடை— (1) கர்த்திருத்துவசகிதமாய் (2) தற்காலத்தில் (3) செய்
வதுவும் (4)செய்தமூன்ருவது *கணமுதல் (5)தீவிரமாயிருந்தாற்பல
னுக்குவரக்கூடியதாயுள்ள (6) கர்மம், ஆகாமியமாம்.
வினு—இந்த அறுவகை விசேடணங்களின் கருத்தியாது?
விடை-(1)கர்த்திருத்துவமின்றிச்செய்யப்பட்டகர்மம் ஆகாமியமாகா
என்பதைக்காட்ட,கர்த்திருத்துவசகிதமாய்எனவும்;(2)முந்தியகணம்
வரை செய்தது சஞ்சித, பிராரப்தமாகிவிட்டதால் அக்கருமங்களை
நீக்கற்பொருட்டு,தற்காலத்தில் எனவும்; (3) ஆகாமியத்தின்வடிவம்
செய்தல்வடிவமே என்பதைக்காட்ட,செய்வதுவும் எனவும்; (4)செய்
கிற கணத்தில் ஆகாமியமெனவும், மறுகணத்தில்சஞ்சிதமெனவும்,
பெயர்வருதலின்,மூன்ருவதுகணமுதல் பலனுக்குவரக்கூடியது என்
பதைக்காட்ட, செய்தமூன்ரும் கணத்திலெனவும்; (5) எல்லா ஆகா
மியகர்மங்களும் மூன்ருவது கணத்தில் பலனுக்குவந்துவிடாதென
வும், ஆனுல் அதில் தீவிரகர்மமே பலனுக்குவரும் என்பதையும்
காட்ட, தீவிரமாய் இருந்தாற்பலனுக்குவரக்கூடியது எனவும்; (6)
ஒருகணத்தில் புண்ணிய, பாப, மிசிரமெனமூன்றில் ஒன்றுதான்
மூனைக்குமேயல்லது, அநேககர்மங்கள் முளையாவென்பதைக்காட்
டும்பொருட்டும், ஆகாமியங்கள் அநேகமாய்த்திரண்டிரா, ஆனுல்ஏதா
வது ஒரு கர்மந்தான் ஆகாமியப்பொக்கிஷத்தில் இருந்துவரும் என்
பதைக்காட்டவும்; கர்மம் என ஒருமையிலும்; விசேடிக்கப்பட்டவா
றறிக.

வினு—இந்த ஆகாமியகர்மம் அந்தக்கரணத்தில் விசேஷமாய் எதை
ஆதாரமாய்க்கொண்டுள்ளது?
விடை—அகங்காராதிதர்மங்களை சாக்ஷியானதன்னிடத்துச் சுமத்து

*இங்கு ஓர் கிரியைக்கே உற்பத்திக்கணம், நிலைப்புக்கணம், நஷ்டகணம் என
ஒப்பவேண்டுமாயினும், அம்மூன்று அளவைகளையுஞ்சேர்த்த ஓர் காலஅளவை
யை ஏ கணம் எனக்குறிக்கப்பட்டது.



கிறதான அந்தக்கரணதோஷமாகிய பிரமஜ(மயக்கத்திஞற்சனித்த)
காதாத்மிய (ஒற்றுமைச்)சம்பந்தத்தை ஆதாரமாய்க்கொண்டுள்ளது.
வினு—என் அப்படிச்சொல்லவேண்டும்?
விடை—அகங்காராதிதர்மங்களைத்தன்பேரிற் சுமத்துகிறவனை முழு
மூடனானவன்தன்னைக்கர்த்தாவாகவேஅனுபவிக்கிருன். அதுபற்றி,
செய்வதுவும், அனுபவிப்பதுவும் தானே எனவா, செய்யப்பட்டகர்
மங்களெல்லாம் இவனையேபற்றுகிறபடியால் ஆகாமியகர்மம் பிரமஜ
காதாத்மியத்தைப் பற்றியதெனப்பட்டது.
வினு-ஆயின், இந்த ஆகாமியகர்மத்தின் நிவிர்த்தியெப்போதுண்டா
கிறது?
விடை-கூறியபிரமஜதாதாத்மியம் நிவிர்த்தியாங்காலத்து, ஆகாமிய
கர்மமும் நஷ்டமடைகின்றது.
வினு—பிரமஜதாதாத்மியம் எந்தக்கிரமத்தால்நிவிர்த்தியடைகிறது?
விடை-சமாதியினின்றும் விழித்தவுடன் நான் அகர்த்தாவெனத்தத்
துவஞானமுண்டாக, மறுபடியும் வியவகாரங்களில் மனோவாக்குக்
காயங்களிடத்துண்டாம் கர்மங்களைத்தன்பேரில் ஆரோபியாமல்,
அகங்காராதிதர்மங்களை அகங்காராதிகளின் தர்மமாகவும், சாக்ஷியா
யாகிய தன்னையுள்ளவாறறிந்தும், அதுவாய் மிஞ்சினகாலத்து பிரம
ஜதாதாத்மியத்தின் நிவர்த்தியுண்டாகிறது.
வினு—சஞ்சிதகர்மமென்றுலென்ன?
விடை—சேர்த்துவைக்கப்பட்ட கர்மமாம்.
வினு—சஞ்சிதகர்மத்தினிலக்கணமியாது?
விடை— (1) சென்ற (2) கணபரியந்தம் (3) கர்த்திருத்துவ
சகிதம்செய்ததும் (4) பலனுக்குவராதிருப்பதுமான
(5) கர்மங்கள் சஞ்சிதமெனப்படும்.
வினு—இந்த ஐவகை விசேடணங்களின் கருத்தியாது?
விடை—(1) கழிந்தகாலத்துச்செய்த ஆகாமியமென்பதைக்காட்ட
வேண்டி, சென்ற எனவும்; (2) செய்புங்காலத்து ஆகாமியமென்ற
பெயரையடைந்த அக்கர்மம் அநேக வருஷங்கள் கழித்துச்சஞ்சித

ரூபத்தையடையவில்லையெனவும், ஆனல் மறுகணமே சஞ்சிதமென்
றபெயரை அடைகின்றதெனவும் காட்டவேண்டி, கணபரியந்தம்
எனவும்; (3) கர்த்திருத்துவ, போக்திருத்துவமின்றி முன்செய்தது
சஞ்சிதமல்லவென்பதைக்காட்டும்பொருட்டு, கர்த்திருத்துவ,போக்
திருத்துவ எனவும்; (4) அவ்வித சஞ்சிதகர்மங்கள் மறுகணமுதல்
பலனுக்கு வரக்கூடியதாகுமாதலின், பலனுக்குவராதிருப்பதுமான
எனவும்; (5) அவ்விதம்பலனுக்குவராதகர்மங்கள்கடலிலுள்ள நுண்
மணல்களுக்குச்சமானமாக அளவில்லனவென்பதைக் காட்டும்பொ
ருட்டு, கர்மங்கள் எனப்பன்மையிலும் விசேடிக்கப்பட்டவாறறிக.
வினு—இச்சஞ்சித கர்மங்கள் அந்தக்கரணத்திலெதை விசேஷாதா
ரமாய்க்கொண்டிருக்கிறது?
விடை— அந்தக்கரணதேசத்தில் விளைபட்ட கூடஸ்தனிடத்துக்கற்
பிதமாயுள்ள அஞ்ஞானத்தின் ஓர் சத்தியான ஆவரணவடிவக்களஞ்
சியத்தை ஆதாரமாய்க்கொண்டுளது.
வினு—என் அப்படிச்சொல்லவேண்டும்?
விடை-எதுகாறும் ஆவரணம்நீங்கவில்லையோ அதுபரியந்தம் ஜீவன்
தன்னைக் கர்த்தாவாகவே கொள்ளுகிருன். ஆகவே தன்னைக்கர்த்தா
வென்றுகொள்ளும்வரை, இதற்குமுன், எவ்வளவோ புண்ணிய
பாபகர்மங்களைச்செய்தவனுயிருக்கிறேனென்ற எண்ணம்நழுவமார்க்
கமில்லாததால் அவ்விதவினைவடிவகர்மங்கள் சஞ்சிதவடிவாய் அவ
னைப்பற்றுகின்றன. ஆதலால் ஆவரணத்தை ஆசிரயித்துக்கொண்டி
ருக்கிறது எனப்பட்டது.
வினு—இந்தச்சஞ்சிதகர்மங்களின் நிவர்த்தி எப்போதுண்டாகிறது?
விடை—இவைகள் ஆவரணத்தின்மேலிருப்பதால் ஆவரணநாசகால
மான தத்துவஞான உதயகாலத்து, நான் அகர்த்தாவாதலின் இதற்
குமுன் கருமங்களைச்செய்தவனுமல்லன், செய்யச்சொன்னவனுமல்
லன், எனவிருத்தியுதிக்க அப்போதே நஷ்டமடைகின்றன.
வினு—பிராரப்தமென்றாலென்ன?
விடை—முன்னமே ஆரம்பிக்கப்பட்ட கர்மமாம்.



வினு—பிராரப்த கர்மத்தினிலக்கணமியாது?
விடை—(1) சஞ்சித கர்மங்களின் கூட்டத்தில் (2) எது பக்குவம
டைந்து பலனுக்கு வந்திருக்குமோ (3) தற்காலத்தில் (4) எது
போக்திருத்துவசகித (5) சுகதுக்கானுபவரூபபோகமோ, அதுபிரா
ரப்தமாம்.
வினு—இந்த ஐவகை விசேஷணங்களின் கருத்து யாது?
விடை-(1) பலனுக்கு வாராதவைகள் அநேகமிருக்கிறதென்பதைக்கா
ட்டும்பொருட்டு, சஞ்சிதகர்மங்களின் கூட்டத்திலெனவும். (2) அவ்
வித எல்லாக்கர்மங்களும் பக்குவமடையவில்லையென்பதைக்காட்டும்
பொருட்டு, எதுபக்குவமடைந்து பலனுக்கு வந்திருக்குமோ என
வும்; (3) அவ்விதம் பக்குவமடைந்த அது, இப்போது அனுபவவடிவ
மாயிருக்கிறதென்பதைக்காட்டும்பொருட்டு, தற்காலத்திலெனவும்;
(4) போக்திருத்துவபுத்தியின்றி அனுபவிக்கும் ஜீவன்முக்தர்களின்
சுகதுக்கானுபவம்பிராரப்தமாகாவென்பதைக்காட்டவேண்டி,போக்
திருத்துவசகிதவெனவும்; (5) பிராரப்தத்தின்வடிவம், சுகதுக்கானு
பவவடிவபோகமே என்றும், செய்கைவடிவல்லவென்றும் காட்ட
வேண்டி, சுகதுக்கானுபவரூபமானபோகம் எனவும்; விசேடிக்கப்
பட்டவாறறிக.
வினு—இந்தப்பிராரப்தவடிவகர்மமானது அந்தக்கரணத்தில் விசே
ஷமாய் எதை ஆதாரமாய்க்கொண்டுள்ளது?
விடை—அந்தக்கரணதேசத்துவிளைபட்ட ஆத்மாவினிடத்துக்கற்பி
தமாயுள்ள அஞ்ஞானத்தின் ஓர் சத்தியான விக்ஷேபவடிவக்களஞ்சி
யத்தில் இருக்கிறது.
வினு—என் அப்படிச் சொல்லவேண்டும்?
விடை—இந்தப்பிராரப்த கர்மமானது ஜாக்ர, சொப்பன அவஸ்தை
களில் விக்ஷேபகாரியமானதூலசூக்ஷ்ம சரீரங்களிற்றோற்றி, அவை
மறைந்த சுழுத்தியாதி அவஸ்தைகளிற்றோற்றாததால், விக்ஷேபசக்தி
வடிவக்களஞ்சியத்திலிருக்கிறதெனப்பட்டது.
வினு—இதன் நிவர்த்தி எப்போதுண்டாம்?

விடை—விசேஷபரூபமான ஸ்தூல, சூக்ஷ்ம, சரீர அனுபவங்களின்
நிவர்த்திகாலமாகிய சுழுத்தி, மூர்ச்சை, மரணம், சமாதி, விதேக
முத்தி, ஆகிய இக்காலங்களிலுண்டாம்.
வினு—வேதாந்தசாஸ்திரங்களில், ஆகாமியகர்மமானது இனிவரும்
ஜன்மங்களிற்றான் பலன் கொடுக்குமென்று கூறியிருக்க, இங்கே
உற்பத்தியான மூன்றுவது கணமுதல் பலனுக்கு வரக்கூடும் எனக்
கூறியதில் நியாயமியாது?
விடை—ஏனைய சாஸ்திரங்கட்கும் இதுவே சம்மதமாகும். ஆனுல்
தீவிரமில்லாத தங்களது சொற்பமுயற்சியையே, தீவிரதரமுயற்சி
யாகக்கொண்டுழலும் மந்தஅதிகாரிகளுக்கு, சாஸ்திரத்திற்கூறிபபடி,
இச்சென்மத்திற்பலன் கிடையாவிடில், சாஸ்திரவாக்கியங்களில் நம்
பிக்கைக்குறைவு வருமெனக்கருதி, ஜன்மாந்தரத்திற்றான் பலனுண்
டாகும் எனக்கூறிற்று. இங்கு கூறிய இலக்கணமோவெனில்:—
தீவிர அதிகாரிகளும், மந்த அதிகாரிகளும் தீவிரபாவத்தைப்படை
யின் அதற்குத்தக்கபடிபலனடையக்கூடுமென்பதை அவர்களறிந்து,
இச்சென்மத்திலேயேஞானமடையட்டும் என்னும் நோக்கால் வெளி
யிடலாயின. இது சாஸ்திரங்களின் அந்தரங்க தாற்பரியமாதலாலி
யாதும் விரோதமின்று.
வினு—இது சாஸ்திரங்களின் அந்தரங்கதாற்பரியமென்பதிற் பிர
மாணங்களியாது?
விடை 'மிகமேவியபுண்ணியபாபமெனும்-வினையின்பயன்மேலொ
ருகாலமுறு
கிகமேவருமென்பதனுளநோ-யெல்லாமிவனைச்செறவெய்தின
வே' எனச்சசிவர்னபோதமும்;
'தம்மையேபுகழ்ந்திச்சைபேசினுஞ்சார்விலுந்தொண்டர்தருகிலாப்
பொய்ம்மையாளரைப்பாடாதே யெந்தைபுகலூர்பாடுமின்புலவீர்கா
இம்மையேதருஞ் சோறுங்கூறையு மேத்தலாமிடர் கெடலுமாம் [ள்
அம்மையே சிவலோகமாள்வதற்கியாதுமையுறவில்லையே' எனச்சுந்
தரமூர்த்திநாயனுர்திருமுறையும்;



'நிகழ்கால, வருங்காலபோகங்களைச்சம்பாதித்தற்பொருட்டு இவ்
வர்த்தமான தேகத்தில் எந்தக்கர்மம் உண்டாகிறதோ அத்தன்மைய
கர்மம் ஆகாமியமெனப்படுகிறது' என பாலபோதம் 9-வது உபதே
சமும்; பிரமாணங்களாதல் காண்க.
வினு-இப்பிரமாணங்களை யனுசரித்த ஆன்றோர் சரிதங்களுண்டா?
விடை—மார்க்கண்டேயர், சசிவர்னன் முதலவர்களின் சரிதமுள.
வினு—அவ்விரண்டு சரிதங்களும் என்ன போதிக்கின்றன?
விடை—(1) ஈசுவரனுற் கொடுக்கப்பட்டது 16 வயசாயிருக்க, 16
வது வயசிற்செய்த தீவீர பூஜாபலத்தால் அச்சன்மத்திலேயே என்
றும் 16-வயசாயிருக்கும் பாக்கியத்தை மார்க்கண்டேயர் அடைந்தா
ரென்றும், (2) பூர்வஜன்மங்களில் நிஷ்காமியகர்ம, பக்தி இவைக
ளில்லாமல், இச்சன்மத்திலும் நிகிருஷ்டனுயிருந்து, சசிவர்னன் ஞானம
தீவிரமாய்ச்செய்த குருபணிவிடையினுல், செய்தஜன்மத்திலேயே கர்
டைந்தான் என்றும் கேட்கப்படலின், செய்தஜன்மத்திலேயே கர்
மங்கட்குப்பலனுண்டாகக்கூடும் எனப்போதிக்கின்றன.
வினு—ஆனுல், கர்மங்கள் உற்பத்தியான வரிசைக்கிரமத்தில் பல
னுக்கு வருமென்று சொன்னுலென்ன?
விடை—ஆயின் சுருதிக்கு அப்பிரமாணத்தன்மைநேரிடுகிறது.
வினு—சுருதிக்கு அப்பிரமாணத்தன்மை எவ்விதம் நேரிடுகிறது?
விடை—சஞ்சிதவினைகளை கடல், மலை, இவைகட்குச்சமானமாய்ப்
பெற்றிருக்கும் ஜீவர்களைநோக்கி, 'சொர்க்ககாமன்ய ஜிக்ருக' எனச்
சுருதி கூறுகின்றது. இதில் முன்செய்தகர்மங்களே அனுபவிக்க
முடியாதநிலைமையிலிருக்க, இப்போது யாகத்தைச்செய்யும்படிஆக்
ஞையைச்செய்யின் எப்படிச்சொர்க்கம் கிடைக்கும்! சுருதியோ இச்
சரீராந்தத்தில் சொர்க்கத்தை விதிக்கிறபடியால் அது முரணுகின்
றது. ஆதலின் வரிசைக்கிரமமாய்ப்பலனுக்கு வரவில்லை என்றறிக.
வினு—நல்லது, சுருதிக்கு அப்பிரமாணத்தன்மையைச்சம்பாதிக்
கும் யுக்தி அயுக்தமே (பொருத்தமின்றியதே); ஆனுல் பலனுக்கு
வரும் முறைதான் யாது?

விடை--முன் இயற்றியசஞ்சிதகர்மங்கள் எவ்வளவிருப்பினும், அதன்
மத்தியில் எக்கர்மம் தீவிரமாயிருக்கிறதோ அதுவே முதன்முதல்
பலனுக்கு வருகிறது. கர்மங்கள் உதித்த முறையிலன்று.
வினா—அப்படியானால் தீவிரமாவது யாது?
விடை-மனம், வாக்கு, காயங்களிடத்து அடிக்கடி, ஆதரவுடன், உண்
டாகும் அனுசந்தான விசேஷமே தீவிரமெனப்படும்.
வினா—இதில் யுக்தி யாது?
விடை—சுமார் 7 வருஷங்கழித்துப்பலன்கொடுக்கும், மாவிருக்ஷத்
தை ஜீவமுயற்சியால் ஒட்டுக்கட்டுதல்வாயிலாக சீக்கிரபலனை
யடைகிறோம். அப்படியே அவ்விருக்ஷத்திற்கு சரியானபடி தண்
ணீர்வார்த்தல் முதலியன செய்யாவிடின், எவ்வளவு வருஷமானு
லும் பலன்கொடா என்பது அனுபவமாதலால், புருடப்பிரயத்தன
வடிவ அனுசந்தானமே கர்மபரிபக்குவத்தில் ஏதுவாமென உணர்க.
வினா—இதில் அனுபவமியாது?
விடை—ஒருவன் ஒரு மூர்த்தியை சுமார் 10வருஷகாலமாய்ஒரோர்
வேளையில் தியானித்து தீவிர அனுசந்தானமின்மையால் அதின் அவ
தியைச்சொப்பனத்திற்பெறுகிறானில்லை. ஆனால் அவனுக்குப்பிரிய
மான ஓர் வஸ்துவை (ஸ்திரீயை) ஜாக்கிரத்தில் சற்று அழுத்தமாய்
நோக்கியிருப்பானாயின்,அனுசந்தான விசேஷத்தால் பார்த்த அடுத்
தகணமே, சொப்பனவஸ்தைவரின் அதில் அனுபவித்துவிடுகிறான்
என்பது சகலருடைய அனுபவமாதலால், அனுசந்தானவடிவவிருத்
தியின் தீவிரத்தை முன்னிட்டே கர்மங்கள் பலனுக்கு வருகின்றன.
வினா—உலகிலுள்ள மதங்களெல்லாம் கூறிய முறையில்ஆகாமியாதி
மூவிதகர்மங்களையும் அங்கீகரிக்கின்றனவா?
விடை—சிலமதங்கள் கூறிய கர்மங்களையும், அதையனுசரித்த ஜன்
மாந்தரங்களையும் ஒப்புக்கொள்ளுகிறதில்லை.
வினா—கூறிய கர்மங்களை அங்கீகரியாததால் அவர்கள் அடையும்
பயன் யாது?
விடை—கர்மங்களை அங்கீகரியாவிடில், ஈசுவரன் ஜீவர்களுக்குத்



தன் இஷ்டப்படி சரீரங்களையுண்டுபண்ணுகிறானெனவரும். அப்
பொழுது ஈசுவரன் சமதிருஷ்டியின்றி விஷமதிருஷ்டியையுடையவ
னெனவும்; ஓர் கர்மமுமின்றிச்சரீரமுதித்தலின்செய்யாதது பல
னுக்குவருதல், அப்படியே இச்சரீராந்தம்வரைசெய்த கர்மங்களுக்கு
அவற்றின் பலனாக வேறுசரீரக்கிரஹணமின்மையால் செய்தது பல
னுக்குவாராமற்போதல், என்ற அயுக்தமுமாகிய பிரபலதோஷங்களு
ளவெனவும்; ஆகிய இத்தோஷங்களே அம்மதங்கட்குப்பலனாகும்.
வினா—சிசுக்களுடைய பிதிரர்களாற்செய்யப்பட்ட புண்ணியபாப
கர்மங்களின் பலனாக அவர்கள் வழிவந்த சிசுக்களுக்கும் சரீரம் வா
லாம் என்னும்யுக்தியால், செய்யாததுபலனுக்குவருதல் என்னுந்
தோஷம் நீங்குகிறது; அப்படியே இச்சரீராந்தம்வரை செய்த புண்
ணியபாபங்களுக்குத்தக்கதாக, பின் ஓர்காலத்து நித்திய சொர்க்க,
நரகமும் ஈசுவரனால் அளிக்கப்படுகிறது என்னும் யுத்தியால், செய்
தது பலனுக்குவாராமற்போதல் என்ற தோஷத்திற்குப்பரிகாரமும்
கிடைக்கிறது; என்று அம்மதஸ்தர்கள் கூறுவதால் கர்மங்களை அங்
கீகரிப்பானேன்?
விடை—ஒருவன் செய்த குற்றத்திற்காக மற்றொருவன் தண்டனை
யடைவது அரசாங்கச்சட்டத்திற்கும், உலகப்பிரசித்திக்கும் விரோ
தமாயிருத்தலின் பிதிர்க்களாற்செய்யப்பட்ட கர்மங்களின்பலனை,
அவர்கள் வழிவந்த சிசுக்களடைகிறதென்பது கூடாவாதலின் முத
லதும்; நித்தியநரகத்தையடைந்த ஓர் ஜீவனானவன் பச்சாதாபம
டைந்து, இனிப்பாபங்களைச்செய்கிறதில்லை என்று ஈசுவரனைப்
பிரார்த்திப்பானாகில் அவன் தனது கருணையைச்செலுத்த மார்க்க
மில்லாமல் இருப்பதுபற்றி, சர்வஜீவதயாபரன் என்னுந்தனது இலக்
கணத்தையும் ஈசுவரன் இழந்தவனாகின்றான்,என்பதனால் இரண்டா
வதும்; கண்டிக்கப்படுதலின் எம்மதத்தர்களும், கர்மத்தை அங்கீகா
ரஞ்செய்தேதீரும்.
விணவிடைகள் 143. மொத்த வினாவிடைகள் 1310.

ஸ்ரீ சுந்தரக்கழல் வேல்க.

உ

ஸ்ரீ சுந்தராதிஷ்டானம் துணை

25 ஞானியினனுபவமும், அவனது பரியாயநாமங்களும் கூறல்.

மன்பிரமமசைதன்யமேதானென்றுமற்றை முப்பானைந்துந்தா
னல்லவென்றும், தென்பெறுநற்றெளிவுடையவவற்குச்செ
ப்புமகங்காரக்கிரந்திய துசிதைந்ததாலும், பன்பதிஞன்கிரட்
டித்தத்துவங்கள்பண்ணும்பணியையுந்தான் பண்ணவில்லை
யென்றுமின்னுந், தின்பதனையான்றின்னவில்லையென்றுந்தி
டமதாய்த்தெளிந்துமயல் சிதைந்ததாலும். (௱௧)

(இ-ள்) (நிலைபெற்ற) பிரஹ்மசைதன்யமே தானென்றும், மற்றை
35-ம் தானல்லவென்றும் (அழகுபொருந்தியநல்ல) தெளிவுடைய
விவேகிகட்கு(சொல்லப்பட்ட)அகங்காரக்கிரந்தி இல்லாதபடியினால்
இந்த 28 தத்துவங்களினுடையதொழில்களையும் நான்செய்யவில்லை
யென்றும், இந்த 28-ம் புசிக்கின்றதை நான்புசிக்கவில்லையென்றும்
திடப்படத்தேறி மயக்கமற்றிருக்கின்றபடியினால்,

கவி

இவைகளீட்டிருவினையினீங்கிச்சென்மமிறப்பின்றி முத்தனு
ம்ப்பிரமமாகி, மவிருவாணிவனையருமறைகளெல்லாமதிவரு
ணன்சீவன்முத்தன்பகவற்பத்தன், தவறில்லாத்திடபிரஞன்
பிராமணன்னேதகுகுணாதீதனெனச்சாற்றுநீயும், உவமையி
லானன்பரவடிவமுணர்ந்தானந்தவுததியாகெனவுரைத்தானுவ
மானன். (௱௨)

(இ-ள்) இந்த 28-னுலுஞ் சம்பாதிக்கப்பட்ட புண்ணியபாபங்களி
னின்றும் விடுபட்டு [கர்மமில்லாதபடியினால்] ஜனன மரணம் [முத
லியசம்சாரம்] இல்லாமல் முத்தனுகிபிரஹ்மமாத்திரமாகவே [இருப்
பன்] (பிரகாசிப்பன்). இவனைச்சீவன் முத்தனென்றும், (குற்றமில்
லாத) திடப்பிரக்ஞனென்றும், அதிவருணச்சிரமியென்றும், (தகு
தியையுடைய) குணாதீதனென்றும், பகவத்பக்தனென்றும், பிராம
ணனென்றும், அருமையாகிய வேதங்களெல்லாம் உரையிடுகின்
றன. [சகலரும்](நீயும்)இந்தத்தத்துவங்களை விசாரம்பண்ணி மோக்ஷ



மடையக்கடவீர். (என்றுபதேசிக்க அச்சீடனும்அப்படியேயானன்)
வினு—இவ்விதம்; கர்மங்கள், அவற்றின் ஆசிரயங்கள், அவற்றின்
நிவர்த்தி, அவற்றின் பயன், இவைகளையறிந்து நிவர்த்திசெய்து
கொண்ட முக்தர்கட்கு வியவகாரங்களுண்டா?
விடை-சொரூபதிருஷ்டியால் வியவகாரமில்லை. சரீரதிருஷ்டியால்
அவர்களேறியுள்ள ஞானபூமிக்கிரமத்தில் தாரதம்மியமாய் வியவகா
ரம் அங்கீகரிக்கப்படும்.

வினு—அந்த ஞானபூமிகளெவை?
விடை—(1) சுபேச்சை, (2) சுவிசாரணை, (3) தனுமானசி, (4) சத்
துவாபத்தி, (5) அசம்சத்தி, (6) பதார்த்தாபாவினி, (7) துரியம்
எனக்கூறுவர்.

வினு—சுபேச்சையென்றாலென்ன?
விடை—பாமரசங்கநிவிர்த்திவந்து, சாதுசங்கத்திற்சேர்ந்து சிவ
ஞானத்தையடைய விரும்புதலாம்.

வினு—சுவிசாரணையென்றாலென்ன?
விடை—முதற்பூமியப்பியாசபலத்தாற்சாதுசங்கத்திற்சேர்ந்து, வே
தாந்தசாஸ்திரங்களைச்சற்குருசன்னிதியில் நன்றாய்விசாரித்தலாம்.

வினு—தனுமானசியென்றாலென்ன?
விடை—முதல் இரண்டு பூமிகளின் அப்பியாசவலியால், விசாரித்த
பொருளையடைவதற்காக, மனஞ்சுருங்குதல்வடிவ இச்சையாதிகளை
விடுதலாம்.

வினு—சத்துவாபத்தியென்றாலென்ன?
விடை—முதல்மூன்றுபூமிகளினப்பியாசவலியால் சத்துரூபப்பிரஹ்
மத்தின் சாக்ஷாத்காரத்தை அடைதலாம்.

வினு—அசம்சத்தியென்றாலென்ன?
விடை—முதல் நான்குபூமிகளின் அப்பியாசவலியால் பிரஹ்மாத்ம
பாவத்தில் மனமழுந்தி, அஞ்ஞானம் அதன்காரியம் இவைகளைமறத்
தலாம்.

வினு—பதார்த்தாபாவினியென்றாலென்ன?

விடை-கூறிய ஐந்துபூமிகளின் அப்பியாசமுதிர்ச்சியால் அத்துவிதா
நந்தமேவிட்டு பதார்த்தங்கள் அபாவமாவதாம்.
வினு—துரியமென்றூலென்ன?
விடை—முந்திய ஆறு பூமிகளின் அப்பியாசத்தால் ஆன்மசுபாவத்
தில் உள்ளபடி இருத்தலாம்.
வினு—இந்தப்பூமிகள் எதற்குச்சாதனமாம்?
விடை—முதல் மூன்று பூமிகளும் அப்பியாசபூமிகளாதலின் நான்
காவதுபூமியாயதத்துவஞானத்திற்கும்; நான்காவது பூமிதத்துவஞா
னவடிவாயிருத்தலின் ஜீவன்முத்தி, விதேகமூத்திகட்கும்; ஐந்து,
ஆறு, எழு பூமிகள் ஜீவன்முக்தியின் விசேஷ ஆனந்தத்தை அனுப
விப்பதற்கும் சாதனங்களாம்.
வினு—இதில் ஜீவன்முக்தர்களுடைய பூமிகள்யாவை?
விடை-நான்காம்பூமி தத்துவஞானவடிவாயிருப்பினும், ஜீவன்முத்த
ஞவதிற்சந்தேகமில்லையாதலின், அப்பூமியிலேறியவனை பிரஹ்மவித்
தெனவும்; ஐந்தாம்பூமியிலேறியவனை பிரஹ்மவித்வரனெனவும்;
ஆறும்பூமியிலேறியவனை பிரஹ்மவித்வரியானெனவும்; எழாம் பூமி
யிலேறியவித்வானை பிரஹ்மவித்வரிட்டனெனவும் கூறுவர்.
வினு—கூறிய பூமிகளில் ஆறும் பூமியின்கண்ணேறிய பிரமவித்வரி
யானுக்கு பதார்த்தஅபாவங்கூறியிருத்தலின் அவனுக்காயினும், அவ
னினும் மேம்பட்ட பூமியிலேறியவனுக்காயினும் வியவகாரமெப்ப
டியுண்டாம்?
விடை—இங்குப்பிரஹ்மவித்துக்கள் இருவிதம். ஒன்று உபாதிசாத
னமாகிய ஹடயோகவடிவ அஷ்டாங்கயோக அப்பியாசத்துடன்
பிரஹ்மசொரூபத்தில் நிலைத்தவர்கள்; மற்றொன்று தியானுதிவிசே
ஷங்களுடன் சாஸ்திராப்பியாசவலியால் ஆத்மாகாரவிருத்தியை
யுண்டுபண்ணுதல்வாயிலாகப்பிரஹ்மசொரூபத்தில் நிலைத்தவர்கள்.
முதலாவதாயபிரஹ்மவித்தாதிகட்கு முமுக்ஷுதசையிற்கூட உபாதி
யின்பலனுகிய, சுழுத்தியிற்போல் சரீராதிகளை மறத்தல்வடிவ அபா
வமுண்டாகிவிடும். ஆதலால்,வியவகாரம், வியவகாரமின்மை இவை



களைமுன்னிட்டு இவன் ஞானி, இவன் அஞ்ஞானி எனமதித்தல்
முடியாது. இரண்டாவதாய பிரஹ்மவித்தாதிகட்கு இராஜயோக
வடிவ அஷ்டாங்கயோகத்துவாரா, சாக்ஷாத்காரவடிவ அகண்டபிரஹ்
மாகார விருத்தியின் அப்பியாச தார்ட்டிக வாயிலாய், பிரஹ்மவித்
தனுபவ ஐசுவரியம் எந்த ஜீவதத்துவத்தினிடமாயுண்டோ, அந்த
ஜீவவிருத்தியினிடத்து பதார்த்தங்களின் அபிமானவிருத்தி அபாவ
மாதலையே, பதார்த்தாபாவமெனப்பட்டது. விருத்தியுதித்தல், உதி
யாதிருத்தல், காரணமாயின்று. இங்குகூறிய ஞானபூமிகளின்பாகு
பாடு இருவர்க்கும் பொதுவாம். முதலாவதுகூறிய ஞானிகட்கு விய
வகாரமில்லையாயினும், இரண்டாவதாய்க்கூறப்பட்ட பிரஹ்மவித்து
வரிட்டன்வரையுள்ளவர்கட்கு வியவகாரம் கூடுமெனவறிக.
வினு—பிரஹ்மவித்துவரிட்டனுக்கு வியவகாரம் கிடையாதெனப்
பிரசித்தியிருக்க, வியவகாரங் கூறியதற்குப் பிரமாணமென்ன?
விடை—தாயுமானவர்:—பாயப்புலி,
'கண்டேன் நினதருள் அவ்வருளாய்நின்று காண்பதெல்லாம்
உண்டே அதுவும்நினதாக்கினேன் உவட்டாத இன்பம்
மொண்டே அருந்தி இளைப்பாறினேன் நல்லமுத்திபெற்றுக்
கொண்டேன் பராபரமே எனக்கேதுங்குறைவில்லையே' (27)
என்றபிரமாணமே சான்றும்.
வினு—இப்பிரமாணத்தால் பிரஹ்மவித்வரிட்டனுக்கும் வியவகாரம்
அங்கீகரிக்கப்படுகிறதென்பதெப்படி?
விடை—'கண்டேனினதருள்' என்பது சத்துவாபத்தி பூமியினனு
பவத்தையும்;
'அவ்வருளாய்........தாக்கினேன்' என்பது அசம்சத்திப்பூமியின
னுபவத்தையும்;
'உவட்டாத........யருந்தி' என்பதுபதார்த்தாபாவினி பூமியின
னுபவத்தையும்;
'இளைப்பாறி........கொண்டேன்' என்பது துரியபூமியினனுபவத்
தையும்;

'எனக்கேதுங்குறைவில்லையே' என்பது மேல் அடையவேண்டிய அனுபவமாவது, பூமிகளாவது கிடையாதெனப்பொருள்தரலின், பிரஹ்மவித்வரிட்ட பூமிக்குமேல் ஒன்றுங்கிடையாதெனவரையறுத்ததெனவும்; இவ்வனுபவத்தில் நின்றுகவிகூறும்திறமையிருத்தலின், சரீரமறதிவடிவ அல்லது விருத்தியபாவவடிவ வரிட்டபதவியைப்பெறாமல், வியவகாரசகித வரிட்டபதவியைப்பெற்றிருந்தாரென்றும், பெறப்படுகின்றமையின், பிரஹ்மவித்வரிட்டனுக்கும்வியவகாரமுண்டென அங்கீகரிக்கப்படும்.

வினா—அப்படியானால் சரீரமறதியாதிகளையுண்டுபண்ணக்கூடிய ஹட (வைராக்கிய) யோகவடிவ அஷ்டாங்க (8-உறுப்புகளோடு கூடிய) யோகத்திற்கும்; இராஜயோகவடிவ அஷ்டாங்கயோகத்திற்கும் பேதந்தெரியவேண்டியதவசியமாயிருத்தலின்; ஹடயோகவடிவ அஷ்டாங்க யோகமாவது யாது?

விடை— I. (1) அஹிம்சை (கொல்லாமை) (2) சத்தியம் (3) திருடாமை (4) பிரஹ்மச்சரியம்(ஸ்திரிகளின்ஸ்பரிசனமாதியின்றியிருத்தல்) (5) அபரிக்கிரஹம் (நிர்வாஹத்திற்குமேல் தனத்தைக் கவராதிருத்தல்) இவைகள் இயமமாம்.

II. (1) சௌசம் (2) சந்தோஷம் (3) தவம்(4) ஸ்வாத்தியாயம் (தனதுவேதசாகையை அத்தியயனஞ்செய்தல்) (5) ஈசுவரப்பிரணிதானம் (ஈசுவரத்தியானம் அல்லது ஈசுவரார்ப்பணபுத்தி) இவைகள் நியமமாம்.

III. ஸ்வஸ்திகம்முதல (யோகநூல்களில்காண்க) பேதத்தோடுகூடியது ஆசனமாம்.

IV. (1) மூக்கின் வலது துவாரத்தால் காற்றைவிடுதல் இரேசகமும்; (2) இடது துவாரத்தால் இழுத்தல் பூரகமும்; (3) சுழுமுனையாலடக்குதல் கும்பகமும் ஆகிய மூன்று அங்கங்களையுடையது பிராணாயாமமாம்.

V. விஷயங்களினின்று சகல இந்திரியங்களையும் தகைவது பிரத்தியாகாரமாம்.



VI. தைலதாரைபோல அந்தக்கரணம் நிலைப்பது தாரணையாம்.

VII. அத்விதீய வஸ்துவில் இடைவிட்டுள்ள அந்தக்கரணத்தின் பிரவாஹம் தியானமாம்.

VIII. அந்தக்கரணம் ஏகாக்கிரமாய்ப்பரிணமித்தல் ஸமாதியாம். (இது முன்னும் சொல்லப்பட்டிருக்கிறது)

வினா—*இராஜயோகவடிவ அஷ்டாங்க யோகமாவதியாது?

விடை— I. எல்லாம்பிரஹ்மமென்றுஅறிவதனால், இந்திரியங்களை விஷயங்களிற்போகவொட்டாமற்செய்தல் இயமமாம்.

II. அந்தக்கரணவிருத்தியைவிஜாதீயமான பிரபஞ்சத்தில் விடாமல், ஸஜாதீயமான பிரஹ்மத்தில் நிறுத்துதல் நியமமாம்.

III. எந்தஸ்திதியில் பிரஹ்மசிந்தனை எப்பொழுதும் ஆகுமோ அது ஆசனமாம்.

IV. சகலபாவங்களையும் பிரஹ்மமாகப்பார்த்து மற்ற விருத்திகளை நீக்குவது பிராணாயாமமாம். (1) அனாத்மாவான பிரபஞ்சத்தை நிஷேதித்தல் இரேசகமும், (2) நான் பிரஹ்மம் என்னும்விருத்திபூரகமும், (3) அகண்டாகாரவிருத்தியில் சலனமில்லாதது கும்பகமும், எனப்பெரியோர் கூறுவர்.

V. சப்தாதி விஷயங்களிலும், ஆத்ம சொரூபத்தைப் பார்த்தல் பிரத்தியாகாரமாம்.

VI. மனம்போகிற விஷயங்களிலெல்லாம் பிரஹ்மத்தைப்பார்த்து அதையே அனுசந்தானித்தல் தாரணையாம்.

VII. நான் பிரஹ்மம் என்ற அகண்ட பிரஹ்மஞானத்திற் சலியாதிருப்பது தியானமாம்.

VIII. அந்தக்கரண விருத்தி விஷயத்திற்செல்லாமல், அகண்டபிரஹ்மாகாரமாகி, தியாதிரு (தியானிப்பவன்), தியேயா (காண்பொருள்) கார விருத்திகளில்லாமலிருப்பது ஸமாதியாம். (இந்த யோகத்திற்கு பிரஹ்மவித்தாதிகளே அதிகாரிகளாவர்)

---

* இதன் விரிவையறியவிருப்புள்ளார் அபரோக்ஷாத்மானுபவதீபிகையிற் கண்டுகொள்க.

வினா—கூறியஞானிகள் பிரஹ்மவித்துக்களாயிருப்பினும், வியவகா
ரத்தால் வியவகாரமயமாய்ப் போகமாட்டார்களா?
விடை—போகமாட்டார்கள். ஆனால்;
(1) ஒருமுறை யுண்டாகியதிட ஞானம் நாசமாகாமல்நிரந்தரப்பிரஹ்
மாகாரவிருத்தி சித்தித்தலின், ஞானரக்ஷையும்;
(2) இந்திரியங்களின் ஏகாக்கிரத்தன்மை அல்லது அடக்கமிருத்த
லின், தவமும்;
(3) ஜல்பம் (யுக்திவல்லவர்களுடன்வாதம்), விதண்டை (மூர்க்கர்
களதுவாதம்)இவைகள் இல்லாமல், குருசீடசம்வாதரூபமாய் உபதே
சித்துவரலின், விஷமவாதமில்லாமையும்;
(4) ரஜோ,தமோவிருத்திகள்கெடுக்கப்படுதலின், துக்கநிவர்த்தியும்;
(5) நிரந்தரப்பரிபூரண விருத்தியோடுகூடியிருத்தலின், சுகப்பிராப்
தியுமாகிய ஐவகைப்பிரயோஜனத்தையுடையவர்களாயும்; மைத்
திரி(சத்புருஷ சிநேகம்), கருணை (துக்காத்மாக்களிடத்துஇரக்கம்),
முதிதை (ஈசுவரபக்தன் முதலவர்களிடத்துப் பிரியம்), உபேக்ஷை
(பாபி, அவகுணன் முதலவர்களிடத்து இராகத்துவேஷமின்மை)
முதலகுணங்களால் அலங்கரிக்கப்பட்டவர்களாயும்; இருந்துகொண்
டிருப்பார்கள்.
வினா—ஆயின், விதேகமுத்தனின் பூமி யாது? அதற்குச்சாதனமா
கிய அப்பியாசமியாது?
விடை—ஜீவன்முக்தனே விதேகமுக்தனும்; ஜீவன் எப்பொழுது
தனக்குத்தேகங்கிடையாதென்று பிரஹ்மவித்துத்தன்மையாலுணரு
கின்றானோ அப்பொழுதே விதேகனும்; வேறு சாதனாந்தரங்களாற்
சித்திப்பதன்று. அன்றியும் ஜீவன்முக்தனானவன் தனக்கு விதேக
முக்திவேண்டாமெனினும், அதுநிற்கிறதில்லை. அத்தகையோன் சரீ
ரத்தோடிருந்து வியவகரிப்பினும் விதேகியேயாவன். முமுக்ஷு
திருஷ்டியால் சரீரம் மறைந்த காலத்தை விதேகமுக்தியெனக் கூறு
வதேதவிர ஜீவன்முக்தனானவன் எப்பொழுதும் விதேக முக்தனே.
ஆகவே ஜீவன்முக்தனுக்குரியபூமிகளாகிய 4, 5, 6, 7 பூமிகளே விதே



கிக்கு முரியதெனவும், அதற்காக சாதனாந்தரங்களும் வேண்டுவதின்
றெனவும் உணர்வாயாக.
வினா—இத்தகைய விதேகியாகிய இவனுக்குச் சீவன்முக்தன் என்ற
பெயர் எதுகாரணம்பற்றி வந்தது?
விடை—இச்சாஸ்திரத்தில் அங்கீகரிக்கப்பட்ட தத்துவங்கள் 36-ல்
பிரஹ்மமும் ஈசுவரனும் எப்பொழுதும் பந்தமின்றியவர். மாயை,
அவித்தை முதல 33-தத்துவங்களும்பந்தவடிவம். ஜீவனோவெனில்!
இல்லாத பந்தத்தைத் தன்பேரிலாரோபித்துக்கொண்டவனும்,
அதனால் மோக்ஷ இச்சையுடையவனும், அப்படியே ஞானவாயிலாக
மோக்ஷமடைய யோக்கியனுமாவன். அவ்வித ஜீவன் இல்லாதபந்தத்
திலிருந்து விடுபட்டு முக்தியையடைந்துவிட்டபடியால் ஜீவன்முக்
தன் (ஜீவத்துவமாகியபந்தம் விடுபட்டவன்) எனப்பெயர்வந்தது.
வினா—இவனுக்குத் திடப்பிரக்ஞன் என்றபெயரேன் வந்தது?
விடை—குருவினது அனுக்கிரஹத்தால் சமாதிகூடி, சந்தேகவிபரீ
தமில்லாமல் ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தையறிந்து, யாதொன்றினாலுங்
கலங்காது அறிவாகாரமாய் நிலைத்த அறிவுடனிருத்தலின், திடப்
பிரக்ஞனெனப் பெயர்வந்தது.
வினா—அதிவருணாச்சிரமி என்றபெயர் என்வந்தது?
விடை—வருணாச்சிரமங்களை விட்டவனன்று. ஆனால் பிராமணாதி
வருணங்களும், பிரமச்சரியாதி ஆச்சிரமங்களும், தூலதேகத்திற்கற்
பிக்கப்பட்டவைகளெனக்கண்டு, அதற்குச்சாக்ஷியாய் பிரஹ்மாகார
மாயிருத்தலின், சரீராதி வியவகாரங்களில்வருணாச்சிரமங்களுடன்
இருப்பதுபோற்றோற்றுமவனே அதிவருணாச்சிரமியாவன்.
வினா—குணாதீதன்என்றாலென்ன?
விடை—குணங்களில்லாதவனன்று; ஆனாற்குணங்களானது அந்
தக்கரணத்தினுடையதென்றும், குணத்திரயமான பிரகிருதிக்கும்
அப்பால் நிலைத்துள்ள நம்மிடத்து, குணங்களிருத்தற்கு நியாயமின்
மைபற்றி குணங்களானது அந்தக்கரணவடிவ பிரகிருதியினதே என்
றும், கண்டு களித்திருக்குமவனே குணாதீதனும்.

வினு—பகவத்பக்தன் என்றுலென்ன?
விடை—சர்வபூதங்களிலும் ஆத்மவடிவ பகவத்பாவத்தையும், பகவத் வடிவ தன்னிடத்துச் சர்வபூதங்களையுங்காண்டல் பகவத்பக்தியாத லின், அவ்விதம் நிலைத்திருக்கும் அவனே பகவத் பக்தனும்.
வினு—பிராமணன் என்றுலென்ன?
விடை-குடுமி, பூணூல் மாத்திரத்திற் பிராமணன்என்பதல்ல. ஆனுல் ஞானயோகத்தாற் பிரஹ்மத்தையறிந்து அவ்வடிவாக நிலைத்தவன் பிராமணனும்.
வினு—இவ்விதமறிந்த விவேகியின் மூன்று சரீரங்களின் கதியாது?
விடை—காரணசரீரதத்துவமானது தத்துவஞானம்உதயமானவுடனும்; தூலசரீரமானது பிரேதவடிவாய் வீழ்ந்தும்; சூக்குமசரீரமானது தூலசரீரம் நழுவியஇடத்தேயேயுள்ள அகண்டபிரஹ்மசொரூபத்தில் இலயமாயும்; நீங்க, அவன் திவ்யமங்கள வடிவாகவே மிஞ்சுகின்றுன்.
வினு—கூறிய விவேகியின் மூவிதகர்மங்களின் கதியாதாயிற்று?
விடை—சஞ்சிதகர்மம் தத்துவஞானம் உதயமானவுடனும்; ஆகாமியகர்மம் பிரமஜ தாதாத்மியம் நிவர்த்தியானவுடனும்; பிராரப்த கர்மம் சரீரம் விழுந்தவுடனும்; நஷ்டமடைகின்றன. ஆகலின் அவன் திவ்யமங்களவடிவாகவே மிஞ்சுகின்றுன்.
வினு—சகலரும் என்றதனுல் அறியத்தக்கது யாது?
விடை—மானிட ஆக்கையைப்பெற்ற எவரும் விசாரணைக்கும், அதன்மூலமாய் ஞானத்திற்கும், அதன்பயனுகிய மோக்ஷத்திற்கும், அதிகாரியாவர் என அறியத்தக்கது.
வினு—ஸ்திரீ, சூத்திரர்கள் ஞானுதிகாரிகளல்லர் எனச்சிலர் சொல்லுவதில் நியாயமியாது?
விடை—ஸ்திரீ, சூத்திரர்கட்கு வேத அத்தியயனமூலமாய் அர்த்த விசாரஞ்செய்ய அதிகாரமில்லையேதவிர, பாஷா (தமிழ், தெலுங்கு முதல) கிரந்த (சாஸ்திர)சிரவணங்களைச்சாதனங்களுடன் குருபணிவிடையைச்செய்து குருவினது அனுக்கிரகத்தால் ஞானமடையலாம். ஆதலால் சகலரும் ஞானுதிகாரிகளேயாவர்.



நூற்பயனும், மங்களமும்

வினு—தத்துவவிசாரஞ்செய்து மோக்ஷமடையக்கடவீர் என்பத னுல் அறியத்தக்கதுயாது?
விடை—கூறிய அதிகாரமுடையார் சகலரும், ஆப்தம் (குருவிற்கனு கூலமாயிருத்தல்), அங்கம் (குருவின் குற்றேவல்செய்தல்), தானம் (குருவின்சம்ரக்ஷணை), சத்பாவம் (குருவேசிவமெனப்போற்றல்)முத லியபணிவிடைகளைச்செய்து; அவர் சன்னிதியில் நான் யார்,பிரஹ் மமென்பது யாது, பிரபஞ்சம் எத்தகையது என்னும் விசாரணை யைப்பலப்பட (சாக்ஷாத்காரமுண்டாகும்வரை) விசாரித்து; நாமும் பிரஹ்மமும் சேதனவடிவம், பிரபஞ்சம் ஜடவடிவம் என அறிந்து; பின்ன பிரஹ்மமாகநிலைத்து; கழுத்திலுள்ள ஆபரணத்தைமறந்து வடி டைவதுபோல் பிராப்தப்பிராப்தி(அடைந்திருப்பதின் அடைவு)வடி வமோக்ஷத்தை அடையவேண்டுமெனவும்; அத்தகையமோக்ஷத்திற்கு ஞானத்தைத்தவிரவும்; ஞானத்திற்குக்கூறிவந்தவிசாரணையைத்தவி ரவும்; சிரத்தையுடன் குருசன்னிதியிற்செய்யும் விசாரணையினுலே யேசித்தசுத்தி, சித்தைகாக்கிரதையுண்டாகிறதென்பதனுல் இதைத் தவிரவும்; சுகமடைதற்கு நன்மார்க்கம் வேறுகிடையாவென்பதை முமுக்ஷுக்கள் மறவாமற்றரித்தற்பொருட்டு, இந்நூலில் இதுவரை விரித்துக்கூறியதையே இங்கு சுருக்கிக்கூறியதென்பதாம்.
மொத்தவினுவிடைகள் 1339.
வினுவிடைகள் 29.
ஸ்ரீ சுந்தராதிஷ்டானம் வாழ்க.

25. நூற்பயனும், மங்களமும்

சங்கரபகவற்பாதத்தயாநிதி
புங்கவப்பதமலர்புனைந்தென்பொன்முடி
துங்கசேடாத்திரிசிவன்முன்சொல்லிய
மங்கலமொழியினைப்பாவில்வைத்தனன் (௩௭)

(இ-ள்) என்னுடையபொன்போன்றமுடியானது சங்கரபகவத்பாதாளுடைய கிருபாநிதிதங்கிய பரிசுத்தமாய பாதபதுமங்களையணிந்து இதற்குமுன்னமேயே பரிசுத்தமாய சேடாத்திரிசிவனுரால் வசனரூபமாய்ச்சொல்லியருளப்பெற்ற மங்களசுபாவத்தையருளாநின்ற வாக்கியங்களைச்செய்யுளில் அமைத்துளேன்.

அத்திருச்சங்கரப்பகவற்பாதனுர்
மெய்த்திருவருளுறில்விளம்பிநூலதே
முத்தியைத்தருமதிங்கில்லையேன்மொழி
எத்திருநூல்களுமென்னியற்றுமே (௱௪)

(இ-ள்) அந்த அழகிய சங்கரபகவத்பாதாளுடைய யதார்த்தமாய அழகிய கிருபை ஒருவருக்கு வாய்க்குமேல் சொல்லாநின்ற இச்சாஸ்திரமே மோக்ஷத்தைக்கொடுக்கும். அத்திருவருளில்லையாயின் பெரியோராற்சொல்லப்படாநின்ற எந்தசாஸ்திரங்கள்தான் என்ன பிரயோஜனத்தைக்கொடுக்கமுடியும்! ஒன்றும் பிரயோஜனத்தைக்கொடாவென்பதாம்.

சுகமதாய்மனந்துன்னத்தொடர்பின்யாம்
புகலிந்நூறணைப்புந்திசெய்புண்ணியர்
சகலரும்முத்திசார்குகசங்கரப்
பகவற்பாதன்பதமலர்வாழியே (௱௫)

(இ-ள்) கேட்பவருடையமனம் ஆநந்தமாய்ப்பிரகாசிக்கும்பொருட்டு செய்யுள்வடிவாக நாம்சொல்லிய இச்சாஸ்திரத்தைப்புத்தியில் பதியவைப்போர்பாக்கியசாலிகளேயாவர். அவ்விதபாக்கியம்பெற்றவர் சகலரும் மோக்ஷத்தையடைவாராக. அறுவித ஐசுவரியங்களைத்திருவடிகளிலமையப்பெற்றவரும் சர்வஜீவர்களுடைய சம்சாரதுக்கத்தை நீக்கி ஆனந்தத்தில் மூழ்குவிப்பவருமானசங்கரபகவத்பாதாளுடைய திருவடித்தாமரைகள் வாழக்கடவன.

இந்நூல் உரையாசிரியர்செய் மங்களம்.

வாழிமாமறை-வாழிசத்சங்கமும்
வாழிசுந்தர-சற்குருமாஅடி
வாழியன்பர்-பரம்பரையோதுதல்
வாழியானந்தம்-வாழியேந்நாளுமே.

ஸ்ரீ சங்கரபகவத்பாதாள்சேவடி வாழ்க.
ஸ்ரீ சுந்தரசற்குருபூங்கழல் வெல்க.

சுபமஸ்து



பாட்டு முதற்குறிப்பு அகராதி

உ

## பாட்டு முதற்குறிப்பு அகராதி


| பாட்டு | பக்க நிர். |
|---|---|
| அ | |
| அகக்கரண | 138 |
| ஷை | 210 |
| அகமதென் | 4 |
| அதுவிதுவெ | 5 |
| அத்திருச்ச | 290 |
| அப்போது | 21[illegible] |
| அவ்விந்து | 221 |
| அன்றியன் | 244 |
| ஆ | |
| ஆகையாற் | 193 |
| ஆக்கமார் | 129 |
| ஆரணம்புக | 7 |
| ஆர்த்திகள் | 5 |
| ஆவரணம்வி | 220 |
| இ | |
| இட்டம்யா | 2 |
| இதனுன்ம | 102 |
| இதன்சாத் | 74 |
| இத்தத்துவ | 206 |
| இத்நுலகு | 186 |
| இந்தக்கார | 48 |
| இந்தச்சுத் | 45 |
| இந்தமாதி | 125 |
| இந்தவகக் | 125 |
| இந்தவாற | 269 |
| இந்திரிய | 210 |
| இந்நான்கு | 219 |
| இப்பஞ்சபூ | 120 |
| இப்படிமூல | 81 |
| இருபாறெ | 113 |
| இவன்சத்து | 52 |
| இவைகளீட் | 280 |
| இனிமூலப் | 96 |
| இன்பமிங் | 243 |
| இன்னணஞ் | 144 |
| இன்னணந் | 229 |
| உ | |
| உச்சிதனி | 172 |
| உண்டவன்ன | 133 |
| உரமடைந் | 3 |
| உலகம்யா | 1 |
| உலகெலாம் | 6 |
| எ | |
| எங்குமா | 259 |
| எஞ்சியதா | 144 |
| எந்தவாறெ | 257 |
| எந்தவாறு | 216 |
| எனமூன்று | 160 |
| ஒ | |
| ஒகைகிறை | 232 |
| ஒடதிமண் | 5 |
| க | |
| கணபதியாய் | 6 |
| கரையுறுசத் | 130 |
| காரணமா | 147 |

ச

சங்கரசுத் ... 25
சங்கரபக ... 289
சராயுச ... 152
சாத்திகத் ... 79
சாற்றுமி ... 235
சிதமோங் ... 7
சிவனுக்கு ... 195
சிவன்றன் ... 193
சுகமதாய் ... 290
சூக்கதனு ... 173
சூக்கதேக ... 233
சூக்குமபூத ... 184
சொலவுறு ... 175
சோத்திர ... 128

ஞ

ஞானம்வந் ... 258
ஞானவான் ... 179

த

தத்துவங்க ... 243
தருவினீழற ... 2
தன்மாத்தி ... 218
திங்கள்சூடி ... 5
துய்யநல் ... 2
தூலசரீரச் ... 181

ந

நாதனம்ப ... 4
நாமரூபங் ... 5
நான்பருத் ... 242
நீர்கொள் ... 1

ப

பகரிராச ... 90
பண்டுமின் ... 2
பதிபிம்ப ... 86
பதிவிததது ... 230
பந்தமாகு ... 4
பரைவியா ... 33
பிதிருலக ... 156
பிரமமோ ... 236
பிராஞ்ஞனெ ... 176
பிராணன்று ... 132
புகன்றவிரு ... 197
புத்திஞா ... 162
பேசிந்தமு ... 229

ம

மண்ணிடமா ... 137
மன்பிரம ... 280
முத்தியெனு ... 3
முன்னமுரை ... 269
மூலகுணமா ... 148
மைந்தகே ... 244

வ

வரங்ரோட் ... 7
வருணனைப் ... 6
வழுத்தந்த ... 135
வழுத்திந்த ... 126
வாக்குச் ... 171
வாயுவினிட ... 118
விண்முதலா ... 135
விலங்குட ... 154
விளம்புபஞ் ... 146
வேதநான் ... 4
வேதியனுன் ... 239




உ

ஸ்ரீ சுந்தரேசாய நம:

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 5 | ஸர்ஜீவ | ஸர்வஜீவ |
| | 22 | சுாதன | சாதன |
| 2 | 16 | பட்டன | பட்டது |
| | 23 | பொருளு | பொருளு |
| | 28 | விருப்டை | விருப்புடை |
| 3 | 6 | முமுக்ஷக்க | முமுக்ஷுபக்க |
| | 16 | பின்ளை | பிள்ளை |
| 6 | 12 | பரோக்ஷ | பரோக்ஷ |
| 8 | 15 | கர்பப் | கர்ப்பப் |
| 1 | 4 | பாதாசா | பாதாச்சா |
| 2 | 28 | சிட்டனுண் | சிட்—ஞண் |
| 8 | 10 | ராசீ | ராசி |
| | 24 | கின்றதோ | கின்றனரோ |
| 9 | 20 | பிரஹ்மம | பிரஹ்ம |
| | 22 | தராய் | தனுய் |
| 13 | 10 | பென்னும் | யென்னும் |
| 15 | 9 | கட்சு | கட்கு |
| 16 | 15 | பிரதிபி | பிரதிப்பி |
| | 30 | படும் | பட்டன |
| 17 | 26 | வாயிலா | வாயிலாக |
| 25 | 7 | இனி | 1. இனி |
| 26 | 8 | 36 | 35 |
| | 14 | விரிந்தும் | விரிதலும் |
| | ,, | ஒடுங்கியும் | ஒடுக்குதலும் |
| 28 | 20 | பிரஹ்மமானது | எது |
| | 25 | பதுயாது | பதோ |

| | | | |
|---|---|---|---|
| 32 | 17 | வரக்கு | வாக்கு |
| | 25 | யடைந்தது | யடைந்தபோது |
| 33 | 4 | தலையனடந் | தலையடைந் |
| | 16 | கத்திலேல் | கத்திலே |
| | 30 | வியரபித்த | வியாபித்த |
| 34 | 15 | வஸ்துவைகூறிய | வஸ்துவை, கூறிய |
| 35 | 17 | சிமிள்கொ | சிமிள்க்கொ |
| 36 | 29 | செப்வதி | செய்வதி |
| | 30 | முடைவ | முடையவ |
| 37 | 25 | தார்தத | தார்த்த |
| 38 | 2 | மற்றய | மற்றைய |
| | 14 | வடிவாய | வடிவமானது |
| | 15 | மமும் | மமாகவும் |
| 39 | 25 | சுவாவ | சுபாவ |
| | 29 | அதின | அதின் |
| 41 | 10 | யப்பொருள்க | யபதார்த்தங்க |
| | 11 | வேறுபொருள்க | வேறுபதார்த்தங்க |
| | 26 | ண்டுபொருள்க | ண்டுபதார்த்தங்க. |
| 42 | 2 | பொருள்க | பதார்த்தங்க |
| | 6 | பொருள்க | பதார்த்தங்க |
| | 15 | பொருள்க | பதார்த்தங்க |
| | ,, | கட்கும்வா | கட்குமுள்ளவா. |
| | ,, | தமும் | நமாயும் |
| 44 | 8 | ருஷ்டிண | ருஷ்டியின |
| 45 | 6 | உண்டாயின | உண்டாயின |
| | 23 | பெயரா | பேரா |
| 46 | 10 | பட்டதி | பட்டது? |
| | 14 | யிருதத | யிருத்த |
| | 15 | சதி | சத்தி |
| | 22 | யின்மை | இன்மை |
| 47 | 3 | வித்வதத | வித்வத |
| | 29 | யருளிய | யருளியது |
| 48 | 6 | பற்றி | பற்றியும் |
| | 8 | தாகயேன் | தாக ஏன் |

# பிழைதிருத்தம்



| | | | |
|---|---|---|---|
| 48 | 8 | பட்டது | பட்டது? |
| 50 | 12 | என்ருலென்ன | என்றுசொல்வானேன் |
| 51 | 28 | ரானுய் | தானுய் |
| | 27 | சத்தரல் | சத்தால் |
| 55 | 2 | வதுஒன்று | வதுஒன்று |
| 56 | 20 | யாய்ததோ | யாய்த்தோ |
| 57 | 3 | ஒன்றி | ஒன்றி |
| 63 | 19 | உண்டுயென்ற | உண்டு என்ற |
| 67 | 11 | இதுஅஞுதி | இது அஞ்ஞான |
| 71 | 5 | ஏன்று | என்று |
| 74 | 17 | இது | 2. இது |
| | 24 | மாதோ. | மாதோ. (உக) |
| 76 | 2 | டாயின? | டாயிற்று? |
| | 4 | டாயின | டாயிற்று |
| 78 | 7 | ஈசுரவர | ஈசுவர |
| 79 | 27 | முன்றுவித | மூன்றுவித |
| | 31 | அசா | அசுர |
| 80 | 10 | படியரல் | படியால் |
| | 18 | படிஒ | படிஎல்லாம்யதார்த்தமாயஒ |
| 81 | 4 | இது | 3. இது |
| | 25 | லொன்றஞர் | லொன்றெஞர் |
| | ,, | தோன்றின | தோன்றிற்று |
| | 27 | தோன்றின | தோன்றிற்று |
| 83 | 30 | அவீத்தை | அவித்தை |
| 85 | 30 | வாஸளேக | வாஸனைக |
| 87 | 4 | இடம். | இடம் |
| | 23 | தைககளி | ஷ்தகளி |
| 89 | 12 | ஞரனம் | ஞானம் |
| 90 | 5 | பதிவித் | பதிபவித் |
| | 20 | வித்தஜீவ | வித்தஜீவ |
| 91 | 27 | வுரலாமா | வாலாமா |
| 92 | 24 | னென்றளே | னென்றழைக் |
| | 27 | முத்தரிடம் | முத்தர் |
| | 28 | கூடியவனுய் | கூடியவராய் |

பிழைதிருத்தம்

| | | | |
|---|---|---|---|
| 93 | 11 | வந்தது | வந்தன |
| | 16 | றும்; விள | றும்;காட்டவேண்டிவிள |
| 94 | 26 | பார்கரும் | பார்க்கும் |
| 96 | 4 | இது | 4. இது |
| 98 | 13 | மெத்தை | மெத்தகை |
| 100 | 10 | யாது! | யாது? |
| 102 | 12 | சரீரத்தி | சமீபத்தி |
| | 27 | வங்ககளை | வங்களை |
| 104 | 3 | பரடாச | பாடாக |
| | 6 | பிறித்தறி | பிரித்தறி |
| | 10 | தசனல் | தானல் |
| | 18 | கொணடு | கொண்டு |
| 107 | 5 | போதிக்கும் | போதிக்கும். |
| | 14 | ஞரனது | ஞானத்து |
| 109 | 26 | 5-ம் | 5—யும் |
| 110 | 8 | சார்ஙசது | சார்ந்தது |
| 111 | 25 | கிருபையரல் | கிருபையால் |
| 112 | 3 | அசங்கள் | அசங்கன் |
| | 15 | அளைக்கப் | அழைக்கப் |
| 113 | 10 | தலாரஞே | தரலாஞே |
| | 19 | அஸச | அசை |
| 115 | 22 | கூறியயேழ | கூறிய ஏழ |
| 116 | 19 | திக்குக்கா | திக்குங்கா |
| 117 | 14 | ஜஉவின் | ஜீவின் |
| | 21 | கிடையா | கிடையாது |
| | 28 | எனறு | என்று |
| 119 | 16 | ஆசாசத் | ஆகாசத் |
| | 20 | பாவதல் | பாவுதல் |
| | 24 | சிருஷ் | சிருஷ்டி |
| 120 | 15 | தூல | தால |
| | 22 | டாம் | டாகக்கூடும் |
| 124 | 6 | விசார | விசார |
| 125 | 2 | வெளிஷய | வெளிவிஷய |
| 129 | 22 | ரர்க்கர் | நற்கர் |
| 129 | 22 | நாற்றங்சுளை | நாற்றங்களை |
| 130 | 2 | படா | படாது |
| | ,, | அவற்றின் | அதின் |
| | 8 | மாட்டா | மாட்டாது. |
| | ,, | அவற்றின் | அதின் |
| 132 | 15 | தொழில்ப்ப | தொழிற்ப |
| 135 | 9 | ருனே. | ருனே. (சஎ) |
| 138 | 12 | திரியங்களின் | திரியத்தின் |
| | 15 | நடவாவெ | நடவாதெ |
| | 24 | இருபது | இருபது |
| 140 | 22 | பூருவாக | பூராவாக |
| 141 | 7 | கூடாவாத | கூடாதாத |
| 142 | 18 | பற்றிருப்ப | பற்றியிருப்ப |
| 143 | 15 | ஞலும். தனி | ஞலும், தனி |
| 146 | 16 | செய்நூல | செய்நூல |
| | 24 | யிஞற் அதி | யிஞல் அதி |
| 147 | 4 | சியங்க | சியகுணங்க |
| | 29 | விற், விற் | விர், விர். |
| 148 | 6 | தேயவின் | தேயுவின் |
| 150 | 9 | ளாசிய | ளாகிய |
| | 17 | பரிநாம | பரிணம |
| | 19 | சுக்சிலம் | சுக்கிலம் |
| | 20 | படியாய் | படியால் |
| | 25 | ஷட்கோசா | ஷட்கோசா |
| 151 | 5 | விஞ | விடை |
| 152 | 8 | ராதல | ராதல |
| | 11 | இருவகை | இருவகை |
| | 15 | சராயுஜம் | சராயுஜம் |
| | 19 | அவேத | சுவேத |
| | 27 | யினிக்க | யினிலக்க |
| 153 | 18 | யேதுவால் | ஏதுவால் |
| 159 | 13 | யாது! | யாது? |
| 160 | 4 | கனால் | களால் |
| 162 | 13 | யுமுண்டா | யுண்டா |
| | 27 | ஒடுங்கு | ஒடுங்கு |

| | | | |
|---|---|---|---|
| 168 | 8 | சித்தியா | சித்தியாது |
| | 21 | விகாரகூட | விகாரகூட |
| 169 | 3 | பிரரண | பிராண |
| | 8 | யச்சொன | யச்சொன் |
| 171 | 19 | சகோச | சகோச |
| 172 | 27 | குடியிருத்தல் | தடிபுத்தல் |
| 173 | 4 | இது | 11. இது |
| 176 | 22 | இசசுழு | இச்சுழு |
| 183 | 14 | விசாரனை | விசாரணை |
| | 26 | களாகிய | களோடுகூடிய |
| 193 | 30 | பிரமமோ | பிரமமோ |
| 195 | 1 | தத்துவவியவகாரம் | வியவகாரதத்துவம் |
| | 20 | தூலசர்ர | தூலசரீர |
| 201 | 20 | விகற்ஸ | விகற்பஸ |
| 202 | 6 | கமில்லா | கமில்லா |
| 203 | 18 | ஞானம் | ஞானம் |
| | 19 | சுகவிக்ந | சுககாரண |
| | 28 | சுகத்னத | சுகத்தை |
| 205 | 27 | வாழ்க | வாழ்க |
| 207 | 29 | திறகாட் | திற்காட் |
| 208 | 7 | காரமும் | காரத்தையும் |
| | 17 | சம்மந்த | சம்பந்த |
| 210 | 21 | ஆகதத்தத் | ஆகத்தத் |
| 214 | 21 | தோற்றம் | தோற்றம் |
| | 29 | யிரபஞ்ச | பிரபஞ்ச |
| 218 | 2 | ளயங்கள் | ளயம் |
| 219 | 19 | போதுமுன் | போதுமுன் |
| 221 | 9 | தெந்தகில | தெரிந்தகில |
| 224 | 26 | படவின் | படவின் |
| 227 | 7 | விங் | விங் |
| | 8 | றதுவென் | றதென் |
| 228 | 5 | கர்மங்கள் | கர்மங்கள் |
| | 29 | 27 | 31 |
| | ,, | 1108 | 1112 |
| 229 | 14 | வங்கன், 20 | வங்கள்,20 |



## பிழைதிருத்தம்

| | | | |
|---|---|---|---|
| 229 | 22 | 1109 | 1113 |
| | 27 | தானுய் விளங்குவதும், அன்னியமாய் | பொதுவாயும், சிறப்பாயும் |
| 230 | 23 | வென்தெ | வென்பதெ |
| 231 | 1 | தானுய்,அன்னியமாய் | பொதுவாயும்,சிறப்பாயும் |
| | 18 | திபபதா | திப்பதா |
| 232 | 20 | பிறதூல் | பிறதூல் |
| 234 | 21 | கியங்க | இயஉபதேசங்க |
| | 22 | தியிஞு | திகளிஞு |
| 235 | 15 | லெகுவா | இலகுவா |
| | ,, | சிக்கிரஞு | சீக்கிரம்ஞு |
| 236 | 6 | அவததா | அவத்தா |
| 240 | 28 | பெகூதக | பகூதக |
| | 29 | குடீசக | குடீசக |
| 241 | 6 | களால் | களுடன் |
| 244 | 9 | போலதத | போலத்த |
| 247 | 8 | லாததாய் | லாததாய் |
| | 15 | பட்டிரூக் | பட்டிருக் |
| 249 | 28 | ற்றுவிக்கின்றது | ற்றுகின்றன |
| 250 | 6 | யில்லனவாய் | யில்லாததாய் |
| | ,, | ணியவாய் | ணியதாய் |
| 253 | 13 | வரவளைத்து | வரவழைத்து |
| 254 | 21 | அத்தியாச | அத்தியாச |
| 255 | 2 | வடிவபிர | வடிவப்பிர |
| 256 | 28 | தானேயிரு | தானே இரு |
| 257 | 16 | சாதனங்களும் | சாதனங்களும் |
| 259 | 26 | கின்றது | கின்றது |
| | 30 | உபதேம் | உபதேசம் |
| 260 | 19 | எல்லா | எல்லா |
| | ,, | வுடமை | வுடைமை |
| | 21 | எக்கா | எக்கா |
| | 26 | அர்த | அர்த்த |
| 261 | 1 | டையஎதா | டையஎதா |
| 266 | 7 | தாததில் | தாத்தில் |
| | 12 | அகங் | ஜீவனுக்குஅகங் |

| | | | |
|---|---|---|---|
| 267 | 20 | ஏன | என |
| 268 | 8 | சிந்தணை | சிந்தனை |
| 270 | 21 | பெயர்கன் | பெயர்கள் |
| 275 | 24 | யத்கில் | யத்தில் : |
| 277 | 23 | முன்செய்த | முன்செய்த |
| 278 | 13 | ஏன்பது | என்பது |
| 279 | 29 | 143 | 43 |
| 280 | 23 | மானுன் | னுமானுன் |
| 281 | 3 | ஆசிாயங் | ஆசிரயங் |
| | 10 | சுவிசாரணை | சுவிசாரணை |
| 282 | 10 | விதேகமூத்தி | விதேகமுத்தி |
| 284 | 20 | ஈசுவா | ஈசுவர |
| 287 | 15 | சமாதி | சமாதி |
| 288 | 28 | தெலுங்ரு | தெலுங்கு |
| | 29 | களைச்சா | களையும்; சா |
| | 30 | யைச்செ | யையுஞ்செ |
| 289 | 22 | 25 | 26 |
| | 30 | சொால்வி | சொல்வி |
| 290 | 24 | சங்கமூம் | சங்கமும் |






சைகாய அச்சாபீஸ், பாளையங்கோட்டை. 500 காப்பிகள்—1924.